தஞ்சை ஸரஸ்வதி மஹால வெளியீடு நெ. 59-b

# நாலடியார் உரைவளம்

(மூலமும் மூன்று பழைய உரைகளும் அடங்கியது)



## இரண்டாம் பாகம் 201—400 பாடல்கள்.

தஞ்சை சரஸ்வதி மஹால் வெளியீடு நெ. 59 b.

# நாலடியார் உரைவளம்

(மூலமும் மூன்று பழைய உரைகளும் அடங்கியது)

*

## இரண்டாம் பாகம் - 201—400 பாடல்கள்.

*

பதிப்பாசிரியர்கள் :

ஸ்ரீ S. முத்துரத்ன முதலியார்,
தமிழ்ப்பண்டிதர், சரஸ்வதி மஹால், தஞ்சாவூர்.

வித்துவான் ஸ்ரீ M. R. கந்தசாமி பிள்ளை,
தமிழாசிரியர், தீர்த்தபதி உயர்நிலைப்பள்ளி, அம்பாசமுத்திரம்.

தஞ்சை ஸரஸ்வதி மஹால் நிர்வாகக் கமிட்டியினருக்காக
கௌரவ காரியதரிசி
ஸ்ரீ S. கோபாலன் B. A., B. L.,
அவர்களால் வெளியிடப்பட்டது



பதிப்பகம்
மகாலிங்கம் மின்சார அச்சகம், தஞ்சாவூர்.

1953.

விலை ரூ. 6-0-0.

# PREFACE.

This publication entitled "NALADIAR URAI-VALAM" contains the text and three standard commentaries of "NALADIYAR", the wellknown ancient Tamil classic of four hundred stanzas dealing with Ethics, Politics and Erotics (அறம், பொருள், இன்பம்) It is needless to point out that this classic holds an equal position with "Tirukkural" in point of poetical merit and value of subject-matter.

Though several editions of this classic have appeared with some commentary or other, still there is no edition giving a faithful version of any of the three standard commentaries that now appear in this publication The best-known among the three commentaries is that of PADUMANAR who is said to have been responsible for the classification of the four hundred verses into several sections or "Adhikaras" But his commentary has not been faithfully reproduced in any edition that has hitherto appeared, though every editor has been careful to state that his commentary is 'based' on Padumanar's The second commentary in the present edition is by DHARUMANAR, and it sees the light of day for the first time in this edition. The commentary is found preserved only in this library and our edition is based on it. The third commentary is a judicious combination of the views of the first two commentators, expressed in clear language. 'The name of the author does

not find a place in the manuscript. It has therefore been named "Vilakka Urai" or the 'clear commentary' by our editors.

The work has been carefully edited by our Tamil Pandit, Sri S. Muthuratna Mudaliar, and Vidwan Sri M. R. Kandasami Pillai, Tamil Pandit, Tirthapathi High School, Ambasamudram Parallel quotations (ஒப்புமைப்பகுதி), instances where the text is quoted as authority (மேற்கோள்பகுதி), and special notes have been added for every stanza Lists have been appended at the end, of special usages and vocabulary occuring in the text. An alphabetical list of the beginnings of the stanzas has also been given. Sri S. Rajagopalan, Copying clerk of the Library has rendered valuable service in carefully copying the text, tracing the quotations, noting the special usages, and compiling the alphabetical list Our thanks are due to the two Pandits and the copying clerk for their valuable services.

This publication has been issued in two volumes of convenient size It is hoped that this edition will be found useful by scholars who have felt the need for a standard edition of the classic

We are grateful to the Government of Madras for their timely grants that have helped us to publish this and other valuable manuscripts of our library

Saraswathi Mahal,
Tanjore,
20—10—53

S. GOPALAN,
*Hon. Secretary.*

# முன்னுரை.

"நாலடியார் உரைவளம" என்னும் இவ்வெளியீட்டில் தமிழ் இலககியஙகளில் பிரசிததிபெறற 'நாலடியார்' எனனும் நானூறு பாடலகளின மூலமும், மூனறு பழைய உரைகளும அடஙகியிருககினறன.

அறம, பொருள, இனபம் என்னும் முப்பாலைப்பறறிப் பேசும இவ்வரிய பழமபெருநூல் சொற்சுவை, பொருட் சுவைகளில் தமிழகம போறறும் திருககுறளுக்கு நிகரான தென்பது யாவரும அறிநததே. இந்நூல் பலரால் உரையுடன் அச்சிடப்பட்டிருப்பினும், இப்போது வெளியிடப் படும் மூன்று உரைகளும பூராவாக இதுவரை பதிப்பிககப் படவில்லை. இம்மூன்று உரைகளில் அதிகமாக யாவராலும் போறறப்படுவது பதுமனார் உரை இவவுரையாசிரியரே நாலடியாரிலுள்ள நானூறு பாடல்களுக்கும் அதிகார அடைவு செயததாகச சொல்லபபடுகிறது. அததகைய பெருமை உடையதாக இருநதும, இவ்வுரை உளளபடி இதுவரையில அசசிடப்படவிலலை. ஆயினும், ஒவவொரு பதிப்பாளரும் தமது பதிப்பில உளள உரை பதுமனார் உரையைத் தழுவியது என்று மட்டும் சொல்லத் தவறுவ தில்லை அடுதத உரை தருமர் எனபவரால் எழுதப்பட்ட தாகத் தெரிகிறது. இவ்வுரை முதனமுதலாக இப்போது தான் வெளிவருகிறது மூன்றாவது உரை முதல் இரணடு உரைகளைத தழுவி விளககமான நடையில் எழுதப பட்டிருககிறது. அதன் ஆசிரியர் பெயா அவ்வுரைச சுவடியில் காணப்படவில்லை. அதுகாரணம்பற்றி அவ்வுரைக்கு 'விளக்கவுரை' என்று பெயரிடபபட்டிருக்கிறது

இம்மூன்று உரைகளும் சரஸ்வதி மகால் நூல் நிலையத்தில் காப்பாற்றப்பட்டுள்ள பழைய சுவடிகளிலிருந்து எடுத்துப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன.

சரஸ்வதி மகால் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீ S. முத்துரத்தின முதலியார் அவர்களும், அம்பாசமுத்திரம் தீர்த்தபதி உயர்நிலைப் பள்ளித் தமிழ்ப் பண்டிதர் வித்வான் ஸ்ரீ கந்தசாமி பிள்ளை அவர்களும் மிக்க பிரயாசையுடன் நூலின் மூலத்தையும், உரைகளையும் பதிப்பித்துள்ளனர். ஒவ்வொரு பாட்டின் உரைக்குப்பிறகு அச்செய்யுள் எடுத்தாளப்பட்ட இடங்களும், அதே பொருள் அமைந்த இதர நூல்களும் 'மேற்கோள் பகுதி' 'ஒப்புமைப்பகுதி' என்ற பெயர்களுடன் சேகரிக்கப்பட்டிருக்கின்றன. அநுபந்தங்களாக இந்நூலில் கண்ட பொருள்களைப்பற்றிய விசேடக் குறிப்புகளும், செய்யுட்களின் முதலடி அகராதியும் எழுதிச் சேர்க்கப் பட்டிருக்கின்றன. சரஸ்வதி மகால் எழுத்தாளர் ஸ்ரீ இராஜ கோபாலன் இந்நூல் மூலத்தையும் உரைகளையும் சுவடிகளி லிருந்து பிழையின்றி எழுதுவதிலும், மேற்கோள், ஒப்புமைப் பகுதிகளுக்கு வேண்டிய இடங்களைத் தேடிச் சோ்ப்பதிலும், விசேடக்குறிப்புகள், அகராதி இவைகளைத் தயார் செய்வ திலும் அரும்பாடுபட்டு உதவியுள்ளார். இம்மூவரும் செய்த அரிய சேவைக்கு எங்கள் நன்றி.

இவ்வரிய நூலையும், இதர நூல்களையும் வெளியிடு தற்கு உதவிபுரிந்துவரும் சென்னை அரசாங்கத்துக்கு நாங்கள் எப்போதும் கடமைப்பட்டுள்ளோம்.

சரஸ்வதி மகால்,
தஞ்சாவூர்.
20—10—53.

S. கோபாலன்,
கௌரவ காரியதரிசி

உ

# நாலடியார் உரைவளம்

## முகவுரை



"தவளித் தாமரைத் தாதார் கோயில்
அவனைப் போற்றுதும் அருந்தமிழ் குறித்தே"

ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்.

## நாலடியார் நூற்பெருமை



தென்மலயத்து அருந்தவன் அருளிய தமிழ் மொழிப் பரவையுள், தன்னேரில்லாச் சிறப்புடையதாகிய திருக்குறளோடு மதித்துரைக்குந் தகுதிப்பாடு உடைய நூல் நாலடியார், என்ப.

இந்நூல் பண்டை உரை ஆசிரியருட் சிறந்தார் எனக் கருதும், அடியார்க்கு நல்லார், நச்சினார்க்கினியார், இளம்பூரணர், சேனாவரையர், பரிமேலழகர், பேராசிரியர், முதலிய தொல்லுரை ஆசிரியர்கள் பலராலும் எடுத்தாளப்படும் பிரமாண நூற்களில் ஒன்றாகும்

முத்தமிழ் வளர்ந்தோங்கிய சங்கங்கள் மூன்று. அவை தலை, இடை, கடைச் சங்கங்கள் என்ப. அவற்றுள், இது

கடைச சங்கம் மருவிய நூறகளில் கீழ்க்கணக்கு நூறறொடரில் ஒன்றென்ப

எனவே, அதனை

நாலடி நானமணி நாறுப ஐநதிணைமுப
பாலகடுகங் கோவை பழமொழி மாமூலம
இனனிலைய [1]காஞசியோடு ஏலாதி யெனபவே
[2]கைநநிலைய வாஙகீழக கணககு"

என்னும் பாவான் உணர்க.

**கீழ்க்கணக்கு நூற்களின் இலக்கணம் :—**

"அடிநிமிர விலலாச செயயுட டொகுதி
அறம பொரு ளினப மடுககி யவவகைத
திறமபட வருவது கீழககணக காகும"

எனவரும் பன்னிருபாட்டியல் சூத்திரத்தானும்,

"வனபபியல தானே வகுககுங காலைச
சினமென மொழியாற றுயப பனுவ லோடு
அமமை தானே அடிநிமிர பினறே"[3]

—(தொ. செ. சூ. 236)

---

பா. பேதம. [1]"காஞசியுட னேலாதி"
,, [2]"கைநநிலையோ டாஙகீழக கணக்கு"

[3]இதன பொருள .—சிலவாய மெலலிய வாய சொலலோடும இடையிடடு வநத பனுவல் இலக்கணததோடும் அடிநிமிா விலலது அமமையாம எனறவாறு.

அடிநிமிரா தெனவே அமமை யெனபது முழுவதும ஒரு செயயுளாகல வேணடும. வேணடவே, அஃது உறுபபனறாகிய செலலும், அதனை உறுபபெனல வேண்டுமாதலின அடிநிமிரா தெனபபடட செயயுள உறுபபாக அவை பல தொடாநது முடிநது ஈணடுச செயயுளாமெனபது. சிலவாகவெனபது எணணுச் சுருஙகுதல. மெலலியவாயச் சிலவாய சொறகள, எழுததினுன அகனறு காடடாது சிலவெழுததினுன வருவது. அடிநிமிரா எனறது ஐநதடியின ஏறுதெனறவாறு.

என்னும் செய்யுளியற் சூத்திரத்தானும், அதற்குப் பேராசிரியரும், நச்சினாரும், உரைத்த உரையானும் உணர்க.

திருக்குறள் அமைப்புப்போல, இந்நூலும், அறப்பால், பொருட்பால், காமத்துப்பால், என மூன்று பிரிவினுள் அடங்கியதாகும்.

அம்மை, அழகு, தொன்மை, தோல, விருந்து, இயைபு, புலன், இழைபு, எனத் தொடர்நிலைச் செய்யுட்கு இலக்கணங் கூறுமிடத்து 'வனப்பியல்தானே' என்னும் சூத்திரவிதியால 'அடிநிமிர் • வலலது அம்மையால' என்றாங்கு இந்நூல 'அம்மை' ஆமென்றுணர்க. அமைதிப்பட்டு நிற்றலின் அம்மையென்றாயிற்று.

அறம், பொருள், இன்பம், என்று முப்பாலில நூல கூறியவா வீடு கூறாரோ எனின், அகத்தியனாரும், தொல்காப்பியனாரும், 'வீடுபேற்றிற்கு நிமித்தம் கூறுதலன்றி வீட்டின் தன்மை தமிழ்நூற் கூறார் என்று உணர்க.' என்பர் —(தொ சிறப்பு. பா உரையில் நச்சினார்க்கினியர்)

அஃது,

"அந்நிலை மருங்கின் அறமுதலாகிய
[1]மும்முதற் பொருட்கு முரியவென்ப"

—தொ செ. சூ 106.

---

தாயபனுவலோடென்றது அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுப, வேறு இடை இடை அவையன்றியும் தாய(தாவி)ச் செலவுடைத்தென்றவாறு. அஃதாவது பதினெண் கீழ்க்கணக் கென வுணர்க. அதனுள், இரண்டடியானும், ஐந்தடியானும், ஓரோ செய்யுள் வந்தவாறும், அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும், அறம் பொருளின்பமென அவற்றுக்கு இலக்கணங் கூறிய பாட்டுப்பயின்று வருமாறுங் காரநாற்பது களவழி நாற்பது முதலாயின வந்தவாறுங் கண்டு கொள்க அறிந்து கொள்க என்பனவாகும்.

[1]உலகியற் பொருள் மூன்றனையுங் கூறுவான், அவற்றை மும்முதற் பொருள் என்றான். அவை இன்றி வீடு பெறுமாறு வேறு இன்மையின் வீடும் ஆண்டும் கூறினான் என்பது. அல்லாதார் வீட்டினையு

என்ற சூத்திரத்தானும், அதற்குப் பேராசிரியரும், நச்சினார்க்கினியரும், எழுதிய உரையானும் உணர்க.

'நாலடி' என்பது, நான்காகிய அடிகளை உடையது. பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயராயமைந்து, வெண்பா யாப்பால் உற்ற இந் நூற்குக் 'கருவி ஆகுபெயராயிற்று'.

**பெயர்வகை**

"முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் றன்மைமுத னிமித்தினும்
இடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே"
—ந. சூ. 49.

அளவின்ற பெயர் பெற்றன பன்னிரு படலம், நாலடி நானூறு முதலாயின என்பது கொண்டு நான்கடி அளவினால் இந்நூற்கு இப்பெயர் அமைந்தது என்ப

**இனி வேறோர் வரலாறு.**

பாண்டியன் அவைக்கண் வீற்றிருந்து தமிழாராய்ந்த எண்ணாயிரம் சமணமுனிவர் பஞ்சத்தால் வருந்தி, அவையை விட்டு நீங்கும்போது தாமிருந்தபீடத்தின்கீழ் ஒவ்வோர் பாடலை எழுதிவைத்துப் பாண்டியனிடம் அறிவிக்காமல் சென்றனர்.

---

பொருண்மை செய்யுட்கண் வாராமை அதற்கூறின என்ப. அங்ஙனம் கருதின அறம் முதற்பொருளும் செய்யுட்கள் வாரா என மறுக்க. —என்பர் பேராசிரியர்.

மும்முதற் பொருள், எனவே அவற்றது துணைப் பொருளாகிய அறநிலை இன்மையும், பொருள்நிலை இன்மையும், இன்பநிலை இன்மையும், அடங்கு மென்ப. உலகியற் பொருள் மூன்றனையும் இவை எனக்கூறி அவற்றை விடுமாறுங் கூறவே வீடுங் கூறிற்றாம்—என்பர் நச்சினார்க்கினியர்

பின், அரசன் முனிபுங்கவர்களைக் காணாது வருந்தக் கூற்று அவர்கள் வீற்றிருந்த தவிசினை அப்புறப்படுத்த அதன்கீழ்ச் சிறுமுறியில் ஒவ்வொரு பீடத்தின் கீழும் ஒவ்வொரு 'வெண்பா' எழுதிவைத்திருப்பதைக் கண்டு, அப்புலவர்களைப் பிரிந்த வருத்தத்தினால் அவற்றை வையை ஆற்றில் எறிய ஏவினன். அவ்வாறு செய்யப்பட்டவற்றுள் நானூறு பாடல்கள் ஆற்றின் வழிச்செல்லாது எதிரேறிச் சென்றன. இத்தெய்வத் தன்மையை அரசன் உணர்ந்து பெரிதும் வியப்புற்று, அவற்றை எடுத்து ஒருநூலாக்கி 'நாலடியார்' எனப் பெயரிட்டு வழங்கினன் என்ப.

"மன்னன் வழுதியர்கோன் வையைப் பேராற்றின்
எண்ணி இருநான்கோ டாயிரவர்—உன்னி
எழுதியிடு மேட்டி லெதிரே நடந்த
பழுதிலா நாலடியைப் பார்"

என்னும் பாவான் ஓர்க.

இந்நூலை எண்ணாயிரம் முனிவர் பாடினர் என்பதற்குப் பின்வரும் பாடல் சான்றாகும்-

"எண்ணா யிரவ ரிசைத்த வெண்பா நானூறுங்
கண்ணுமிந் நாலடியைக் கற்றுணரத்—தண்ணார்
திருக்குருகூர் மாறனையே தேர்ந்துமறை தேர்ந்த
திருக்குருகூர் மாறனையே தேர்"

இந்நூல் நானூறு பாடல்களைக் கொண்டது என்பதற்கு

"நானூறும் வேதமா நானூறு நானூறு
நானூறுங் கற்றற்கு நற்றுணையா—நானூறும்
பண்மொழியாள் பாகம் பகிர்ந்து சடைக்கரந்த
கண்ணுதலான் பெற்ற களிறு"

என்னும் பாவினால் உணர்க.

**பழமொழிகள்.**

திருக்குறளையும், நாலடியையும், சேர்த்துக் 'கபில பாணர்'

என்பதுபோலத் தொன்றுதொட்டுக் கூறுவதுண்டு

அவற்றுள் சில வருமாறு,—

"பாலு நெய்யு முடலுக் குறுதி
வேலு வாளு மடலுக் குறுதி
ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலு மிரண்டுஞ் சொல்லுக் குறுதி"

"பழகு தமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்"

"[1]நாலடி இரண்டடி கற்றவனிடத்து
வாயடி கையடி அடிக்காதே"

என்பனவாம்.

இனி,

"நாலடி வள்ளுவ ராமெயிற் பாலை நடந்த பெருங்
காலடி மேலடி மானடி யேகட் டுரலிற் பட்ட
பாலடி சில்வெண்ணெ யுண்டோ னரங்கன் பனிவரையில்
வேலடி முள்ளுக் குபாயமிட் டேகும் விரகு நன்றே"

என அரங்கக் கோவைக்கண் உள்ள உடன் போக்குத் துறைச் செய்யுள். இது, அஃதாவது தலைவன் அடிச்சுவட்டின் மீது தலைவி அடிவைத்து நடக்குங்கால் நான்கு அடியும் இரண்டடியாயத் தோன்றியதற்கு நாலடியாரையும், திருக்குறளையும், உவமமெடுத்துக் கூறிய நயம் காண்க.

இச்சிறப்புச் செய்யுள்களில் நாலடியார் முதலில் கூறப்படுவதால் அதன் அருமை திருக்குறளுக்கு ஒப்போமிக்கோ என்றுகொள்ளற்பாலது. பொருட்செறிவில் மிகச்சிறந்த திருக்குறளில் உள்ள அதே பொருள் காவியச்சுவை மிகுதி

---

[1]நாலடி, குறள், கற்றவனிடத்து வாய் பேசாதே, என்றொரு பொருளும், நாலடி, இரண்டடி (சிலம்பப்) படைப்பயிற்சியில் நாலடி இரண்டடி கற்றவனிடத்து கையினால் அடிக்காதே என்றொரு பொருளும் தொனித்தல் காண்க.

யுடன் நாலடியில் திகழ்வது குறிப்பிடத்தக்கது

**அதிகார அடைவு செய்தவர்**

'வளங்கெழு' என்னும் பாயிரததால் பாலும், இயலும அதிகார அடைவு செயதவர் 'பருமனா' என்பதும, அவரே உரை விரித்துளார் என்பதும் புலனும்.

உரை ஆசிரியா—தருமர் என்பவா, திருககுறளுககும உரைவிரிதது, இந்நூறகும் உரை எழுதி இருததல் கூடுமென ஊகித்தறிஇடனுண்டு.

திருக்குறட் கருததுக்களும், சொறகளும், இநநூலகததுப பலவிடததுக் காணலாம். அவ் அவ்விடங்களில் ஏறற பெறறி குறிக்கப்பெறறுள்ளன.

கருத்துககள வேறுபடுவன சில வருமாறு,—

"நலகூாநத மககட கணிகல மரவ தடககம"

—நாலடி. 241.

"எலலாாககு நனருமம பணிதல அவருளளும
செலவாககே செலவம தகைதது"

—குறள்.

"வேமபின இலையுள கனியினும வாழைதன
தீஞசுவை யாதுந திரியாதாம—ஆஙகே
இனநதீது எனினும இயலபுடையாா கேணமை
மனநதீதாம பககம அரிது"

—நாலடி. 245.

"மனததானும மாந்தாக குணாச்சி இனததானும
இனனன எனபபடும சொல"

—குறள். 453.

"அறறாாக கொன்றுறறாதான செலவமிகுநலம
பெறறாள தமியளமூத தறறு"

—குறள். 1007.

"கொடுத்தலுந் துய்த்தலுந் தேற்றா இடுக்குடை
யாளத்தான் பெற்ற பெருஞ்செல்வம் இல்லத்து
உருவுடைக் கன்னியரைப் போல்ப் பருவத்துள்
ஏதிலா ன் துய்க்கப் படும்"

—நாலடி 274.

தமிழ் உரைத்தவற்றுட் சில —

"கரவா துவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி உறும்"

—குறள். 1061.

"கரவாத திண்ணன்பின் கண்ணன்னார் கண்ணும்
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை—இரவினை
உள்ளுங்கால் உள்ளம் சுடுமால் எவன்கொலோ
கொள்ளுங்கால் கொள்ளுங் குறிப்பு"

—நாலடி. 304.

"இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும்"

—குறள். 1069.

"கரப்பவர்க்கு யாங் கொளிக்குங் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர்"

—குறள். 1070.

"ஈயாய் எனக்கொன் றிரப்பார் னேல்
மாயாநோய் மாற்றி விடின்"

—நாலடி. 304.

*பாக்களிலுள்ள சிறப்பான குறிப்புக்கள் ;—*

*சங்க காலத்துக்குமுன் வழங்கிய சொற்கள்:—*

*'கணக்காயர்'—*

கற்றதூஉ மின்றிக் **கணக்காயர்** பாடத்தாற்
பெற்றதாம் பேதையோர் சூத்திரம்—மற்றதனை

நல்லா ரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன்
புல்லறிவு காட்டி விடும்"

"கணக்காயர் பாட்டத்தாற் பெற்றதாம் பேதையோர் சூத்திரம்"
—நாலடி. 314.

"கணக்காயனார் மகனார் நக்கீரனார்"
என்பதும் ஆம்.

**பாடபேதம்.**

"கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவாள்
உட்குடையாள் ஊராண் இயல்பினள்"
—நாலடி. 384.

*முன்பதிப்புக்களில் கொண்டபாடம் 'ஊர் நாண இயல்பினள்'. இவ்வுரை ஆசிரியர்கள் மூவரும் கொண்டபாடம் ஊராண் இயல்பினள் என்பதே ஆகும். இதனை ஆசிரியர் நச்சினார்க்கினியர் தொ. சொ. சூ. 57 உரையில் "உட்குடையாள் ஊராண் இயல்பினள்" எனவெடுத்துக்காட்டிய படியே ஆகும்.*

*"உட்குடையாள் ஊராண் இயல்பினள்" என்ற பாடத்தை எடுத்துக்காட்டுவர் "மயிலைநாதர்"*
—நன். பொது சூ. 4 உரை.

**யாப்பமைப்பு**

*தொல்காப்பியம், வீரசோழியம், யாப்பருங்கலம், யாப்பருங்கலவிருத்தி, ஆகிய இன்னோரன்ன நூற்களின் உரையாசிரியர்களால் இந்நூல் யாப்பின் அமைப்புக்கு உதாரணமாக எடுத்தாளப்படுகின்றமையால் இந்நூலின் தொன்மை விளங்காநிற்கும்.*

**புறத்திரட்டு,**

*சங்க காலமுதல் உள்ள இலக்கியங்களிலிருந்து திரட்டப்*

பட்ட இந்நூலில் 1570 செய்யுட்கள் உள்ளன. அவற்றுள் நாலடியாரிலிருந்து இந்நூலில் 200ன் மேற்பட்ட பாக்கள் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

**பாராட்டிக் கூறும் புலவர்.**

"வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவண தெய்த இருதலையும் எய்தும்"

என்னும் நாலடியார் கருத்தமைய—

இடைநிலை யாம்பொரு ளுண்டேன் முதனிலை யெய்தற்கும்
கடைநிலை யாமின்ப முமேவு மென்றனக் காதலரென்
றடைநிலை யாம்பதத் தெம்மான் திருவெங்கை ஆயிழைக்குத்
தொடைநிலை வார்குழற் பூங்கொடியே சென்று சொல்லுகவே

—வெங்கைக்கோவை, சிவப்பிரகாசர்.

**குறட்பாக்களோடு அமைவனவற்றுட் சில,—**

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீரப் பேதையார் நட்பு"

—குறள். 782

"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு"

—நாலடி. 125.

"பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்"

—குறள். 146.

"அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா—பிறன்தாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்று
அச்சத்தோ டிந்நாற் பொருள்"

—நாலடி. 82.

"சூட்மை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு"

—குறள். 338.

"சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து"

—நாலடி. 30.

## பண்டை உரை ஆசிரியர்கள் உரைகூறத் தொடங்கு மரபு :-

**பரிமேலழகர்**

*அதிகாரப் பொருள் கூறுமிடத்து, 'அஃதாவது' என்று தொடங்குவர்.*

**நச்சினார்க்கினியர்**

*அதிகாரப்பொருள் கூறுமிடத்து, 'நிறுத்த முறையானே எழுத்து உணர்த்திச் சொல் உணர்த்துகின்றார் ஆதலின், சொல்லதிகாரம் என்னும் பெயர்த்து' என்றும், சூத்திரப் பொருள் கூறுமுன் 'என்பது சூத்திரம்' எனவும், 'இதன் பொருள்' எனவும், கூறுவர்.*

**பேராசிரியர்**

*'இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின்', என்றும், 'என்பது சூத்திரம்' எனவும், 'இதன்பொருள்' எனவும் கூறுவர். 'அஃதியாதோ எனின்', எனவும் புகலுவர்.*

**இளம்பூரணர்**

*'இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ எனின்', என்றும், 'பொருள் என்பது யாதோ எனின்' என்றும், 'இதன் பொருள்', எனவும் தொடங்குவர்.*

**நக்கீரனார்**

'என்பது, என்னுதலிற்றோ வெனின்' என்றும்; 'இதன் பொருள்' எனவும் தொடங்குவர்.

**சேனாவரையர்**

'நிறுத்த முறையானே சொல்லுணர்த்திய எடுத்துக் கொண்டார்' எனவும், 'இதன்பொருள்' எனவும் தொடங்குவர்.

இனி, **இந்நூல் உரை ஆசிரியர்கள் கூறுவன :—**

'அஃதாவது' என்றும, 'என்பது' எனவும் 'என்றது', எனவும் தொடங்குவர். இவ்வாறு தொடங்குவதால் அவ்வுரையாசிரியர்களோடு ஒருங்குவைத்து எண்ணத்தக்கார் என்பது புலனாகின்றது.

## உரை விசேடம்.



"வைகலும் வைகல் வரக்கண்டும்"

—இதன் விரிவுரை. 39

[1] "கல்வி கரை இல் கற்பவர் நாள்சில"

—இதன் விரிவுரை பதமுரை. 135.

"ஆற்றுந் துணையும்"

—இதன் உரை. 196

[1] 'கரையில்லாத கல்வியாவன' எனத்தொடங்கி, அறுபத்து நான்கு கலைகளின் விரிவுரை கூறியும், 'வேறுபடுத்து ஆராய்ந்து அமைவுடைய கற்கலாவது' எனத்தொடங்கி, கவிகளாலே சோகரசம், வீரரசம், முதலியன பேதங்கள் உள்ளாகச் சித்திரித்துச் சொல்லப்பட்ட காவிய நாடகங்களா

[1]'பழவினை' என்பதற்கு விளக்கங்கூறுவது.

"கடல் சாரநதும"

—இதன உரை. 244.

"நனனிலைக கண"

—இதன உரை பதுமனார். 248.

இவை விரிவும், நயமும் உறற உரைப்பகுதிகளாகும். மற்றுமுள்ள பாடல்கள் விரிவஞ்சி விடப்பெறறன.

**நாலடியார் உரைவளம்.**

திருக்குறளுக்கு உரை வரைந்த ஆசிரியர் [2]பதின்மா என்ப. மறறுஞசில ஆசிரியர்களும உரை எழுதி இருத்தல கூடுமென்பது அவ்வுரைப் போக்கால் விளஙகுகின்றது அஃதேபோல, நாலடியாருக்கும் உரைவகுத்த ஆசிரியர் பலா இருத்தல்கூடும். அவருள், தருமா, பதுமனா, விளககவுரை காரர் என, மூன்று உரை ஆசிரியாகள் வரைநதுதவிய உரைகளை, இஙகே தொகுதது வெளியிடலால இதறகு "நாலடியாா உரைவளம" எனப் பெயரிடப்பெறறது

**உரைச் சுவடிகளின் வரலாறு.**

பேரரசா சரபோஜி மனனன தொகுதத நூறபெரு மன்றததுள (சரஸ்வதி மகாலில) நாலடியாா உரையுடன அமைநத ஏடடுசசுவடிகள மூனறு உளளன

---

னும்' எனப பலவாகப புதியன விரிததுககூறியது படித் துணரததக்கது.

[1]பிரததியடசம, அநுமானம, ஆகமம, உவமானம, அாததாபததி, அபாவம, எனப பகுததுரைபபன ஆராயதறகுரியது.

[2]"தருமா மணக்குடவா தாமததா நசசா
பரிமே லழகா பருதி—திருமலையா
மலலா பரிபபெருமாள காளிஙகா வளளுவாநூற
கெலலையுரை செயதாா இவா"

அவற்றுள், [1]தருமர் உரையுடன் கூடிய சுவடி 1. (இது பதவுரை) முற்றும் உள்ளது

பதுமனார் உரையுடன் அமைந்த சுவடி 1 (இது பொழிப் புரை) இது 136 பாடல்களுக்குமட்டும் உள்ள உரைப் பிரதி.

உரை ஆசிரியர் பெயர் குறிக்கப்படாமல் அமைந்த உரைப்பிரதி 1. இது 297 பாடல்களுக்குமட்டும உரையுடன் (பதவுரை) கூடியது

இவ்வுரை ஆசிரியர் பெயர் விளங்காமையால் விளக்க வுரை எனப் பெயரிடப்பெற்றது.

இவற்றை ஒப்புநோக்குதற்குப் பல்வேறு இடங்களில் ஆராய்ந்து கிடைத்த பிரதிகள் வருமாறு —

(1) டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் சேகரித்து வைத்தது. அடையாறு கலாக்ஷேத்திரத்தில் உள்ள பிரதி 1. (இது தருமபுர ஆதீனத்துப் பிரதி நாலடி விருத்தி என்று பெயர்)

(2) சென்னை அரசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலைப் பிரதி (பொழிப்புரை)

(3) ஷை புத்தகசாலைப் பிரதி 1. (பதவுரை)

(4) நாலடியார் தேவருரை பிரதி 1 அண்ணாமலைப் பல

---

[1] தருமர் உரைபற்றி ஸரஸ்வதி மகால் தமிழ்ச் சுவடிகளின் விவர மடங்கிய காட்லாகைத் தயாரித்த பண்டிதர் L உலகநாத பிள்ளை கூறியிருப்பது வருமாறு — "இதில் முழுவதும் இருக்கிறது. இவ்வுரை சிறந்ததாகக் காணப்படுகிறது 'சீலமுனிவர்' என்னும் முதற் குறிப்புடைய செய்யுளில் "கண்டான பொருட்டான பயனுரைத்தான காதலித்தத் தண்டாரப் பொறைத் தருமன் தான்" எனவந்திருப்பதைக் கொண்டு இவ்வுரை செய்தவர் 'தருமர்' என்பவராய் இருத்தல் வேண்டு மென்று கருதப்படுகின்றது, இவ்வுரை அச்சிடப்படவில்லை".

கலைகழகம்.

(5) நாலடிப் புகழ்ச்சி. பிரதி 1. இது நண்பர் ஒருவரிட மிருந்து கிடைத்தது

இவற்றுள் 4, 5ம பிரதிகள் ஒப்பு நோக்குதற்குரியதாக வில்லை பதுமனார் உரை 136ஆம் பாடலகளுக்கு மேறபட்ட பகுதியையும், விளகக வுரை 297ஆம் பாடலகளுககு மேற பட்ட பகுதியையும் அரசாங்கததுக கையெழுததுப் புததக சாலைப் பிரதியையுங்கொண்டு பூர்ததி செய்துகொள்ளப் பெறறது

**பிறமொழிப் புலவர் கூறுவது :—**

Dr. G U Pope இவா தாம் எழுதிய நாலடியார் பதிப் புரையில பின்வருமாறு கூறியுளளார் :—

"கடவுள வாழதது பாடலைததவிர வேறு இடங்களில் கடவுளைப்பறறிக கூறவிலலை. எனினும, சில தெயவங்களைப் பறறியும், மக்களின பொதுவான நம்பிககைகளைப்பறறியும், கூறப்பட்டிருக்கிறது

ஆனால சீரிய ஒழுககத்தைபபறறிய கருத்துககளும் மக்களாவார நல்லொழுககததினால ஈடுபடவேணடிய கடமை யைப்பறறியும, மிக்க வன்மையுடனும, திருத்தமாகவும் கூறி யுளளார்

முடிவில் இத்தகைய சிறநத ஒழுக்கத்தில் மிகப் பறறுள்ள மக்களாவார் தனிப்பட்ட பேரின்பததை எயது வர்களென நான் கருதுகிறேன். அன்னாரை இவ்வழியில நிலைநாட்டியது திருக்குறளும், நாலடியாருமே ஆகும்."

**நாலடியாரின காலம்.**

நாலடியாரின காலததைப்பறறி ஆராயச்சியாளாகள

நிச்சயமான ஓர் முடிவுக்கு வந்திருப்பதாகத் தெரியவில்லை.

(1) கடைச் சங்கநூறகளைத் தொகுத்துக்கூறும் வெண் பாவில் நாலடியார் முதலில் கூறப்பட்டுப் பின் மறறப் பதி னெண் கீழ்க்கணக்கு நூறகள் கூறப்பட்டிருப்பதால், நாலடி யாரும் கடைச் சங்க நூற்களில் ஒன்று என்ற முடிவுக்குப் பெரும்பான்மையோர் வந்துள்ளனர். கடைச்சங்க காலம் கி. பி. முதலாவது அல்லது இரண்டாவது நூறறுண்டில் முடிவடைந்தது என்று நிசசயித்தறகுப் போதிய சான்று உளளது.

சீததலைசசாத்தனுர் கடைசசங்கப் புலவருள் ஒருவர் என்பது சஙக நூறகளாகிய எட்டுத்தொகை நறறிணை யிலும், குறுநதொகையிலும, அகநானூறறிலும், புறநானூற றிலும், இவருடைய பாக்கள இருததலாலும், 'தணடமிழ் ஆசான் சாத்தன' எனவும, 'நன்னூற புலவன' எனவும், சிலப்பதிகாரத்துச் சிறப்பிதத்துக் கூறப்படுதலாலும், திருவள ளுவமாலையில் சாறறுப்பாக்கள தந்த புலவர் வரிசையில் இவரும இருத்தலாலும் நிசசயிக்கப்படுகிறது "சீத்தலைச் சாத்தனுரால் இயறறப்பட்ட மணிமேகலை" என்று பேரா சிரியர் தொல்காப்பியச் செய்யுளியல உரையில் கூறியிருத்த லால், 'மணிமேகலை' சங்ககாலத்தில் ஏறபடடதென்பது நிச்சயிக்கப்படுகிறது சீததலைசசாத்தனுரும், சிலப்பதிகாரம் இயறறிய இளங்கோவடிகளும, தங்கள நூறகளை ஒருவருக கொருவர் உரைததும கேடடும் இருந்தனர என்பது "உரை யிடையிட்ட பாடடுடைச செய்யுள், உரைசால அடிகள அருளக், கூல வாணிகன சாததன் கேட்டனன்" எனச் சிலப்பதிகாரப் பதிகததிறுதியிலும, "இளங்கோவேந்தன அருளிக் கேடப, வளஙகெழு கூல வாணிகன் சாததன், மாவண் டமிழததிற மணிமேகலைதுற, வாறைம் பாட்டி னுள அறியவைத தனனென" என மணிமேகலைப் பதிகத் திறுதியிலும கூறியிருத்தலால தெளிவாகிறது.

இளங்கோவடிகளின் முன்னவனுகிய "செங்குட்டுவன்" பததினிக் கடவுளாகிய கண்ணகிக்குக் கோயில் சமைத்து

விழாக் கொண்டாடிய காலத்து இலங்கை மன்னனாகிய 'கயவாகு' என்பவனை உடனிருந்தனன் என்று சிலப்பதிகாரம் வரந்தரு காதையால் தெரிவதால் 'கயவாகு'வின் காலமே இளங்கோவடிகள், சாத்தனார், இவர்கள் காலமாக விருத்தல் வேண்டும். 'மகாவம்சம்' என்னும் இலங்கைச் சரித்திர நூலுள 'கயவாகு' என்ற பெயருடைய அரசர் இறைக்கு 800 ஆண்டுகட்கு முன்பு ஒருவரும், 1800 ஆண்டுகட்கு முன்பு ஒருவரும் விளங்கினர் எனக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சிலப்பதிகாரம் சோழர்கள் புகார் நகரத்தைத் தலைநகராகக் கொண்டு அரசியல் நடாத்திய காலத்தியதாதலால், அது 800 வருடங்கட்கு முந்தியதெனக் கொள்ளல் ஏற்புடைத்தன்று. ஆகவே, 1800 ஆண்டுகட்கு முன்பிருந்த 'கயவாகுவே' சங்கப்புலவர் சீத்தலைச் சாத்தனார் காலத்தவன் என்பது தெள்ளிதின் புலனாகும். இந்த முடிபு திரு. Dr. உ. வே. சாமிநாதையர் அவர்களால் சிலப்பதிகார முகவுரையிற் கூறப்பெற்றுள்ளது. ஆதலின், நாலடியார் கடைச்சங்ககாலமாகிய இறைக்கு 1800 ஆண்டுகட்கு முந்தியகாலத்தில், ஏற்பட்ட நூல் என்பது பெரும்பாலோர் துணிபு

(2) இதற்கு மாறாக இம்முடிவை ஒப்புக்கொள்ளாத பல அபிப்பிராயங்களும் இப்போது நிலவி வருகின்றன.

i பதினெண் கீழ்க்கணக்குப்பற்றிய வெண்பா பிற்காலத்து ஏற்பட்டிருக்கலாம். அதை நிச்சயமான ஓர் ஆதாரமாகக் கொள்ளலகூடாது. ஆதலின், நாலடியாரின் காலத்தை வேறு ஆதாரங்களைக்கொண்டே நிச்சயித்தல் வேண்டும். நாலடியாரில் உள்ள செய்யுட்கள் சமண முனிவர்களால் இயற்றப்பட்டவை என்பதற்கு ஆதாரமான சிறப்புப்பாயிரப் பாடல்களும், அதைப்பற்றிய கர்ணபரம்பரைச் செய்திகளும், பழைய [1] சுவடிகளில் காணப்படுகின்றன.

[1] சரஸ்வதி மகால் நூல் நிலையச்சுவடிகளில் No 82 நாலடியார் மூலம் மிகப் பழமை உடையதாகக் காணப்படுகிறது. ஏறக்குறைய இறைக்கு

சமண முனிவர்கள் பாண்டி நாட்டை விட்டுச் சென்றது சம்பந்தர் காலம் என்பது பிரசித்தம். ஆதலால், நாலடியார் சம்பந்தர் காலத்தில் ஏற்பட்டிருத்தல்கூடுமென்பர் ஒரு சாரார். தஞ்சை சரஸ்வதி மகால் சுவடிகளை ஆராய்ந்து சுவடிகளைப்பற்றிய குறிப்புகளுடன் கூடிய 'சுவடித் தொகுப்பு நூல்" எழுதிய பண்டித L. உலகநாத பிள்ளை அவர்கள் 'சம்பந்தர்' காலத்தில் இந்நூல் ஏற்பட்டிருத்தல் கூடுமெனக் கருதுகிறார். ஆனால் எண்பெருங் குன்றத்துச் சமணமுனிவர் இயற்றிய இந்நூல் யாவராலும் வேளாண் வேதமெனப் போற்றப்படுதலால், தென்னாட்டில் சமணம் தழைத்தோங்கிச் சமணமுனிவர் தவவலிமை உன்னத நிலையில் இருந்தகாலத்தில் இது ஏற்பட்டதென்று கொள்வது பொருந்துமே அல்லது சமணம் குன்றிச் சமண முனிவர்கள் தோல்வியுற்று நாட்டைவிட்டு அகன்ற காலத்தில் ஏற்பட்டதென்று கூறுதல் பொருந்தாது.

எண்பெருங்குன்றத்துச் சமணமுனிவர் பஞ்சம் வந்தவோர் காலத்தில் பாண்டியன் அவைக்கு வந்து, அவனால் உபசரிக்கப்பட்டுத் தங்கினர் என்றும், அவர்கள் பாண்டியனிடம் விடைபெற்றுக்கொள்ளுதல் இயலாதென அஞ்சி விடைபெற்றுக் கொள்ளாமலே ஊரைவிட்டுப் போயினர் என்றும், அவர்கள் போன பின்பு ஒரு சமயம் அவர்கள் அமர்ந்திருந்த ஆசனங்களைப் புரட்டிப் பார்க்க அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஓலையில் ஓர் பாடலை எழுதிப் போந்தது தெரிந்ததென்றும், அதை அரசன் எடுத்து அவற்றின் பொருளில் உள்ள உண்மையைச் சோதிக்க எண்ணி அவற்றை வையையாற்றிற்போட அவற்றுள் 400 பாடல்கள் கரையெதிர் ஏறியதைக்கண்டு ஆச்சரியப்பட்டு

---

400 வருடங்கட்கு முன்பு எழுதப்பட்டதென அதன் தோற்றத்தைக் கொண்டு ஊகித்தற்கிடனுண்டு. இதில் எண்பெருங் குன்றத்தின் பெயர்கள் அடங்கிய வெண்பா சிறப்புப்பாயிரத்தில் காணப்படுவதோடு முடிவில் 'எண்பெருங்குன்றத்து எண்ணாயிர முனிவரும் செய்த, 'வையை' ஆற்றிற்கு எதிராக நடந்த நாலடி நானூறும்' என்றும் எழுதப்பட்டுள்ளது.

அந்த 400 பாடல்களையும் சேகரித்தான் எனவும் கர்ண பரம்பரையும், பழைய பாட்டின் பொருளுமாகும். இப்படி நேர்ந்த காலம் சம்பந்தர் காலத்தில் நடந்திருத்தல் கூடாது. ஏனெனில் அப்போது சம்பந்தர்எழுதிய தேவாரப்பதிக ஏடே எதிர்சென்றதேயன்றி, சமணமுனிவர் இட்ட ஏடு எதிர் செல்லவில்லையென்பது பிரசித்தம் அப்போது அவர்களால் நாலடியார் எழுதப்பட்டிருந்தால் அதை மக்கள் ஆதரிக்க இடமில்லை. ஆகையால் நாலடியார் சம்பந்தர் காலத்தில் ஏற்பட்டதென்று கொள்வது சரியென்று தோன்றவில்லை

11. நாலடியாரில் பெருமுத்தரையர் எனனும் செல்வம் குறையாத வள்ளல்களைப்பற்றி 200-வது பாட்டிலும், 296-வது பாட்டிலும் கூறப்பட்டுள்ளது அப்பாடல்களில் 'எக்காலத்திலும் இரவாதவர் வறியராயினும் பெருமுத்தரையருக்கு ஒப்பாவார்' என்றும், 'ஈதலிற் சிறந்த பெருமுத்தரையர் இடும் உயர்ந்த விருந்துக்குக் காத்திருப்பவரைக் காட்டிலும், இரவாதார் உண்ணும் நீரும் அமுதத்திற்கு ஒப்பாகும்' என்றும் பொருள் அடங்கியுள்ளது

'பெரும்பிடுகு முத்தரையனுயின சுவரன மாறன' எனபவனைப் பற்றிய புகழ்ச்சிப் பாடல்கள் தஞ்சைக்கு அடுத்த செந்தலைக் கோயில் கற்றூண்களில் வெட்டப்பட்டிருக்கின்றன. இப்பாடல்களில் இவனது வெற்றிகளும் பிறவும், பாராட்டிக் கூறப்பட்டிருக்கின்றன ஆனால், இவனது வள்ளற்றன்மை இதில் குறிக்கப்படவில்லை. எனினும், புலவர் பலர் புகழ்ச்சிக்குரியவன் ஆதலின் இவன் கொடைக்குணம் வாய்ந்தவன் என்பது ஊகிக்கப்பெறும். இக்கல்வெட்டுகளைப்பற்றி எழுதியிருக்கும் திரு T. A. கோபிநாதராயர் அவர்கள், 'இச் சாசனத்தில் கூறப்பட்ட முத்தரையன் எக்காலத்தான் என்பது விளங்கவில்லை' என்று கூறியபோதிலும், 'எழுத்துக்களின் வடிவைக்கொண்டும், இந்தச் சாசனத்தில் "பல்லவன வெல்லத் தென்னன் முனையைக் கெடச் சென்ற மாறன்" என்று கூறப்பட்டிருப்பதாலும் இவன் பல்லவர்கட்கு உட

பட்ட ஓர் சிற்றரசனுகவிருத்தல் வேண்டும்' என்றும், "பெரும்பிடுகு" என்னும் பெயர் பரமேசுர வாமப் பல்லவனுக்கு ஏற்பட்டிருக்கும் ஓர் பெயராதலாலும், பேரரசர் பெயரைச் சிற்றரசர் தாங்கும் மரபிருத்தலாலும், இவனை முதல் பரமேசுரவாமன் காலத்தவன் என்று நிச்சயிக்கலாம்' என்றும் கூறியிருக்கிறார். ஆதலின், இம்முத்தரையர் கி பி. 8வது நூற்றாண்டின் தொடக்கத்தில் அரசுபுரிந்த சிற்றரசர் என்ற முடிவுக்கு வந்துள்ளார் இவரே நாலடியாரில் கூறப்பட்டார் என்றுகொண்டு நாலடியார் 8-ம் நூற்றாண்டில் ஏற்பட்டிருக்கவேண்டும் என்பர் சிலர் ஆனால் நாலடியாரில் குறிப்பிடப்பட்ட 'பெருமுத்தரையர்' என்பார் செந்தலைக் கல்வெட்டில் கண்ட முத்தரையரா? என்பது நிச்சயிப்பதற்கில்லை. நாலடியாரில் முத்தரையர் என்று ஓர் மரபின் பெயர் கூறப்பட்டிருக்கிறதேயன்றி ஓர் குறிப்பிட்ட அரசன் பெயர் கூறப்படவில்லை.

மேலும், பெருமுத்தரையர் என்ற சொல்லுக்குச் சிறப்புரை கூறுமிடத்துப் [1]பதுமனார்,— 'நான்கு மரபுகளிலும் முற்பட்டிருக்கும் தலைமையுடையார் என்பாருமுளர்' என்று கூறியுள்ளார். செந்தலைக் கல்வெட்டுக்களில் முத்தரையர் வள்ளன்மை சிறப்பாகக் கூறப்படவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. இக்கல்வெட்டைக்கொண்டு நாலடியாரிற் கண்ட முத்தரையர் காலத்தைக்கொள்வதற்கோ அதைக் கொண்டு நாலடியாரின் தொன்மைக்கான பல ஆதாரங்களை எதிர்ப்பதற்கோ போதுமான வன்மை இல்லை. மிகப்பழைய உரை ஆசிரியர்கள் அனைவரும் சங்க காலத்திய இலக்கிய, இலக்கணங்கட்கு எடுத்துக்காட்டாக நாலடியாரின் பாக்களையே பெரிதும் எடுத்து ஆண்டிருப்பதால் அதன் தொன்மையை இலேசில் மறுத்தல் கூடா. மிக்க வன்மையான ஆதாரங்கள் இருந்தாலன்றி நாலடியார் சங்ககால இலக்கியம் என்று கொள்வதே பொருந்தும்.

---

[1] 296-பாடல் உரை.

## உதவிய அன்பர்கட்கு நன்றியுரை.

நாலடியாரின் பிற்பகுதிப் பாடல்கள் 200ம் நன்முறையில் செப்பஞ்செய்து எழுதி உதவிய அம்பாசமுத்திரம் தீர்த்தபதி உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் திருவாளர் **M. R.** கந்தசாமி பிள்ளை அவர்கட்கும், இந்நூலின் முற்பகுதியை எழுதி உதவிபுரிந்த சரஸ்வதி மகால் நூல் நிலையம் எழுத்தாளர் திருவாளர் **S.** இராஜகோபாலன் அவர்கட்கும் எனது நன்றி உரியதாகுக. இந்நூல் வெளியீடு காரணமாகப் பல்வகையாலும் தொன்மையாகவே உதவி புரிந்துவரும் பிரம்மஸ்ரீ **K** வாசுதேவ சாஸ்திரியார் B. A., அவர்களுக்கு நமது நன்றி உரித்தாகுக. இதுவும், இன்னோரன்ன நூற்கள் பலவும் வெளியிடற்குப் பணித்து உதவி புரிந்துவரும் 'சரஸ்வதி மகால் நூல் நிலையம்' கௌரவ காரியதரிசி பிரம்மஸ்ரீ **S** கோபாலன் B. A., B. L., அவர்கட்கு எனது நன்றி உரித்தாகுக. இத்தகைய நூற்கள் வெளியிடற்குப் பேருதவி புரிந்துவரும் சென்னை அரசாங்கத்துக்கு நமது நன்றி என்றும் உரித்தாகுக.

சரஸ்வதி மஹால,<br>தஞ்சை.<br>20—10—53.

**S. முத்துரத்ன முதலியார்,**<br>பதிப்பாசிரியர்.



# நாலடியார் அதிகார அட்டவணை.

[பிற்பகுதி]

(21 முதல 10)

## 5. பொதுவியல்.



## 6 பகையியல்



## 7 பணனெறி



# 3 காமத்துப்பால்

## 1 இன்ப துன்ப இயல்.



## இன்ப இயல்.



---

# இப்பதிப்பில எடுத்துக்காட்டிய நூற்பெயாகள, நூலுறுப்புக்கள முதலியவற்றின் முதற்குறிபபகராதி.

பளிக்—பளிக்கறைபுக்ககாதை.
பாகவதம.
(திருவிளை) பாணடி சுரங—
பாததிர—பாததிரமபெற்றகாதை,
பாததிரங கொண்டு பிசசை
புககககாதை.
பாததிர மரபு—பாததிரமரபு
கூறியகாதை.
பாரத வெணபா
பா-ம—பாடபேதம
பால—பாலகாணடம.
பிங—பிஙகலம
பிரபுலிங—பிரபுலிஙகலீலை.
பிரயோக—பிரயோகவிவேகம.
புண—புணரியல,
புறத—புறததிணையியல
புறததிரடடு
புறம, புறநா—புறநானூறு.
பு. வெ—புறபபொருள வெணபா
மாலை.
பெரியதிரு, பெ. திரு—பெரிய
திருமொழி.
பெருங—பெருஙகதை
பெருமபாண—பெருமபாணாறறுப
படை
போர—போரசிரியா.
பொருள—பொருளதிகாரம
போர—போரசசருககம.
மணக்—மணககுடவா
மணி—மணிமேகலை
மதுரைக்காஞசி
மநதிரப்—மநதிரபபடலம
மநதிரமாலை—திருமநதிரமாலை.
மநதரைசூழசசி—மநதரை
சூழசசிபபடலம.
(திருவாத) மநதி—
மயிலை—மயிலைநாதா
மரபு—மரபியல.
மலைபடுகடாம்.
(திருவிளை) மாணிக்க—
(கநத) மாயை, மாயையுப—
(பிரபு) மாயை-பூசை—
மாரீசன—மாரீசன வதைப்படலம.
முத—முததியிலமபகம.
முதுமொழிககாஞசி.
முருகு—திருமுருகாறறுப்படை.
மூதுரை.
மெயபபாடு—மெயபபாடடியல.
மேரு—மேருமநதரபுராணம.
மேற—மேறகோள.
(நீலகேசி) மொககல—
மோகவதைப்பரணி.
(தாயுமான) மௌன—
யசோத—யசோதரகாவியம.
யா. கா.—யாபபருஙகலககாரிகை.
யாபபு—யாபபுபபடலம.
யா வி.—யாபபருஙகல விருததி.
யுதத—யுததகாணடம
(பிரபு)—பிரபுலிஙகலீலை.
வஞசி—வஞசிமாநகா புககககாதை,
வதத—வததவகாணடம
வரநதரு—வரநதருகாதை
வளையாபதி
வன—வனமபோககுப படலம,
வாககு—வாககுணடாம
விநா, விநாயக—விநாயக புராணம்.
(திருவிளை) விருதத—
விலலி—விலலிபுததூராழவார
பாரதம.
விவேகசிநதாமணி
விழாவறை—விழாவறைகாதை
வினை—வினையியல
வீர, வீரசோ—வீரசோழியம

வெங்கைக்கோவை.
வெற்றி—வெற்றிவேற்கை.
(பு. வெ.) வெண்பா
வேதா—
வேள்வி—வேள்விப்படலம்.
வேற—வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல்.
(மேரு) வைசயந்த—
வைத்திய—வைத்தியநாததேசிகர்.
வைரா, வைராக்கிய—வைராக்கிய சதகம்.

உ

# நாலடியார் உரைவளம்.

## இரண்டாவது
## பொருட்பால்.

### 2. [1]நட்பியல்.

#### 21. சுற்றந் [2]தழால்.

**தருமர்:—** அஃதாவது பகைவரால் [3]அடாப்புண்டும், வறுமையுற்றும், பிணிப்பட்டும், [4]க்ஷாமகாலங்களால் மெலிந்தும் இவ்வகைத்தாய துன்பங்களால் ஒருசெயலுமற்றுத் தம்மை வந்தடைந்தவர்கள் [5]விதனம் நீக்கி அவர்கள் தம்மைவிட்டு நீங்காதபடி பண்ணிக்கொள்ளும், தம்முடைய உறவின்முறையார்க்கு ஓர் இடும்பைவரில் துன்பந் தனக்கு வந்ததுபோல விரைவில் தவிர்த்து, அவர்பாரந் தமதாகக்கொண்டு தழுவி வேறுபாடின்றி யிருத்தலுமாம்.

**பதுமனார்:—** அஃதாவது வறுமையுற்றும், வியாதிப்பட்டும், பகைவரால் அடாப்புண்டும், க்ஷாம காலத்தினாலும் படும் இடும்பைக்கு உதவிசெய்து தாமும் அவ்விடும்பைதன்னை அனுபவிக்குஞ் சுற்றமாயுள்ளவரும், இவ்வகைப்பட்ட இடும்பைகளுக்கு அஞ்சி வந்தடைந்தவர்களும், அறிவினாலும் சீலத்தி

---

[1] நண்பரது தன்மையைக் கூறும் பகுதி.

[2] தழால்—தழுவுதல்.

[3] நெருக்குண்டும்.

[4] பஞ்சம்.

[5] வருத்தம்.

ஞானும் மிகுந்த தேர்ந்தோருடன் எண்ணப்படுமெனின் எவரும் தன்னைச் சுற்றும்படி உறவுசெய்வதுதான் அணைத்தல் என்றவாறு.

## குறிப்பு :—

'சுற்றந் தழால்' —

பரிமே :—அஃதாவது அரசன் தன் கிளைஞரைத் தன்னின் நீங்காமல் அணைத்தல். வினைசெய்வாரைக்கூறி ஏனைச்சுற்றம் கூறுகின்றாராகலின், இதுதெரிந்து வினையாடலின்பின் வைக்கப் பட்டது.

மணக் :—சுற்றந்தழாலாவது அரசன் தன் கிளைஞரைத் தன்னின் நீங்காமல் அணைத்தல். மேல் அமாத்தியமாட்டு அரசன் ஒழுகுந்திறம் கூறினாராதலின், அதன்பின் வைக்கப் பட்டது.

பரிதி :—சுற்றந் தழாலாவது அரசன் தன் சுற்றத்தைப் பாதுகாப்பான் எ-று.

—குறள். அதி. 53.

201. வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும்
கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்(கு)
அசாஅத்தான் உற்ற வருத்தம் உசாஅத்தன்
கேளிரைக் காணக் கெடும்.

**தருமர் :**—எ-து. வயாவும—கருக்கொள்ளுங் காலத் துண்டாகிய மசக்கையாகிய நோயும்; வருத்தமும—கருவாகிய பாரம் பொறுத்துத் திரியும் நோவும்; ஈன்றக்கால நோவும்—ஈனுங் காலத் துண்டாகிய நோவும் இத்துன்பமெல்லாம்; கவாஅன் மகன் கண்டு—[1]குறங்கின் கீழ்க் கிடந்த பிள்ளையைக் கண்டு; தாய் மறந்தாஅங்கு—தாய் மறந்தாற் போல; அசாஅத் தான் உற்ற வருத்தம்—தனிமையாகித் தானுற்ற துன்ப

[1] குறங்கு—தொடை.

மெல்லாம்; உசாஅத்தன் கேளிரைக் காணக் கெடும—கலத்த லுடையதான தன் உறவின் முறையாரைக் கண்டவுடனே நீங்கும் என்றவாறு.

அசாதல்—தனிமை. [1]உசாஅதல்—கலப்பு. ஆதலால் தமது கிளைஞர், அடைந்தோர் இவர்களைக் கைவிடாது தன்னில் ஒன்றுகத் தழுவுதல் வேண்டும் என்பதாம்.

**பதுமனார்:**—ஈன்றது கருக்கொண்டால் வருவதொரு பிணியும், பின் கருவைப் பொறுத்தலால் வருவதொரு மெய் வருத்தமும், அதனை ஈனுங்காலத்து வருவதொரு நோயும் இம் மூன்றும் குறங்கின்கட் கிடந்த குழவியைக் கண்டு தாய் மறந் தாற்போலத் தளர்ச்சியாற் றுற்ற வருத்தந் தனனொடு சூழுஞ் சூழ்ச்சியையுடைய கேளிரைக் காணவே கெடும் என்றவாறு.

அசா—தளர்ச்சி. உசா—சூழ்ச்சி

**விளக்க உரை:**—எ-து. வயாவும் வருத்தமும் ஈன்றக் கால் நோவும்—கருக்கொள்ளுங் காலத்து வருவதொரு நோவு [மசக்கை], கருவைப் பொறுத்துத் திரியுங்காலத்து வருவதொரு நோவு, ஈனுங்காலத்து வருவதொரு நோவு என்று சொல்லப் பட்ட துன்பங்களெல்லாம், கவான் மகற்கண்டு தாய் மறந் தாங்கு—குறங்கின் கீழ்க் கிடந்த பிள்ளையைக் கண்டு தாய் மறந்தாற்போல, அசாத்தான் உற்ற வருத்தம்—அசாவுதலாகிய தனிமையுற அத்தால் வருந்திய வருத்தமெல்லாம்; உசாத்தன் கேளிரைக் காணக்கெடும—உசாவாகிய கலப்புடைய தனதுற வின் முறையாரைக் காணவே முன்பு தான் தனிமையுற்ற துயர மெல்லாம் நீங்கிவிடும் எ-று.

அசா—தனிமை. உசாவுதல்—கலப்பு.

---

[1]உசாதல்—நலம்பற்றி வினவல் என்றும் சொல்லலாம்.

**கருத்து:**—சுற்றந் தழுவல் தன் வருத்தமெல்லாம் நீங்குதற்குக் காரணமாகும்.

## ஒப்புமைப் பகுதி :—

"பொருகட்டற் பரிதி போலப் பொன்னனனை பிறந்த போதே
மருவுநடை மாதர் நற்ற மம்மாநோய் மறைந்த தன்றே.
—சீவக. 304.

(க).

202. அழல்மண்டு போழ்தின் அடைந்தவர்கட்
கெல்லாம்
நிழல்மரம்போல் நேரொப்பத் தாங்கிப்
—பழுமரம்போற்
பல்லார் பயன்துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்.

**தருமர்**'—ம்-து. அழல் மண்டு போழ்தின்—ஆதித்த கிரணம் முதிர்ந்த காலத்து, அடைந்தவர்கட்கு எல்லாம்—தன்னைச் சேர்ந்தவர்கட்கெல்லாம்; நிழல் மரம் போல்—நிழலுடைய மரம் போல, நேர் ஒப்பத்தாங்கி—வேற்றுமையின்றித் தன்னிடத்து அழல் ஆற்றுவது போல அவரைத் தான் தாங்கி; [1]பழுமரம் போல—பழுத்த மரத்தின் பயனைப் பலரும் புசிப்பது போல; பல்லார் பயன் துய்ப்ப—தன் பயனைத் தன்னை யடைந்தார் பலரும் நுகர; தான் வருந்தி வாழ்வதே—தான் வருத்தமுற்று வாழ்வதே, நல்லாண் மகற்கு கடன்—நல்ல (ஆண்) தகைமையுடையவனுக்கு முறைமை என்றவாறு.

[2]தான் வருந்துவது எதெனில் அவர் துன்பத்துக்கு

---

[1]பழுமரம்—ஆலமரம் என்றுங் கூறலாம்.

[2]தான் வருந்துவதாவது தனது இலை, பூ, காய், பழம், ஆகியவற்றை வேண்டுவார் பெறத் தான் இடங்கொடுத்துப் பொறுத்திருத்தலாம்.

இரங்குதல் தனக்கு வருத்தம். மரமானது தான் வெயிலிலே நின்றாந் தன்னைச் சேர்ந்தவர்க்கு நிழலைக் கொடுப்பது போலத் தன்னுடம்பு வருந்தியாகிலும் அவரைத் தாங்கவேண்டும் என்பதாம்.

**பதுமனார்:**—என்பது. வெம்மை மிக்க கோடைக் காலத்துத் தம்மை அடைந்தாரைக் கெல்லாம் நிழலையுடைய மரம் போலச் சுற்றத்தார்க்கெல்லாம் நேரொப்பத் தாங்கிப் பழுத்த மரம் போலப் பல்லாரும் பயனை நுகரத் தாம் வருந்தி வாழ்வது நல்ல ஆண்மையையுடைய மகற்குக் கடன் என்றவாறு.

பழுமரம் போல பல்லார் பயன் துய்ப்பத் தாம் வருந்தி வாழ்வது—பழுத்த மரத்தில் ஏறி முறிக்கவும் எறியவும் அது வருத்தப்பட்டாற் போல, இவனும் வந்தார்க்கு இடும், மேல் வருவார்க்கு உலை ஏற்றிவரக் கண்டோமில்லை என்றும் வருந்தி வாழ்வது.

**விளக்க உரை:**—என்பது. அழல் மண்டு போழ்தின் அடைந்தவர்கட்கு எல்லாம்—ஆதித்த கிரணம் முதிர்ந்த காலத்துத் தன்னைச் சேர்ந்தவர்கட்கெல்லாம்; நிழல் மரம் போல நேர் ஒப்பத்தாங்கி—நிழலுடைய மரம்போல வேற்றுமையின்றித் தரிப்பித்துக்கொண்டு; பழுமரம் போல—பழுத்த மரம் போல; பல்லார் பயன் துய்ப்ப—பலரும் தன் பயன் நுகர; தான் வருந்தி வாழ்வதே—(துன்பமுற்றவர் வருத்தத்துக்குத்) தான் இரங்கி வாழ்தலே; நல்லாண் மகற்குக் கடன்—நல்ல ஆண்டகையுடைய மகனுக்கு முறைமை என்றவாறு.

**கருத்து:**—சுற்றந் தழுவல் இல்வாழ்வானது கடமையாகும்.

## ஒப்புமைப் பகுதி:—

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்"

—குறள். 216.

"நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க
படுபனை யன்னர் பலர்நச்ச வாழ்வார்"

—நாலடி 96.

"துன்னிக்
குழைகொண்டு தாழ்ந்த குளிர்மரம் எல்லாம்
உழைதங்கண் சென்றார்க்கு ஒருங்கு".

—நாலடி. 167.

"நிழலில் நீளிடைத் தனிமரம் போலப்
பணைகெழு வேந்தரை யிறந்தும்
இரவலர்க்கு ஈயும் வள்ளியோ னாடே"

—புறம். 119 : 5-7.

"முனையூர்ப் பழுனிய கோளி யாலத்துப்
புள்ளார் யாணர்த் தற்றே என்மகன்
வளனும் செம்மலும் எமக்கு"

—புறம். 254 . 7-9.

"உதவுமாடுயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற் றாகவும்

—கம்ப. அயோத்தி. மந்திரப். 82.

"அருஞ்சுரத்தின் மரம்போல அடைந்தார்க்களிக்கல்
அவற்கியல்பு"

—சீவக. 3-நச். உரை.

"கற்றையஞ் சுடாமணிக் கனகம் ஒன்னய
பிறைமுடியென னுத்தருள் பெரியவர் வண்மைபோல்
மற்றவண் உள்ளபன் மாமுப் தம்பயன்
எற்றையும் உலப்புறு தீகை சான்றவே"

—கந்தபுரா.

'பழுமரம்' —
"பழுமரத் தீண்டிய பறவையின்"

—மணி. 14-26.

"பழுமர முள்ளிய பறவையின்"

—பொருந. 64.

"பழுமரந் தேரும் பறவைபோல"

—பெரும்பாண. 20.

"பழுமரம் புள்ளெழுந் தன்ன"

—புறம். 173:3.

"பாரகெழு பழுமரப் பறவை யொத்தவே"

—சீவக. 828-4.

(உ).

203. அடுக்கல் மலைநாட! தற்சேர்ந் தவரை
எடுக்கலம் என்னார் பெரியோர்—அடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினும் இல்லையே
தன்காய் பொறுக்கலாக் கொம்பு.

**தருமர்:**—என்பது. [1]அடுக்கல் மலைநாட!—கல்லால் உயர்வு பெற்ற மலையினையுடைய நாடனே!; தன் சேர்ந்தவரை—தம்மை யடைந்தவரை; எடுக்கலம் என்னார் பெரியோர்—தாங்குதற்கு மறுப்பது பெரியோரிடத்தில்லை; [அதென்னபோல வென்னில்] அடுத்தது அடுத்து—மேன்மேலும்; வன் காய்—பெரிதாகிய காய்கள்; பல பல காய்ப்பினும்—பலவாகக் காய்த்ததாயினும், தன் காய் பொறுக்கலாக் கொம்பு இல்லையே—தன் காயைத் தாங்கமாட்டாத கொம்பில்லை அதுபோல் என்றவாறு.

அறிவுடையார் தம்மை யடைந்தவரைக் காக்குந் தன்மை கூறியது.

**பதுமனார்:**—என்றது. அடுக்கலையுடைய மலைநாடனே! தம்மை யடைந்தாரைத் தாங்கமாட்டோம் என்னார் பெரியோர்

---

[1] அடுக்கல் மலை—ஒன்றன்பின் ஒன்றாய்த் தொடர்ந்துள்ள மலை.

(அதென்போல வென்னில்) மேனமேலும் செறியச்செறிய வன் காய் பல காய்த்ததாயினும் தன் காயைத் தாங்கமாட்டாத கொம்பில்லை யதுபோல் என்றவாறு.

எடுக்கலம்—தாங்கலம்.

**விளக்க உரை :**— எ-து. அடுக்கல் மலை நாட!—அடுக்கிய கல்லையுடைய மலைநாடனே!, தற்சேர்ந்தவரை—தம்மைச் சேர்ந்தவரை; எடுக்கலம் என்னார் பெரியோர்—தாங்கமாட்டோம் என்னார் பெரியோர், (அதன்போல வென்னில்) அடுத்தடுத்து வன்காய் பல பல காய்ப்பினும்—மேன மேலும் பல பலவாகிய காயைப் பெரிதாகக் காய்த்ததாயினும்; இல்லையே தன்காய் பொறுக்கலாக் கொம்பு—தன் காய் பொறுக்கமாட்டாத கொம்பு இல்லை என்றவாறு.

**கருத்து :**—சுற்றத்தாரைத் தழுவி உயர்த்துதல் பெரியோரது இயல்பாகும்.

**ஒப்புமைப் பகுதி :—**

"கொடிக்குக் காய் பளுவோ?"

—பழமொழி.

(௩).

204. உலகறியத் தீரக் கலப்பினும் நில்லா
சிலபகலாம் சிற்றினத்தார் கேண்மை-நிலைதிரியா
நிற்கும் பெரியோர் நெறியடைய நின்றனைத்தால்
ஒற்கமிலாளர் தொடர்பு.

**பதுமனார் :**—என்பது, உலகு அறியத் [1] தீரக் கலப்பினும்—உலகிலுள்ளோர் அறிய மிகுதியாக உறவு கொள்ளினும்; சிற

[1] தீர—நிரம்ப, உறுதியாக.

றினத்தார் கேண்மை—சிறறினத்தாருடன கொண்ட உறவு; நிலலா சில பகல் ஆம—(நிலலாவாய) சில நாளனறிப பலநாளுந உறவாகுவதலல; ஒறகம இலாளா தொடாபு—தளாச்சி யில்லா தாருடன கொண்ட உறவு, நிலை திரியா நிறகும பெரியோா—தவஞசெயயுங காலதது அதறகு இடையூறுவரில தளராது நிறகும் பெரியோா; நெறி அடைய நின்றனைதது—வீட்டு நெறி யடைய நிறபதுபோல நிலை திரியாமல் நிறகும எனறவாறு.

[ஆல்—அசை]

நிலைதிரியாதது—முறகண்ட டுறவு கொண்டதுபோல எப போதும ஒரு தனமையாய நிறபது. ஆதலால சுறறநதழால அறிவுடைய பெரியோாக கலைநிலை என்பதாயிறறு

**பதுமனார் :**—என்பது. உலகமெல்லாம அறிய மிக நட்புககொளளினும நிலையாவாய, சிறறினததாா கேணமை சில நாள அளவேயாம. மனததில தளாசசியிலலாத பெரியோா கேண்மை நினற நிலையில திரியாது நிறகும, அருந்தவா தாம குறிதத நெறியடையுமளவும நினறாற போல எனறவாறு

சிலபகல்—முறபகல ஒறகமிலாளா—குறறமிலாளா.

**விளக்க உரை :**—எ-து. உலகறியத தீரக கலபபினும—உலகததாா அறிய நிரமப வுறவு கொளளினும; நிலலா சில பகல ஆம சிறறினததாா கேண்மை—சிறறினததாருடன கொணட கெழுமுதல (நிலையாவாயச) சில நாள அளவேயாம, நிலைதிரியா நிறகும பெரியோா நெறியடைய நினறனைதது—தாஙகொண்ட தவமாகிய மேறகோளுககு இடையூறுவரில அதறகுத் தளராது நிறகும பெரியோா (தாம குறிதத நெறியடையுமளவும நினறாற போலும), ஒறகமிலாளா தொடாபு—தளாச்சி யில்லாதாருடன கொண்ட வுறவு எனறவாறு.

இபபடி ஒததாரை சுறறமாக நட்புக் கொள்ளுதல் பெரியோர்க்கு முறைமை என்பதாம.

**கருத்து :—** அறிவும் குணமும் உடைய பெரியோரே சுற்றமாகத் தழுவத் தக்கவராவர்.

## ஒப்புமைப் பகுதி :—

“நூறாண்டு பழகினு மூர்க்கர் கேண்மை
நீர்க்குட் பாசிபோல வேர்கொள் ளாதே.
ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.

—நறுந்தொகை. 33-34.

(ச)

205. இன்னர் இனையர் எமர்பிறர் என்னுஞ்சொல்
என்னும் இலராம் இயல்பினால் — துன்னித்
தொலைமக்கள் துன்பந்தீர்ப் பாரேயார் மாட்டும்
தலைமக்கள் ஆகற்பா லார்.

**பதவுரை :—** எ-து. [1]இன்னர் இனையர் — நல்லார், தீயார், சேர்க்குமவர், சேர்க்கலாகவர், எமர் — இவர் உறவின் முறையார், பிறர் — இவர் அன்னியர்; என்னும் சொல் — என்று வேறுபடுத்திச் சொல்லுஞ் சொற்கள், [2]என்னும் இலர் ஆம் — சிறிதும் இல்லாதவராகிய, இயல்பினால் — இயல்பினையுடையராய், [3]தொலைமக்கள் துன்னி — தளர்வெய்தியவரைக் கிட்டி, துன்பம் தீர்ப்பாரே — அவர் துன்பத்தை நீக்குவாரே; யார் மாட்டும் — யாவரிடத்தும், தலைமக்கள் ஆகற்பாலார் — தலைமையான தன்மையையுடையவர் என்றவாறு.

தம்மை யடைந்தவரை இவர் இத்தன்மையர் என்று நோக்குவது பெருமைக்கு இயல்பன்று; நோக்கியபோதே

---

[1] இன்னர் — இவர் என்றே பொருள் கொள்ளலாம்.
[2] என்னும் — ஒரு சிறிதும்
[3] தொலை மக்கள் — துன்பத்தால் தளர்ந்த மக்கள், (உறவினர்).

அவற்குப் பெருமையில்லை. ஆதலால் தம்மை அடைய வருவார் யாவராயினும் அவரைத் தாங்கி, அவர் துன்பந் தீர்க்கவேண்டும் என்பதாம். அத்தன்மையாரே யாவரினுந் தலைமையானவர் என்று சுற்றந் தழுவுதற்கு வற்புறுத்தியது.

**பதுமனார்** —என்றது இன்னார் நல்லார், இனியவர் பரிக்கலாகா அளவினார், கேளிர், கேளிரல்லாதார் என்னும் இப் பெற்றியால் வேறுபடுத்திச் சொல்லுஞ் சொல் யாதும் இலராம் இயல்பினராய், தளர்ந்த மக்கள் துன்பத்தை மேவித் தீர்ப்பாரே யாவர் மாட்டுந் தலைமக்களாகுந் தன்மையுடையார் என்றவாறு.

**விளக்க உரை:**—எ-து இன்னார் இனியார் எமர் பிறர் என்னும் சொல்—நல்லார், தீயார், பரிக்கலாகா அளவினர், பரிக்கலாம் அளவினர், உறவின் முறையார் இவர், அன்னியர் இவர் என்று வேறுபடுத்திச் சொல்லுஞ் சொற்கள், ஏனும் இலராம் இயல்பினர்—என்னத்தக்கவை யில்லாத இயல்பை யுடையராய், தொல்லைக்கண் துன்பம் துன்னித் தீர்ப்பாரே—தளர்ந்த மக்கள் துன்பங்களை ஆராய்ந்து அவரைச்சென்று கிட்டி அத்துன்பங்களை நீக்குவாரே, யார் மாட்டும் தலைமக்கள் ஆகற்பாலார்—எல்லாரினும் வைத்துத் தலைமையான தன்மையுடையவர் என்றவாறு

**கருத்து**:—சுற்றந் தழுவுதலில் வேறுபாடின்றி யாவரையும் தழுவுதலே தலையாய அறம்.

(ரு).

206. பொற்கலத் தூட்டிப் பெய்த புலியுகிர் வான்புழுக்கல்
அக்காரம் பாலோ(டு) அமரார்கைத் துண்டலின்
உப்பிலிப் புற்கை உயிர்போற் கிளைஞர் மாட்(டு)
எக்கலத் தானும் இனிது.

**தருமர் :—** என்பது. பொன் கலத்துப் பெய்த—பொற் கலத்திலே இட்ட; புலி உகிர் [1]வால் புழுக்கல்—புலிநகம் போன்ற வெண்மையான சோற்றை; [2]அக்காரம் பாலோடு—அக்காரத்துடனே பாலுங்கூட்டி, [3]அமரார் கைத்து உண்டலின்—சேரார்தாராகிய அன்னியரிடத்து உண்பதினும், உப்பு இலி [4]புற்கை—உப்பிலலாத புற்கை நீரை, உயிர் போல கிளைஞர் மாட்டு—தமமைச் சேர்ந்த உயிர்போலுங் கிளைஞரிடத்திலே, மக்கலத்தாயும—மண்கலத்திலே வார்த்ததாயினும; இனிது—உண்பதினிது என்றவாறு

உயிர்போல என்வே தாமுணணுமளவும் உபசரித்து அன்னியரிடத் துண்டல மணப்பரி(விலலா தாயி)ற்று ஆதலால கிளைஞரைத் தன் னுயிர் போன்றாராகத் தழுவியிருத்தல யாவ(ரக்கும) வேண்டும என்பதாயிற்று.

**பதுமனார் :—** என்றது. பொற்கலத்தினகட் பெய்த புலியுகிர் போன்ற வெண்சோற்றையும், அக்கார(த்தையும), பாலோடுகூட விரும்பாதார் கையால உண்டலினும உப்பிலி யாகிய புற்கை உயிர்போலுங் கிளைஞர் மாட்டு யாதானுமொரு கலத்திற் பெறினும அது இனிது என்றவாறு.

பெய்தது—இட்டது. வான் புழுக்கல—அறுகிய சோறு அமரார—தன் னெஞ்சுக்குப் பொருந்தாதார.

**விளக்க உரை :—** என்பது. பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான் புழுக்கல—பொன்னின் கலத்திலே இட்ட புலியுகிர் போலும் வெள்ளிய சோற்றினை, அக்காரம் பாலோடு

[1] வான்புழுக்கல—சிறந்த சோறு எனினுமாம.

[2] அக்காரம—வெல்லக்கட்டி.

[3] அமரார் கைத்து—விரும்பாதார் கையால பெற்றதனை

[4] புற்கை—புல்லரிசிக் கூழ், இழிந்த உணவு

அமரார் கைத்து உண்டலின்—அக்காரம் பாலுடனே கூடி அன்னியரிடத்திலே உண்கிறதிலும்; உப்பிலிப் புற்கை—உப்பில்லாத புற்கை நீரை; உயிர் போற கிளைஞர் மாட்டு—தன்னுயிர் போலும் உறவினமுறையாரிடத்து, எக்கலத்தானும் இனிது—யாதொரு கலத்தே வார்த்துண்டாலும் இனிதாம் எ-று.

சோறு புலியுகிர் போறலாவது—இடைமுறிந்து மாறுது அங்கவீனப்படாது இருமருங்கும் நேரிதாய் நின்று தண்டற வெந்து உத்தம இலக்கணத்தோடும் பிசி முருந்து என்றும், முசியா அரிசி என்றும் சொல்லப்பட்டும் புலியுகிர் போலப் பிடித்தால் உள்ளடங்கி, விட்டால் தனித்தனியாதல்.

கைத்து—கையிலுள்ள தான பொருள்.

**கருத்து :**—சுற்றத்தாரின் இழிந்த வுணவும் இனிதாகலின் அவரைத் தம்முயிர்போல் தழுவவேண்டும்.

## ஒப்புமைப் பகுதி :—

'புற்கை' —

"தயங்குநீர்த் தண்புற்கை"

—நாலடி 210.

"நெடும்நீர்ப் புற்கை"

—புறம். 64.

"தெண்ணீரடு புற்கை"

—குறள். 1065.

(௬)

207. நாள்வாய்ப் பெறினுந்தம் நள்ளாதார் இல்லத்து
வேளாண்மை வெங்கருனை வேம்பாகும்-கேளாய!
அபராணப் போழ்தின் அடகிடுவ ரேனும்
தமராயார் மாட்டே யினிது.

**தருமர் :**—எ-து. நாள வாய பெறினும—வேளை தப்பாமல் உதவிய [1]அசனமாயினும; தம் நளளாதார இல்லதது—தமக்கு நட்பில்லாதார மனையில்; [2]வேளாண்மை—அவர் முயறசியால் வநத; [3]வெம கருனை—வெமமையோடுங கூடிய பொரிக் கறியும் அசனமும்; வேமபாகும—வேமபுககு நிகராகும, [4]கேளாய!—கேடபாயாக!; [5]அபராணப போழதின்—நேரந தாழததின வேளையிலேயானுலும, அடகு இடுவரேனும்—இலைக கறி இடுகினும அது; தமா ஆயார மாட்டே—தமககு உறவானவரிடததே; இனிது—மிகவும இனிமையாம் எனறவாறு

வேமபாகும் எனவே நடபில்லாதார பரிவோடு கூடிச் செயவதல்ல, தமககாங கருமததினை பொருடடு இடும அசனமாதலின அதனை நஞசெனறார அபராணப போழதின எனறது பசிககு ஏறற காலந தபபி அபபசி அடஙகித [6]தமபிதத வேளையாக நேரந தாழத்த வேளையிலே யானுலும உறவின முறையார பரிவோடு இடட இலைக்கறியாயினும அபபொரிக கறியோடு கூடிய அசனததினும இனிமை பெறற அமுதமாம எனறார்; பரிவு அததனமையாயிறறு ஆதலால் சுறறமாயினுரை வழுககாது தழுவி ஒழுகல வேணடுமென்பதாயிறறு

**பதுமனூர் :**—என்றது. சிறுகாலையே பெறுராயினும நடபை நளளாதார மனையினகண உபகாரத்தால் வநத வெய்ய கருனைக் கறியும் வேபபே போலாகும சேளாய் நெஞசமே! அநதியம பொழுது இலைககறியினை இடுவாராயினும கிளைஞர மாடடு இனிது எனறவாறு.

---

[1] அசனம—சோறு.

[2] வேளாணமை—உதவியாகக் கொடுதத.

[3] வெம கருனை—விருமபததக்க கறியமுது.

[4] கேளாய எனறது—நெஞ்சை நோக்கியது.

[5] அபராணப் போழ்து—பிற்பகற பொழுது.

[6] தமபிதத வேளை—நின்ற சமயம

வேளாண்மை வெங் கருனை—முதன்மையாகச் சமைதத பணியாரப பொரியல்.

என்றது மருததுவ நூலாற் சொல்லப்பட்ட நாளிடத்திலே தனனெஞசத்துப் பொருநதாதார இலலததுஉபகாரமான வெவவிய கருனைச்சோறு வேமபாகும். அதகனமைத்து கேளாய அநநூலாற சொலலபபடட அபராணப பொழுதின கண அடகிடுவராயினும தமராயினுரிடததினிது எனறவாறு.

†நாள் வாய் என்றது—பினனே அபராணப பொழுது என்று உளதாகலின சிலேததும கோப காலமாகிய வாம காலததிறகும், வாத கோப காலமான அபராண காலததிறகும, நடுவு பிதத கோப காலமான மததியானததிறகும உட்பட்ட காலததினே; அபபோது ஆதிததன உயாநது வநது மததியானத திலே உள தணிககவும உதராககினி எழுநது மததகத தளவுஞ் செலலவும, இருதயக துளதாகிய தாமரை முகிழ திறந்து இவ வுட்டணங்களாலே மிகவு மலாநது மிதன நாளத்தினும், நாடிகளாலும உட்டணஙகள ஓடிப புறமபும உளளும் காயச்சல பிறநது சிலேஷம உளளது திறபபித்து விழுநது முனபே சரீர சுததி பிறநது வெளிபபட்ட குடா காயும்படி நின்ற இரதத தாதுவைப பறறி எரியா நினற அக்கினிக்கு இநதனமான இரதத தாதுககே ஏற எரியவும் வாத கோபம பிறநது இவ வககினியை அவிக்கும அபராணதகுக்கு முனபாகவும நுகரபபடுதலான அந நாளவாயப பெறினும் எனறுா.

**விளக்க உரை** —எ-து. நாள வாயப பெறினும—சிறுகாலையே பெறறுராயினும; தன நளளாதார இல்லதது—தன பகைவா இலலததில், வேளாண்மை வெஙகருனை வேம் பாகும—உபகாரததால வநத செவவிய கருனைக் கறியும வேமபு போலே இருககும; கேளாய!-(கேடபாயாக!), அபராணப போழ தின அடகிடுவரேனும—அநதிக் காலததிலே இலைக்கறியை

†மருததுவநூற் கருதது ஆராய்தற்குரியது.

இட்டாராயினும்; தமராயார் மாட்டே இனிது—உறவின் முறையாரிடத்திலே உண்கிறதினிது என்றவாறு.

**கருத்து :**—இதுவும் முற்செய்யுளின் கருத்தே கொண்டது.

## ஒப்புமைப் பகுதி :—

"விருப்பிலா ரில்லத்து வேறிருந் துண்ணும்
வெருக்குக்கண் வெங்கருனை வேம்பாம்—விருப்புடைத்
தன்போல்வா ரில்லுட் டயங்குநீர்த் தண்புற்கை
என்போ டியைந்த வமிழ்து".

—நாலடி. 210.

(எ).

208. முட்டிகை போல முனியாது வைகலும்
கொட்டியுண் பாரும் குறடுபோற் கைவிடுவர்
சுட்டுக்கோல் போல எரியும் புகுவரே
நட்டார் எனப்படு வார்.

**தருமர் :**—எ-து. முட்டிகை போல—இரும்பு கொட்டு வதற்கு [1]முட்டிகை யில்லாது ஆவதல்ல அதுபோல ஒருவற்கு வேண்டியவராய் இருந்து, முனியாது—வெறுப்பில்லாது, வைகலும்—நாள் தோறும்; [2]கொட்டி—கூடா நட்பாகவே அவர் மனம்பெற ஒழுகி, உண்பாரும்—அவரிடத் துண்டா கிய உணவை உண்டு வாழ்பவரும்; குறடு போல கைவிடுவர்—குறடானது தான் பற்றியிருந்த இரும்பை எரிக்குள் விட்டுத் தான் நீங்கிறைபோல அவர்க்கொரு துன்பம் வந்த வேளையிலே கைவிடுவர்; நட்டார் எனப்படுவார்—தம்மிடத்து நட்புடை யானவர் என்னப்பட்டார்; சுட்டுக்கோல் போல எரியும் புகுவர்—இரும்பு வேம்பொழுது உலையாணிக் கோலானது

---

[1] முட்டிகை—சம்மட்டி.

[2] கொட்டி—பொருளை அடித்துப் பதஞ்செய்து.

தானும் எரியுட் புகுந்து வேமது போல நட்பாளர்க்கு வந்த துன்பத்தைக்கூட அனுபவிப்பர் என்றவாறு.

கூடாநட்பாயினோர் தங்கருமம் முற்றுந்துணையும் இவரில்லாது நமக்கு ஒரு காரியமும் ஆகாது என்னும் வகையாக, அவர் மனம் வரும்படி ஒழுகி அவர்க் கிடர் வந்த வேளையிலே கைவிட்டுப் போவர். தமக்கு உற்றாராகிய நட்பாளர் அவர்க்குள்ள காலத்துப் பகுத்துண்டும், இல்லாது துன்பமுற்ற காலத்தும் அந்த துன்பந் தமக்கு வந்ததாகக்கூட அனுபவிப்பர். ஆதலால் அந்த தன்மையாளரைத் தழுவுதல் வேண்டும் என்பதாம்.

**பதுமனார்** :—என்றது, கொல்லனுடைய சுத்தியல்போல நாடோறும் தம்முடைய நட்டாரைப் பகஞ்செய்து உண்டாரும், மற்று அவர்க்குத் துன்பம் வந்தகாலத்துக் கொல்லன் †கொடிறு போலக் கைவிடுவர். அவன் சுட்டுகோல்போல எரியின் கண்ணும் புகுவர் நட்டார் என்று சிறப்பிக்கப்படுவர் என்றவாறு.

சுட்டுக் கோல்—உலையாணிக் கோல்.

**விளக்க உரை** :—எ-து. முட்டிகைபோல முனியாது—கொல்லனுடைய சுத்தியல்போல வெருதே; வைகலும்கொட்டி உண்பாரும்—நாள்தோறும் பகஞ்செய்து உண்பாரும்; குறடு போற் கைவிடுவர்—நெருப்பிலே இரும்பைப் போகட்டு மீளுங் குறடுபோலக் கைவிட்டுப் போவார்; சுட்டுக்கோல் போல—கொல்லன் உலையாணிக் கோல் போல, எரியும் புகுவர்—தம் உறவின் முறையார் புக்க எரியின்கண்ணும் முழுகுவர்; நட்டார் எனப்படுவார்—நட்புக்கொள்ளப் பட்டார் என்று சொல்லத் தக்கவர் என்றவாறு.

பகஞ்செய்து உண்கையாவது—இதழும் இட்டு மும் சொல்லி உண்கை.

---

†கொடிறு—பற்றுக்குறடு.

**கருத்து :**—இன்பத்திலும் துன்பத்திலும் பங்குகொள்வாரையே சுற்றமாகத் தழுவ வேண்டும்.

## ஒப்புமைப் பகுதி :—

"அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்திற்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு.

—மூதுரை. 17.

## குறிப்பு :—

இச்செய்யுளில் கொல்லனது சம்மட்டி, குறடு, உலையாணிக் கோல் ஆகிய கருவிகளே உவமையாயினவா றுணர்க.

(அ).

209. நறுமலர்த் தண்கோதாய்! நட்டார்க்கு நட்டார்
மறுமையுஞ் செய்வதொன் றுண்டோ?-இறுமளவும்
இன்புறுவ இன்புற்(று) எழீஇ அவரோடு
துன்புறுவ துன்புறாக் கால்.

**தருமர் :**—என்பது. நறுமலர்—நறுவிய மலரினைச் சூடிய, தண்கோதாய்!—குளிர்ந்த மாலையினை உடையவளே!; நட்டார்க்கு—உறவு செய்தார்க்கு, நட்டார்—உறவின் முறையார்; இறும் அளவும்—சாகுமளவும், இன்புறுவ இன்புற்று—இன்பமுறுங் காலம் தாமும் இன்பமுற்று, எழீஇ—நடந்து, அவரோடு—அவரோடு கூடி, துன்புறுவ துன்புறாக்கால்—துன்பமுறுங்கால் துன்பத்தைத் தாமும் உறாராகில்; மறுமையும் செய்வது ஒன்று உண்டோ?—இறந்துபோய்ப் பிறக்கும் மறுபிறப்பிலே செய்யும் உபகாரம் உண்டோ? என்றவாறு.

உறவின் முறையாரானவர் தம்முற்றார்க்கு ஒரு செல்வம்

உறும்பொழுதுகூட அனுபவித்து, வறுமையாகத் துன்புறுங் காலத்தும் அத்தன்மையாகவே ஒழுகார் ஆகில், அவர் மறுபிறப்பிலே வந்து உதவுவது உண்டோ? என்று அவரை இழிவாக்கி, அத்தன்மையார் உறவினும் அன்னியரிடத்து நட்புச் செய்வது நன்றென்பதாயிற்று.

**பதுமனார்** :—என்றது, நறுமலர்த் தண்கோதாய்! உற்றார்க்கு உற்றார் மறுபிறப்பின் கண்ணும் நன்மைசெய்வ தொன்று உண்டோ? சாமளவும் இன்புறுவனவற்றை அவரோடே தீம இன்புற்று ஒழுகி, அவர் துன்புறுவனவற்றை அவரோடே துன்புறுவிடில் என்றவாறு.

இறுமளவும—சாகுமளவும். எழீஇ—அவருடன் ஒழுகி.

**விளக்க உரை** :—எ-து நறுமலர்த் தண்கோதாய்!—நறுவிய மலரால் கட்டப்பட்ட குளிர்ந்த மாலையினையுடையாய்!; நட்டார்க்கு நட்டார்—உறவின் முறையார்க்கு உறவின் முறையார்; மறுமையும் செய்வது ஒன்று உண்டோ—இந்தக் காலத்திலும் மறுமையும் போய்ச் சிலவுதவிகளைச் செய்வதுண்டோ?; இறுமளவும் இன்புறுவ இன்புற்று எழீஇ—சாமளவும் அவர் இன்புறுவனவற்றைத் தாமும் இன்புற்று நடந்து, அவரோடு துன்புறுவ துன்புறுக்கால்—அவர் துன்புறுவனவற்றைத் தாமும் அவரோடு கூடியிருந்து துன்புறாமல் இருப்பாராயின என்றவாறு.

**கருத்து** :—இன்ப துன்பங்களில் பங்குகொள்ளாத உறவினரைத் தழுவலினும் அன்னியரைத் தழுவல் நன்று.

## ஒப்புமைப் பகுதி :—

[1]"பாம்புக் கொடியாற்குப் [2]பான்மேனி யான்போலத்
தாங்கி யமருள் தலைப்பெய்யார்—போக்கி

---

[1] பாம்புக்கொடியான்—துரியோதனன்.
[2] பான்மேனியான்—பலராமன்.

வழியராய் நட்டார்க்கு மாதவம்செய் வாரே
கழிவிழாத் தோளேறு வார்."

—பழ. 18,

(கூ).

210. விருப்பிலார் இல்லத்து வேறிருந்(து) உண்ணும்
வெருக்குக்கண் [1]வெங்கருனை வேம்பாகும்
—விருப்புடைத்
தன்போல்வார் இல்லுள் தயங்குநீர்த் தண்புற்கை
என்பொ(டு) இயைந்த அமிழ்து.

**தருமர்**.—என்பது. விருப்பு இலார் இல்லத்து—தம்மை விரும்பாதார் இல்லிடத்து; வேறு இருந்து உண்ணும்—வேறே யிருந்துண்டும்; [2]வெருக்கு கண்—(பூனைக)கண் போன்ற, வெம் கருனை—வெம்மையுடைய பொரிக்கறியுஞ் சோறும், வேம்பு ஆகும்—வேம்புக்கு இணையாம்; விருப்பு உடை—நம்மிடத்து விருப்ப முடைத்தாய; தன்போல்வார் இல்லுள்—வேறன்றித் தன்போல ஒன்றிய ஒழுகுமவர் மனையிடத்து, தயங்கு நீர்—[உண்கிற] தெளிந்த நீர் போலும்; தண் புற்கை—குளிர்ச்சியுடைய புற்கையாகிலும்; என்பொடு இயைந்த—என்பினளவுஞ் சென்று பொருந்திய; அமிழ்து—அமுதத்துக்குச் சரியாக விருக்கும் என்றவாறு.

விருப்பில்லாது கூடாநட்பாய ஒழுகுவார் தன்மையை இழிவு கூறுவார், அவரில்லத்து உண்ணும் பொரிக்கறியுஞ் சோறும் நஞ்சென்பதாக்கி; விருப்பமுடைய தன் போல்வார் தன் உறவுரிற சோறுதொழுகுதலை அறிவுறுத்தும் பொருட்டு அவரிடத் துண்ணும் புற்கையும் அமுதம் என்று வியந்து

---

[1] 'வெங்கருனை வேம்பாகும்' என்ற உவமை இவ்வதிகாரத்தின் 10-ஆம் செய்யுளிலும் வந்துள்ளது.

[2] வெருகு + கண் : வெருக்குக்கண்; பூனைக்கண்போல நிறமுள்ள பொரிக் கறி என்க

வற்புறுத்தியது.

**பதுமனார்** :—என்றது. காதலில்லாதார மனைக்கண் அளவளாவுதலின்றி வேறு இருநதுண்ணும வெருகின்கண்போன்ற நிறததையுடைய வெய்ய கருனைக்கறியும வேம்புபோலும்; தனமேற் காதலையுடைய தன்னைபபோல்வார் [1]இல்லினுள் பெறுந தெளிநத நீரில குளிர்ந்த புறகை என்பளவும் சென்று பொருந்திய அமிழ்து போலும் என்றவாறு.

விருப்பிலலாா இல்லம—தன நெஞ்சிறகுப் பொருந்தாதாா இல்லம. [2]வெருககுக் கண் வெங்கருனை—வெருகுப் பூனையதன கணணபோல வெநத பணியாரப பொரியல்.

**விளக்க உரை** :—எ-ன. விருபபிலாா இலலத்து வேறிருநது உண்ணும்—தமமை விருமபாதாா மனையிடத்து வேறேயிருநது உணணுகிற; வெருக்குக்கண் வெஙகருனை வேம்பாகும—பூனககணன போனற வெமமையுடைய பொரிஞ்ச கறியும வேம்புபோலே யிருக்கும்; விருப்புடைத் தன் போல்வார் இல்லுள்—தமமேல விருபபமுடைய தம்மைப் போல்வார் மனையிடத்தில; தயங்குநீர்த தண்புற்கை—தெளிநத நீரிற குளிர்ந்த புறகையை உணகிறது; என்போடு இயைநத அமிழது—என்பளவுஞ் சென்று பொருநதிய அமிர்தாய் இருக்கும் என்றவாறு.

**கருத்து** :—இதன கருதது இவவதிகாரதது 6, 7-ஆம செயயுட களோடு ஒததது.

## மேற்கோள் பகுதி :—

மயிலை } .—உயிரத தொடாக குறறுகர மொழிகளுள்,
சங்கர } டற ஒறறு இரட்டுதலன்றி சிறுபான்மை பிற

---

[1] இலலினுள்—மனையில்.

[2] 'வெங்கருனை வேம்பாகும்' என்ற உவமை முன் 207-ஆம செய்யுளினும் வந்துள்ளது.

வொற்றும் வேற்றுமையில் இரட்டுதற்கு 'வெருக்குக்கண் வெங் கருனை' என்பதனை மேற்கோள் காட்டுவா.

—நன். சூ. 182.
—நன். வி. சூ. 183.
(ம).

---

## 22. நட்பாராய்தல்.

**தருமர் :—** அஃதாவது ஒருவா குணங்களை ஆராயாமல் விரைந்து நட்புக் கொண்டால, பிறகு ஒரு குற்றங் கருதி விடுகின்றது குற்றமாதலால், நட்புக் கொளளுமிடத்துக் குடியும, ஒழுக்கமும, நலனும் உறுதிப்பாடும், சத்தியமும் (பழுதுசெய்யாத தன்மையும) நீட்டிக்க ஆராயநது நட்புக்கொளளக் கடவன் எனபதாம.

**பதுமனார் :—** அஃதாவது நட்புச் செய்த பினபு குடிப பிறப்பும, ஒழுக்கமும, அறிவும, குணத்தினது நலந தீங்குகளினும, சத்திய தன்மங்களினும, உலோக யாத்திரை களினும இவனுக்குள வாசனைகளும ஆராயதலும, பினபு போற் றுதல் ஒழிதலும இயல்பல்ல, ஆதலின நட்பாவதற்கு முனனே ஆராயநது கொள்ளல என்றவாறு.

குறிப்பு :—

'நட்பாராயதல்' :—

பரிமே :—அஃதாவது. மேறசொல்லிய இலக்கணத்தாரை ஆராயநது அறிநதே நட்கவேணடுதலின, அவரை ஆராயுந்திறம, அதிகார முறைமையும இதனனே விளங்கும.

மணக் :—நடபாராயதலாவது நட்பிறகு ஆவாரை ஆராயநது கொளளுமாறு கூறுதல். நட்குங்கால் ஆராய்நது நட்கவேண்டு

மாதலின்; [1] அதன்பின் இது கூறப்பட்டது.

பரிதி :—நட்பாராய்தலாவது ஆராய்ந்து நட்புப்பெற வேண்டும் எ-று.

—குறள். அதி. 80.

211. கருத நுணர்ந்து கற்றறிந்தார் கேண்மைஎஞ்
ஞான்றும்
குருத்திற் கரும்புதின் றற்றே—குருத்திற்கு
எதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ என்றும்
மதுரம் இலாளர் தொடர்பு.

*தருமர்* :—என்பது. †கருதது உணாநது—[ஒருவருடன் நட்புக் கொள்ளுமிடதது அவருடைய கலவி முதலானவறறை அவா] மனத்தினுல் நீடிக்க ஆராயநது; கறறு அறிநதார் கேணமை-அறிவுடையாருடன் கொண்ட உறவு; எஞ்ஞான்றும்—எபபொழுதும்; குருததின் கரும்பு தினறு அறறு—கரும்பைக் கொழுததாடை தொடங்கித தின்று வநதாற போலாம்; என்றும்—எல்லா நாளும்; மதுரம இலாளா தொடாபு—நன்மையில்லாதாருடன கொண்ட உறவு; குருததிற்கு எதிர்செல தின்று அனன தகைதது—கரும்பை அடியே தொடங்கிக கொழுநதாடைக்கு எதிராகத தின்று வநதாற போலும தகைமை யுடைதது என்றவாறு. [அரோ—அசை]

மனநயம இல்லாதாருடன் கொண்டஉறவு, அபபோதைககு இனிமையாய நாளடைவில் வேறுபடும; அதனுல் அவா தன்மையை நீட்டிக்க ஆராயநது அததகைமையாரிடதது நட்புக் கொள்ளவேண்டும் என்பதாம.

---

[1] நட்பு பின்.

† கருததுணர்ந்து என்பதறகுத தன் கருததினுல் கற்கததகும நூலை உணர்ந்து எனற பொருளை சிறக்கும் நூல்களின் உட்பொருளை உணர்ந்து என்பாரும் உளர்.

**பதுமனார்:**—என்றது. தன் கருத்தினாற் கற்கத்தகும் நூலைப்புணர்ந்து கற்றறிந்தாரோடு கொண்ட கேண்மை, கரும்பைக் குருத்தே தொடங்கித் தின்றாற் போலும். தன் குருத்திற்கு எதிராகச் செல்லத் தூரே தொடங்கித் தின்றாற் போலும் தன்மையுடைத்து எஞ்ஞான்றும் இனிமையில்லாத குணங்களை யுடையாரோடு கொண்ட கேண்மை என்றவாறு.

கேண்மை—தொடர்ச்சி

**விளக்க உரை:**—ம-து. கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை—கருத்தினைக் கற்கத்தகும் நூல்களை புணர்ந்து கற்றறிந்தாருடன் கொண்ட உறவு; எஞ்ஞான்றும் குருத்திற் கரும்பு தின்றற்றே—எல்லா நாளும் கரும்பைக் குருத்தே தொடங்கித் தின்று வந்தாற்போலும்; குருத்திற்கு எதிர் செலத்தின்றன்ன தகைத்து—குருத்திற்கு எதிராக அடியே தொடங்கித் தின்று வந்தாற் போலும் தகுதியுடைத்து; என்றும் மதுரம் இலாளர் தொடர்பு—எப்பொழுதும் மனநய மில்லாதாருடன் கொண்ட உறவு என்றவாறு.

**கருத்து:**—அறிஞர் நட்பு இனிமை மிகுவதால் அதனை உணர்ந்து நட்புக் கொள்ளவேண்டும்.

## ஒப்புமைப் பகுதி:—

"கனைகடல் தண்சேர்ப்ப! கற்றறிந்தார் கேண்மை
நுனியில் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரில்தின் றன்ன தகைத்தரோ பண்பிலா
ஈரம் இலாளர் தொடர்பு".

—நாலடி. 138.

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு".

—குறள். 782.

"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்

வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு".

—நாலடி 125.

"நளிகடல் தண்சேர்ப்ப! நாணிழற் போல
விளியும் சிறியவர் கேண்மை—விளிவின்றி
அல்கு நிழற்போல் அகன்றகன் றோடுமே
தொல்புக ழாளர் தொடர்பு."

—நாலடி 166.

## குறிப்பு.—

கரும்பை நுனியிலிருந்து அடிவரை தின்னுங்கால் சுவை மிகும்; அடியிலிருந்து நுனிவரை தின்னுங்கால் சுவை குறையும்; இது அறிஞர் நட்பு வரவரப் பெருகுதற்கும், அறிவிலார் நட்பு வரவரச் சிறுகுதற்கும் உவமையாம்

(க).

212. இற்பிறப்(பு) எண்ணி இடைதிரியார் என்பதோர்
[1]நட்புடைக் கொண்டமை யல்லது—பொற்கேழ
புனல்ஒழுகப் புள்ளிரியும் பூங்குன்ற நாட!
மனமறியப் பட்டதொன்(று) அன்று.

**தருமர்:**—என்பது. [2]பொன்கேழ புனல்ஒழுக—பொன்னைக் கொழிக்கு விழுகின்ற அருவியின் ஆரவாரத்தினாலே, [3]புள் இரியும்—புள்ளுகள் இரிந்தோடும், பூ குன்ற நாட!—பொலிவு பெற்ற மலைநாடனே!; இல் பிறப்பு எண்ணி—ஒருவர் குடிப் பிறப்பைக் கருதி; இடைதிரியார—இவர் நடுவே வேறுபடுமவரல்லர்; என்பது ஓர் நட்புடை—என்று ஒருதலையாக நட்புடைமை

[1]'நற்புடை' என்பது பதுமனார் பாடம்.

[2]'பொன் கேழ் புனல்—பொன்கொழிக்கும் நல்ல நிறமுள்ள அருவிநீர்.

[3]புள் இரியும்—பறவைகள் அஞ்சி ஓடும்.

யாக; கொண்டமை அல்லது—கொண்டதல்லாமல்; மனம் அறியப் பட்டது ஒன்று அன்று—அவர் மனத்தினால் அளவிடப்பட்ட தன்று என்றவாறு.

எனவே, ஒருவரை நட்புக் கொள்ளுமிடத்து அவர் குடிப் பிறப்பு ஒன்றினையும் கொண்டு நட்புறாமல், அவர் மனத்தினையுந் தீர ஆராய்ந்து நட்புக்கொள்ளவேண்டும் என்பதாம்.

**பதுமனார்** :—என்றது. குடிப்பிறப்புடையார் (என்று கருதி, இவர் நடுவு) வேறுபடார் என்று ஒரு(தலையாக) [1]நன் மருங்கு கொண்ட அத்துணையல்லது அவர், மனத்தினை அளவிடப் பட்டது ஒன்றன்று பொற்கேழ் புனல் ஒழுகப் புள்ளிரியும் பூங்குன்ற நாடனே! என்றவாறு.

இடை திரியார்—உறவு கொண்டால் நடுவே விட்டு நீங்கார். பொன் கேழ் புனல்—பொன்னமை நிறத்தையும், கெழுமுதலையு முடைய புனல் பூங் குன்றம்—பல [2]போதுகளையும உயர்ச்சியை யும் உடைய மலை. மனம் அறியப்பட்டது ஒன்றன்று— ஒழுக்கத்தையும், உபகாரத்தையும் அறிந்து உறவு கொள்ளும்தன்றி ஒருவர் மனத்தைப் புகுந்தறியலாமோ என்பாருமுளர்.

**விளக்க உரை** :— எ-து. இற்பிறப்பு எண்ணி—குடிப் பிறப்பைக் கருதி; இடைதிரியார் என்பதோர் நற்புடை கொண்டமை அல்லது—இவர் நடுவு வேறுபடுமவரல்லர் என்று ஒருதலையாக நன்மருங்கு கொண்டதல்லது, பொற்கேழ் புனல் ஒழுகப் புள் இரியும் பூங்குன்ற நாட!—பொன்னைக் கொழித்து விழுகிற அருவியினால் புள்ளுகள் இரிந்தோடும் பூக்களையுடைய மலைநாடனே!; மனம் அறியப்பட்டதொன்று அன்று—அவர் மனத்தினை அளவிடப்பட்டதொன்றன்று என்றவாறு.

---

[1] நற்புடை—நன் மருங்கு, நல்ல தன்மை
[2] போது—பூக்கள்.

**கருத்து:**—ஒருவரது குடிப்பிறப்பையன்றி அவர் மனத்தையும் நீர ஆராய்ந்து நட்புக்கொள்ள வேண்டும்.

(உ).

213. யானை அனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை தழீஇக் கொளல்வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்த
மெய்யதா வால்குழைக்கும் நாய். [வேல்

**தருமர்:**—என்பது யானை அனையவர்—யானை போலும் பெருமை யுடையாரிடத்து; நண்பு—கொள்ளும் நட்பை, ஒரீஇ—ஒழித்து; நாய் அனையார் கேண்மை—நாய்போன்ற இழிவுத் தன்மையுடையராயினும் அவரிடத்து நட்பினை, தழீஇக் கொளல்—விரும்பிக் கொள்ளல், வேண்டும்—வேண்டியதாயிருக்கும், [அஃது என்னெனில்] யானை—[1] ஆனை; அறிந்து அறிந்தும்—[தனக்கேற்ற உணவுகளைக் கொடுத்து வளர்க்கும் பாகனை] அறிந்திருந்தும், பாகனையே கொல்லும்—அப்பாகனை ஒருவேளையிலே கொன்றுவிடும், நாய்—நாயானது, எறிந்த வேல்—[தன்னையுடையவன்]எறிந்தவேல், [2] மெய்யதா—தன்மெய்யினில் பட்டுருவி நிற்க, வால் குழைக்கும்—தன்வாலைக் குழைத்து அவனருகே செல்லாநிற்கும்.

ஆதலால், குடிகுல வ்யாசசி நோக்கி நட்புக்கொள்ளாமல் ஒருவர் மனத்தூய்மையை ஆராய்ந்து, மனந்தூயராணா் குடிகுலத்தில் தாழ்ந்தவராயினும் அவருடன் நட்புக்கொள்ளக் கடவன் என்றவாறு.

ஆனைபோலும் பெரியோர் என்பது அரைசர் முதலாயினோரை.

---

[1] 'ஆனையாய்க் கீடமாய்'—திருவா. 8. 14.

[2] மெய்—உடம்பு.

**பதுமனார்:—** என்றது. யானை அனையவரோடு கொள்ளும் நட்பைத் தவிர்ந்து செய்ந்நன்றி யறியும் நாயனையரோடு கொள்ளும் நட்பை மருவிக் கொள்ளவேண்டும். யானை, பாகன் செய்யும் நன்றிகளை அறிந்தறிந்தும் அவனைக் கொல்லும். தன்னை வளர்த்த நன்மை செய்தவன் எறிந்தவேல் மேலெடுத்து உருவி நிற்கை யிலும் தன் வாலைக் குழைக்கும் அவன்முன் நாய் என்றவாறு.

யானை அனையவர் நண்பு ஒரீஇ—யானை உயர்ச்சியும், சீர்த்தியும், [1]சவுரியமும் உடைத்தாம்; அதுபோல உயர்ச்சியை யுடையார் உறவை விட்டுநீங்குக. யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்—தனக்குக் கவளமும், புல்லுங் கழையும் பல வுதவி களும் செய்வதறிந்தும் ஒரு குற்றத்திலே முன்செய்த நன்மையை மறந்து பாகனைக் கொல்லும் அதுபோல என்றவாறு.

**விளக்க உரை:—** எ-து யானை அனையவர் நண்பு ஒரீஇ —யானைபோல இருக்கும் பெரியோருடனே கொள்ளும் நட்பை ஒழிந்து; நாய் அனையார் கேண்மை கெழீஇக் கொளல் வேண்டும் —நாயைப் போல்பவர் நட்பினை விரும்பிக் கொள்ளக் கடவன்; (அஃதெப்படி யெனனில்) யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்—அந்த யானை (பழகியிருந்தும்) கவளமிட்டு வளர்க்கும் பாகனை [2]ஒருபடியால் கொன்றுவிடும்; எறிந்த வேல் மெய்யதா வால் குழைக்கும் நாய்—தன்னை யுடையவன் வேல் மெய்யிற் பட்டு உருவி நிற்கவும் நாய் தன் வாலைக் குழைக்கும் என்றவாறு.

ஆதலால் குடிப்பும் குலமும் உண்டென்று நட்புக்கொள்ளா மல் அவரவர் மனத்தினை ஆராய்ந்து, துய்யராயிருந்தார் பால் குடிப்பும் குலமும் இல்லையாயினும் அப்படி யொத்தாரை நட்புக் கொள்ளக்கடவன்.

**கருத்து** —குடிப்பிறப்பில்லார் மனந்தூயராயின் அவருடனேயே

---

[1] சவுரியம்—வலிமை, சூரத்தனம்.

[2] ஒரு பகையால் படி—பகை, 'படிமதஞ் சாம்ப வொதுங்கி'
—பரிபா 4.18.

ந புக் கொள்ளவேண்டும்.

## மேற்கோள் பகுதி :—

பேரா -உவமத்திறகு ஆவதோர் இலக்கண முணாத்துவாா, "யானை யனையவர். . கொளல வேண்டும—" என்பது அது. இவையுஞ சிறுமையுஞ சிறபபிறநீராக குறிபபின் வநத வழககாதல அமைநதன வென்பது" எனபர்.

—தொல். பொருள். சூ. 285·

## குறிப்பு :—

சிறியோா பலநாள் உதவி பெறறுஞம, ஒரு சிறு பிழைக காக அவறறை மறநது நமக்குத தீஙகு செயவா; பெரியோா நாமசெய்ப பலபிழை நேர்நதாலும ஒரு நனறியை மட்டும் எண்ணி அபபிழைகளை மறபபா, ஆகவே, யானை-நாய இவை சிறியாாக்கும பெரியாாக்கும முறையே நனறி மறததறகும், நினைத்தற்கும மட்டுமே உவமையாம.

(ந).

214. பலநாளும் பக்கத்தார் ஆயினும் நெஞ்சிற்
சிலநாளும் [1]ஒட்டாரோ டொட்டார்—பலநாளும்
நீத்தார் எனக்கை விடலுண்டோ? தந்நெஞ்
சாத்தாரோ(டு) யாத்த தொடர்பு. [சத்(தா)

**தருமர்** —எனபது பலநாளும—; பககததாா ஆயினும— தம அருகு இருநதாராயினும; நெஞசில—; சிலநாளும—சிறிது பொழுதும; ஒட்டாரோ—பொருததமிலலாா, ஒட்டாா—எவ வகையும உறவலலா; தம நெஞசதது—தமது நெஞசினுலே, யாததாரோடு—பிணிககபபட்டாருடன, யாதத—பிணிபபாகக கொணட, தொடாபு—உறவினை, பலநாளும—, நீததாா என

[1] ஒட்டாரோடு ஒட்டாா' எனபது பதுமனாா பாடம

—தம்மைவிட்டு நீங்கி யிருந்தார் என்று; கைவிடல் உண்டோ?—(அவரைக) கைநெகிழ்விடல் தக்கதோ? என்றவாறு.

கூடாநட்பாய் ஒழுகுவார பலநாளும் தம்மிடத்திருநது அவா காரியம் முடியுமளவும், இனிமையாக நடப்பினும் அது நட்பு அன்று. நெஞ்சிற பிணிபபுண்டானவர் தம்மைவிட்டு நீங்கி யிருநதாலும அவரே நட்பிறகுரியார். ஆதலால் ஒருவா குணஙகளை நீடடிக்க ஆராய்நது நட்புச் செய்ய வேண்டும் மனபதாம்.

**பதுமனார் :**—என்றது. நெஞ்சிற கலப்பில்லாதாா தம முடனே, நாளதோறும அருகுவிடாமல் பழகினும சில(நாளும) நட்பாககக கொளளாா; பலநாளும நீஙகினாா எனறு கருதிக் கைவிடல உண்டோ ? தம் மனததின்கண் பிணிக்கப்பட்டா ருடனே பிணிதத நட்பினை எனறவாறு.

**விளக்க உரை :**— ம-து. பலநாளும பக்கததாா ஆயினும—பல நாளும தம மருஙகிருநதாராயினும; நெஞ்சிற சிலநாளும ஒட்டாரோ ஒட்டாா—நெஞ்சிற சிறிது பொழுதும பொருநதக மிலலாதவா எபபடியும உறவலலா, பலநாளும நீததாா எனக கைவிடல் உணடோ ?—பலநாளும நீஙகினாா எனறு அவரைக கைவிட தக்கதோ ?, தமநெஞ்சதது யாககாரோடு யாதக தொடபு—தம து நெஞ்சிலே பிணிககபபட்டாருடன கொண்ட பிணிபபுளள நட்பினை எனறவாறு

**கருத்து:**-மனககலப்புடையாரையே நட்பிறகுரியராககக்கொளள வேண்டும்.

## ஒப்புமைப் பகுதி :—

"செலவுழிக கண்ணொருநாள காணினும சான்றவா
தொல்வழிக கேண்மையிற தோனறும புரிநதியாபபா
நலவயலா நாட! சிலநாள அடிபபடின,
கலவரையும உண்டாம நெறி". —நாலடி. 154.

"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்".

—குறள். 785.

"தூர்ந்தொழுகிக் கண்ணுந் துணைகள் துணைகளே
சார்ந்தொழுகிக் கண்ணுஞ் [1]சலவர் சலவரே"

—திரிக. 51.

"கேட்டன மாத்திரை யல்லது யாவதும்
காண்டல் இல்லாது யாண்டுபல கழிய
வழுவின்று பழகிய கிழமைய ராகினும்
அரிதே தோன்றல் அதற்பட ஒழுகலென்று
ஐயம் கொள்ளன்மின் ஆற்றி வாளீர்"

—புறம். 216 : 1—5.

"நேரா நெஞ்சத்தோன் நட்டோன் அல்லன்"

—முதுமொழிக் 5—5.

"காணடகைமை இன்றியுமமுன கலநதபெரும கேண்மையினா
பூணடபெருங காதலுடன போனகமும கறியமுதும
வேணடுவன வெவவேறு விதஙகளபெற விருபபினால
ஆணடஅரசு அமுதுசெயத திருவமுதாம படிஅமைதது".

—பெரிய. திருநாவுக. 203.

## குறிப்பு :—

நடபிறகும நடபில்லாமைககும எனறும சேரநதிருபபதும பிரிநதிருபபதும காரணம ஆகா, மனககலபபே நடபிறகுக காரணமாகும.

(ச).

215. [2]கோட்டுப்பூ போல மலாந்துபின கூம்பாது
வேடடதே வேட்டதாம நட்பாட்சி—தோட்ட

---

[1] பகைவர்.

[2] கோட்டுப்பூ, கொடிபபூ, நீாபூ, நிலபபூ, புதறபூ எனப பூவகை ஐநதாம.

கயப்பூப்போல் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை
நயப்பாரும் நட்பாரும் இல்.

**தருமர் :**—என்பது. கோடு பூ போல—கொம்பிலே அலர்ந்த பூப்போல; மலர்ந்து—முன் மலர்ந்து; பின் கூம்பாது—பின்பு குவியாமல்; வேட்டதே—தலைநாளிலே விரும்பி உடன் கொண்ட கோட்பாடே; வேட்டது—விருப்பமாகக் கொண்டு செலுத்துவது; நட்பு ஆட்சி ஆம்—நட்புக்கு இயல்பாவதாம்; தோட்ட—தோண்டின; [1]கயம பூ போல்—கயத்திலுண்டாகிய பூவைப்போல; முன் மலர்நது—; பின் கூமபுவாரை—பிறகு கூம்புந்தனமை யுடையவரை; நயபபாரும்—விரும்புவாரும்; நடபாருமம—நட்புச் செய்வாரும்; இல்—இல்லை என்றவாறு.

கொமபிலே அலரும பூககள அலாநத பிறகு குவியாது. கயததிறபூ முதலே அலாநது பிறகு குவியும், நட்பிற குரியார் கொமபிறபூப் போலுந தன்மையராய இருப்பா. கயத்திற பூ அனனார் து நட பு, பின்னளிலே தேய்ந்து வேறுபடும. அதனுல நட்பிற் குரியாரைத தன்னறிவினல் ஆராயநது கொள்க என்ப தாயிறறு

**பதுமனர் :**—என்றது மரத்தினது கோட்டின் பூவே போல விரிநது, பின குவியாதே ஒருவனைக காதலிதது நட்புக கொண்டால, அநத நட்பினை விடாது அனபுபடுவது நட்புக் கோடலாவது. தோணடிய பொயகையிற(பூவே)போல முறபட விரிநது, பின்பு குவியும நடபுடையானைக (காதலி)பபாரும் நட்பாருட இலலை என்றவாறு.

தோட்ட கயம—வெட்டி எடுதத(பொய்கை). தோட்ட கயபபூப போல—கயததினகணணே தோயநது நின்ற தோடாகிய இதழையுடைய பூ என்றுமாம.

[1] கயம்—குளம்.

**விளக்க உரை :**—எ-து. கோட்டுப் பூ போல மலர்ந்து பின் கூம்பாது—கொம்பிற பூப்போல மலர்ந்து பிறகு கூம்பாது; வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி—தலைநாளில் விரும்பி யுட் கொண்ட கோட்பாடே விருப்பமாகக் கொண்டு நட்புச் செய்த லாம; தோட்ட கயப்பூப் போல் முன்மலர்ந்து பின்கூம்புவாரை —தோண்டின கயத்திற பூப்போல முன்மலர்ந்தும் பின்பு குவிந்தும் இப்படி ஒழுகுவாரை; நயப்பாரும் நட்பாரும் இல் —விரும்புவாரும் இல்லை அவருடன் நட்புக கொள்வாருமில்லை என்றவாறு.

**கருத்து :**—என்றும் முகமலர்ச்சியுடன் விருமபுவாரே நட்பிற குரியராவர்.

## மேற்கோள் பகுதி :—

பரிமே :—உயர்ந்தோர் நட்பிடத்து, 'கயபபூப் போல வேறு படாது கோட்டுப்பூப் போல ஒருநிலையே நட்பாயினுன் எல்லா வின்பமும் எய்தும்' என இச்செய்யுளின் கருத்தை மேறகோள் காட்டுவர்.

—குறள். 425.

## ஒப்புமைப் பகுதி :-

"உலகம் தழீஇய தொட்டபம் மலர்தலும்
கூம்பலும் இல்ல தறிவு".

—குறள். 425

"நலமிக உயர்ந்தோர் தன்மை நண்புறத் தழுவிக்கொள்க
நிலவிய கயத்துப் பூவைநிகர்த்ரா துயர்ந்த கோட்டின்
அலரென அவர்பால் நிற்க ஆக்கமிக் கடுத்தகாலை
மலர்வதும் வறங்கூர் காலைக் கூம்பலும் ஒழிக மைந்தா".

—வினா. அரசி. 51.

(ஓ)·

216. கடையாயார் நட்பிற் கமுகனையர் ஏனை
இடையாயார் தெங்கின் அனையர்—தலையாயார்
எண்ணரும் பெண்ணைபோன்(று) இட்டஞான்
தொன்மை யுடையார் தொடர்பு. [றிட்டதே

**தருமர்:**—என்பது. கடையாயார் நட்பில் கமுகு அனையர்—கடையாயினோருடன் கொண்ட நட்புக் கமுகோடு ஒக்கும் [கமுகுக்கு [1]நித்தலும [2]பரிகாரஞ் செய்வது போலச் செய்யில் நட்பாம]; ஏனை இடையாயார் தெங்கின் அனையர்—மற்றை இடையாயாருடன் கொண்ட நட்பு தெங்கோடு ஒக்கும் [தென்னை மரத்துக்குப் பரிகாரஞ் செய்வது போலச் செய்யில் நட்பாம்]; தலையாயார் எண் அரு பெண்ணை போன்று (அனையர்)—தலையாயாருடன் கொண்ட நட்பு எண்ணுதற்கரிய பனைபோலும்; இட்ட ஞான்று இட்டதே—அது வைக்கும் நாளையிலே வார்த்த தண்ணீரன்றிப் பிறகு பரிகாரஞ் செய்யாமலே பயனைக் கொடுப்பதுபோல் நட்பாம்; தொன்மை உடையார் தொடர்பு—பழைய முறைமையினையுடைய சான்றோர்களாற் சொல்லப் பட்ட நூலின் முறைமை இது என்றவாறு.

தொடர்பு என்பது செய்யுட்கள். உத்தமம் மத்திமம் அதமம் என்பதைக் கடை இடை தலை எனக்கூறினாராதலால், ஒருவருடன் நட்புக் கொள்ளுமிடத்து அவர் தன்மையை நீட்டிக்க ஆராய்ந்து நட்பிற் குரியாருடன் நட்புச் செய்ய வேண்டும் என்பதாம்.

**பதுமனார்:**—என்றது. கடையாயார் நட்பின்கண் கமுகனையர்; அதனை ஒழிய இடையாயார் நட்பின்கண் தெங்கின் அனையர்; இட்டஞான்று இட்டசெய்தி யுடைத்தாய்ப் பிறிதொன்றினோடு ஒக்கும் என்று, எண்ணுதற்கரிதாயுள்ள பெண்ணை போன்றனையர் நட்பின்கண் தலையாயினார் என்று, இப்பெற்றியால் தொன்மையுடையார் கூறுபடுத்திச் சொன்னார் என்க

[1] நித்தலும்—நாள்தோறும்
[2] பரிகாரம—பராமரிப்பு.

நட்பினை என்றவாறு.

கடையாயார் நட்பில் கமுகனையர்—கமுகும் ஒருதழும்பு பட்டால் அது விழுந்து போமளவுந் தழும்பு கிடப்பது போலக் கடையாயினாக்கும ஒரு குறறஞ செய்தால், அக்குறறத்தைச் சாமளவும மறவாா. ஆதலால அவருறவைக கொள்ளாது ஒழிக. கமுககு நாள்தோறும இறைக்கவும் மேற்றலையில் குறறமாய புழுககடியும் பாாதது பேணினறபோல இவனுக்கு நாள் தோறும [1]செய்யுப். ...அருஷதஞ செயயவேண்டும். அது ஒழிநதால் கமுகு தலைகெடடு விழுநதாற போல இவனும் விழு மளவும் [2]தீனகு விசாரிபபான் என்றவாறு.

இடையாயார் தெங்கின் அனையா—தெங்கிறகுத் தலையாலே தண்ணீா சுமநது அடியிலே வாாக்கப் பின தலையாலே நீரைத தருதலால் இவாக்கும் முன்பு நன்மைசெயதால் பின்பு வரும.

எண்ணரும பெண்ணைபோனறு இட்டஞானறு இட்டதே தொனமையுடையாா தொடாபு—எண்ணுதறகரிய பனையும் ஒரு நாள் விதையிட்டாற பினபு பாதுகாகக வேண்டாம். பினபு பயன்பட்ட காலத்திலே சென்று பயன் கொண்டாற போல அறிவும், ஒழுக்கமும, பெருமையும், முயற்சியும், ஒழியாமல் தொன்றுதொட்டு வரும் பழைமையை யுடையாா உறவை விடாது கொள்ளுதல் நன்று எனறு உரைப்பாருமுளர்.

**விளக்க உரை** :—எ-து. கடையாயார் நட்பில் கமுகு அனையா—கடையாயினருடன கொண்ட நட்புக் கமுகோ டொக்கும; ஏனை இடை ஆயாா தெஙகின் அனையா—மறறை இடையாயினருடன் கொண்டநட்பு தெங்கோ டொக்கும்; தலையாயார்—தலையாயினருடன் கொண்ட நட்பு, எண்ணரும் பெண்ணை போன்று இட்ட ஞான்று இடடதே—எண்ணுதற் கரிய பனைபோல இட்டநாளிலே இட்டாற்போலும் [பின்னர்

1, 2 இவ்விடங்களில் சில எழுத்துக்கள் விடுபட்டுள்ளன. ஆதலின் கருதது விளங்கவில்லை.

ஒரு பரிகாரமுஞ் செய்யவேண்டா]; தொன்மையுடையார் தொடர்பு—பழைய முறைமையினை யுடைய சான்றோர் செய்யுட் களிலே இப்படிக் கூறுபடுத்திச் சொன்னார் என்றவாறு.

ஆதலால் நட்பினை ஆராய்ந்து கொள்ள வேண்டும். தொடர்பு என்பது செய்யுட்களை.

**கருத்து :**—எப்போதும் உதவி பெறுகிடினும், ஒருபடித்தாய்ப் பயன்படும் உத்தமரிடமே நட்புக்கொள்ள வேண்டும்.

## மேற்கோள் பகுதி :—

யா. வி. :—நேரிசை வெண்பா முரணாய் இருவிகற்பத்தான் வந்ததற்கு இச்செய்யுளை எடுத்துக்காட்டுவர்.

—செய். சூ. 60.

பேரா :—"கடையாயார் நட்பிற் கமுகனையர்—என இதனுள் ஓரினத்தவாகிய புல்லே கூறி ஒழிந்த மரங்களொடு பயன் உளவா யினும் உடன் கூறாராயினார். இன்னோரன்னவுஞ் செய்யுட்கு மரபெனப் படுமென்பது" என்று இச்செய்யுளை மேற்கோள் காட்டுவர்.

—தொல். செய். சூ. 392.

மாறனலங் :—இவரும் மரபுவமைக்கு இச்செய்யுளை மேற் கோளாகக் காட்டுவர்.

—சூ. 105.

## ஒப்புமைப் பகுதி :—

"உத்தமர்தாம் ஈயுமிடத் தோங்குபனை போல்வரே
மத்திமர்தாம் தெங்குதனை மானுவரே—முத்தலரும்
ஆங்கமுகு போல்வர் அதம ரவர்களே
தேங்கதலி யும்போல்வர் தேர்ந்து.

—நீதிவெண்பா.

**குறிப்பு :—**

கமுகுக்கு நாள் தோறும் பராமரித்தலும், தென்னைக்கு இடையிடையே பராமரித்தலும், செய்தால் அவை பயன்படும்; ஆனால் பனைக்கு முதலில் நட்டதே யன்றிப் பின் பராமரிப்பு வேண்டாது என்றும பயன்படும. இவைபோன்ற தன்மையினை யுடையார் கடை, இடை, தலையாயினர் என்றவாறு.

(௬)

217. கழுநீருட் காரட கேனும் ஒருவன்
விழுமிதாக் கொள்ளின் அமிழ்தாம்—விழுமிய
குய்த்துவையார் வெண்சோறே ஆயினும்
கைத்துண்டல் காஞ்சிரங் காய். [மேவாதார்

**தருமர் :**—என்பது. கழுநீருள் கார் அடகுஎனும்—[1]கழுநீரிலே வெந்த பசிய இலைக்கறியானாலும்; ஒருவன—; [2]விழுமிது ஆ கொள்ளின்—அதனைச் சீரிதாக மனத்தில் விரும்பிக் கொண்டால; அமிழ்து ஆம்—அது அமுதமாகவிருக்கும்; விழுமிய—சீரிய, [3]குய் துவை ஆர் வெள் சோறே ஆயினும்—நறைப் புகையோடுங் கூடிய வெள்ளிய சோறாயினும்; மேவாதார கைத்து உண்டல்—அன்னியரிடத் துண்பது; காஞ்சிரம் காய்—எட்டிக்காய்க்கு இணை என்றவாறு.

காரடகு—உப்பும் இன்றி வெந்தது; நன்றாய வேகாதது. எனவே மனந்தூயவரன்றிக் கூடாநட்பாக ஒழுகுவாரை ஆராய்ந்து நட்புச்செய்க என்பதாம்.

---

[1] கழுநீர்—அரிசி கழுவின நீர்.

[2] விழுமிது ஆ கொள்ளின்—சிறந்த அன்புடையதாகக் கொடுக்கப் பெற்றால்.

[3] குய்—தாளித்த கறி, நறும் புகையுமாம். துவை—துவையல். ஆர—நிறைந்த.

**பதுமனார் :**—என்றது. கழுநீருள் பெய்து அட்ட பச்சட காயினும், ஒருவனோடு கொண்ட நட்பை விழுமிதாகக் கொள்ளின் அமிழ்து போலாகும். விழுமிய குய்த்துவை ஆர்ந்த வெண் சோறே ஆயினும், கொண்ட நட்பினை விரும்பாதார் கையுள் அதனை உணடல் காஞ்சிரஙகாய் போலுமம என்றவாறு.

பெய்தல்—இடுதல். அடகு—இலைக்கறி. குய்த்துவை—மறுப் பொறுக்கின சோறுமாம்; கொள்ளுத துவையோடு கூடிய சோறுமாம். மேவாதார்—நட்பை விரும்பாதார. **'ஒவ்வாதார் கைத்துண்டல்'** என்று பாடமோதித் தன் மனத்துககுப் பொருந் தாதார் மனை என்று **பொருளுரைப்பாரு முளர்.**

**விளக்க உரை :**—எ-து. கழுநீருள் காரடகே னும்—கழுநீரிலே வெநத பச்சட காயினும்; ஒருவன் விழுமிது ஆக் கொள் ளின் அமிழ்தாம்—அதனை ஒருவன் மனத்தினுற் சீரிதாகக கொள்ளுவனாகில் அமிழ்தமாம்; விழுமிய குய்த துவை ஆர் வெண் சோறே ஆயினும்—சீரிய நறைப் புகையினையுடைய வெள்ளிய சோறே யாயினும்; மேவாதார் கைத்துண்டல்—அன்னியர் கைப் பொருளாகிய வுணவை யுண்டல்; காஞ்சிரங்காய்—எட்டிக்காயோ டொக்கும் என்றவாறு.

காரடகு என்றார் உப்பிலலாமல வெநத இலைக் கறியை.

**கருத்து :**—உள்ளனபுடன் உதவுபவரை ஆராயந்து நட்புக கொளள வேண்டும்.

## ஒப்புமைப் பகுதி :—

'விழுமிய, குய்த்துவை' :—
"குய்க்கொள் கொழுந்துவை"

—புறம். 160 : 7.

## குறிப்பு :-

அடகு விழுமிதாக் கொள்ளின் அமிழ்தாவதற்கு ஔவை

யார் பாரிமகளைக் குறித்துப் பாராட்டிப் பாடிய பாடல் எடுத்துக் காட்டாகும். அது வருமாறு :—

"வெய்தாய் நறுவிதாய் வேண்டளவும் தின்பதாய்
நெய்தான் அளாவி நிறையிட்டு—பொய்யே
அடகென்று சொல்லி அமுதத்தை யிட்டாள்
கடகஞ் செறியாதோ கைக்கு"

(எ).

218. நாயீக்காற் சிறுவிரல்போல் நன்கணியர் ஆயினும்
ஈக்கால் துணையும் உதவாதார் நட்பென்னும்?
சேய்த்தானும் சென்று கொளல்வேண்டும் செய்
வாய்க்கால் அனையார் தொடர்பு. [விளக்கும்

**தருமர் :—**என்பது. நாய்க்கால் சிறுவிரல் போல்—நாயின் காலில் இருக்கும் சிறுவிரல் போல; நன்கு அணியர் ஆயினும்—மிகவும் அடுத்திருப்பாராயினும்; [1]ஈ கால் துணையும்—ஈயின் காலளவு ஆயினும்; உதவாதார் நட்பு—உதவி செய்யாதவர் நட்பு; என் ஆம்?—என்ன பயனுக்காம்?; [2]செய் விளக்கும் வாய்க்கால் அனையார்—[செய்யைக் கொண்டு தனக்கொரு பயனும் இல்லையாயினும், தூரத்திலே(யுள்ள) நீர் கொண்டுவந்து] செய்யை விளைவிக்கும் வாய்க்கால் போலும் அத்தன்மை யுடையாரது; தொடர்பு—நட்பினை; சேய்த்தானும் சென்று—தூரத்திலே ஆனாலும் அவ்விடத்திற் சென்று; கொளல் வேண்டும்—கொள்ளக் கடவன் என்றவாறு.

நட்பினால் பயன் கூறுதற் பொருட்டுத் தூரத்திலே சென்றாகிலும் வாய்க்கால் போலுந் தன்மையாரை நட்புக் கொள்ள வேண்டும் என்றார். அருகே இருந்தாலும் நாய்க்காற் சிறு விரலினாலே பயன் ஒன்றுமில்லை. ஆதலால் மறு தேசங்களிலே

---

[1] ஈக்கால்—உதவியின் சிறுமைக்கு எடுத்துக் காட்டியதோர் அளவு.
[2] செய்—வயல்.

சென்று தேடியாகிலும் நட்பிற் குரியாரிடத்து நட்புச் செய்ய வேண்டும் என்பது கருத்து.

**பதுமனார்** :—என்றது. நாய்க்குத் தன் காலிற் சிறுவிரல் அணித்தாயிருந்தாற் போலத் தம்முடன் நட்புக் கொண்டார் மிக அணியராயினும், ஈயினது காலளவும் பயன் படாதாரோடு கொண்ட நட்பு என்ன பயன் செய்யும் ? சேய்ததாயினும் சென்று கொளல் வேண்டும் செய்யை விளைக்கும் வாய்க்காலை அனையார் நட்பினை என்றவாறு.

சேய்த்தானும்—தூர இருந்தாராயினும்; வாய்க்கால் அனையார் (தொடர்பு கொளல் வேண்டும்)—குளத்திற்குச் [1]செறு தூரத்ததே ஆயினும், குளத்தின் நீரைக் கொண்டு சென்று அச் செறுவை விளைத்துப் பயனைத் தந்(தாற் போலவும்), வெட்டி ஏறவும் குத்திப் போடவும் பொறுத்துச் செறுவுக்குக் குளத்தின் நீரைக் கொடுத்தாற் போலவும்; செய்த குற்றத்தைப் பொறுத்துப் பயனைக் கொடுக்கும் பெரியோரைச் சென்று நட்புக் கொள்க என்பாருமுளர்.

**விளக்க உரை** :—எ-து. நாய்க்கால் சிறுவிரல் போல் நன்கு அணியராயினும்—நாயின் காலிற் சிறுவிரல் போல மிகவும் அணியாராயினும; ஈக்கால் துணையும் உதவாதார் நட்பு என்னும்?—ஈயின் காலளவும் உதவிசெய்யாதவர் நட்பால் என்னபயன் உண்டாம் ?, சேய்த்தானும் சென்று கொளல் வேண்டும்—தூரத்திலே ஆயினும் அவ்விடத்துச் சென்று நட்புக் கொள்ளக் கடவன்; செய்விளைக்கும் வாய்க்கால் அனையார் தொடர்பு—[வாய்க்கால் தனக்குச் செயலைக் கொண்டு ஒரு பயனில்லையாயினும தூரத்து நீரைக் கொண்டு வந்து] செய்யை விளைக்கும் வாய்க்கால் போலும் பண்புடையாரது நட்பு என்றவாறு.

**கருத்து** :—உதவும் பண்பினரை ஆராய்ந்து தேடி நட்புப் பெற

---

[1] செறு—வயல்.

வேண்டும்.

(அ).

219. தெளிவிலார் நட்பிற் பகைநன்று சாதல்
விளியா வருநோயின் நன்றால்—அளிய
இகழ்தலிற் கோறல் இனிதே; மற்றில்ல
புகழ்தலின் வைதலே நன்று.

**தருமர்**.—என்பது. [1]தெளிவு இலார் நட்பின்—மனத (தூயமை)இல்லாதார் நட்பினும்; பகை நன்று—(மனந் தூயா ருடன் கொண்ட) பகை நன்மை; [2]விளியா அருநோயின்—மருநதினால் தீராத நோயினும்; சாதல் நன்று—சாதல் நன்மை; அளிய இகழ்தலின்—(ஒருவனை நெஞ்சு) நோக வைகின்றதினும்; கோறல்—அவனைக் கொலவது; இனிது—நன்று; இல்ல புகழ தலின்—ஒருவனுக்கு இல்லாதது ஒன்றை உண்டாக்கிப் புகழ் வதினும; வைதலே நன்று—அவனை வைதல் நன்று எனறவாறு.

ஆல், மற்று—அசை. ஆதலால் மருநதில் தீராத நோயும, இல்லாதது சொல்லிப புகழ்தலும், ஒருவனை நெஞ்சு நோகப புண்படுத்துவதும் கூடா நட்பினது தன்மையாயிற்று. அத் தன்மையாரன்றி மனந தூயாரிடத்து நட்புக்கொள்ள வேண்டும என்பதாம்.

**பதுமனார்**:—என்றது. தேறப படுந்தன்மை யில்லாதவ ரோடு (கொள்ளும்) நட்பில் பகை நன்று; செய்த மருந்தில் தீராமல் நீட்டிக்கும் நோயில் சாதல் நன்றாம்; ஒருவனை மிக இகழ்ந்துரைத்தலில் கொல்லுதல் நன்று; ஒருவனுக்கு இல்லாத குணத்தைச் சொல்லிப் புகழ்தலில் அவனை வைதலே நன்று என்றவாறு.

---

[1]தெளிவு—அறிவுத தெளிவு என்றும் நம்பிக்கை என்றும் கொள்ளலாம்.

[2]விளியா வரும் நோய் எனப் பிரித்து நீங்காது வருகின்ற நோய் என்பாரும் உளர்.

**விளக்க உரை :**—எ-து. தெளிவிலா நட்பிற் பகைநன்று —உள்ளீர மில்லாத உறவிற் பகை நன்று; சாதல் விளியா அரு நோயின் நன்று—மருந்தில் தீராத நோயிற் சாதல் நன்று; அளிய இகழ்தலின் கோறல் இனிது—ஒருவனை நெஞ்சு நோவ வைகிறதினும் அவனைக் கொல்லுகிறது நன்று; இல்ல புகழ்தலின் வைதலே நன்று—ஒருவனுக்கு இல்லாத தொன்றினைச் சொல்லிப் புகழ்தலின அவனை வைதலே நனறு என்றவாறு.

மறறும் ஆலும் அசை.

**கருத்து :**—மனத தூய்மை இல்லாதாருடன் நட்புச் செய்தல் கூடாது.

## குறிப்பு :—

உடம்பைவிட்டு உயிா போயதும் அதறகுத் துன்பமில்லை யாதலின் 'சாதல் நன்று' என்றுா.

தெளிவிலாா நட்பில் பகைநனறு எனபதறகு, நோயிற சாதலும், இகழதலிற கோறலும், புகழதலின் வைதலும் உவமை களாம்.

(கூ).

220\. மரீஇப் பலரோடு பன்னாள் முயங்கிப்
பொரீஇப் பொருள்தக்கார்க் கோடலே வேண்டும்
பரீஇ உயிர்செகுக்கும் பாம்பொடும் இன்னா
மரீஇஇப் பினனைப் பிரிவு.

**தருமர் :**—என்பது. பலரோடு—பலருடனும; பல்நாள் முயங்கி மரீஇ—பலநாளுநு கலநது மருவி; [1]பொரீஇ—பலா குணங்களையும் ஒப்பிட்டு அறிந்து; பொருள தக்கா-பொருளாகத

---

[1]பொரீஇ—ஒதது.

தக்காரை; கோடலே வேண்டும்—நட்புச் செய்தல் வேண்டும்; [1]பரீஇ—பல்லினால் வடுப்படுத்தி; உயிர் செகுக்கும்—உயிரை நீக்கும்; பாம்பொடும்—பாம்புடனும்; மரீஇப் பின்னை பிரிவு—நட்புக்கொண்டபின் நீங்குதல்; [2]இன்னா—பொல்லாது என்றவாறு.

அசேதனமாகிய பாம்புடனும் கலந்து பிரிதல் ஆகாது எனவே, சேதனமாகிய மக்களுடனகலந்து பிரிதல் தீங்கு என்பது சொல்ல வேண்டாவே. ஆதலால் நட்புக்கொள்வதன் முனபே அவர் குணஙகளை நாளிலே ஆராய்ந்து நட்புக்கொள்ள வேணடும் என்பதாயிற்று.

**பதுமனார்.**—என்றது. பலரோடு பன்னாளும் பழகிக் கலந்து ஒப்பித்துப் பொருளாக மதிககத தக்காரைத் தமக்கு நட்பாகக் கொள்ள வேண்டும. [3]எயிற்றாலே வடுபபடுத்து உயிரைக் கொல்லும் பாமபோடும் இனனா, நட்புக்கொண்ட பின்னைப் பிரிதல் என்றவாறு.

மரீஇ —முயங்கி, கலந்து. பரீஇ—இரஙகுமபடி. பொரீஇ பொருள் தக்கார்—தம்முடன் ஒபபித்துப் பொருளாகத்தக்காரை. 'பொரீஇப் பொருதக்கால் கோடலே வேண்டும்' (எனறு பாடம கொண்டு) மாறுபட்டுச் சம(ர்)பூமியிலே பொரும்படியான குற்றத்தைச் செயதாராயினும், அதனைப பொறுத்து அவா உறவை விடாது கொள்க (என்று கூறுவாரும் உளர்).

**விளக்க உரை:**—எ-து. மரீஇப் பலரோடு பன்னாள் முயங்கிப் பொரீஇ—பலரோடு மருவிப பலநாளுங் கலந்து ஒப்பித்து; பொருள தக்கார்க் கோடலே வேண்டும்—பொருளா கததக்காரை நட்புக் கொள்ளுவதே ஒருவர்க்கு உறுதியாவது;

---

[1]பரீஇ—கடித்து.

[2]இன்னாது என்பது இன்னா எனத் தொக்கு நின்றது.

[3]எயிறு—பல்.

பரீஇ உயிர் செகுக்கும் பாம்பொடும் இன்னா—பல்லினால் வடுப் படுத்தி உயிரை நீக்கும் பாம்புடனும் பொல்லாது; மரீஇப் பின்னர்ப பிரிவு—நட்புக் கொண்ட பின்னும் ஒருவரை விட்டு நீங்குதல் என்றவாறு.

மரீஇ என்றது மருவி. முயங்கி என்றது கலந்து. பொரீஇ என்றது ஒப்பு நோக்கி.

**கருத்து:**—கூடிப் பிரிதல் கூடாமையால் முன்பே ஒருவரது குணங்களை ஆராய்ந்து நட்புக்கொள்க.

## மேற்கோள் பகுதி :—

நச் :—உயிரளபெடை நான்கு மாத்திரை பெறறு நிறபதறகு "மரீஇஇப் பின்னைப் பிரிவு" என்பதனை மேறகோளாகக காட்டினர்.

—தொல் நூல். சூ. 6.

மயிலை } '—'செயது' எனனும் வாய்பாட்டெச்சம் வினை
சஙகர } முதல் கொண்டதறகு 'பரீஇ யுயிர் செகுக்கும்' எனபதனை மேறகோள் காட்டுவா.

—நன். சூ. 343.
—நன். சூ. 344.

## ஒப்புமைப் பகுதி :—

"இன்னா செயினும் இனிய ஒழிகென்று
தன்னையே தானோவின் அல்லது—துன்னிக
கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட!
விலங்கிறகும் விள்ளல் அரிது".

—நாலடி. 76.

"விலங்கேயும தம்மோடு உடனுறைதல் மேவும்
கலந்தாரைக் கைவிடுதல் ஒல்லா—இலஙகருவி
தாஅய் இழியும் மலைநாட! இன்னாதே
பேஎயோ டானும் பிரிவு".

—பழ. 122.

"பிரிவு செய்தாலரிதே கொள்க போயொடும் என்னும் பெற்றி"
—திருச்சிற். 144.

"பேயோ டேனும் பிரிவொன் றின்னு தென்பர் பிறரெல்லாம்"
—திருப்பாட்டு. சுந்தரர். ஆரூர்.

—தெரியக்
கண்ணிற காணார் ஆயினுங் கனவின்
நண்ணுந காலை நல்லுயிர் செருக்கும
பேயே ஆயினும் பிரியின் இன்பம்
வாயாது என்று மதியோர் அறைப
மரீஇ நாளுநின் நன்றி யாரும்
அறிய வார பெரும" —ஞானமிர்தம். 46.

"—மருவியப்
பேயின்திறத்துப் பிரிதல் இன்னுவென்று பேசுவரே"
—அம்பிகாபதி. 517.

"பேயோடு பழகுறினும பிரிவதரிது அரிதெனறு தூயோரு
மொழிவரால்"
—குசலோபாக்கியானம்.

"நாடாது நட்டலின் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு".
—குறள். 791.

"நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே".
—நற். 32 . 8—9.

"மயரிகள் அல்லராய் மாணபுடையாரச் சேரும்
திருவுந் தீர்வின்றேல் இனிது".
—இனியவை. 18.

"இணக்கம அறிந்து இணங்கு".
—ஆத்திசூடி. 19.

"கூடிப் பிரியேல்"
—ஆத்திசூடி. 37.

"காணுதல் ஒழிக நல்லார் காணினங் கவர்பால் நட்புப்
பேணுதல் ஒழிக பேணின் பிரிவுறல் ஒழிக".

—பிரபுலிங்.

---

## 23. நட்பிற் பிழை பொறுத்தல்.

**தருமர் :**—அஃதாவது தமமால் நட்புக் கொளளப பட்டவா தம்முடைய மனதுக்கு வாராத குறறஞ செய்தாராயின, அது அறியாமற செய்தா என்றுதல் உளஞரிமையாற் செய்தா என்றுதல் அவா செய்த பிழையைப பொறுததலாம.

**பதுமஞர்** :—அஃதாவது நட்பாயிஞா ஒருவர்க்கு ஒருவா தம்மிற் செய்வன பிழைக்கச் செயயாா. ஆகலின ஒருவா செயத பிழை அறியாமை என்றுதல (உரிமை) எனறுதல் பொறுததல் என்றவாறு.

### குறிப்பு :—

வள்ளுவரும் 'பழைமை' என ஓரதிகாரம வகுத்திருத்தல காண்க.

'பழைமை' :—

பரிமே :—அஃதாவது நட்டாரது பழையராந் தன்மைபறறி அவர் பிழைத்தன பொறுத்தல் காரணப் பெயா காரியததிறகுப ஆயிற்று. ஆராய்ந்து நட்கப்பட்டாா எனினும பொறுக்கப படும் குறறமுடையராகலானும ஊழ்வகையானும் நட்டாா மாட்டுப பிழையுளதாம் என்பது அறிவித்தறகு, இது நட்பாராய தலின்பின் வைக்கப்பட்டது.

மணக் :—பழைமையாவது நட்டோரது உரிமை கூறுதல. இஃது அவருரிமையால் செய்தனவற்றிற்குப பொறுக்க வேண்டும் என்று அதன்பின் கூறப்பட்டது.

பரிதி:—பழைமையாவது பழைமையை அறிந்துகொள்க என்றவாறு.

—குறள். அதி. 81.

221. நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லார் எனினும் அடக்கிக் கொளல்வேண்டும்
நெல்லுக்(கு) உமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கும் உண்டு.

**தருமர்:**—என்பது. நல்லார் என தாம் நனிவிரும்பிக் கொண்டாரை—இவர் நல்லவர் என்று தாம் மிகவும் விரும்பி நட்புகொண்டவரை; அல்லார் எனினும்—அவரிடத்து ஒரு நட்புபபண்பு இல்லாமை உண்டாயினும்; [1]அடக்கிக் கொளல வேண்டும்—அதனைப் பிறர் அறியாமல் தன மனத்திலே அடக்கிக கொளளக் கடவர்; (என் எனில்) நெலலுககு உமி உண்டு—(யாவாக்கும பயன் படும்) நெல்லினிடத்திலேயும் உமியாகிய குறறம உண்டு; நீாக்கு நுரை உண்டு—நீரினிடத்திலேயும் நுரையாகிய குற்றம் உண்டு; பூவிற்கும் [2]புல் இதழ் உண்டு—பூவினிடத்திலேயும் புல்லிதழாகிய குறறம் உண்டு ஆதலால் எனற வாறு.

புல்லிதழ—பூவின் புறதது இருககும இதழ. யாவாக்கும பயன்படும நெல்லு முதலானவை யிடத்தும குறறம உண்டாவது போல நலலவரிடத்தும் அவா வினைவலியால் குற்ற முண்டாயினும் அதனைப் பொறுபபது நட்பிறகு உரிமை என்பதாம்.

**பதுமனார்:**— என்றது. நலலாா என்று மிகவும விரும்பிக்

---

[1] அடக்கிக் கொளல்—மறைவில அவாக்கு அறிவு கூறி அவர்களை அடக்கி வைததுக்கொள்ளல் என்றும் குற்றத்தை மறைதது நட்பாகக கொள்ளல் என்றும் பொருள் கூறுவார் உளர்.

[2] புல் இதழ்—இழிந்த புற விதழ்.

கொண்டாரை (நல்லார்) அல்லார் எனினும் தம் மனத்தின்கண் மறைத்துவைத்து நட்பாகக் கொள்ளல் வேண்டும். நெல்லுக்கு உமி உண்டு. நீருக்கு நுரை உண்டு. புல்லி(ய புறவி)தழ பூவுக்கும் உண்டு ஆதலால் என்றவாறு.

**விளக்க உரை :**—எ-து. நல்லார் எனத் தாம் நனி விரும்பிக் கொண்டாரை—இவர் நல்லார் என்று தாம் மிகவும விரும்பி நட்புக் கொள்ளப்பட்டாரை; அல்லார் எனினும அடக்கிக் கொளல் வேண்டும்—அவரிடதகொரு நட்புப் பண்பும் இல்லையாயினும் அதனைப் பிறரறியாமல் அடக்கிக்கொண்டு போகக்கடவர்; (அதென் போல வென்னில்), நெல்லுக்கு உமி யுண்டு, நீாக்கு நுரை உண்டு, புல்லிதழ பூவிறகும் உண்டு—நெல்லுக்கு உமியும் உண்டு, நீருக்கு நுரையும் உண்டு, புல்லிய புறவிதழ் பூவிறகும் உணடு ஆதலால் என்றவாறு.

**கருத்து :**—நண்பரது குணத்தைக் கருதிக் குறறத்தைப் பொறுததல் வேணடும.

## ஒப்புமைப் பகுதி :—

"தமரென்று தாங்கொள்ளப் பட்டவா தம்மைத
தமரன்மை தாமறிநதாா ஆயின் அவரைத்
தமரினு நன்கு மதித்துத் தமரன்மை
தம்முள் அடக்கிக் கொளல்".

—நாலடி. 229

"ஆண்டீண்டு எனவொன்றோ வேண்டா அடைநதாரை
மாண்டிலார் என்றே மறைபபக் கிடநததோ?
பூண்டாங்கு இளமுலைப் பொற்றொடி! பூண்ட
பறையறையார் ஆயினா இல்".

—பழ. 112.

நெல்லும், நீரும், பூவும் சிறப்புடையனவாமாறு —
"உயிரை ஆக்கும் நெல்லும் நீரும்"

—புறம். 186. உரை.

"நெல்லுயிர் மாந்தர்க் கெல்லாம் நீருயிர்"

—சீவக. 2908.

"மங்கலமாகி யின்றியமையா
தியாவரு மகிழ்ந்து மேற்கொள மெலகிப
பொழுதின் முகமலா வுடையது பூவே"

—நன். சூ. 29.

## குறிப்பு.—

நல்லோரிடத்தும் குற்றம காணப்படும என்பதற்கு மூன்று பொருளகளை உவமையாக எடுத்தாண்டுள்ளார்.

(க).

222. செறுத்தோ(று) உடைப்பினும் செம்புனலோ(டு)
ஊடார்
மறுத்தும் சிறைசெய்வா நீர்நசைஇ வாழ்நர்
வெறுப்ப வெறுப்பச் செயினும் பொறுப்பரே
தாம்வேண்டிக் கொண்டார் தொடர்பு.

**கருமம்:**—என்பது. [1]செறு தோறு உடைப்பினும்—(தண்ணீர) அடைக்குந் தோறும் உடைத்ததாயினும்; செம் புன லோடு [2]ஊடார்—அந்த நல்ல நீருடனே ஊடுதல் செயயார்; நீர் நசைஇ வாழநா—நீரை நச்சி வாழ்பவா; மறுத்தும் சிறை செய்வா—மீண்டும் அநத நீரை (அணை கோலுவா); (அதுபோல) [3]வெறுபப வெறுப்பச் செயினும்—தம்மை நட்டவரும் தம் மனம் வெறுககும்படி பிழைகளைச் செய்தாராயினும்; தாம் வேண்டி தொடர்பு கொண்டார்—தாம விருமபிக் கொண்ட நட்பாளா;

---

[1]செறு தோறு—அடைக்குந தோறும, வயல்கள தோறும எனறுமாம.

[2]ஊடார்—கோபியார்

[3]வெறுப்ப வெறுப்ப—வெறுப்பனவற்றை வெறுக்குமாறு, மிக வெறுக்கும்படி என்றுமாம்.

பொறுப்பர்—(செய்த பிழையைப்) பொறுக்கக் கடவர் என்ற வாறு.

அவர் செய்த குற்றங்களைக் கருதாமல் தாம் விரும்பிய நட்பினைக் கருத வேண்டும் என்பதாம்.

**பதுமனார்:**—என்றது. ஒரு [1]கழனிக்கு இறைத்த நீர் பல கழனிதோறும் உடைத்தது ஆயினும் செம்புனலோடு [2]கலாயாது பின்னையும் அணைகோலுவார், நீரால் பிரயோசனம் கொள்ளுவார். அதுபோலத் தாம் விரும்பித் தொடர்பு கொள்ளப்பட்டார் வெறுப்பனவற்றை மிகச் செய்தாராயினும் பொறுப்பர் என்ற வாறு.

செம்புனல்—அழகிய புனல். நசை—ஆசை. வாழ்நர்—உழவர்.

**விளக்க உரை:**—எ-து. செறுதோறு உடைப்பினும்—அடைக்குந்தோறும் உடைத்ததாயினும்; செம்புனலோடு ஊடார—நல்ல புனலொடு வெறார்; மறுத்தும் சிறை செய்வார்—மீண்டும் அந்த நீரை அணைத்துக் கொள்ளுவார்; நீர் நசைஇ வாழ்நர்—அந்த நீரை நச்சி வாழ்பவர்; (அதுபோல) வெறுப்ப வெறுப்பச் செயினும்—தாம் வெறுப்ப வெறுப்பவே நட்டார் ஏது பிழை செய்தாராயினும்; பொறுப்பரே தாம் வேண்டிக் கொண்டார் தொடர்பு—தாம் விரும்பிக் கொண்டார் நட்பினைப் பொறுக்கக் கடவர் என்றவாறு.

**கருத்து:**—நட்பினர் செய்த குற்றங்களைக் கருதாது நட்பினைக் கருதவேண்டும்.

## மேற்கோள் பகுதி:—

மயிலை:—'வெறுப்ப வெறுப்பச் செயினும்' என்பதனை

---

[1] கழனி—வயல்.

[2] கலாயாது—கோபிக்காமல

உடம்பொடு உயிர்க்குணத்துக்கு எடுத்துக்காட்டுவர்.

நன். சூ. 451.

## ஒப்புமைப் பகுதி :—

"நண்பொன்றித் தம்மாலே நாட்டப்பட் டாரைக்
கண்கண்ட குற்றம் உளவெனினும் காயாதீயார
பண்கொண்ட தீஞ்சொல் பணைத்தோளாய! யாருளரோ?
தங்கன்று சாக்கறப் பார்".

—பழ 16.

(உ).

223. இறப்பவே தீய செயினுந்தன் நட்டார்
பொறுத்தல் தகுவதொன(று) அன்றே?—நிறக்
கோங்(கு)
உருவவண்(டு) ஆர்க்கும் உயாவரை நாட!
ஒருவர் பொறையிருவர் நட்பு.

**தருமர் :**—என்பது. நிறம் கோங்கு—நிறத்த பூவினை யுடைய [1]கோங்கினமேல்; உருவம் வணடு—அழகிய வண்டுகள்; ஆர்க்கும்-ஆரவாரிக்கும்; உயாவரை நாட!-உயர்நத மலை நாடனே!; தன நட்டார்—தான நட்புக் கொண்டவர்; இறப்பவே—மிகவும்; தீய செயினும்—தீயவறறைச் செய்யினும; பொறுத்தல் -பொறுப்பது; தகுவது ஒன று அன்றே?—தகுதிப் பாடல்லவோ? (என் எனில்); ஒருவர் பொறை இருவா நட்பு—ஒருவர் பொறுப் பதே இருவாககும நடபாம் (ஆதலால்) எனறவாறு.

பொறுக்குந தன்மையில்லாதார ஒருவருடன் நட்புக கொள்ளலாகாது என்பதாம.

**பதுமனார் :**—என்றது. மிகவுந தீயனவற்றைச் செயதா

[1] ஒருவகை மரம்.

ராயினும் தமது நட்டாரைப் பொறுத்தல் (தமக்குத்) தகுவ தன்றோ? (பொன்)நிறத்தையுடைய கோங்குமலர்த் தாதுதோறும் ஒளியை யுடைய வண்டுகள் ஆர்க்கும் உயர்வரை நாடனே! ஒருவர் பொறுக்கும் பொறை இருவர்க்கும் நட்பாம் ஆதலால் என்றவாறு.

நிறக் கோங்கு—பொன்போன்ற தாதை வீசும பூவை யுடைய கோஙகு. உருவ வண்டு ஆர்க்கும்—அப்பூவினது மதுச் சிதறுகையால் கோஙகுமரந தெரியாமல் அழகிய வண்டு கள் ஆர்க்கும் என்றும, உருவினையுடைய வண்டு என்றுமாம்.

**விளக்க உரை :**—எ-து. இறபபவே தீய செயினும தன் நட்டார—மிகவுந தீயனவறறை (தன்) நடடார செய யினும்; பொறுத்தல தகுவது ஒனறன்றோ?—பொறுததல் தகுவ தொன்றல்லவோ ?; நிறக கோஙகு உருவ வண்டு ஆர்க்கும் உயா வரை நாட!—பொனனிறத்தையுடைய கோங்கம் பூவிலே (ஒளியை யுடைய) வண்டுகள ஆரவாரிககும் உயாநத மலைநாடனே!; ஒருவா பொறை இருவா நடபு—ஒருவா பொறுக்கவே இருவர்க்கும் நட்பாகும் எ-று.

**கருத்து:**—நட்பினா பிழையைப பொறுத்தலே நடபு வளர்ச்சிககு எதுவாகும்.

## ஒப்புமைப் பகுதி :—

"தந்தீமை யில்லாதார் நட்டவர் தீமையையும்
எநதீமை யென்றே உணாபதாம்—அநதண்
பொருதிரை வந்துலாம் பொங்குநீர்ச் சேரபப!
**ஒருவர் பொறையிருவர் நட்பு.**"

—பழ 247.

"பேதைமை ஒனறோ பெருஙகிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்".

—குறள் 805.

"பழமையில் திரியார் பயன்தெரி மாக்கள்
கிழமையில் செய்தனன் கெழுதகை தரும்".

—பெருங். 4 : 8 : 75—76.

"பேதைமைப் பாலினுதல் பெருங்கிழ மையினு ணுதல்
மேதக நட்டோர் மாட்டு விரவிடும பிழைக ளெல்லாம்
காதுதற பால அல்ல........".

—தணிகை. வீரட்ட. 105.

"கெடுதியில் உதவ வல்லவர் நட்பால்
கிளந்திடா தொன்றனைச் செயினும்
கெடுமவகை செயதல் வேண்டினதாமே
கெழுவுதல் பணிவச்சம் இன்மை
படுதரும் ஊழில் புரியினும அவறறைப்
பழைமைஎன் றறிநதுளம் உவப்பின்
நெடுநில முழுதும் கேண்மையாம் மைநதா !
நேரலார் தாழும்கே ளாவர்".

—விசா. அரசி. 127.

"தொன்மை மறவேல்".

—ஆத்திசூடி. 64.

(ந).

குறிப்பு :-

கோங்கின் நிறம் பொன்னிறம என்பது :—

"கோஙகின் காலுறக் கழன்ற கண்கமழ பனிமலா
கைவிடு சுடரிற் றோன்றும"

—அகம. 153.

224. மடிதிரை தந்திட்ட வொன்கதிர் முத்தம்
கடுவிசை நாவாய் கரையலைக்கும் சேர்ப்ப !
விடுதற்(கு) அரியார் இயல்பிலரேல் நெஞ்சம்
சுடுதற்கு மூட்டிய தீ.

தருமர் :—என்பது. மடி திரை தநதிட்ட—மறிகின்ற

திரை கொண்டு வந்து போகட்ட; வான்கதிர் முத்தம்—வெள்ளிய கிரணங்களையுடைய முத்துக்களை; கடுவிசை நாவாய்—கடிய விசையினையுடைய நாவாயானது; கரை அலைக்கும்—கரையுடன் மோதும்; [1]சேர்ப்ப!—வளப்பத்தையுடைய கடற் சேர்ப்பனே; விடுதற்கு அரியார்—விடுவதற்கு அரியவராகத் தாம் நட்புக் கொண்டவர்; இயல்பு இலரேல்—இயல்பு அல்லாதவற்றைச் செய்வராயில் (அது); நெஞ்சம் சுடுதற்கு மூட்டிய தீ—தம நெஞ்சினைச் சுடுதற்கு மூட்டிய தீப்போலாம் என்றவாறு.

எனவே அவர் அறியாது தீயவற்றைச் செய்யில் அது அறிவுடைய தமது நெஞ்சிற்குச் சுடுவது போலாம; அத தீங்கு நோக்குவாராயில் கூடா நட்பாயிற்று. அதனால் அத் தன்மை யாகிய தீங்குகள் உண்டாயினும தாம் ஆராய்ந்து நட்புகொண்ட விடத்துக் கருதுதல் தீங்கு என்பதாயிற்று.

**பதுமனார் :**—என்றது. மடிதிரை தந்திட்ட வெண் கதிரையுடைய முத்தமுங் கடுவிசை நாவாயும் கரையின்கண் வந்து அலைக்கும சேர்ப்பனே! விடுதற்கு அரியார் பண்பிலராயின் அவரை நட்பாகக்கொண்டார் நெஞ்சினைச் சுடுதற்கே மூட்டிய தீயாவர் என்றவாறு.

மடிதிரை—எழுந்து மடியும அலை. வான கதிர—வான்மை நீரமை, கதிரொளி. நாவாய்—மரக்கலம்.

**விளக்க உரை :**—எ-து மடி திரை தந்திட்ட வான் கதிர் முத்தம்—மடிகின்ற திரை கொண்டுவந்து போகட்ட வெள்ளிய கிரணங்களையுடைய முத்தமும்; கடுவிசை நாவாய கரை அலைக்கும் சேர்ப்ப!—கடிய விசையை யுடைய நாவாயும் கரையிலே வந்து அலைக்கும கடற சேர்ப்பை யுடையவனே!; விடுதற்கு அரியார் இயல்பிலரேல்—விடுதற கரியாராகிய நட்டார இயல் பிலராயில்; நெஞ்சம் சுடுதற்கே மூட்டிய தீ—நெஞ்சினைச்

---

[1]சேர்ப்ப—நீரத் துறையை உடையவனே:

சுடுதற்கு மூட்டிய தீயாவர் அவர் என்றவாறு.

**கருத்து**:—ஆராய்ந்து நட்புக் கொண்டபின் நண்பரது தீங்கைக் கருதுவது தீதாகும்.

## ஒப்புமைப் பகுதி :—

"பழமைகந் தாகப் பசைந்த வழியே
கிழமைதான் யாதானுஞ் செய்க—கிழமை
பொறாஅ அவரென்னின் பொதநிதகம் **நெஞ்சத்து**
**அறாஅச் சுடுவதோர் தீ**".

**—நாலடி. 310.**

## குறிப்பு :—

இச்செய்யுளின் பின்னிரண்டடிகட்குத் தருமர் கண்ட கருதது, பதுமனார் கண்ட கருததுடன் மாறுபடுவது. ஆனால் பதுமனார் கருததும் விளக்கவுரைகாரர் கருததும வரும் செய்யுளுடன் தொடர்பு கொள்வதாகும.

(௪).

225. இன்னா செயினும் விடற்பாலர் அல்லாரைப்
[1]பொன்னன்னாய்! போற்றிக்கொளல் வேண்டும்
—பொன்னோடு
நல்லில் சிதைத்ததீ நாடோறும் நாடித்தம்
இல்லத்தில் ஆக்குத லால்.

**தருமர்**:—என்பது. இன்னா செயினும—(தாம் நட்புக் கொண்டவர்) இன்னாதவற்றைச் செய்தாராயினும்; விடற்பாலர் அல்லாரை—விடுதற்பகுதி யல்லாதவரை; பொன் அன்னாய்!

[1]'பொன்னகை' எனறும் பாடம; அப்பாடததிறகுப் பொன்போல் சிறந்ததாக எனப் பொருள் கொள்க.

—பொன்னை ஒப்பாய்!; போற்றிக் கொளல் வேண்டும்—பாது காத்து அவர் நட்பை விடாது கொள்ளவேண்டும் (அஃது என்னனில்); 'பொன்னோடு—பொன் முதலாகிய பல பொருள்களுடனே கூட; நல் [1]இல் சிதைத்த தீ—நல்ல இல்லத்தைக் கெடுத்த தீயை; நாள் தோறும் நாடி—நாள் தோறும் நெருப்புள்ள வீடுகளில் ஆராய்ந்து கொண்டுவந்து; தம் இல்லத்தில் ஆக்குதலால்—தம் மனையகத்து ஆக்கிக் கொள்ளலால் என்றவாறு.

தம்முடைய மனையையும பொருளையுங் கெடுத்திருந்தும் அந்நெ(ருப்பின்)மேல் மாறுபாடின்றி, மற்றுந் தேடிக்கொண்டு வருதல் தங்கருமத்தின் பொருட்டல்லாது ஒன்றல்லவே. அது போலத் தாம் விரும்பி நட்புக் கொண்டாரிடத் துண்டாகிய பிழைகளை நோக்குவது (நன்)றன்று என்பதாம்.

**பதுமனார்** :—என்றது. (நட்டார்) இன்னாதனவற்றைச் செய்தாராயினும், விடும்பகுதி யல்லாதாரைப் பொன்னன்னாய்! பின்னையும் நட்பாகவே பாதுகாத்து விரும்பிக் கொள்ள வேண்டும்; பொன்னுடனே நல்ல மனையை அழித்த தீயை நாடோறும் தேடித் தம் மனையகத்து உண்டாக்குதலால் என்றவாறு.

பொன்அன்னாய—பொன்போலும் நிறத்தையுடைய தோழி.

**விளக்கஉரை** :—எ-து. இன்னா செயினும்—இன்னாதனவற்றை நட்டார் செய்தாராயினும்; விடுதற்கரியாரை—விடற்பாலரல்லாரை; பொன்னன்னாய! போற்றிக் கொளல் வேண்டும—பொன்னை யொப்பாய்! பாதுகாத்து அவர்நட்பை விடாமற் கொள்ள வேண்டும்; பொன்னோடு நல்லில் சிதைத்த தீ—பொன்னுடனே நல்ல [2]இல்லையுங் கெடுத்த தீயை; நாடோறும் நாடித் தம் இல்லத்தில் ஆக்குதலால—நாள்தோறும நெருப்புள்ள

[1] இல்—மனை.

[2] வீட்டையும.

வீட்டை ஆராய்ந்து தேடிக்கொண்டுவந்து தம் மனையிலே ஆக்கிக் கொள்ளுதலால் என்றவாறு.

**கருத்து:**—கைவிடத்தகாத நண்பர் எவ்வளவு துன்பஞ் செய்யினும் அதனைக் கருதுதல் நன்றன்று.

## ஒப்புமைப் பகுதி :—

"இன்னா செயினும் விடுதற் கரியாரைத்
துன்னாத் துறத்தல் தகுவதோ?"

—நாலடி. 226.

'நலவில் சிதைத்த சீ ஆக்குதலால்' —
"—நல்லில் வெவ்வெரி யினைப்பக்
கனையெரி யுரறிய மருங்கு"

—புறம் 23 . 10—11.

'பொன்னோடு நல்லில்' —
"அலங்குபத மிகுந்த கடியுடை வியனகர்"

—அகம். 49.

"கூழுடைத் தந்தை இடனுடை வரைப்பு"

—அகம். 145.

## குறிப்பு :—

தீமைசெய்த தீயையும் நன்மை கருதிச் சேர்த்தல்போலத் துன்பஞ் செய்த நண்பரையும் பின்னைய இன்பங் கருதிச் சேர்த்தல் வேண்டும்.

(௫).

226. இன்னா செயினும் விடுதற்(கு) அரியாரைத்
துன்னாத் †துறத்தற்(கு) உறுவதோ?—
துன்னருஞ்சீர்

---

†'துறத்தல் தகுவதோ' என்றும் பாடம்.

விண்குத்து நீள்வரை வெற்ப! களைபவோ?
கண்குத்திற் றென்றுதம் கை.

**தருமர் :**—என்பது. துன் அரு சீர்—கிட்டுதற் கரிய நன்மையினையுடைய; விண்குத்து நீள்[1] வரை—விண்ணைப் பொருந்திய நீண்ட சாரல் சேர்ந்த; [2]வெற்ப!—வெற்பையுடையவனே!; கண்குத்திற்று என்று—கண்ணைக் குத்திற்று என்று; தம கை களைபவோ?—தமது கையினைத் தறிக்கக் கடவதோ? (கடவதன்று; அதுபோல); இன்னா செயினும்—(தாம் நட்புக் கொண்டவர்) இன்னாதவற்றைச் செய்யினும்; விடுதற்கு அரியாரை—(கைவிடத்தகாத நட்டாரை) [3]துன்னா—பொருந்தாமல்; துறத்தற்கு உறுவதோ?—கைவிடத் தகுவதோ? (தகுவதன்று) என்றவாறு.

கையானது குத்தவேண்டும் என்று அறிந்து செய்தது அல்லவே. அதுபோலத் தம்மை நட்டவரும் அறியாமற் செய்த குற்றங்களைக் கருதுவது நன்றன்று என்பதாயிற்று.

**பதுமனார் :**—என்றது. தமக்கு இன்னாதவற்றைச் செய்தாராயினும் விடுதற்கரிய நட்டாரை நட்பாக மருவாதே நீக்குவது தகுவதன்று. துன்னருஞ்சீர் விண்குத்து நீள்வரை வெற்பனே! தம் கண்ணைக் குத்திற்றென்று தம் கையைக் குறையார் ஆதலால் என்றவாறு.

துன்னரும் சீர் விண்குத்து நீள்வரை—தேவர்களால் செறிந்து, பெறுதற்கரிய தன்மையும் உடைத்தாய் இருந்துள்ள ஆகாசத்தை மலையின் உயர்ச்சியால் முட்டினது என்பாரும் உளர்.

**விளக்க உரை :**— எ-து இன்னா செயினும்—இன்னா

---

[1] வரை—மூங்கில் என்றுமாம்.
[2] வெற்ப—மலைநாடனே!
[3] துன்னா—துன்னாது என்பதன் ஈறு தொக்கது.

தனவற்றைச் செய்தாராயினும்; விடுதற்கு அரியாரை — விடுதற கரிய நட்டாரை; துன்னுத் துறத்தல் தகுவதோ? — அவரைப பொருந்தாமல கைவிடத தக்கதோ?; துனனரும சீர் விண் குதது நீள வரை வெறப! — கிட்டுதறகரிய தனமையினையுடைய விண்ணைப பொருநதிய நீண்ட சாரலையுடைய வெறபனே!, களைபவோ? கண குததிறறு என்று தம்கை — கண்ணைக் குததிறறு எனறு தம முடைய கையைத தறிககக் கடவரோ? என்றவாறு

**கருத்து:**—நடடார, அறியாமற செயத பிழைகளைப பொறுத் தலே அறிவுடைமையாகும.

## மேற்கோள் பகுதி :—

நச் —'விணணெனன வரூஉங் காயப பெயாவயின் வருகாலை' எனற சூத்திரத்தின கண, 'விணகுதது நீளவரை வெறப களைபவோ' என்பதை எடுத்துககாட்டுவா.

—தொல் எழுத. சூ. 305.

## குறிப்பு :—

"உடுக்கை யிழநதவன கைபோல ஆஙகே
இடுககண களைவதாம நடபு"

எனற திருககுறளினும,

"மெயசெனறு தாககும வியனகோ லடிதனமேற
கைசெனறு தாஙகும கடிது"

எனற நனனெறியினும கையானது நடபிறகு உவமையாயினமை காணக.

(சு).

227. இலஙகுநீர்த தண்சேர்ப்ப! இன்னா செயினும்
கலநது பழிகாணார் சானறோர் — கலந்தபின
தீமை எடுத்துரைக்கு நதிண்ணறி வில்லாதார்
தாமும் அவரிற் கடை.

**தருமர் :**—என்பது. இலங்கு நீர் தண் சேர்ப்ப!—தெளிந்த நீரை யுடைய குளிர்ந்த கடற் சேர்ப்பை யுடையவனே!; இன்னா செயினும்—நட்டவர் இன்னாதவற்றைச் செய்யினும்; சான்றோர்—அமைந்தோர்; கலந்து பழி காணார்—அவருடன் நட்புக் கொண்ட பின்பு அவர்செய்த பிழையை மனத்திற் கருதார்; கலந்த பின்—நட்பு கொண்ட பின்பு; தீமை எடுத்து உரைக்கும்—அவர் தீமையைப் பலர்க்கும் அறிவிக்கும்; திண் அறிவு இல்லார்—திண்ணிய அறிவில்லாதார், தாமும் [1]அவரின் கடை—அத்தீங்கு செய்தாரினும் கடையானவர் தாமே என்றவாறு.

அறிவில்லாமையால் தீங்கு செய்வதன்றி அறிந்து செய்வதல்லவே. அதனால் அவருடன் நட்புச் செய்த பின்னும் அவர் தீங்குகளைக் கருதினர் அவர், அவ்வறிவில்லாதவரினும் கீழாயினார் என்பதாம்.

எனவே நட்புச் செய்வதும் அறிவுடைய பெரியோர்க் கல்லது மற்றோர்க்கில்லை என்பதாயிற்று.

**பதுமனார் :**—என்றது (விளங்குகின்ற) குளிர்ந்த கடற் சேர்ப்பை உடையவனே! நட்டார் இன்னாதவற்றைச் செய்தாராயினும் கலந்து வைத்து அவர்(நட்டார் செய்த) பிழையைக் காணார் அமைந்தோர், நட்புக் கொண்ட பின்பு அவர் செய்த (தீங்குகளைப் பிறர்க்கு உரைக்கும்) திண்ணறிவில்லாதார் தாமும் பிழை செய்த நட்டாரினுங் கடையராவர் என்றவாறு.

பழி—குற்றம்.

**விளக்க உரை :**—எ-து. இலங்குநீர்த் தண்சேர்ப்ப!—தெளிந்த நீரையும் குளிர்ந்த கடற்சேர்ப்பையும் உடையவனே!; இன்னா செயினும்—நட்டார் இன்னாதனவற்றைச் செய்தாராயினும்; கலந்து பழி காணார் சான்றோர்—நட்புக் கொண்ட

[1] அவரின்—(பிழைசெய்த) அந்நட்டாரைப் போல என்றுமாம்.

பின் அவர் செய்த பிழையைக் காணார் அமைந்தோர்; கலந்தபின் தீமை எடுத்துரைக்கும் திண்ணறிவில்லாதார் தாமும் அவரிற கடை—நட்புச் செய்துகொண்டு அவர் செயத குற்றங்களைப் பாரக்கும் அறிவில்லாதார் தாமும் அவரிற் கடையாவர் என்ற வாறு.

**கருத்து**:—நடபினரது குறறஙகருதி அதனைப பிறாககு அறிவித்தல இழிவாகும்.

## ஒப்புமைப் பகுதி :—

"கொழிததுக் கொளப்பட்ட நண்பி னவரைப
பழிததுப பலாநடுவண் சொல்லாடார—என்கொல் ?
விழிததலரும் நெய்தற றுறைவா ! உரையார
இழிததக்க காணிற கண்".

—பழ. 182.

(எ).

228\. ஏதிலார் செய்த(து) இறப்பவே தீதெனினும்
நோதக்க(து) என னுண்டாம் ? நோக்குங்கால்—
கழுமியார் செய்த கறங்கருவி நாட! [காதல்
விழுமிதாம் நெஞ்சததுள் நின்று.

**தருமர்** :—என்பது கறஙகு அருவி நாட!—ஓசையுடைத் தாக விழும அருவியினையுடைய மலைநாடனே !; ஏதிலார செய்தது—அன்னியா செய்த தீஙகு; இறப்பவே தீது எனினும்—மிகவும கொடியது ஆயினும; நோக்குங்கால்—பாாக்குமிடத்து; நோதக்கது என உண்டாம ?—நோவததக்கது எனனவுண்டாம் ? (ஒன்றுமில்லை; ஆதலின); காதல் கழுமியாா செயத—தம் மேற காதலைப பொருநதியிருக்கின்றவர் செய்த குறறஙகள்; நெஞ்சத துள நின்று—தம் நெஞசததுளளே நின்று; விழுமிது ஆம—சீரியதாகாதோ ?; எனறவாறு

தம்மிடததுக் காதலைப பொருநதினவா செய்த குற்றம்

அன்னியர் செய்யுந் தீங்குகளினும் மிக்கதாயினும் பார்க்குமிடத்து அதற்கு நோவத் தக்கது ஒன்று மில்லை. அதை மனத்திலே சீரிதாகக் கொள்ளக் கடவது பெரியோர்க்கு இயல்பு என்பதாயிற்று.

**பதுமனார்:**—என்றது. அயலார் செய்தது மிகத் தீது எனினும் நோவத் தக்கது என்னுண்டாம்? இஃது ஊழான் வந்தது என்று நோக்குங்கால், காதல் கழுமியார் செய்த (குற்றம்) கற்றங்கருவி நாடனே! நன்மையார் நெஞ்சத்துள் நின்று என்றவாறு.

நன்மையாமாறு கெழுதகைமையாற் செய்தது என்றுணர்தலால். விழுமிதாதல் உரிமையாற் செய்தது என்று அதனை நினைத்துப் பொறுத்தலால்.

**விளக்க உரை:**—எ-து. ஏதிலார் செய்தது இறப்பவே தீது எனினும்—அன்னியர் செய்த தீங்கு மிகவுங் கொடியதாயினும்; நோதக்கது என்னுண்டாம்? நோக்குங்கால்—நோகத் தக்கது என்னவுண்டாம்? நோக்குங் காலத்து; காதல் கழுமியார் செய்த—தம் மேற் காதலைப் பொருந்தினவர் செய்த குற்றங்கள், கற்றங்கருவி நாட!—ஓசையுண்டாக விழும் அருவியை யுடைய மலைநாடனே!, விழுமிதாம் நெஞ்சத்துள் நின்று—நெஞ்சத்துள்ளே நின்று சீரிதாகாதோ? என்றவாறு.

**கருத்து:**—நண்பர் செய்த தீங்கு மிகக்கதாயினும் அதனை ஆராய்ந்தால் உயர்ந்ததே ஆகும்.

## மேற்கோள் பகுதி:—

மயிலை —'ஏதில்' என்பது அயலெனனும் பொருள் குறித்து வரும் என்பார் அதற்கு, 'ஏதிலார் செய்தது இறப்பவே' என்பதனை யெடுத்துக்காட்டுவர்.

—நன் சூ 420.

**ஒப்புமைப் பகுதி :—**

"பண்ணிய யாழொக்கும் நட்டார் கழறுஞ்சொல்"
—நான்மணி. 100.

(அ).

229. தமரென்று தாம்கொள்ளப் பட்டவர் தம்மைத்
தமரன்மை தாமறிந்தார் ஆயின் அவரைத்
தமரினும் நன்கு மதித்துத் தமரன்மை
தம்முள் அடக்கிக் கொளல்.

**தருமர் :—**என்பது. தமா என்று தாம கொள்ளப பட்டவா தம்மை—உறவு என்று தாம நட்புக் கொள்ளப பட்டவரை, தமா அன்மை தாம அறிநதார் ஆயின்—அவரிடதது ஓர உறவல்லாமையைத் தாம கண்டாராயின்; அவரை தமரினும நனகு மதிதது—அவரை முனபு தமக்குளள உறவின முறை யாரினும [1]காடடிலநன்ருகப புததிபண்ணி; தமா அன்மை—அவா தமரல்லாமை செயததனை; தம உள் அடக்கி கொளல்—தம்மனத்துள்ளே அடக்கிக் கொள்ள வேண்டும் என்றவாறு.

தாம விரும்பி நட்புக் கொண்டவா தம்முடைய மனம பொருததொரு குறறஞ செய்தாராயினும், அவரை இகழ்தல குறறமாம அதனுல் அவாசெயத குறறததைப் பிறரறியப பண்ணுமல அதனைப் பொறுதது, முனபு நடபுக்கொண்ட நாளி லும் விருபபமுறறு ஒழுகுதல செய்ய வேண்டும எனபதாம்.

**பதுமனுர் :—**எனறது. தமககு நடபாவா எனறு தாம கொள்ளபபட்டாரை, அவா செயத தமரனமையைத் தாம அறிநதாராயின அவரைப பிழை செயயாத தமரினும் மிகவும் மதிதது, மறறு அவாசெயத தமரனமையை நமககு அவா தமராக நாம ஒழுக மாட்டாமையான வநததென்று, தம்முள்ளே அடக்கிக் கொளக எனறவாறு

[1]காட்டிலும; பெருதத உறுப்புக்களிற காட்டில் பெரிய அழகையுடைய (சீவக. 1461—உரை).

**விளக்க உரை :**—எ-து. நமர் என்று தாம் கொள்ளப்பட்டார் தம்மை—உறவோர் என்று தம்மாற் கொள்ளப்பட்டவரை; தமர் அன்மை தாம் அறிந்தாராயின்—அவரிடத்து ஓர் உறவல்லாமையைத் தாம் காணில்; அவரைத் தமரினும் நன்கு மதித்து—அவரை முன்பு தமக்கு உறவின்முறையாரினும் காட்டில நன்றாகப் புதகி பண்ணி; தமர் அன்மை தம்முள் அடக்கிக் கொளல்—அவர் தமரல்லாதன செய்ததனைத் தம்முளளே அடக்கிக்கொள்ள வேண்டும் என்றவாறு.

**கருத்து :**—நண்பரது குற்றத்தைப் பொறுத்து அவரை நன்கு மதித்து ஒழுக வேண்டும்.

## ஒப்புமைப் பகுதி :—

"ஆண்டுண்டு என்னொன்றோ வேண்டா அடைந்தாரை
மாணடிலா என்றே மறைப்பக் கிடந்ததோ?
பூண்டாங்கு இளமுலைப் பொற்றொடி! பூண்ட
பறையறையார் ஆயினார் இல்".

—பழ. 112.

"நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லார் எனினும் அடக்கிக் கொளவேண்டும்"

—நாலடி. 221.

## குறிப்பு :—

"இன்னாசெய் தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்"

என்றபடி நன்குமதித்தால் அவர் தம் பிழையுணர்ந்து வருந்துவர்; அதன்மேலுங் குற்றஞ் செய்ய முற்படார்.

(௯).

230. குற்றமும் ஏனைக் குணமும் ஒருவனை
நட்டபின் நாடித் திரிவேனேல்—நட்டான

மறைகாவா விட்டவன் [1]செல்வுழிச் செல்க
அறைகடல்சூழ் வையம் நக.

**தருமர் :**—என்பது. ஒருவனை நட்டபின்—ஒருவனை விரும்பி நட்புக் கொண்டபிறகு; குற்றமும் ஏனைக் குணமும்—அவன் குற்றத்தையும் அவன் நற்குணத்தையும்; நாடிக் திரிவேனேல்—ஆராய்ந்து பார்த்துத் திரிவேனாகில்; நட்டான் மறை—நட்புச் செய்தவன் மறைத்துச் சொன்ன காரியத்தை; காவா விட்டவன்—மனத்துள் அடக்காது வெளிப்படத் தூற்றினவன்; செல்வுழி செல்க—புகுந்த நரகத்திலே புகக் கடவேன், அறை கடல் சூழ் [2]வையம் நக—ஆரவாரத்தை யுடைய கடல் சூழ்ந்த வையகத்துள்ளார் என்னைச் சிரிப்பதாக என்றவாறு.

தாம் விரும்பி நட்புக் கொண்டவன் குற்றஞ் செய்தானாகில் அதனை எவ்வகைத்தாயினும் பொறுக்க வேண்டும் என்று திட்டப்படுத்துவார்; "நட்டவன் மறையை வெளிப்படுத்தினவன் போன நரகத்திலே புகக் கடவேன்" என்று பிறர் கூறுவது போலக் கூறியவாறு.

**பதுமனார் :**—என்றது. (ஒருவனை) நட்புக் கொண்டபின், (அவன்) செய்த குற்றத்தையும் மற்றைக் குணத்தையும் ஆராய்ந்து ஒழுகுவேனாகில், நட்டாரது மறைக்கப்பட்ட காரியத்தைப் பிறர்க்கு வெளிப்படத் தூற்றியான் செல்லும் உலகம் புகுவேனாக; அறைகடல் சூழ் வையகத்தார் சிரிக்க என்றவாறு.

நாடிக் திரிவேனே என்று பாடம் ஓதி ஆராய்ந்துவிட்டு நீங்கேன என்று **பொருளுரைப்பாரும் உளர்.** மறைபொருள்—செவி மந்திரம். உலகம்—நரகம் என்றுமாம்.

[1]செல்வுழி. (நாலடி 8)

[2]வையம் நக என்பதனை உலகத்தார் சிரிக்கும்படி என வினையெச்சமாக்கி, செல்வுழிச் செல்க என்பதனோடு முடித்துப் பொருள் கூறுவாரும் உளர்

**விளக்க உரை:**—எ-து. குற்றமும் ஏனைக் குணனும்—ஒருவன் குற்றத்தினையும் ஒழிந்த குணத்தினையும்; ஒருவனை நட்டபின் நாடித் திரிவேனேல்—ஒருவனை உறவு கொண்டபின்பு இது குற்றம் இது குணம் என்று பார்த்துத் திரிவனாகில்; நட்டான மறை காவா விட்டவன செல்வுழிச் செல்க—நட்புச் செய்தவன் மறைத்துச் சொன்ன காரியத்தை வெளிப்படத் தூற்றினவன் புகுந்த நரகத்தே புகக் கடவேன்; அறைகடல் சூழ் வையம் நக—ஆரவாரத்தையுடைய கடல் சூழ்ந்த வையகத்தார் என்னைச் சிரிப்பதாக என்றவாறு.

**கருத்து:**—நண்பரது குண குற்றங்களை முன்பே ஆராய வேண்டுமன்றி நட்டபின் ஆராய்தல் அறமாகாது

## ஒப்புமைப் பகுதி:—

"அருமறை காவாத நட்பும்"

—திரிகடுகம். 55.

"குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு".

—குறள். 793.

"ஞானம் உடைமை குடிகுணம் குற்றம்
நல்வினை தானுள்ளத் திறத்தும்
பன்முறை யாய்ந்து நட்பினைக் கொளக,
பாம்பொடு பழகினும் பிரிதல்
இன்மையாம் அதனால் ஆய்ந்தலால் ஒருவர்
இடத்துநட் புறேல்உறின் அவர்செய்
புன்மையும் பழியும் புணர்ந்திரு பயனும்
போகருவ துண்மைபுத் திரனே"

—விவே. அரசி. 126.

(௫).

## 24. கூடா நட்பு.

**தருமர்** :—அஃதாவது குடிமையாலும் குணத்தாலும ஒழுக்கததாலும, மனவுறுதியாலும் தம்முடைய [1]நெஞ்சுக்கு வாராதவரை நட்புக் கொள்ளலாகாது என்பதாம்.

**பதுமனார்** :—அஃதாவது நட்புச் செயதலாவது ஒரு காரணததைக் குறித்தன்றி நெஞசு ஒப்புமைகளால் கூடுவ ரன்றே. அதுவன்றித் தஙகருமம முடிததுக்கொள்ளுதல் காரண மாக வந்து நட்பாகுங காலததது, அக்கருமம் மனததுள்ளே நின்று ஒன்றுபட ஒழுக வொட்டாது, நடுவே [2]தகையப்பட்டுக் கூடா நட்பாய் ஒழுகிக் கருமம கைகூடின பின்பு, அந்தநட்புக் கால் தூரந்து விடுதல் என்றவாறு.

குறிப்பு :—

'கூடாநட்பு' :—

பரிமே :—அஃதாவது பகைமையான் அகத்தால் கூடா திருநதே தமக்கு வாய்க்குமிடம பெறுநதுணையும புறததால் கூடி ஒழுகுவார நடபு.

மணக :—கூடாநட்பாவது சுறறததாராயினும பிறராயினும மனததினுல் நள்ளாது நட்டாரைப்போல ஒழுகுவாரது இயல்பும அவர்மாட்டு ஒழுகுந்திறமும் கூறுதல். தமக்கு இனம் அன்றிக கருமம் காரணமாக நட்பாரும், பகைவராய் நட்பாரும், என அவ்விருவகையாரையும தீ நட்புபோலக் கடியவேண்டுமாதலின அதனபின இது கூறப்பட்டது.

பரிதி :—கூடாநட்பாவது புரையறக் கூடியும பிரிவான எ-று.

—குறள். அதி. 83.

---

[1]நெஞ்சுக்கு வாராதவர்—மனத்திற்குப் பொருந்தாதவர்.

[2]தகையப்பட்டு—தடுக்கப்பட்டு.

231. செறிப்பில் பழங்கூரை சே(று)அணை யாக
இறைத்தும்நீர் ஏற்றுங் கிடப்பர்—கறைக்குன்றம்
பொங்கருவி தாழும் புனல்வரை நன்னாட!
தங்கருமம் முற்றுந் துணை.

**தருமர்** :—என்பது. [1]கறை குன்றம் பொங்கு அருவி [2]தாழும புனல வரை நல் நாட!—மஞ்சுகள் சூழப்பட்ட கரிய சிகரத்தினையும் கடிதாகிய பொங்கி விழுகின்ற அருவிப் புனலையும உடைய மலைநாடனே!, செறிப்பு இல பழங்கூரை—கட்டுகள அற்றுப் பிரிந்த கூரையினையுடைய இல்லிலே, சேறு அணை ஆக—(ஒழுகின நீருக்குச்) சேற்றை அணையாகக் கோலி; (நீர்) இறைத்தும—அந்த அணைக்குள் விழுந்த நீரை இறைத்தும; நீர ஏற்றும—(மேல) விழுகின்ற நீரை ஏற்றும; தம கருமம முற்றும் துணை—தம மனத்தெண்ணிய கருமம முடியுந் துணையும; கிடப்பர—அப்படிக் கிடப்பர என்றவாறு.

தமது கருமத்தின பொருட்டு இவவகைத்தாயவர மனம வருமபடி ஒழுகித் தமது கருமம ஆனபின, அவரிடத்து நட்புப பண்பு விட்டு மாறுவார உளர. ஆதலால அத்தகைமையாரோடு நட்பு ஆகாது என்பதாம.

**பதுமனார்** :—என்றது. மரம முதலாயினவற்றால் செறிப்பிலாப பழங்கூரையையுடைய மனைக்கண், சேற்றை அணையாகக் கோலிப புகுந்தநீரை இறைத்தும மேல ஒழுகுகின்ற நீரை ஏற்றும கிடப்பர; கறைக்குன்றம பொங்கருவி தாழும புனல்வரை நன்னாடனே! (அதுபோல) கூடாத நட்புடையாரும தம் கருமம் முற்றுந்துணையும (இருப்பர) என்றவாறு.

கறைக்குன்றம—தூரத்தில தோன்றும பொழுது கருமை பொருந்துதலால். பொங்கருவி—ஆரவாரத்தைத் தாழும அருவி;

---

[1] கறைக்குன்றம—மேகமபடிதலாற கரிதாகிய மலைச் சிகரத்திலிருந்து.
[2] தாழும—பெருகும.

மிகுதியான அருவி என்றுமாம்

**விளக்க உரை :**—எ-து. செற்பபில் பழங்கூரை சேறு அணையாக—பிணிபபுககள அறறுப பிரிநத பழைய கூரையை யுடைய இலலிலே ஒழுகின நீருககுச் சேறறை அணையாகக கோலி; இறைததும நீர எறறும கிடபபா—அநத அணைககுள விழுநத நீரை இறைததும் விழுகிற நீரை எறறும இபபடிக கிடபபா; கறைக்குன்றம பொங்கருவி தாழும் புனல்வரை நனாடா!—கரிய குனறம் மிகக அருவியினைத் தாழும் கடுமபுனலை யுடைய மலைநாடனே!; தஙகருமம முறறும் துணை—தமமுடைய காரியம் முறறும அளவும என்றவாறு.

**கருத்து :**—தமது கருமம் முடியும வரை கூடிப பின கூடா தாரது நடபைக கொளளலாகாது.

## ஒப்புமைப் பகுதி :-

"கணணுள மணியேபோல் காதலால் நட்டாரும
எணணுந துணையிற பிறராகி நிறபரால்
எணணணி உயிரகொளவான வேண்டித திரியினும
உண்ணுந துணைககாக்கும கூறறு."

—பழ. 89.

(க).

232\. சீரியார் கேண்மை சிறநத சிறப்பிற்றாய
மாரிபோல் மாண்ட பயத்ததாம்—மாரி
[1]வறங்கூர்ந்தாற் போலுமே வாலருவி நாட!
சிறந்தக்காற் சீரிலார் நட்பு.

**தருமர் :**—என்பது வால் அருவி நாட—தெரிந்த

[1] வறந்தககால என்றும் பாடம்.

அருவியாற சிறப்பெய்திய மலைநாடனே!; சீரியார் கேண்மை —நற்குண முடையவருடன் கொண்ட உறவு; சிறந்த சிறப பிறறு ஆய்—மிக்க சிறபபினை யுடைததாய; [1]மாரிபோல் மாணட பயததது ஆம—மாரிபோல மாடசிமைபபட்ட பயனை யுடைத தாகும்; சீர இலார நட்பு—சீரமையில்லாதாருடன கொணட உறவு; சிறநதக்கால்—(மிகுநதால்); மாரி வறம் கூர்நதால் போலுமே—மாரியானது பெய்யுமாபபோலத் தோன்றி வறண்ட தனமையை உடைததாம (அதுபோல); நட்புக்கொணடகாலத துப் பயன் படுமாப்போலத தோன்றிப் பிறகு வறந்த தன்மையாம என்றவாறு.

ஆதலால் இத்தனமையாரோடு உறவு கொளளுதலைத தவிரக என்பதாம்.

**பதுமனர் :**—என்றது. விழுமியாரோடு ஒருவன் கொண்ட நட்பு, மிகக பெருநதன்மையை யுடைத்தாய் மழைபோல மாட்சிமைப் பட்ட பயனை உடைத்தாகும்; சீரில்லாதாரோடு கொண்ட நட்பு சிறநதககால, வாலருவி நாடனே! அம மாரி வறந்தக்காற போலும எனறவாறு.

வால் அருவி நாட—தூய அருவி சூழ்நத நாடனே. மாரி வறந்தககாற் போலும எனறது, பெயவதுபோல எழுநது பெயயா முகிலபோலப பணடுளள பயனையும்கூட நினறு கெடுததல சிறநதககால்—நட்பு மிக்ககாலும.

**விளக்க உரை :**—எ-து. சீரியார கேணமை சிறநத சிறப்பிறாய—சீரியவாகளுடனே கொண்டவுறவு மிக்க சிறப்பினை யுடையதாய; மாரிபோல் மாண்ட பயத்ததாம்—நடபுகொண்ட காலத்து மாரியாலே விளைவுப பலன் உண்டானறுபோல மாட்சிமைபபடட பயனைத தருவதாம்; மாரி வறநதக்கால போலுமே—மழை பெய்யாமல் மறுத்த காலத்துக்கு ஒக்கும,

[1] மாரி பெயயும மழை.

வாலருவி நாட!—மிகவும் வெள்ளிதாகிய அருவியையுடைய நாடனே!; சிறந்தக்கால் சீரிலார் நட்பு—சிறந்த காலத்துஞ் சீரிலாதாருடனே கொண்ட நட்பு என்றவாறு.

**கருத்து:**—கூடாநட்பு பின் பயனறறுப் போவதால் அத்தகைய நட்பினைத தவிர்க.

## ஒப்புமைப் பகுதி:—

"மாரிய'ம உண்டீண் டுலகுபுரப் பதுவே".

—புறம்

"மாரியன்ன வண்மையிற சொரிநது"

—புறம். 397 : 16.

(உ).

233. நுண்ணுணர்வி ேனாடு கூடி நுகர்வுடைமை
விண்ணுலகே ஒக்கும் விழைவிற்றால்-நுண்ணூல்
உணர்விலர் ஆகிய ஊதியம் இல்லார்ப்
புணர்தல் நிரயததுள் ஒனறு.

**தருமர்:**—என்பது. நுண் உணாவினரோடு—நுண்ணிய அறிவினை உடையாரோடு; கூடி—நடபுச் செய்து; நுகர்வு உடைமை—அதிலுண்டாகிய பயனை அனுபவித்தல்; [1]விழை விற்றால்—விருப்பத்தினாலே; விண் உலகே ஒகரும்—தேவ ருலகத்தை ஒக்குமட; நுண் நூல் உணாவு இலா ஆகிய—நுண்ணிய நூலினை உணர்ந்து அதன் பயனைத தெரிய மாட்டாத; [2]ஊதியம் இல்லாா புணாதல்—நடபுப பண்பாகிய [3]பலிப்பில்லாதாருடன்

[1]விண் உலகே ஒக்கும விழைவிற்று—என்று பதச்சேதம் செயது சுவர்க்க இனபம் போல விருமபபபடுர் தன்மையுடையது என்று பொரு ளுரைப்பாரும் உளர்.

[2]ஊதியம்—பயன்.

[3]பலிப்பு—பயன

கொண்ட உறவு; நிரயத்துள் ஒன்று—நரகத்திலே வைத்து எண்ணப்பட்டதொரு நரகமாம் என்றவாறு.

அறிவுடையாருடன் உறவுகொள்ளின் அவர் வி(ரும்)பத் தினற் செயவது தேவருலகம் ஒக்கும் என அவரைவியந்து கூறி, அறிவில்லாதாருடன் உறவு கொள்வது நரகத்திலே அனுபவிக்கும் தன்மையாம் என இழிவாக்கியது; கூடாநட்பாய ஒழுகுமவரை நட்பாகக் கொள்ளாது உறுதி கூறியதாம்.

**பதுமனர் :—**என்றது. நுண்ணியவறிவினையுடையாரோடு பொருந்தி, நுகரும் காலத்து அது உடைமை [1] துறக்கத்தையே ஒக்கும் பயனை உடைத்தாம். அந் நுண்நூலை உணரும் உணர்வை இல்லாதாராகிய பயனில்லாதாரை நட்பாகப் பொருந்துதல் நரகங்களுக்குள்ளே வைத்து எண்ணப்படுவதோர் நரகம் என்றவாறு.

**விளக்க உரை :—**எ-து. நுண்ணுணர்வினரோடு—நுண்ணிய அறிவினையுடையாரோடு; கூடி நுகர்வுடைமை—நட்புச் செய்து அதிலுண்டான பயனை அனுபவித்தல், விண்ணுலகே ஒக்கும் விழைவிற்றால்—விரும்பினால் தேவருலகத்தையே ஒக்கும், நுண்நூல் உணர்வு இலராகிய—நுண்ணிய நூலை உணரமாட்டாத, பேதையம் இல்லாரப் புணர்தல்—நட்புப் பண்பாகிய பலிப்பில்லாதாருடன் கொண்டஉறவு, நிரயத்துள் ஒன்று—நரகத்திலே வைத்து எண்ணப் பட்டதொன்று என்றவாறு

**கருத்து** —அறிவிலாரநட்பு நரகத்துன்பம் தருவதால் அவருடன் உறவு கொள்ளலாகாது.

## ஒப்புமைப் பகுதி :—

"தவலரும் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலா எஃகுடையார் தமமுட் குழீஇ

[1] துறக்கம்—சுவர்க்கம்.

நகலின் இனிதாயிற காணபாம அகல்வானத்து
உம்பா உறைவார் பதி".

—நாலடி. 137.

"தேவ ரனையா புலவா"

—நானமணிக்கடிகை. 75.

"ஒருமைச செயலாறறும பேதை எழுமையும
கான்புக் கழுந்தும அளறு".

—குறள். 835.

## குறிப்பு :—

அறிவுககு நுடபம ஆழநத கருததுககளை அழுநதி அறிதலும, நாலுககு நுட்பம் அரிய பொருளகளை அறிவிதகலும் ஆம.

(ரு).

234. பெருகு வதுபோலத தோனறிவைத தீப்போல்
ஒருபொழுதும் செல்லாதே நந்தும்-அருகெல்லாம்
சந்தன நீள்சோலைச சாரல் மலைநாட!
பந்தம் இலாளர் தொடர்பு.

**தருமர்** —எனபது. அருகு எல்லாம்—அருகு தோறும்; நீள சநதனச் சோலை—நீண்ட சநதனச் சோலையை உடைய; [1]சாரல் மலைநாட!—சாரலால் சிறநத மலைநாடனே!; பநதம இலாளா தொடாபு—மனப பிணிப்பு இல்லாதாருடன் கொண்ட உறவு, பெருகுவது போலத் தோனறி—பெருகுவது போல எழுந்து, வை தீ போல—வைககோலில (பறறிய) தீயைபபோல, ஒருபொழுதும செல்லாதே நநதும—ஒருபொழு(தாயி)னும நில்லாது கெடும அததன்மையாம் என்றவாறு.

[1] சாரல—மலைப்பக்கம.

வைககோலில் (பற்றிய) தீ, உடனே அவிந்து போவதுபோல் அறிவாகிய மனபபிணிப்பு இல்லாதாருடன் கொண்ட நட்பும் உடனே மாறுபடும். ஆதலால் அத்தன்மையாரை உறவாகக் கொள்வது ஆகாது என்பதாம்.

**பதுமனர் :**—என்றது. முறைபடப் பெருகுவது போலத் தோன்றிய பின்னை வைககோல தீப்போல ஒருபொழுதும் செல்லாதே கெடும; மருஙகெலலாம சநதன நீள சோலைச் சாரல் மலைநாடனே! மனததினகண பிணிபபு இலலாதாரோடு நட்பு என்றவாறு.

ஒரு பொழுதும செல்லாதே நநதும—கணப் பொழுதில் தோன்றிக் கெடும. அருகு—மருஙகு. சநதன நீள சோலை—வேறொரு மரமின்றிச சநதனமரததாற செறிநத சோலை.

**விளக்க உரை :**—எ-து. பெருகுவது போலத தோன்றி—வளாவது போலத தோன்றி; வை தீ போல் ஒருபொழுதும் செல்லாதே நநதும்—வைககோல் தீப்போல ஒரு பொழுதின் கண்ணும நில்லாமல் கெட்டுவிடும; அருகெலலாம் சநதன நீள சோலைச சாரல மலைநாட!—அருகு தோறும நீண்ட சநதனச் சோலையையுடைய சாரலாற சிறநத மலைநாடனே!; பநதம இலாளா தொடாபு—பிணிபபில்லாதாருடன கொண்டவுறவு என்றவாறு

**கருத்து :**—மனபபிணிபபில்லாா உறவு மாறுபடடழிவதால் அவருடன நட்புக் கொளளலாகாது.

(௪).

235. செய்யாத செய்தும்நாம் என்றலும் செய்தவனைச்
செய்யாது தாழ்த்ததுக்கொண்(டு) ஒட்டலும்—
மெய்யாக

இன்புறூஉம் பெற்றி இகழ்ந்தார்க்கும்
துன்புறூஉம் பெற்றி தரும். [அந்நிலையே

**தருமர் :**—என்பது. செய்யாத—(செய்யத்)தகாத காரியத்தை, நாம் செய்தும் என்றலும்—(தாம்) செய்வதாகத் துணிதலும்; செய்வதனைச் செய்யாது தாழ்த்துக் கொண்டு ஓட்டலும்—விரைந்து செய்ய வேண்டுங் காரியத்தைச் செய்யாமல் நீட்டிக்க விட்டு வைத்தலும்; மெய்யாக—உண்மையாக; இன்புறூஉம் பெற்றி இகழ்ந்தார்க்கும்—இன்புறத்தக்க தன்மைகளைத் துறந்தவர்க்கும்; [1]அந்நிலையே—அப்பொழுதே; துன்புறூஉம் பெற்றி தரும்—துன்பமுறத் தக்க தன்மைகளைக் கொடுக்கும் என்றவாறு.

எனவே, நட்புச் செய்யத் தகாதவருடன் நட்புக் கொள்வது ஆகாது என்பதற்குச் செய்யத்தகும் காரியங்களையும் உடன்கூறி அறிவுறுத்தியதாம்.

**பதுமனார் :**—என்றது. தாம் செய்யாதனவற்றைச் செய்தும் என்று உரைத்தலும், செய்யக் கடவதனைச் செய்யாதே நீட்டித்துக் கொண்டு [2]சேறலும், இவ்விரண்டும் மெய்ம்மையாகவே மனை வாழ்க்கையில் நின்று இன்புறூஉந் தன்மையைக் கடந்தவர்க்கும், அப்பொழுதே துன்புறூஉம் பெற்றியைத் தரும் என்றவாறு.

**விளக்க உரை :**—எ-து. செய்யாத செய்தும் நாம் என்றலும்—(தாம்) செய்யத்தகாத காரியத்தைத் (தாம்) செய்தும் என்றுரைத்தலும்; செய்வதனைச் செய்யாது தாழ்த்துக்கொண்டு ஓட்டலும் விரைந்து செய்ய வேண்டிய காரியத்தைச் செய்யாதே நீட்டித்துக் கொண்டு சேறலும் இவ்விரண்டும்; மெய்யாக—உண்மையாக, இன்புறூஉம் பெற்றி இகழ்ந்தார்க்கும்—மனை

[1]அம்மனப்பாங்கு என்றுரைப்பாரும் உளர்.
[2]செல்லுதலும்.

வாழ்க்கையினின்று இன்புறாஉம் தன்மையைக் கடந்த அருந் தவாக்கும்; அந்நிலையே துன்புறாஉம் பெறறி நரும்—அப்பொழுதே துன்பமுறத்தக்க தன்மையைக் கொடுக்கும் என்றவாறு.

**கருத்து** —வீண் ஆரவாரமும், நம்பிக்கை மோசமும உடையா ரது நட்பு ஆகாது.

## ஒப்புமைப் பகுதி :—

"ஒல்லுங் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்".

—குறள். 818.

"செயக்கடவ அல்லனவுஞ் செய்துமன் என்பார்
நயததகு நாகரிகம என்னை?"

—நீதிநெறிவிளக்கம. 71,

## குறிப்பு .—

செய்யாதன செய்வோம என்பது ஆரவார மொழியாகும். செயவதைச செயயாது தாமதிபபது நம்பிககைமோசமாகும. இவவிரண்டும கூடாநட்பினா செயல்கள் என்றறிக.

(ரு).

236. ஒருநீர்ப் பிறநதொருங்கு நீண்டக் கடைத்தும்
விரிநீர்க் குவளையை ஆம்பல்ஒக் கல்லா
பெருநீரார் கேண்மை கொளினும நீா அல்லாா
கருமங்கள் வேறு படும்.

**தருமர் :**—என்பது. ஒருநீா பிறநது—ஒரு தடாகத்திலே தோன்றி; ஒருஙகு நீணடக் கடைததும—ஒருவழிபபட வளாநத விடததும்; விரிநீா குவளையை—விரிநத நீாமையுடைததாகிய குவளைக்கு; ஆம்பல் ஒககலலா—ஆமபல் சரியாக(மாட்டாது); (அதுபோல) பெருநீரா கேண்மை கொளினும—மிகக நீாமை

புடையாருடனே உறவு கொள்ளினும்; நீர் அல்லார் கருமங்கள்—நற்குணம இல்லாதார காரியங்கள்; வேறுபடும்—வேறுபட்டிருக்கும் என்றவாறு.

எனவே நற்குண நற்செய்கை யில்லாதாரை நட்பாகக் கொள்ளலாகாது என்பதாயிற்று.

**பதுமனுர் :**—என்றது. ஒரு பொய்கை நீருள் தோன்றி ஒக்க வளர்நதவிடத்தும் மலர்நத நீர்மையையுடைய செங்கழுநீரை ஆம்பல் ஒக்கமாட்டாது; அதுபோலப் பெரியநீர்மையை உடையாரோடு நட்புக்கொளினும் அநநீர்மை யில்லாதார் செய்யுங கருமஙகள பொருந்தியிரா என்றவாறு.

விரிநீர்க்குவளை—விரிநத பெருமையையுடைய செங்கழுநீா

**விளக்க உரை :**-எ-து. ஒரு நீர பிறநது ஒருஙகு நீண்டக் கடைத்தும-ஒரு தடாகத்திலே தோன்றி ஒருவழிப்பட வளர்நதவிடத்தும்; விரிநீர்க் குவளையை ஆம்பல் ஒக்கல்லா—விரிநத் நீர்மையையுடைய குவளையை ஆம்பல் ஒக்கமாட்டாது; (அதுபோல) பெருநீரார் கேண்மை கொளினும்—மிக்க நீர்மையுடையாருடனே உறவு பண்ணினும்; நீரல்லார் கருமங்கள வேறுபடும—நீரமை யல்லாதார காரியஙகள வேறுபட்டிருக்கும் என்றவாறு.

**கருத்து :**—நல்லோருடன பழகினும தமது தீககுணததை விடாதவரோடு நட்புக்கொளளலாகாது.

## குறிப்பு :-

"நிறை நீர நீரவர் கேணமை" என்ற திருக்குறளில் 'நீரவா' என்பதற்கு, 'நீரவர் எனறூா இனிமைபற்றி' என்றூர் பரிமேலழகர். ஆகவே, நீரவர்—இனிய தனமையுடையவர் என்க. குவளை என்றது இங்கே மணஙகமழும் செங்கழுநீர்மலரை. "காாததிகை விளக்கிட்டன்ன கடிகமழ குவளை" என்றூா

சிந்தாமணியாரும்.

குவளையின் சிறப்புடைமையும் ஆம்பலின் சிறப்பல்லாமையும் கீழ்க்கண்ட நூல்களில் வரும் செய்யுட்களால் அறிக :—

"பெருந்துறை
நீர்தரு மகளிர் குற்ற குவளையும்
வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரும்"
—புறம் 42 : 15—17

"அளிய தாமே சிறுவெள் ளாம்பல்
இளைய மாகத் தழையா யினவே
இனியே, பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுது [மறுத்து
இன்னா வைகல் உண்ணும்
அல்லிப் படூஉம் புல்லா யினவே"
—புறம். 248

"சிறுவெள் ளாம்பல் அல்லி யுண்ணும்
கழிகல மகளிர் போல"
—புறம் 280 : 13—14.

"செழுஞ்செய் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந்தாளாம்பன் மலரொடு கூட்டி ....... ..
இடூஉக் கடந்து வாளமருழக்கி. ...
வேந்த ரோட்டிய. . . .. .பாரி".
—அகம். 78
(சு).

237. முற்றல் சிறுமந்தி முற்பட்ட [1]தந்தையை
நெற்றுக்கண் டன்ன விரலால் நெருமிர்த்திட்டுக்
குற்றிப் பறிக்கும் மலைநாட! இன்றேதே
ஒற்றுமை கொள்ளாதார் நட்பு.

**கருமார் :**—என்பது. முற்று அல் சிறு மந்தி—இளைய சிறு

---

[1] தன் கையை என்பது பதுமனார் பாடம்.

மந்தியானது; முன் பட்ட தந்தையை—(தனக்கு) முற்படப் போய்க் கனி முதலானவற்றைக் கொண்ட தந்தையை; நெற்று கண்டு அன்ன விரலால்—பயற்ற நெற்றுப்போன்ற விரலாலே; ஞெமிர்த்திட்டுக் குற்றி—அழுத்திடக் குத்தி; பறிக்கும்—பறித்துக் கொள்ளும் வளப்பமுடைய; மலைநாட!—மலைநாடனே!; ஒற்றுமை கொள்ளாதார நட்பு—மனவுறுதியாகிய ஒருமைப் பாடில்லாதாருடன் உறவுகொள்ளுதல்; இன்னாது—பொல்லாது என்றவாறு.

முற்றல் சிறுமந்தி—முற்றாத சிறிய குரங்கு. அறிவில்லார்க்கு மனத்து ஒருமைப்பாடில்லை. அதனால் அத்தன்மையார் நட்பு ஆகாது என்பார், அதன் தந்தை தனக்கெனக் கொடுவருங் கனி முதலியவற்றைச் சிறுமந்தி அறிவில்லாமையினால் இடர்ப்படுத்திப் பறித்த மலைநாட! என்று கொளக் கூறியதுமாம்.

**பதுமனார் :**—என்றது. முற்றல் சிறுமந்தி தனக்கு முற்பட்டது என்று தன் கையாக்கிக் கனி முதலாயினவற்றைக் கொண்டு உண்ணுமிடத்து நெற்றுக் கண்டன்ன விரலால் அழுத்திக் [1]குற்றிப் பறிக்கும் மலைநாடனே! மனத்தால் ஒருதன்மைப் படாரோடு கொண்ட நட்பு இன்னாது என்றவாறு.

முற்றல் சிறுமந்தி—வயது புகுந்து வளர்ந்த மந்தி; என்றும் இளையாதிருக்(கும் மந்தி); செயதொழிலால் முற்றிய மந்தி என்றுமாம. முற்பட்டது—முன்னே சென்றது. நெற்று—பயற்ற நெற்று.

**விளக்க உரை :**—எ-து. முற்றல் சிறுமந்தி முற்பட்ட தந்தையை—இளைய சிறுமந்தி முற்பட்டுப் போய்க் கனி முதலானவற்றைக் கொண்ட தந்தையை; நெற்றுக் கண்டன்ன விரலால

[1] குற்றி—குத்தி, மாக்கட்டை என்றுமாம். சிறுமந்தி, மாக்கட்டையைப் பெயர்த்து எடுக்கமாட்டாத முது மந்தியைத் தள்ளித் தான்பெயர்த்து எடுக்கக் கூடிய மலை என்று பொருள் கொள்வாருமுளர்.

—பயறற நெற்றைக் கண்டாற போலும் விரலாலே; ஞெமிர திட்டுக் குற்றிய பறிகரும் மலைநாட!--முறுக்கிக் குத்திப் பறிக்கிற மலைநாடனே!; இன்றுதே ஒறறுமை கொள்ளாதார் நட்பு— மனத்தால் ஒருமைப்படாதாரோடு கொண்ட வுறவு பொல்லாது என்றவாறு.

முறறல் சிறுமந்தி—முதுமையில்லாத சிறிய குரங்கு.

**கருத்து :**—மன வொற்றுமையிலலாதாருடன நட்புக்கொளளல துன்பந் தருவதாம்.

## ஒப்புமைப் பகுதி :—

"உட்பகை அஞ்சித்தன் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்"

—குறள். 883.

"புறமநட் டகமவேர்ப்பார நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறுதல வேண்டும் கழிபெரும
கண்ணோட்டம் செயயேல கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார பொதிந்து"

—நீதிநெறி, 56.

"ஒன்னாரைத் தேறேல்"

—ஆத்திசூடி. 108.

(எ).

238 †ஆனபடு நெய்பெய் கலனுள் அதுகளைந்து
வேம்படு நெய்பெய் தனைத்தரோ—தேமபடு
நல்வரை நாட! நயனுணாவார் நண்பொரீஇப்
புல்லறிவி னாரோடு நட்பு

† இது முதல் மூன்று செய்யுட்களின முறைமைவைப்பு சிலபிரதிகளில் மாறுபட்டுள்ளது.

**தருமர்** :—என்பது. தேம்படு நல்வரை நாட!—தேன் முதலிய இனிமைகளால் பொலிவுபெற்ற மலைநாடனே!; நயன் உணர்வார் நண்பு ஒரீஇ—நய குணமாகிய அறிவுடையாருடைய நட்பைவிட்டு, புல் அறிவினாரோடு நட்பு—புல்லறிவுடையாருடன் கொண்ட நட்பு; ஆன் படு நெய் பெய் கலனுள்—பசுவின் நெய் வார்க்கும் பாண்டத்தில்; அது களைந்து—அந்த நெய்யை நீக்கி, வேம்பு அடு நெய் பெய்தது அனைத்து—வேப்பெண்ணெயை வார்த்து வைத்தது ஒக்கும் என்றவாறு. அரோ—அசை.

புல்லிய அறிவினார்க்கு வேப்பெண்ணெய (உவமை)யாயினும் அந்த வேப்பெண்ணெய் பிணிக்கு மருந்தாகிப் பயன்படும்; புல்லிய அறிவினார் நட்பால் அதுவுமில்லை. ஆதலால் நல்லறிவினார் நட்பல்லது புல்லறிவினரோடு உறவு ஆகாது என்பதாம்.

**பதுமனார்** :—என்றது. ஆவினாலுண்டான நெய் பெய்த கலசத்தினுள்ளே அந்த நெய்யை நீக்கி, வேம்பின் நெய்யைப் பெய்தது போலும் தேம்படு நல்வரை நாடனே! நன்மையை அறிவாரோடு கொண்ட நட்பை நீக்கிப் புல்லறிவினை யுடையாரோடு கொண்ட நட்பு என்றவாறு.

பெய்கை—இருக்கையுற வார்த்ததை வைத்தலுமாம். கலன்—கலசம். [1]தேம்படு—மணம் பொருந்தல். படு—மிகுதி.

**விளக்க உரை** :—எ-து. ஆன்படு நெய் பெய் கலனுள் அது களைந்து—பசுவின் நெய் வார்க்கப்பட்ட கலசத்தில் அந்த நெய்யை நீக்கி, வேம்பு அடு நெய் பெய்தனைத்தரோ—வேப்பெண்ணெயை வார்த்து வைத்ததற்கு ஒக்கும்; தேம்படு நல் வரை நாட!—தேம் படுகிற நல்ல மலைநாடனே!, நயனுணர்வார் நண்பு ஒரீஇ—நயமுள்ளவர் உறவைவிட்டு, புல்லறிவினரோடு நட்பு—புல்லிய அறிவினை யுடையாரோடு கொண்ட நட்பு என்றவாறு.

---

[1]தேம்படு—தேன் கூடுகள் மிக்க என்றுமாம்.

**கருத்து :**—புல்லறிவினார் நட்பால் ஒருபயனும் இல்லையாதலின் அவருடன் நட்புக் கொள்ளலாகாது.

(அ).

239. உருவிற்(கு) அமைந்தான்கண் ஊராண்மை யின்மை
பருகற்(கு) அமைந்தபால் நீரளாய் அற்றே
தெரிவுடையார் தீயினத்தர் ஆகுதல் நாகம்
விரிபெடையோ(டு) ஆடிவிட் டற்று.

**தருமர் :**—என்பது. [1]உருவிற்கு அமைந்தான் கண்—வடிவிற்கு அமைந்தவனிடத்து, ஊர் ஆண்மை இன்மை—ஒப்புரவில்லாமை, பருகற்கு அமைந்த பால்—பருகுதற்கு அமைவாகக் காய்ந்திருக்கிற பாலிலே; நீர் அளாய அற்று—நீரைக் கலந்ததனோடு ஒக்கும்; தெரிவு உடையார்—அறிவுடையார்; தீ இனத்தர் ஆகுதல்—தீய இனத்தைச் சேர்ந்து கெடுதல்; நாகம் விரி பெடையோடு ஆடி விட்டு அற்று—நாகமானது விரியன் பெடையுடனே கூடிப் புணர்ந்து கெட்டதனோடு ஒக்கும் என்றவாறு.

விரியன் பெடையோடு நாகம் புணரில் அந்த விரியன் வயிற்றில் காப்பம் உற்பவிக்க, நாகத்துக்கு ஆயுசு குன்றுமாதலால் அத்தீய குணத்தாரோடு உறவு ஆகாது என்பதாம்.

**பதுமனார் :**—என்பது. வடிவிற்கு அமைவுடையான் மாட்டு ஒப்புரவில்லாமை †பருகற்கு அமைந்த பாலின்கண் நீரைப் பெய்தாற் போலும்; மனத்தின்கண் ஆராய்வினையுடையார் தீய இனத்தையுடையராதல், படத்தையுடைய நாகம் மயிற்பெடையின் முன்னே படத்தை விரித்தாடினாற் போலும்

[1] உருவிற்கு அமைந்தான—பெருமைக்குரிய குணங்களையுடையான் என்பாரும் உளர்.

† பாலில் நீர் கலந்தாற் சுவைகெடுமாறு போலக் குணசாலியிடம் ஒப்புரவின்மை கலந்தாற் குணங்கெடும் என்க.

என்றவாறு.

**பொழிப்புரை:**—என்றது. வடிவிற்கு அமைவுடையார் மாட்டு ஒப்புரவில்லாமை பருகற்கமைந்த பாலின்கண் நீரைப்பெய்தாற் போலும், மனத்தின்கண் ஆராய்தலுடையார் தீய இனத்தராதல் படம் நாகம் விரியன் பெடையொடு புணர்ந்தாற் போல இடும்பையைத் தரும் என்றவாறு.

ஊராண்மை—ஒப்புரவு. நாகம் விரியன் பெடையொடு புணர்ந்து உயிரை விட்ட அத்தன்மைத்து, மயிற் பெடை(யொடு) என்றுமாம்.

**விளக்க உரை:**—எ-து. உருவிற்கு அமைந்தான்கண் ஊராண்மையின்மை—வடிவிற்கு அமைதியுடையவனிடத்து ஒப்புரவில்லாமை, பருகற்கமைந்த பால் நீர் அளாயற்றே—காய்ந்த பாலிலே நீரைக் கலந்ததனோடொக்கும்; தெரிவுடையார் தீயினத்தார் ஆகுதல்—அறிவுடையவர் தீய இனத்தைச் சேர்ந்து கெடுதல், நாகம் விரி பெடையோடாடி விட்டற்று—நாகம் விரியன் பெடையோடு கூடிப் புணர்ந்ததனோடொக்கும். எ-று.

†

**கருத்து:**—நற்குணமுடையார் தீக்குணத்தாருடன் உறவு கொள்ளலாகாது.

(கூ).

240. முட்டுற்ற போழ்தின் முடுகியென் ஆருயிரை
நட்டான் ஒருவனைக் கைநீட்டேனேல்—நட்டான
கடிமனை கட்டழித்தான் செல்வுழிச் செல்க
நெடுமொழி வையம் நக.

1 தருமர் உரையிற் காண்க

**தருமர் :**—என்பது. முட்டு உற்ற போழ்தின் †[(நட்டான் தனக்கு) ஒரு துன்பம் வந்த காலத்து; முடுகி—விரைந்து; என் ஆர் உயிரை—எனது அரிய உயிரை; நட்டான ஒருவன் கை நீட்டேனேல்—நட்புச் செய்தவனது கையிலே கொடுத்தேனில்லையாகில; (யான)] நட்டான கடிமனை கட்டு அழித்தான—நட்புச் செய்தவனுடைய காவல் மனையாளைக கட்டழித்தவன; செல உழி செல்க—புகுந்த நரகத்திலே புகக் கடவேன்; நெடுமொழி வையம நக—பெரிய புகழையுடைய பூமியிலுள்ளார என்னைச் சிரிப்பதாக என்றவாறு.

நட்புச் செய்த விடத்துத் தான அவன என இரண்டாக்கி, அவனுக்கு ஒரு துன்பம் வந்தால் யான இன்னபடி செய்யக் கடவேன் என்று சொல்லிக் காட்டியபோதே நட்புக்குப் பொருந்தாது. ஆதலால இது கூடா நட்பில் சேர்க்கப்பட்டது.

**பதுமனார் :**—என்றது. என்னோடு நட்டான் ஒருவன் தனக்குச் [1]செல்லாமை வந்துற்ற போழ்து, விரைந்து என அரிய உயிரை அந்நட்டான் கையின்கண் கொடேனாயின், தன்னோடு நட்டான் காவல் மனையைக் காவல் அழித்தான் செலலும் உலகத்தின்கட் செல்வேனாக; நெடும புகழையுடைய உலகத்து உயர்ந்தார இகழ என்றவாறு.

முட்டுற்ற போழ்தே—கிலேசத்தை(க்கொண்ட பொழுதே). செல்வுழி—நரகம். நெடுமொழி—விடாமொழி.

**பொழிப்புரை :**—எ-து என்னொடு நட்டானொருவனுக்குச் செல்லாமை வந்துற்ற பொழுது, விரைந்தெனது அரியவுயிரை நட்டானறன கையிற் கொடேனாயின், தன்னொடு நட்டான காவல்மனையாளைக் காவலழித்தான் செலலுமுலகத்திற் செல்வேனாக நெடும புகழையுடைய உயர்ந்தார இகழ என்றவாறு.

† பிறையுள் இருப்பவை பிறசுவடியிலிருந்து பெற்றவை.

[1] செல்லாமை—வறுமை

கடி—காவல். நட்பிடத்துச் செய்யும் நற்செயல். சொல்லாது செய்தல் ஒறறுமை; சொல்லுதல் வேற்றுமை. [1]“இன்னம் யாம என்று, புனையினும புல்லென்னும் நட்பு”. நெடு மொழி—நெடும்புகழ்.

**விளக்க உரை** :—எ-து. மூட்டுற்ற போழதின் முடுகி என ஆருயிரை—யான நட்புச செய்யப்பட்டவன் தனக்கு ஒரு துன்பம வந்தகாலத்து விரைந்து (எனது)யிரை; நட்டான ஒருவன் கை நீட்டேனேல—நட்புச் செய்தவன் கையிலே கொடுததேனில்லையாகில்; நட்டான் கடிமனை கட்டழித்தான் செல்வழிச செல்க—நட்புச செயதவனது காவல மனையாளைக காவலழித்தவன் புக்க நரகத்திலே புகக்கடவேன்; நெடுமொழி வையம் நக—பெரிய புகழையுடைய பூமியிலுள்ளார என்னைச சிரிப்பதாக எனறவாறு.

இது கூடாநட்புக்குப பொருந்தினபடி யென்னெனில இருவரும புரையறக கலந்து நட்புச் செயதலால், இவன இன்னபடி மிடிபபட்டால யான இன்னபடி செய்யககடவேன் என்று சொலலிக காட்டுதல, நட்புக்குப போதாதாகையால கூடா நட்பிலே சேர்க்கபபட்டதாம்.

[2]“இனையா இவாநமககு இன்னம்யாம என்று
புனையினும புலலெனனும நட்பு”

(—என்ற திருககுறளையும காணக.)

**கருத்து** :—தன உயிரைக் கொடுததாவது நணபனுயிரைக் காப்பதே சிறந்த நட்பாகும.

(ம).

**நட்பியல முற்றிறு.**

---

[1] குறள் 790.

[2] பரிமே :—“இவர் நமக்கு இத்தனை அன்பினர் யாம இவர்க்கு இத் தன்மையம் என்று ஒருவனை ஒருவா புனைந்து சொல்லினும், நட்புப புல்லியதாயத் தோன்றும்”. —குறள். 790—உரை.

# 3. *இன்பவியல்.

## †1. தலையின்ப வியல்.

### 25. அறிவுடைமை.

**தருமர் :—** அஃதாவது இயற்கை அறிவினாலும் செயற்கை அறிவினாலும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினையும் நூல் சொன்ன முறைமையிலே அறிந்து மறுமைக்கும், இம்மைக்கும் உறுதியான காரியங்களைத் துணிந்[தறிதலும், உலகியற்கை அறிந்து உலகத்துக்குத் தக்கவாறு ஒழுகலுமாம்]

**பதுமனார் :—** அஃதாவது இயற்கை செயற்கை ஆகிய இரண்(டறிவி)னாலும் யாதொரு பொருளையும் [1]தூல ரூபமாகக் கண்டு விடாது அப்பொருளின் உண்மையினை மனத்திலே [2]சூக்குமமாக நிரூபித்து உணர்ந்தறிதலும், அவ்வாறு அறிந்த பின்பு, இவ்வுலகமானது அப்போது எவ்வாறு ஒழுகுகின்றது அவ்வாறு தானும் ஒழுகுதலுமாம் என்றவாறு

குறிப்பு :—

'அறிவுடைமை' —

பரிமே —அஃதாவது, கல்வி கேள்விகளினாய அறிவோடு உண்மையறிவுடையனாதல் அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

---

*மக்களது மகிழ்ச்சியைக் கூறும் பகுதி.

†இன்பவியல்; தலையின்பம், கடையின்பம் என இருவகைப்படும். அவற்றுள் முதற்கண் தலையின்பம் உணர்த்துதனுதலிற்று.

[1] தூலரூபம—பரு வடிவம்.

[2] சூக்குமம்—நுண்மை.

மணக் :—அறிவுடைமையாவது, அறிவாவது இன்னது என்பதூஉம், அதனாலாகிய பயனும் கூறுதல். இது கல்வியும் கேள்வியும் உடையராயினும் கேட்டபொருளை உள்ளவாறு உணர்ந்தறிதல வேண்டுமாகலின் அதனபின் கூறப்பட்டது.

பரிதி :—அறிவுடைமையாவது கலவியினும கேள்வியினும பெரிது எ-று.

—குறள் அதி. 43.

241. †நளிகடல் தண்சேர்ப்ப! நல்கூர்நத மக்கட்(கு)
அணிகலம் ஆவ(து) அடககம்—பணிவில்சீர்
மாததிரை இனறி நடககுமேல் வாழூர்
கோததிரம் கூறப் படும்.

**தருமர் :**—எனபது. [1]நளிகடல் தண் சேர்பப!—(பெரிய) குளிரநத கடறசோபபை யுடையவனே !; நல் கூரநத மககடகு—மிடிதத மனிதர்களுக்கு; அணிகலம ஆவது—பூணும் பணியாவது; அடககும—அடக்க முடைமை; (ஒருவன்) பணிவு இல்‡சீர—ஒழுபொழுதாயினும அடக்க மிலலாத சீரமை யுடையனாக; [2]மாததிரை இன்றி நடககும ஏல—(வரமபு கடநது) நடபபா னாகில்; வாழும ஊர—தான வாழும் ஊரிலுளளாா தாமே; [3]கோததிரம—தன குடியை, §கூறபபடும— (பழிததுக) கூறப படுவன எனறவாறு.

தான மிடிதத காலததினும அறிவினாலே அடககமுடையாய

---

†இது முதல் ஐந்து செயயுட்களின முறைவைபபு சில பிரதிகளில வேறுபட்டுளளது.

[1] நளி—பெரிய

‡சீர் என்றது ஈண்டு உயர்வினை.

[2] மாததிரை—வரம்பு, அளவு

[3] கோததிரம்—பிறப்பு.

§கூறப்படும்— நயமுறறப் பழிக்கபபடும எனக

ஒழுகுவதல்லது, மிடியினலே இருமைக்கும் உறுதியில்லாத காரியங்களைச் செய்வனுகில், இம்மை மறுமை இரண்டினையும் கெடுக்கப்படுவன். ஆகலால் அத்தன்மையாய ஒழுக்கத்தைத் தன் அறிவினலே அடக்கி நன்னெறியாய் ஒழுக வேண்டும் என்பதாம்.

**பதுமனர்** :—என்றது. பெருங்கடல் தண் சேர்ப்பனே! வறுமையுடைய மக்கட்கு அணிகலமாவது அடக்கமுடைமை. தாழ்வு இல்லாத சீர்மையுடைய அளவினைக் கடந்து ஒழுகுவாராயின், தாம் வாழும் ஊரானே தன்னைப் பிறர்க்குக் குற்றஞ் சொல்லப்படும் என்றவாறு.

[நளி—பெருமை. நல்கூர்தல்—வறுமையடைதல் கோத்திரம்—பிறப்பு.]

**விளக்க உரை** :—ம்-து. நளிகடற் றண் சேர்ப்ப!—குளிர்ந்த கடற் சேர்ப்பை யுடையவனே!, நல்கூர்ந்த மக்கட்கு—மிடித்த மனிதர்க்கு; அணிகலமாவது அடக்கம்—அணியுங் கலமாவது அடக்கமுடைமை; பணியில் சீர்மாத்திரையின்றி நடக்குமேல்—ஒரு பொழுதின் கண்ணும் அடக்கமில்லாத சீர்மையுடைய அளவினைக் கடந்து நடப்பாராகில்; வாழும் ஊர் கோத்திரம் கூறப்படும்—தாம் வாழும் ஊரிலுள்ளோர் தாமே தன் குடியைப் பழிக்கப்படுவன் என்றவாறு.

**கருத்து** :—வறுமையிலும் அடங்கி ஒழுகுவதே ஒருவனுக்கு அறிவுடைமையாகும்.

## ஒப்புமைப் பகுதி:—

"நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும்"

—குறள். 958

"பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு".

—குறள். 963.

"வறிஞர்க் கழகு வறுமையிற செம்மை".

—நறுந்தொகை. 15.

(கு).

242. எந்நிலத்து வித்திடினும் காஞ்சிரங்காழ் தெங்காகா
தென்னாட் டவரும் சுவர்க்கம் புகுதலால்
தன்னாற்றான் ஆகும் மறுமை வடதிசையும்
கொன்னாளர் சாலப் பலர்.

**தருமர் :**—என்பது. எந்நிலத்து வித்து இடினும்—(எந்த) நல்ல நிலததிலே விதைப்பினும்; காஞ்சிரம் காழ் தெஙகு ஆகா—எட்டிவிதை தென்னமரம ஆகாது; [1]தென் நாட்டவரும்—தெறகுததிசையிலே பிறந்தவரும; சுவாககம் புகுதலால்—அறததைச் செய்து சுவாக்க லோகத்தை அடைதலாலே; [2]தன்னால் தான் ஆகும் மறுமை—தன்னுடைய அறிவினாலேயே மறுமைக்கு உறுதிகளைப் (பெறலாகும்); வடதிசையும [3]கொனஆளா சாலப்பலா—வடக்குத் திக்கிலே பிறந்தவரு(ள்ளு)ம [மறுமைக்கு உறுதியான அறததைச் செய்யாது] (வீணிலேயே) காலங்கழிதது நரகததிலே புகுவாா மிகவும் பலா என்றவாறு.

இயமன் இருக்குந திசைக்கு அருகாமையான தென்திசையிலே பிறநதவா, அநத இயம லோகததைப புகவேண்டு மன்றித தூரததிலேயான சுவர்க்கலோகம் புகுவது தன்மையோ? அதுவன்றிச் சுவர்க்க லோகத்துக்கு அருகாமையான வடதிசையிலே பிறந்தவர், கிட்டின உலகம் விட்டுத் தூரத்திலேயான இயம லோகததுக்குப் போவது தன்மையோ? அல்லவே? ஆதலால பிறந்த உலகததைக் கொண்டு காரியமில்லை. எநதத் திசையிலே

---

[1] தென்னாட்டவர்—தென திசையிலுள்ள நரக லோகததவர் வடதிசை—வடதிசையிலுள்ள புண்ணிய பூமி எனறுமாம்

[2] தன் ஆற்றான் என்று பிரிததுத தான் செல்லும் ஒழுக்க நெறியால என்றுங் கொள்ளலாம்.

[3] கொன்னாளர்—வீண்காலங் கழிப்பவர்.

பிறந்தாலும் அறத்தைச் செய்வார்க்கு அன்றிச் சுவர்க்கம் எய்துதல் ஆகாது. அதனால் பல நூல்களையும் ஆராய்ந்து அந் நூலின் மொழிந்தபடி அறத்தின் முயலும்படிக்கு அறிவுடையனாக வேண்டும் என்பது கருத்து.

நற்றிசையிலே பிறந்தாராயினும் அறம் செய்யாதார்க்கு மறுமை இல்லை என்பது தோன்றக் காஞ்சிர விதையை உவமையாக்கிக் கூறினார். "ஆரியா வர்த்தப் புண்ணிய பூமி" என்று வடமொழியாளரும் வடதிசையை வியந்து கூறினார்.

**பதுமனார்:**—என்றது. எல்லா நல்ல நிலத்து வித்து இடினும், காஞ்சிர விதை தெங்காக முளையா; தென்திசைப் பிறந்தாரும் சிலர் நல் அறஞ் செய்து சொர்க்கம் புகுவர். வட திசைப் பிறந்தாரும் தமக்கு நன்மை செய்து பயன் கொள்ளா(து போவா)ரும் பலர் உளர். ஆதலால் தமது அறிவினது நெறியானே ஆம் அத்துணை (மறுமை) என்றவாறு.

[கொள்ளா-பயன் கொள்ளாதவர்; தன்னுற்றான் ஆகும் மறுமை—தன்னறிவினது நெறியாலே ஆகும் அத்துணை மறு பிறப்பு. நில நல்நதிங்குகளானன்று; அறிவின நல்நதிங்கு களாலும் மறுமை என்பதாம்].

**விளக்க உரை:**—எ-து. எந்நிலத்து வித்திடினும்—எந்த நிலத்திலே விதைப்பினும்; காஞ்சிரங்காழ் தெங்காகா—எட்டிவிதை தெங்காகாது; தென்னாட்டவரும் சுவர்க்கம் புகுதலால்—தெற்கின் கண்ணே பிறந்தவரும் அறத்தைச் செய்து சுவர்க்கம் புகுவர் ஆதலால்; தன்னுற்றான் ஆகும் மறுமை—தன்னுடைய அறிவினது நன்மை(யான) ஒருவர்க்கு மறுமைக்கு உறுதியாவதாம்; வடதிசையும் கொன்னாளர் சாலப் பலர்—வடக்கின் கண்ணே பிறந்தும் மறுமைக்குறுதியாகிய பயனைச் செய்யாமல் நரகத்திலே விழுவாரும் மிகவும் பலர் என்றவாறு.

**கருத்து:**—நற்கதி பெறுதற்குத் திசை காரணம் அன்று; அறிவுடைமையே காரணமாகும்.

**ஒப்புமைப் பகுதி :—**

"விரையொன்று போட்டாற சுரையொன்று முளைக்குமா"?
—பழமொழி.
(உ)

243. பகைவர் பணிவிடம் நோக்கித் தகவுடையார்
தாமேயும் நாணித் தலைச்செல்லார்—காணாய்
இளம்பிறை ஆயக்கால் திங்களைச் சேரா(து)
அணங்கருந் துப்பின் அரா.

**தருமர் :—**என்பது. பகைவா பணிவு இடம நோக்கி—பகைவா தளாநத வழியதனை நோககி; தக்வு உடையார்—தகுதியை உடையாா; தாமேயும் நாணி—தாம் செல்வதறகு நாணி; தலைச் செல்லார்—அவரை அழிப்பதறகு ஒருப்பட்டுச் செல்லாா; காணாய்—காண்பாயாக; அணங்கு அரும் துப்பின அரா—வருததஞ செயவதற(கரிய) வலியினையுடைய பாம்பு; இளம் பிறை ஆயக்கால்—திஙகள் இளம்பிறையான காலத்து; திங்களைச் சேராது—அததிஙகளைச் சேராது (அதுபோல) என்ற வாறு.

நல்லறிவினையுடைய அரைசர் முதலானோா தன்மையை வியந்து கூறியதிது.

**பதுமனார் :—**என்றது. முன்பு தமக்கு [1]சாதுவ மொதத பகைவா பின்பு தளாநது வரத் தக்க இடம் நோக்கித் [2]தகையுடையார் தாமேயும் நாணிப் பகைவர் மேற் செல்லார்; பாராய திங்கள் இளம் பிறை ஆய காலத்துச் சென்று [3]அடர்க்கச சேராது; பிறிதொன்றால வருந்துதற்கரிய வலியையுடைய நாகம

[1] எழுத்துப்பிழை நேர்ந்திருக்கக்கூடும. ஆதலின விளங்கவில்லை.

[2] தகையுடையார்—தக்க அறிவுடையார் என்க.

[3] அடர்க்க—நெருக்கி வருதத.

அதுபோல என்றவாறு.

அணங்கருந் துப்பின் அரா—அணங்கு—தெய்வத் தன்மை. துப்பு—[1]சமத்து. இவவிரணடையும் உடைய இராகு என்பாரும் உளர்.

**விளக்க உரை :—** எ-து. பகைவர் பணிவிடம் நோக்கி —பகைவா தளர்நதவிடம் நோக்கி; தகவுடையார் தாமேயும் நாணித தலைச் செல்லா—தகுதியுடையாா தாமே அதறகு நாணி அவரை அழிப்பதாகப் படையெடுத்துச் செல்லார்; இளம் பிறை ஆயககால்—இளம் பிறையான காலதது; திஙகளைச் சேராது அணங்கருந துப்பின் அரா—அநதப் பிறையைச்சேராது வருத்ததைச் செயயும் மிக்க வலியினையுடைய பாம்பு ஆதலால் என்றவாறு. காணுய்—அசை.

**கருத்து :—**பகைவா தளர்ந்தபோது அவரை வெல்ல நினையாது, அவரது நிலைக்கு இரங்குதலே அறிவுடைமையாகும்.

## ஒப்புமைப் பகுதி :—

'பகைவா பணிவிடம . ...செல்லார்':—

"அறுகுளதது உகுத்தும் அகலவயற பொழிநதும்
உறுமிடத் துதவா துவர்நிலம ஊட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழறகாற பேகன்
[2]கொடைமடம் படுத லல்லது
[3]படைமடம் படின்பிறா படைமயக்குறினே".

—புறம். 142.

[1]சமதது—வல்லமை,

கருதது—பகைவர் தளர்ந்த போது அவரை வெல்ல நினைததல் அறிவுடைமையன்று.

[2]கொடை மடம்—அகாரணததாற் கொடை கொடுத்தல்.

(குறு. 17—உரை)

[3]படைமடம் என்றது வீரரல்லாதார் மேலும், முதுகிட்டார் மேலும், மூததார, இளையார்மேலும் செல்லுதல்.

"உடையிட்டார் புன்மேய்வா ரோடுநீர் புக்கார்
படையிட்டார் பற்றேது மின்றி—நடையிட்டார்
இவ்வகை ஐவரையும் என்றும் அணுகாரே
செவ்வகைச் சேவகா சென்று".

—சிறுபஞ்ச. 41.

"சடையினர் உடையினர் சாம்பற் பூச்சினர்
பிடிகைப் பீலிப் பெருநோன் பாளர்
பாடு பாணியர் பல்லியத் தோளினர்
ஆடு கூத்த ராகி யெங்கணும்
ஏந்துவாள் ஒழியத் தாந்துறை போகிய
விச்சைக் கோலத்து வேண்டுவயிற் படாஅக்
கச்சை யானைக் காவலர் நடுங்கக்
கோட்டுமாப் பூட்டி வாட்கோ லாக
வாளேர் உழவன்"

—சிலப். 26 : 225—34.

குறிப்பு :—

பரிமேலழகர், [1]'பேராண்மை என்ப' என்ற குறளில் "ஊராண்மை—உபகாரியாந்தன்மை; அஃதாவது இலங்கையர் வேந்தன் போரிடைத் தன்தானைமுழுதும் படத் தமியனாய் அகப்பட்டானது நிலைமை நோக்கி, அயோத்தியர் இறை மேற் செல்லாது "இன்று போய் நாளை நின் தானையோடு வா" என விட்டாற் போல்வது" என்றுரைத்த பகுதி இங்கே நினைத்தற் குரியது.

(௩)

244. ‡கடல்சார்ந்தும் இன்னீர் பிறக்கும் மலைசார்ந்தும்
உப்பீண்(டு) உவரி பிறத்தலால் தத்தம்

[1] குறள். 773

இனத்தனையர் அல்லர் எறிகடல்தண் சேர்ப்ப!
மனத்தனையர் மக்களென் பார்.

**தருமர்** :—என்பது. எறிகடல் தண் சேர்ப்ப!—கரையை எறியும் திரைகளையுடைய கடற் சேர்ப்பை உடையவனே!; கடல் சார்ந்தும்—உவர் நீரையுடைய கடல் அடுத்த நிலத்திலேயும்; இன்னீர் பிறக்கும்—இனிய நீர் உண்டாம்; மலை சார்ந்தும்—மலையை அடுத்த நன்னிலத்திலேயும்; உப்பு ஈண்டு உவரி பிறத்தலால்—உப்பு மிகுந்த உவர் நீர் தோன்றும் [ஆதலால்], மக்கள் என்பார்—அறிவுடைய மனிதர் எனப்பட்டவர்; தம் தம் இனத்து அனையர் அல்லர்—தாம் தாம் இணங்கிய இனத்தின் அளவாகார்; மனத்து அனையர்—தம் மனத்தறிவு எப்பொழுதும் குன்றுதல் இலர் என்றவாறு.

இது [1]"மனத்தால் மறுவிலரேனும்" என்ற [2]தொடர்புக்கு மாறுபாடாகதோ எனில், மாறுபாடு ஆகமநூலிற்கன்றி, அறம் பொருள் இன்பம் சொல்லி வீடுபேற்றை அறிவிக்கும் பொருட்டுக் கூறிய, நாலடி, திருவள்ளுவப் பயன் முதலான உலக நூலுக்கு மாறுபாடாகாது. அதிகாரத்துக்கு இயன்றபடி கூறியதாயிற்று.

**பதுமனார்** :—என்றது. கடல் சார்ந்த இடத்தும் இனிய நீர் தோன்றும்; மலைசார்ந்த இடத்தும் உப்புமிக்க உவர்நீர் பிறக்கும்; ஆதலால் மக்களாவார் தந்தம் இனத்தின் தன்மையர் அல்லர்: [3]மனத்தின் தன்மையர் ஆவர் எறிகடல் தண் சேர்ப்பனே! என்றவாறு.

எறிகடல் என்றது கரையைப் [4]பொருதலால்.

---

[1] நாலடி. 180.

[2] தொடர்பு—செய்யுள்.

[3] மனம் என்றது ஈண்டு அதிகாரத்துக்கு ஏற்ப அறிவைக் குறிக்கிறது.

[4] பொருதலால்—மோதுதலால்.

**விளக்க உரை :**—எ-து. கடல் சார்ந்தும் இன்னீர் பிறக்கும் கடலைச் சார்ந்த இடத்தும் இனிய நீருண்டாம்; மலை சார்ந்தும் உப்பு ஈண்டு உவரி பிறத்தலால்—மலையைச் சார்விடத்தும் உப்பு மிக்க உவர(நீர) தோன்றும் [ஆதலால]; தத்தம் இனத்தனையர் அல்லர்—தாந்தாம இணங்கிய இணக்கத்தின் அளவாகார்; எறிகடல் தண் சேரப்ப!—கரைகளை எறியுந திரைகளையுடைய குளிர்ந்த கடற சேர்ப்பனே!; மனத்தனையர் மக்கள் என்பார்—அறிவுடைய மனிதர் தமதறிவு எப்பொழுதுங குன்றுதலிலர் எனறவாறு.

இது 'மனத்தால் மறுவில ரேனும்' என்ற பாட்டுக்கு மலைவாகாதோ என்னில், மலைவாகாது. ஆகமநூலுக்காயிருக்கும் இது. உலகநூலான நாலடி, திருவள்ளுவப்பயன் முதலான நூலகள அறமபொருள இன்பம மூனறினையுந திருந்தச் சொல்லி வீடுபேறறை அறிவிப்பிகக வேணடுகையால், உலகத்துக்கு இயறகையான ஏதுக்களும் குணஙகளும் அறிவும அறியாமையும் ஆதலில் குறறஙகளையும் குணங்களையும் ஒரே அதிகாரமாக விட்டு விரித்துரைத்து நல்வழிப்படுத்த வேண்டுதலில அது நல்லினஞ் சேரதலுக்குத் தக்கதாகச் சொல்லித் தீயினத்தைச் சேரதலால் வரும் துன்பத்தை அறிவித்து இபபொழுது அறிவுடைமைக்குத தகச் சொன்னார் என்பதாம்

**கருத்து :**—தம் இயறகையறிவு சேர்க்கையால் மாறுபடாதவரே மக்கள் என்று சிறப்பிக்கப்படுவர.

## ஒப்புமைப் பகுதி :—

"வேம்பின் இலையுள் கனியினும வாழைதன்
தீஞ்சுவை யாதும் திரியாதாம்—ஆங்கே
இனநதீது எனினும இயல்புடையார கேண்மை
மனநதீதாம் பக்கம் அரிது".

—நாலடி. 245.

"மிக்குப் பெருகி மிகுபுனல பாய்ந்தாலும்
உப்பொழிதல் செல்லா ஒலிகடல்போல்—மிகக

"நிலத்தியல்பான் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்(கு)
இனத்தியல்ப தாகும் அறிவு".

—குறள். 452

"இனத்தியல் பாம்அறி வென்ப துண்மையே
மனத்துயர் செயும்மயல் மாற்று நீறுதான்
அனிச்சமெல் அடியினா நுதல்அ டுத்தலும்
பனித்துடல் வெதும்புமால் படுத்த லால்என்பார".

—பிரபு. மாயைபூசை. 34.

"பையலோடு அணங்கேல்"

—ஆத்தி. 85.

"பன்றியோடு கூடினால் கன்றும் மலம் தின்னும்"

—பழமொழி.

"சேராரோடு சேராதே சேம்பு புளியிட்டுக் கடையாதே".

—பழமொழி.

இனநலம் நன்குடைய வாயினும்
மனநலம் ஆகாவாம் கீழ்".

—பழ 11.

"மனத்தானும் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானும்
இன்னான் எனப்படும் சொல்".

—குறள். 453.

"தக்கார் வழிகெடா தாகும் தகாதவர்
உக்க வழியராய் ஒல்குவார—தக்க
இனத்தினன் ஆகும் பழியும் புகழும்
மனத்தினன் ஆகும் மதி".

—சிறுபஞ்ச. 81.

இச்செய்யுளிறகு மாறுபடுவன :—
"மனத்தான் மறுவில ரேனும்தாம் சேர்ந்த
இனத்தான் இகழப் படுவர்—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனம் தீப்பட்டக் கால்".

—நாலடி. 180.

"முயலவோ வேண்டா முனிவரை யானும்
இயல்பினானர் என்பது இனததால் அறிக
கயலியலுண் கண்ணாய! கரியரோ வேண்டா
அயலறியா அட்டூணோ இல்".

—பழ. 237.

'கடல்சார்ந்தும் ..........பிறத்தலால்' :—

"திரைபொரு முந்நீரக் கரைநணிச் செலினும
அறியுநாக் காணின் வேட்கை நீக்குந
சின்னீர் வினவுவா மாந்தர் அதுபோல்".

—புறம். 154 : 1—3.

"—கடல்பெரிது
மண்ணீரும் ஆகாது அதனருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும".

—மூதுரை. 12.

(ச)

245. வேம்பின் இலையுள் கனியினும் வாழைதன
தீஞ்சுவை யாதும் திரியாதாம்—ஆங்கே

---

திருத்தம் :—

96-ஆம் பக்கத்தில சேர்க்கப்பட்டுள்ள 'நிலத்தியல்பான்' என்று தொடங்கும் குறளிலிருந்து 'புளியிட்டுக கடையாதே' என்று முடியும பழமொழி வரையுள்ள செய்யுட்களை 'இச் செய்யுளிறகு மாறுபடுவன' என்ற இப்பகுதியுடன் சோத்துக் கொளக.

95-ஆம பக்கத்தில உள்ள 'மிகுப பெருகி' என்ற பழமொழியின் ஈற்றடிகள 'புளியிடடுக் கடையாதே, என்பதன கீழ உள்ளது.

இவ்விரண்டையும் ஒன்றாகச் சேர்த்து வாசித்துக் கொளக.

---

இனந்தீ(து) எனினும் இயல்புடையார் கேண்மை
மனநதீதாம் பக்கம் அரிது.

**தருமர் :**—என்பது. வேம்பின் இலையுள கனியினும—திரண்ட வேம்பின் நடுவே நின்று பழுத்ததாயினும்; வாழை—வாழையானது; தன் தீம சுவை யாதும திரியாது ஆம—தனனுடைய இனிய சுவை சறறும் வேறுபடாது; ஆங்கே—அதுபோலவே; இனம் தீது எனினும்—தாம் சோந்த இனம தீதாயினும; இயலபு உடையாா கேண்மை—பண்புடையாா கேணமை; மனம தீது ஆம பககம் அரிது—மனம தீதாகும திறம இலலை என்றவாறு.

அறிவாகிய மனததிடம உடையவா தீய குணம உடையா ருடன் கூடி யிருநதாலும் தம் அறிவு குன்றுதல இலா என்பதாம.

**பதுமனுர் :**—என்றது. வேமபினது இலையின்கண் கனிநததாயினும வாழைககனி தன தீஞசுவை யாதும் வேறு படாது; அதுபோலத தமமைச் சோநத இனம் தீதாயினும அறிவுடையாா மனம தீதாம திறம அரிது எனறவாறு.

இன்சுவை—இனிய சுவையும, அழகிய சுவையுமாம. பக்கம்—திறம்.

**விளக்க உரை :**—எ-து. வேம்பின் இலையுள் கனியினும வாழை—வேம்பின இலையிலே வாழை பழுப்பினும; தன் தீஞ்சுவை யாதும திரியாதாம—தன்னுடைய இனிய சுவை சறறும வேறுபடாது; ஆஙகே—அதுபோல; இனநதீது எனினும—இணககந தீதாயினும்; இயல்புடையாா கேண்மை—பணபுடையாா கெழுமுதல, மனநதீதாம பககம அரிது—மனந தீதாகும திறமிலலை எனறவாறு.

கருத்து :—திடமான அறிவுடையார் தீயோர் சேர்க்கையால தம் குணங்கெடார்.

(ரு).

246. பரூஅரைப் புன்னை படுகடல்தண் சேர்ப்ப!
ஓரூஉலும் ஒட்டலும செய்பவோ? நல்ல
‡மருஉசசெய்(து) யார்மாட்டும தங்கும் மனத்தார்
விராஅஅய்ச செய்யாமை நனறு.

**தருமர் :**—என்பது. பரூ அரைப் புன்னை—பெரிய அரையினையுடைய புன்னை (மரங்)களால்; படுகடல் தண் சேர்ப்ப!—பொலிவு பெறற குளிரந்த கடறசேர்பபை புடையவனே!; யாா மாட்டும நலல மருஉ செயது தங்கும் மனததார—யாவரிடததும் மருவிய நலல அன்பினைக (கொளளுமு மனததை) யுடையவா, ஓரூஉம ஒட்டலும்—ஒருவருடன் நட்புக்கொண்டு அவரை விட்டு நீங்குதலும கூடுதலும; செயபவோ?-செயயக்கடவரோ? (செயயார; இதனினும); [1]விராய செய்யாமை—ஒருவருடனும கலந்து நட்புச் செய்யாமை; நன்று—; எனறவாறு.

ஒருவருடன நடபுசசெயது பிரியுமபோது அறிவுடையாரக்கு மிகக வருததமம எயதுமம. அதனுலே ஒருவருடனும் நட்புச் செய்ய லாகாது எனறு அவா அறிவுடைமையை வியநது கூறியது. யாவரிடததுமம மருவிய நலல அன்பு உண்டாவது அறிவுடைமை யால் வநததாமம.

**பதுமனூர் :**—எனறது. பரிய அரையினையுடைய புன்னைப படுகடல் தண்சேர்பபனே! மிக்க இனிய செய்கையுடையார் மாட்டுக கொண்ட நட்பினை ஒருகால நீங்குதலும் ஒருகாற

---

‡'மருஉச செயதி யாா மாட்டும்' என்றும் பாடம்; இது பொழிப்புரை காரா மேற்கொண்டது.

[1] ஒனறு கூடியிருக்க வேணடும்; அல்லது பிரிநதே யிருக்கவேணடும. கூடிப்பிரிதல் கூடாது எனபதாம்.

புணாதலும் செய்வார் உளரோ? நிலைபெறறு ஒரு பெற்றியே நின்ற மனத்தார், புணர்தலையும் நீங்குதலையும் மனங்[1] கலந்து செய்யாமை நன்று ஆதலால் என்றவாறு.

**பராவரைப் புன்னை என்று பாடம் ஓதி,** முத்து நிறததாலும, பொன்னிறத்தாலும மிகக அரையையுடைய புன்னை என்று **உரைப்பாரும் உளர்.** படு கடல்—பெருங்கடல்.

**ஓராலும் ஒட்டலும் செய்பவே என்று பாடம் ஓதி,** ஒரு பெற்றியின் நில்லாது பிரிதலும் புணாதலும் செயவா. ஆதலால் மிகக இனிய செய்தியை யுடையாா மாட்டுந் தம் மனங் காஙகும்படி கலத்தலைச் செயயாமை நன்று என்றுமாம். எனவே அறிவுடையாரைப் பிரிதல் துன்பம என்றவாறு.

**விளக்க உரை:**—எ-து. பராஅரைப் புன்னைப படுகடல தண்சோப்ப!—பருத்த அரையை யுடைய புன்னை மரத்தாற் சிறப்புப பெற்ற மிகக குளிாநத கடறசோப்பையுடையவனே!; ஓராஅலும ஒட்டலும செயபவோ?—ஒருகால் விட்டு நீஙகுதலும் ஒருகால் கூடுதலும செயயக்கடவரோ?; நல்ல மருஉச் செயதியாா மாட்டும்—நல்ல மருவிய செயகை யுடையாா மாட்டும்; தஙகும மனததாா—தங்கபபட்ட மனததினையுடையவா; விராயச செயயாமை நன்று—(அதனினும) ஒருவருடனே விரவி நட்புச செயயாமை நனறு எனறவாறு.

**கருத்து:**—அறிவுடையாா ஒருவருடன கூடிபபிரிதலையும், மீணடு கூடுதலையுஞ செய்யாா.

## ஒப்புமைப் பகுதி :—

"தெரியத தெரியும் தெரிவிலார் கண்ணும்
பிரியப் பெரும்படாஙோப செய்யும்—பெரிய

உலவா இருங்கழிச் சேர்ப்ப! யார் மாட்டும்
கலவாமை கோடி யுறும்".

—நாலடி. 168.

"விலங்கேயும் தம்மோடு உடனுறைதல் மேவும்
கலந்தாரைக கைவிடுதல ஒலலா—இலஙகருவி
தாஅய இழியு மலைநாட! இனறுதே
பேஎயோ டானும் பிரிவு".

—நாலடி 122.

'ஓரால்' :—
"வேநதா தாரழிந தொராலின"

—பதிற்றுப். 23 17.

## குறிப்பு.—

'நல்ல மரூஉச் செய்தியார் மாட்டும் ஓராலும் ஒட்டலும செய்பவோ? தஙகும் மனததார் விராய்ச செய்யாமை நன்று' எனப் பதப்பிரிவு செய்து பதுமனார் உரைவகுததுள்ளார்.

(சு).

247. உணர உணரும் உணர்வுடை யாரைப்
புணரப் புணருமாம் இன்பம்—புணரின
தெரியத் தெரியும் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமாம் நோய்.

**தருமர் :**—என்பது. உணர உணரும உணாவு உடையாரை—ஒருவா உணர்த்த அறியும் அறிவுடையவரை; புணர இன்பம் புணரும்—நட்புச செய்ய இன்பம் பொருந்தும்; புணரின்—நட்புச் செயதால பினை, தெரிய தெரியும் தெரிவு இலாதாரை—விசாரிதது அறியப்பட்ட அறிவில்லாதாரை, பிரிய—விட்டு நீஙகவே; நோய் பிரியும்—(அவரால் வரும்) துன்பம நீங்கும் என்றவாறு. [ஆம் இரண்டும் அசை]

நட்புச் செயவதும் அறிவில்லாரிடதது ஆகாது எனபதனால,

நன்னூல் நெறிகளை ஆராய்ந்து அதனெறி ஒழுகும் அறிவுடையன் ஆதல் வேண்டும் என வற்புறுத்தியது.

**பதுமனார்:**—என்றது. பிறர் அறியும்படி அறியும் அறிவினையுடையாரைப் பொருந்தப் பொருந்துமாம் இன்பம், பிறரறிய அறியும் அறிவில்லாதாரைப் பிரியக்கூடின் துன்பமும் பிரியுமாம் என்றவாறு.

உணர உணரும் உணர்வுடையார்—ஒருவர் மனத்தில் நினைத்த காரியத்தை அவர் சொல்லுமுன் காட்டில் அறிந்து சொல்லுவார். தெரியத் தெரியும் தெரிவிலாதார்—ஒருவர் நினைக்கும் காரியத்தை அறியமாட்டாதார்.

**விளக்க உரை:**—என்பது. உணர உணரும் உணர்வுடையாரை—ஒருவர் அறிவிக்க அறியும் அறிவுடையாரை, புணரப் புணருமாம் இன்பம்—அவருடன் நட்புச் செய்யவே இன்பங்களும் பொருந்தும்; புணரின் தெரியத் தெரியும் தெரிவிலாதாரை—நட்புச் செய்த பின்பு விளங்க ஆராயும் ஆராய்ச்சி இல்லாதாரை; பிரியப் பிரியுமாம் நோய்—அவரைவிட்டு நீங்கவே அதனால் வரும் துன்பங்களும் நீங்கும் என்றவாறு.

**கருத்து:**—அறிவுடையாரைக் கூடுதலும் அறிவிலாதாரைப் பிரிதலும் அறிவுடைமையாகும்.

## ஒப்புமைப் பகுதி:-

"நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல்".

—குறள் 460

"நிந்தையிலாத் தூயவரும் நிந்தையரைச் சேர்ந்தவர்
நிந்தையது தம்மிடத்தே நிற்குமே—நிந்தைமிகு
தாலநிழற் கீழிருந்தான் தன்பால் அருந்திடினும்
பாலென்னச் சொல்லுவரோ பார்"

—நீதிவெண்பா. 79.

"சீலமுற் றுயர்ந்தவர்ச் சேரின் வீடுறும்
மாலையுற் றறிவிலார் மருங்கு அடைந்திடின்
வேலையுற் றலைதரும் மென்ன வெம்பவக்
கோலமுற் றிறந்திறந் துழலல் கூடுமால்".

—பாக.

"தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார்சொல் கேட்பதுவும் தீதே—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோடு
இணங்கி இருப்பதுவும் தீது".

—வாக்கு 9.

## குறிப்பு :-

இந் நாலடிச் செய்யுள் கூடிப்பிரிதல் கூடாது என முன்னறிவந்த செய்யுட்களுடன் மாறுபடுவதே யெனினும் பலசமண முனிவர் தனித்தனி கூறியதாகலின் மாறுபடாதென்க. "குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள், யாது கொடுத்துங் கொளல்" என்பது வள்ளுவர் வாய்மொழி ஆதலின் "உணர உணரும் உணர் வுடையாரைப் புணரப் புணருமாம் இன்பம்" என்றார்.

(எ).

248. நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்—நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்.

**தருமர் :**—என்பது. நல் நிலைக் கண் தன்னை நிறுப்பானும்—நல்ல நிலைமையிலே தன்னை நிறுத்திக் கொள்ளுமவனும்; தன்னை நிலை கலக்கி கீழ் இடுவானும்—தன்னை அந்த நிலைமையிலே நின்றும் கலைத்துக் கீழ்மையாக்கிக் கொள்ளுமவனும், நிலையினும்

—முன் நின்ற நிலைமையினும்; மேல்மேல் [1]உயர்த்து நிறுப்பானும்—மேன்மேலும் உயர்வு பண்ணிக் கொள்ளுமவனும், தன்னை தலையாக செய்வானும்—தன்னைத் தலைமையுடையனாகச் செய்துகொள்ளுமவனும; தான்—தானே(யாவன்) என்றவாறு.

அறிவில்லாத காலத்தில், தாம் நல்ல நிலையிலே நிற்பினும அதனைக் கீழ்மையாக்கிக் கொள்ளுந் தொழிலைச் செய்து கீழாவர். அறிவுற்றபோது அவ்வறிவினாலே நன்னெறியின் ஒழுகி யாவர்க்கும் முதன்மையாவர். ஆதலால் யாவரும அறிவுடையராக வேண்டும் என்பதாம்.

**பதுமனார் :**—என்றது. நல்ல நிலையின்கண் தன்னை நிறுத்துவானும தன்னை, அந்நிலைமையைக் கலக்கிக் கீழ்மையின்கண் இடுவானும, அந்நிலையினும மேலாக மேலாக உயர்வித்து நிறுத்துவானும், தன்னைத் தலையாகச் செய்வானும் தான் என்றவாறு.

**†நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும்—** உயர்குலமும், செல்வமும, வலியும, முதலான பெருமையுடையனாகப் பெற்றும் தீயவை செய்தாரை உலகம் கைக்கொள்ளாதவாறு கண்டு அஞ்சியும், நல்லவை செய்தாரைச் சான்றோர் பலரும உட்கொள்ளுதலும் கண்டு, அதற்கு ஏற்ற நிலைகளைக் கருதி நன்றான ஒழுக்கமும கல்வியும நற்குணங்களும நன்முயற்சியும [2]ஒப்புரவும நிலையும் சத்தியமும தன்மமும உடையவனாய், மனோவாக்குக் காயங்களால் பிராணிகளுக்கு இதமானவை செய்து, சான்றோர் நின்ற நிலையிடத்துத் தன்னை நிறுத்துவானும;

**தன்னை நிலைகலக்கிக் கீழ் இடுவானும்**—நால்வகை வருணத்துட்பட்ட பிறந்து கல்வியும, வலியும, திருவும முதலான பெருமை

[1]உயர்த்துவானும் என்னாது உயர்த்து நிறுப்பானும் என்றது உயர் நிலையை ஆக்கிக் கொள்வதுடன், அந்நிலையில் நிலைநிறுத்துதலும் வேண்டும என்பதற்கு.

†இவ்விரிவுரை உணர்ந்து இன்புறுவதற்கு உரியது

[2]ஒப்புரவு—உபகாரம்.

களை முன்னைத தவவினையாலே பெறறு வைத்து, அதற்குத் தகக நிலை நிலலாது அநநிலையைக் கலக்கிப் பயனறற சுருக்கமான பொல்லாத ஒழுக்கமும, நலலோா விருமபாத கல்வியும், ஆசையும, கோபமும் உடையனுய்க கொலைத தொழிலாலும பொயயாலும களவாலும் பொருள செய்து, கொலையும் அவவூன தினகையுமே அறம எனறும, களளுணடு மயஙகுதலே முததி எனறும இப்படி மாறுபட்ட அறிவினனுய் எலலாராலும இகழபபட்டு, மறுமைகள தோறும இழியப பிறநது வறுமையாலும பிணிகளாலும துனப முறறு நாகஙகளாலே விழுமபடி தனனைக கீழவிடுவானும;

**நிலையினும் மேனமேல் உயாத்து நிறுப்பானும**—அநநிலையிடத்தே நின்று மிகவும உயாநத மனததையுடையனுகி அறம, பொருள, இன்பம, வீடு எனறவற்றின் தகுதிகளை ஆராய்நது தததமக கமைததபடியே பலவாகிய கேளவி, கலவி, வீரம, சூழச்சி, பொருள், முயறசி, புகழ, கொடை எனபன யாதோரளவு செலுததும அளவிறகு எறற பெற்றி செலுததும வரிசைகளும பெருமைகளும் ஒனறுகொனறு உயரப பெறுமதன்றி, இலலறப விட்டு வனமடைவாரும, இலலொழுககப பொலலாஙகு கண்டு துறவறததை யடைவாருமாகத துறநதிருநது, சததிய [1]சௌச சாநதி காம வெகுளி மயக்கஙகளைப் போக்குதலாகச சொலலப பட்ட போசனநியதி, செபம, ஓம மாதிகளான பாவனைகளை நனறுன விரதஙகளுடனே கூடின தவங்களைப பணணிப பெரிய நூலகளை ஓதியும ஓதுவிததும, [2]தேசுடையராயத [3]திரிகால ஞானம உடையாரும [4]பரசிததம அறிவாரும், [5]சாபானுககிரகம உடையாருமாய மகததான நாமஙகளும பெருமைகளும உடையாராயத காம குறிகத படிகளை அறிவாரும, செயத நனமைககு ஈடாகச சுவாககஙகள தோறும ஒனறுக்கு ஒனறு உயாநத பதஙகளிலே

[1]சௌசம—துப்புரவு.

[2]தேசு—ஒளி, பெருமை

[3]திரிகால ஞானம—சென்றகால, நிகழகால, வருஙகால நிகழ்சசிகளை அறியும அறிவு.

[4]பரசிததம்—பிறாது எணணம்.

[5]சாபானுக்கிரகம—அழிததலும், ஆக்கலும.

தங்களை மேன்மேல் உயர்த்தி நிறுத்துவாரும்;

**தன்னைத் தலையாகச் செய்வானும் தான்**—முன் சொன்ன நன்றான நிலைகள் இரண்டிலும் நின்று செய்த தன்மங்களாலும் தவத்திறத்தாலும் பிறந்த [1]வாசனையால், எல்லாப்பிராணிகள் மேலும் அன்பு செய்தும் அவை துன்பமுறக் காணில் அவற்றினுக்குத் தாமும் துன்பமுற்றும், இன்புறக் காணில் இன்பமுற்றும் வாழ்ந்தினார் வைத்தார் என்றும் [2]வாசியற்றும் சாந்தனாய்ப் போந்த பெருந்தன்மைகளாலும், [3]முற்பந்த ஞானம் பிறந்து பிறப்புத் துக்கம் என்னும் உணர்ச்சி தோன்றி இதற்கு முன்பு வருந்தித் தேடின பொருள்களால் செய்த தன்மங்களாலும், உடம்பை ஒறுத்து நின்று செய்த தவத்தினாலும் சுவர்க்கத்தோடும் பூமியோடும் சுகதுக்கம் அனுபவித்துத் திரிந்தது இத்தனை இந்தப் பிறப்பறுவது இந்தப் பிறப்பு வந்தவழி யறிந்து போக்கவிடின் போம் இதனை என்று பார்க்கத் தன் மனத்திலே முற்படவே எழுந்த ஆசை காரணமாக எழுந்திருந்து காயத்தால் செய்யப்பட்ட நல்தீங்குகள் புண்ணிய பாவங்களாய்ப் பிறப்புக்கு ஏது என்று சாத்திரங்கள் சொன்னபடியே கருப்பக் குடரிலே சுருண்டு கிருமி மல மூத்திரங்களாலே நெருக்குண்டு நெடுநாட் கிடந்து விதனப்பட்டு விழுந்து பசி பிணி மூப்பு மரணங்களை அனுபவித்து வருகிற இதற்கு பதியும் ஆதாரமுமாகக் கண்டது நாலுண்ணப்பட்ட உணவாய் இவ்வுணவு தாம் மேலெழுப் பக்குவப்பட்டு மலமாகிக் கழியப் பிறப்பட்டது தோலும் நரம்பும் உதிரமும் தசையும் எலும்புமாய்ப் பகுக்கப் படுகிற(வி)து விட்ட வாயில்கள் தோறும் பொசிந்து பொசிந்து நின்ற மலங்கள் புறப்பட்டுத் துர்க்கந்தித்துப் பொழியும் இதுகண்டு அருவருத்து இதன் ஆசையற்று இதற்குத் கொட்டாச்சிக்கு இசைந்த பொருளும் சுற்றமும் இதனோடொக்க அனித்தமாயும்

[1] வாசனை—பழக்கம்.

[2] வாசி—வேறுபாடு.

[3] முற்பந்த ஞானம்—முற்பிறவி பற்றிய அறிவு.

தன்னைத் தலையாகச் செய்வானும் தான்—என்பதற்குரிய விரிவுரையில் சில இடங்களில் பிழைகள் நேர்ந்துள்ளன. ஆதலின் இவ்வடியின் கருத்து ஆராய்வதற்கு உரியது.

இதில் வைத்த பற்றும் பிறப்பாய் முடியும் என்று கண்டு இவை யிற்றைப் பசையறவிட்டுப் பின்பு பற்றறுகையே முத்தி என்றார்கள்; பற்றினன் ஒருவனும் பற்றுவிடுவான் ஒருவனும் உளனாயின் பற்றற்ற பொழுதே முத்தியானபடி எனவும், முத்திதான் எப்பெற்றிப் பட்டது? பற்றற்று முத்தி பெறுமவன் எப்பெற்றிப் பட்டவன்? என்று விசாரித்து இவ்வுண்மையை அறிந்தவன் முத்திபெறும் என்றும் நூல்களிற் சொன்னபடிகளிலே பார்க்க இருளற்றுத் தெளிந்த மனத்தைப் பின்பு வேறு வேறு சலியாதபடி உபாயங்களாலே ஒருவழிப் படுத்தித் **நோன்றாற்றோருக்குச்** சொல்லப்பட்ட **சமயங்களினுள்ளும்** நல்லோ ரொருவன் கண்டபடி ஒருவன் காணாது ஒருவனையன்றி ஒருவனுக்கு அறியாமையாகிய வெவ்வேறுபடச் சொல்லும் பொருண்மை தன்னையே கொண்டு தான் பொதுப்பட நின்று தனித்தனியே நிரூபித்து இவை எல்லா இலக்கணமும் சொல்ல உண்மையாய் இருப்பது யாது அதனை அப்படியே உணர்ந்து மரண பயமறக் கண்டு ஐயந் தீர்ந்தும் பின்புங் கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறியும் புலன்களுடனே இம் மனத்தைப் பார்த்து இது ஒரு பொருளைப் பற்றி எழுதலின்றித் தானே தனித்து எழ மாட்டாது முன்னே பற்றற்ற பொருள்கள் மேல் இனிச் செல்லாதாயினும் முன்னுற்ற பொருள்கள் மேலே தாக்கி எழுதல் இதற்கு இயல்பு ஆகலின் இது முன்னிலை தாக்கி விகற்பியாதபடியும் அசையாதபடியும் நிறுத்துதல், இது [1]முகிழ்த்து எழுகிற விடத்தே முகிழாதபடி அமைக்கில் ஐயம் பிறப்பித்தல், [2]அட்டாங்க யோகத்தாலே அபரமேலையும் பிறப்பித்தல் செய்து அவ்வனுபவத்தினாலே உணர்ந்து உணர்ந்து அப்படியே போய முத்தியைத் தரிசித்து தரிசித்தபடியே [3]நித்தியத்துவம் அடைந்து இந்தச் சரீரத்துடனே மனிதரில் [4]சேட்டராலும் தேவர்களிற் பெரியாராலும் இவன் தலைவன்

[1] முகிழ்த்து—தோன்றி

[2] அட்டாங்க யோகம்—எட்டுத் தவநிலை அவையாவன:—இயமம், நியமம், ஆதனம், தியானம், பிரத்தியாகாரம், பிராணாயாமம், தாரணை, சமாதி என்பன

[3] நித்தியத்துவம்—அழியாத நிலை

[4] சேட்டர்—அறிவில் மூத்தோர்.

என்று சொல்லும்படி தன்னைத் தலையாகச் செய்வானும் தான் என்றவாறு.

†"ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து".

**விளக்க உரை :**—எ-து. நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும்—நல்ல நிலையிலே தன்னை நிறுத்திக் கொள்வானும்; தன்னை நிலைகலக்கிக் கீழ் இடுவானும்—தன்னை அந்த நிலையினின்று கலக்கிக் கீழாக்கிக் கொள்ளுமவனும், நிலையினும் மேன்மேல் உயர்த்து நிறுப்பானும்—முன்பு நின்ற நிலையினும் தன்னை மேன்மேலும் உயர்ச்சி பண்ணிக் கொள்ளுமவனும்; தன்னைத் தலையாகச் செய்வானும் தான்—தன்னைத் தலைமையுண்டாம்படி செய்துகொள்ளுமவனுந்தான் என்றவாறு.

**கருத்து :**—ஒருவனது உயர்வு தாழ்வுகட்கு அவனது அறிவு நிலையே காரணமாகும்.

## மேற்கோள் பகுதி :-

சங்கர :—"தன்னைத்தானே வேற்றுமை செய்தல், 'நன்னிலைக்கட் . .. . தான்' என்பதனுள் முணர்க" என்பர்.

—சின. சூ. 295.

## ஒப்புமைப் பகுதி :—

"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்குந் தத்தம்
கருமமே கட்டளைக் கல்".

—குறள் 505

†பரிமே :—ஐயத்தினின்று நீங்கி மெய்யுணர்ந்தார்க்கு, எய்தி நின்ற நிலவுலகத்தினும் எய்தக் கடவதாய வீட்டுலகம் அணித்தாதல் உடைத்து.

மணக் ;—மெய்ப்பொருளை ஐயப்படுதலினின்று நீங்கித் துணிந்தவர்க்கு, இவ்வுலகத்திலும் மேலுலகம் அணித்தாம் தன்மை உடைத்து என்றவாறு.

—குறள். 353. (மெய்யுணர்தல்).

"தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்
தானேதான் செய்த வினைப்பயன துய்த்தலால்
தானே தனக்குக் கரி".

—அறநெறி. 151.

—"தன்னை
இறைவனைச் செய்வானும் தானேதான நன்னைச்
சிறுவனைச் செய்வானும தான்".

—அறநெறி 77.

"ஒருமை மகளிரே போலப் பெருமையும
தன்னைத்தான கொணடொழுகின உண்டு".

—குறள் 974.

"பீடுபெற நில்".

—ஆதநிசூடி 80.

"தருமம் பறறிய தக்க வர்க்கெலாம
கருமம கட்டளை எனறல் கட்டதோ"

—கம்ப. அரசியற். 16.

"பெருமை சிறுமை அளந்துகொளப் பேணும கருவி தத்தமது
கருமம் அதுபோல் பிறகருவி கழியச் சிறந்த வலஅறிக".

—விநா. அரசி. 78.

"பெருமையும சிறுமையும் தான்தர வருமே".

—பழமொழி.

"தததம கருமமே கட்டளைக் கல".

—பழமொழி.

(அ).

249. கரும வரிசையால் கல்லாதார் பினனும்
பெருமை யுடையாருஞ் சேறல்—அருமரபின
ஓதம் அரற்றும் ஒலிகடல்தண் சேர்ப்ப!
பேதைமை அன்ற தறிவு.

**தருமர் :**—என்பது. அரு மரபின் ஓதம் அரற்றும்—மிக்க சிறப்பினையுடைய திரைகள் ஆரவாரிக்கும்; ஒலிகடல் தண் சேர்ப்ப!—ஒலியை உடைய குளிர்ந்த கடற்சேர்ப்பனே!; [1] கருமம் வரிசையால்—தமக்கொரு கருமம் செய்து கொள்ளுகை காரணமாக; பெருமை உடையாரும் கல்லாதார் பின்னும் சேறல்—பெருமை உடையாரும் அறிவில்லாதாரைப் பின் செல்வது; பேதைமை அன்று—அறிவின்மை யன்று; அது அறிவு—(அது) அறிவுதானே என்றவாறு.

அருமரபு என்றதை பெறுதற்கரிய குடிமையை உடைய பெரியோர் எனலுமாம். கல்லாதாரைப் பின் செல்வது பெரியோர்க்கு இயற்கை யறிவல்லவே; கருமத்தின் பொருட்டு அல்லாது அறிவில்லாரைப் (பெரி)யோர் நட்புச் செய்யார் என்பது, கல்லாதார் பின்னும் என்னும் உம்மையாற் கொள்க.

**பதுமனார் :**—என்றது. தம்முடைய கருமத்தைச் செய்து முடிக்கும் முறைமையால் அறிவில்லாதார் பின்னேயும் பெரிய அறிவினையுடையாரும் செல்லுதல், அரிய மரபினையுடைய ஓதம் அரற்றும் ஒலி கடல் தண் சேர்ப்பனே! அறிவிலாமை அன்று; அஃதறிவு என்றவாறு.

(வரிசை—முறைமை); அருமரபு-இலக்குமி பிறத்தலானும், மாயன் உறங்குதலானும், மரக்கலம் ஓடுதலானுமாம். ஒலி கடல்—கரையை மோதுங் (கடல்).

**விளக்க உரை :**—எ-து. கரும வரிசையால்—தமக் கொரு கருமம் செய்து கொள்ளுகை காரணமாக; கல்லாதார் பின்னும் பெருமையுடையாருஞ் சேறல்—அறிவில்லாதார் பின்பேயும் பெருமைக்குணமுடையாருஞ் செல்லுகின்றது, அருமரபின் ஓதம் அரற்றும் ஒலிகடல் தண் சேர்ப்ப!—பெறுதற் கரிய மரபினையுடைய திரைகள் ஆரவாரிக்கும் ஆரவாரத்தினை

[1] கருமவரிசையால்—ஊழ்வினை வகையால் என்றுமாம்.

யுடைய குளிர்ந்த கடற்சேர்ப்பை யுடையவனே!; பேதைமை யன்று அது அறிவு—அஃது அறியாமை யன்று; அறிவுடைமை எனறவாறு.

**கருத்து** :—கல்லாதாருடன் காரிய நிமித்தங் கலந்து வாழ்தலும் அறிவுடைமையாகும்.

## ஒப்புமைப் பகுதி :—

"நிலைஇய பண்பிலார் நேரல்ல ரென்றென்று
உளைய உரையாது உறுதியே கொள்க
வளையொலி ஐம்பாலாய்! வாங்கி யிருந்து
தொளையெண்ணா அப்பநின் பார்".

—பழ. 253.

"பெரிய குடிப்பிறந் தாருந் தமக்குச்
சிறியா ரினமாய ஒழுகுதல்—எறியிலை
வேலொடு நேரொக்குங் கண்ணாய! அஃதன்றே
பூவொடு நாரியைக்கு மாறு".

—பழ. 356.

(க).

250\. கருமமும் உள்படாப் போகமும் துவ்வாத்
தருமமும் தக்கார்க்கே செய்யா—ஒருநிலையே
முட்டினறி மூன்றும் முடியுமேல் †அஃதொருவன்
பட்டினம் பெற்ற கலம்.

**தருமர்** :—என்பது கருமமும் உள்படா—பொருள் வருவாயாகிய காரியங்களும் [1]உள்பட்டு, போகமும் துவ்வா—போக போக்கியங்களையும் அனுபவித்து, தருமமும் தக்கார்க்கே

---

† அஃதென்ப எனவும் பாடம்.

[1] உள்பட்டு—உடன்பட்டுச் செய்து.

[2] முட்டு—தடை,

செய்யா—தருமங்களையும் தகுதியுடையாருக்கே செய்து; ஒரு நிலையே—ஒருபிறப்பின் கண்ணே; மூன்றும் முட்டு இன்றி—இவை மூன்றும் [2]முட்டுப்படாமல்; முடியும் எல்—ஒருவற்கு வந்தெய்துமாகில்; அஃது—அதுவல்லவோ; ஒருவன் பட்டினம் பெற்ற கலம—(தான் வேண்டிய தீவில் சென்று வியாபாரப் பலிப்புண்டாய மீளுங்கால இடையூறின்றி வந்து தன) பட்டினத்தருகு சேர்ந்த மரக்கல முடையவன் மனம்போல அமைதியுடையது என்றவாறு.

இது அறிவுடைமையானது எப்படி என்னில், மூன்று காரியமும ஒருவற்கு வாய்க்குமாகில என்னும ஐயத்தினல் இவை மூன்று காரியமும் மறுபிறப்புக்கு வாய்க்கும்பொழுது, இப்பிறப்பிலே அறத்தினைச் செய்யுங்கால் அதற்கோர் இடையூறு வரில், அதற்குத் தளராது நின்று நிறைவேறச் செய்வதற்கு அறிவே கருவி யாதலால, அவ்வளவைக் கொண்டு இப்பாட்டு அறிவுடைமையிற் சேர்க்கப்பட்டது.

**பதுமனார்:**—என்றது பொருட்கு வாயிலாங் கருமத்தைாம உளபடச் செய்து போகத்தையும நுகர்ந்து, அறத்தையும தகுதியுடையார்க்கே செய்து இம்மூன்றும ஒருபிறப்பின்கண்ணே ஒருவன் மாட்டு உளவாய முடியின் அம்முடிவு, பட்டினம சேர்ந்த மரக்கலம போலத் தனக்குப் பயன்படும் என்றவாறு.

பட்டினம பெற்ற கலம—தனக்கு உரித்தான துறையிலே நின்று நிறைந்த சரக்கேற்றி இடையில் தாழ்வு படாமல் மறு துறையிலே சென்று மறு சரக்கேற்றி மீண்டும் வழியில் தாழ்வு படாமல வருதலால் பட்டினம் பெற்ற கலம் என்பாரும் உளர்.

**விளக்க உரை:**—எ-து. கருமமும் உள்படா—கருதப்படா நின்ற பொருள்களும் உள்பட்டு; போகமும் துவவா—போக போக்கியங்களையும் அனுபவித்து; தருமமும் தக்கார்க்கே செய்யா—தருமத்தினையும தகுதியுடையார்க்கே செய்து; ஒரு நிலையே முட்டின்றி மூன்றும் முடியுமேல்—ஒரு பிறப்பின் கண்ணே முட்டுப்படாமல் இவைமூன்று காரியமும் ஒருவற்கு

வந்தெய்துமாகில்; அஃதென்ப பட்டினம்பெற்ற கலம்— அது வல்லேர சிறந்த யாத்திரையாகப் போய்த்தான் கருதின தீவிலே பலிப்புண்டாக வியாபாரம் பண்ணி, இடையூறின்றியே வந்து தன பட்டினத்தைச் சேர விட்டு நந்த மரக்கல முடையவனது மனம்போல அமைதியுடையது என்றவாறு.

**கருத்து**:— முயற்சி, போகம், அறம் இவற்றைப் பெற்று வாழ்வதே அறிவுடைமையாகும்.

## மேற்கோள் பகுதி :—

யா. கா :— முதற்குறட்பாவின் இறுதிக்கண் ஓரசையான ஆசிடடு இரண்டுவிகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பாவிற்கு இச்செய்யுளை மேற்கோள் காட்டுவர்.

—சூ. 23.

பரிமேல் :— "நிற்றலாவது இல்வாழ்வழிக் 'கருமமும் உள்படாப் போகமும் துவ்வாத, தருமமும் தக்கார்க்கே செய்தலினும் துறந்துழித் தவத்தான் மெய்யுணர்ந்து அவாவறுத்தலினும் வழுவாமை" என்றவிடத்து இச்செய்யுளின் முற்பாதியை எடுத்து ஆளுவர்.

—குறள். 391.

## குறிப்பு :—

பட்டினம் பெற்ற கலம் என்ற உவமையால் முயற்சி முதலிய மூன்றும் தடையின்றி வாய்த்த பிறப்பே பயனுடைய பிறப்பாகும் என்பதாம்.

(ய).

---

### 26 அறிவின்மை.

**தருமர்** :— அஃதாவது அறிவிலலாமையினால் தனக்குச்

[1] அரசன், உபாத்தியாயன், தாய், தந்தை, தமையன் ஆகிய பெரியோர்.

சிறந்த [1]ஐங்குரவர் முதலாயினார் அறிவுறுத்தியதையும் உட்கொள்ளாமல் [1]உதாசீனம் பண்ணி, நூலோர் மொழிகளையும் ஐயமாக்கி (அதனை இகழ்ந்து), உலகத்து இயற்கையான முறைமை விட்டுத் தன் அறிவின்மைக்கு ஏற்ற ஒழுக்கத்தின் ஒழுகி, யாவராலும் இகழப்படுதலும், மறுமைக்கு உறுதியல்லாதன செய்தலுமாம்.

**பதுமனார் :**—அஃதாவது எல்லாப் பொருள்களினும் தூலமானதை அறிந்து, சூக்குமமாய் உள்ளன அறியமாட்டாமையும், காம வெகுளி, மயக்கம் மிக்கிருத்தலும், தன்ம, தானங்களும் மறுமையும் உண்டென்பன பலபடியுங் கற்பித்தாலும் அறியாமையுமாம் என்றவாறு.

## குறிப்பு :—

'அறிவின்மை' —

அஃதாவது கல்வி, கேள்விகளினுய அறிவு இல்லாமை. அறிவுடைமையின் சிறப்பு வலியுறுத்துவானவேண்டி அதற்கு எதிர்முகத்தாலும் ஓரதிகாரம் வகுத்தார். கல்லாமையினாலும், கேள்விநலம் பெருமையினாலும் தோன்றுவது அறிவின்மை.

திருக்குறளின் கண்ணும் கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை என அதிகாரவடைவு படுத்தியிருத்தல் காண்க. கல்லாமை, கேள்வி என இரு அதிகாரம் வகுத்தமையின் 'அறிவின்மை' என ஓரதிகாரம் குறளின்கண் வகுக்க வேண்டுதலில்லையாயிற்று.

1. 'கல்லாமை' —

பரிமே.—அஃதாவது கற்றலைச் செய்யாமை, என்றது, அதனினாய இழிபினை. கல்விச் சிறப்பு மேல்விதி முகத்தாற் கூறியதனையான முற்றுப் பெருமை நோக்கி, எதிர்மறை முகத்தாலும் கூறுகின்றது ஆதலின், இது கல்வியின்பின் வைக்கப்பட்டது.

[1] உதாசீனம்பண்ணி—பழித்து.

மணக் :—கல்லாமையாவது கல்வியில்லாமையால் உளதாகும் குற்றம் கூறுதல், மேல்கல்வி வேண்டும் என்றார், 'அஃது இலார்க்கு உளதாகும் குற்றம் என்ன?' என்றார்க்குக் கூறியது ஆதலான், அதன்பின் இது கூறப்பட்டது.

பரிதி :—கல்லாமையாவது கல்வியை விடவொண்ணாது என்றவாறு.

—குறள். அதி 41.

2. 'கேள்வி '—

பரிமே :—அஃதாவது கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக்கேட்டல். கற்றவழி அதனினாய அறிவை வலியுறுத்தலானும், கல்லாத வழியும் அதனை உண்டாக்குதலானும் இது கல்வி கல்லாமைகளின் பின் வைக்கப்பட்டது.

மணக் :—கேள்வியாவது கேள்வியாமாறும் அதனானாகிய பயனும் கூறுதல். நூல்களைக் கற்கமாட்டாதார் அவற்றைக் கற்றார்மாட்டுக்கேட்டலும் அறிவுக்குக் காரணமாம் என்பதனால் அதன்பின் இது கூறப்பட்டது.

பரிதி :—கேள்வியாவது கல்வி இல்லாதபோது கேள்வி வேண்டும் என்றவாறு

—குறள். அதி. 42.

251 நுண்ணுணர்வு இன்மை வறுமை அஃதுடைமை
பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்—
எண்ணுங்கால்
பெண்ணவாய் ஆணிழந்த †பேடியும் பூணாளோ?
கண்ணவாத் தக்க கலம்.

**தருமர் :**—என்பது. (ஒருவனுக்கு) நுண் உணர்வு இன்மை—கூரிய அறிவில்லாமையே, வறுமை—வறுமையாவது; அஃது

†பேடி அணியாளோ என்றும் பாடம்

உடைமை—அந்த அறிவுடைமையே; [1]பண்ண பணேத்த பெரு செல்வம்—வளர்மிகுந்த செல்வமாவது; எண்ணுங்கால்—விசாரிக்குங் காலத்து; [2]பெண் அவாய—பெண்மையை விரும்பி; ஆண் இழந்த—ஆண்மைத்தன்மை யிழந்த; [3]பேடியும்—பேடியானவளும்; கண்[4] அவா தக்க கலம்—கண்ணுக்கினிய ஆபரணங்களை; பூணுளோ?-(அணியமாட்டாளோ)? [அணிவள] என்றவாறு.

பெண்ணும் அன்றி, ஆணும் அன்றி எதுக்குமல்லாத பேடி ஆபரணம பூணடிருக்க வில்லையோ? அதுபோல அறிவில்லார் செல்வம் பெறறதனால பயன் எது? அறிவே செல்வம் அல்லாது அறிவிலலாா பெறற செலவம் செல்வமலல, எனவே அச்செலவமானது அறிவுபோலச சுவாகக மோட்சஙகளைக் கொடாது எனபதாயிறறு.

**பதுமனர் :**—என்றது. வறுமையாவது நுண்ணிய அறிவிலலாமை; மிகப பணேதத பெருஞ்செலவமாவது நுண்ணிய அறிவுடைமை. ஆராயுங்கால பெண்மையை அவாவுய அவாவாலே ஆண் தகைமையை இழநதபேடி அணியாளோ கணணால் அவாவததகக அணிகலஙகள்? என்றவாறு.

பெண்ணை அவாவி ஆணை இழநதபேடி—முறபிறபினை கணணே பிறா மனையாளை அவாவி இபபிறபினகணணே ஆண தகைமையை இழநத பேடி என்றுப, கூததாடி என்றுமாம பணணப் பணேதத பெருஞ செலவம—கொடுக்க வளாநத பெருஞ செல்வம என்றுமாம,

---

[1]சின்னஞ்சிறிய என்றாற்போலப் பண்ணப் பணேதத என்கின்றது; மிக வளர்ந்த எனபது பொருள.

[2]பெண அவாய்—பெண தன்மை மிக்கு என்றுமாம்.

[3]பெண தன்மை மிகுந்து ஆண்தன்மை குறைந்தவள்.

[4]அவாவததக்க எனபது அவாததக்க என நின்றது.

பெணணுக்குரிய அணிகளைப பேடி அணிநதால அழகும் இனபமும உணடாகாமை போல, அறிவுடையாா பெற்றுப் பயனடைதற்குரிய செலவததை அறிவிலாா பெறறால பெருமையும பயனும உணடாகா என்க.

**விளக்க உரை** :—எ-து. நுண்ணுணர்வின்மை வறுமை—கூரிய அறிவில்லாமையே ஒருவர்க்கு வறுமையாவது; அஃதுடைமை பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம்—கூரிய அறிவுடைமையே வளமிக்க செல்வமாவது; எண்ணுங்கால் பெண்ணவாய் ஆண் இழந்த பேடி அணியாளோ?—விசாரிக்குங்காலத்துப் பெண்மையினை அவாவி ஆண்மைத் தன்மையை யிழந்த பேடியும் பூணுளோ?, கண் அவாத்தக்க கலம்—கண்ணுக் கினிதாகிய ஆபரணங்களை என்றவாறு.

செல்வமானது அறிவுபோற சுவர்க்க மோட்சங்களைக் கொடாது என்பதாம.

**கருத்து** :—நுண்ணறிவில்லாதார்க்கு எவ்வளவு செல்வங்கள் இருப்பினும் பயனில்லை.

## மேற்கோள் பகுதி :—

நச :—"பேடியா, பேடிமார், பேடிகள் என்பனவும் அடங்குதறகுப பேடியெனறது ஆண்மை திரிந்த என்றார். "பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ" என்பதனாற் பெணணவாய நிறறல கொளக."

—**தொல. சொல் கிளவி. சூ. 4.**

தெயவச :—பேடியென்னும பெயாககண் நிறகும்சொல் ஆண்மை யறிசொறகு ஆகும இடன இலது எனபதறகு "பெண்ணவா யாணிழநத பேடியணியாளோ, கண்ணவாத தக்ககலம" என்பதனை மேறகோளாகக் காட டுவா.

—**தொல். சொல் கிளவி. சூ. 12**

சங்கர —"பெண்ணிலக்கணஞ் சிறநதமையிற பெண்பாற் பட்டதறகு, 'பெண்ணவாய் ஆணிழந்த பேடி யணியாளோ' எனற பகுதியை எடுததுக் காட்டுவா. —**நன். சூ. 264.**

பரிமேல் .—'செல்வம நல்குர வென்பன ஈண்டறிவினது உண்மையின்மைகளையும் குறித்து நின்றன, என்னை? "நுண்ணுணர்வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப் பணைத்த

பெருஞ் செல்வம்" என்றாராகலின்' என்றார்.

—குறள். 270.

## ஒப்புமைப் பகுதி :—

"அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்"

—குறள். 430.

"அறிவின்மை இன்மையுள் இன்மை"

—குறள். 841.

"அறிவினால் மாட்சியொன் றில்லா ஒருவன்
பிறிதினால் மாண்ட தெவனாம்?—பொறியின்
மணிபொன்னும் சாந்தமும் மாலையும் இன்ன
அணியெல்லாம் ஆடையின் பின்".

—பழ. 26.

## குறிப்பு :—

பெண்ணுக்குரிய அணிகளைப் பேடி அணிந்தால், அழகும் இன்பமும் உண்டாகாமை போல அறிவுடையார் பெற்றுப் பயனடைதற்குரிய செல்வத்தை, அறிவிலார் பெற்றால் பெருமையும் பயனும் உண்டாகா எனக.

(க).

252\. பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்(து)
அல்லல் உழப்ப(து) அறிதிரேல்-தொல்சிறப்பின்
நாவின் கிழத்தி உறைதலால் சேராளே
பூவின் கிழத்தி புலந்து.

**தருமர் :**—என்பது. பல்ஆன்ற கேள்விப் பயன் உணர்வார்—பல நூல்களையும் கற்றுயாந்த கேள்வியால் வரும் பயனை உணருமவர், பாடு அழிந்து—தம்பெருமை அழிந்து; அல்லல் உழப்பது அறிதிரேல—துன்பமுறுதற்குக் காரணம் அறிந்தீ

ரில்லையோ?; தொல்சிறப்பின்—பழையதாய சிறப்பினையுடைய; [1]நாவின கிழத்தி உறைதலால்—நாமகள் அவரிடத்து உறைத லாலே, [2]பூவின் கிழத்தி—பூமகள்; புலந்து சேராள்—ஊடிச் சேராள் [என்பதேயாம்] என்றவாறு.

இஃது அறிவின்மைக்குப் பொருந்தியது எப்படி என்னில், முற்பிறப்பில் இவர் கல்விக்குத் தவம் பண்ணிச் செல்வத்துக்குத் தவம் பண்ணினரில்லை; அஃது அறிவின்மையாலல்லவோ? ஆதலால் இப்பொழுது அவர் அறிவின்மையைக் [3]கழறி அவை யிரண்டிற்கும் புண்ணியஞ் செய்ய வேண்டும்; அறிவுண்டாக வேண்டும் என்பது தோன்ற அறிவின்மையிற் சேர்க்கப்பட்டது.

**பதுமனார்:**—என்றது. பலவாய் அமைந்த கேள்வியால் வரும் பயனை உணராவார் தம பெருமை அழிந்து அல்லல் உழப்ப தற்குக் காரணம் யாதெனில், தொல் சிறப்பினையுடைய நாமகள் உறைதலாலே பூமகள் ஊடிச் சேராள் ஆதலால் என்றவாறு.

[ஆன்ற—அமைந்த. அல்லல—மிடி. புலந்து—கலாய்த்து. கல்வியாற்(பயன்) பிறப்பியலைை உணாதலும்; இன்ப துன்பம் என்றவற்றில் விழைவும்வெறுப்பும் அற்று இருத்தலும். ஆதலினால் தொல்லை நல்வினைச சிறப்பால நாமகள் சேரப் பெற்றோம்; பூமகள் சேரா(த)து முற்பிறப்பின் அறஞ்செய்யாமையேயென்று கருதிக் கல்வியினாலாய பலன்களை நுகாந்து, அமைந்து ஒழுகாது தம பெருமை அழிந்து அல்லல உழப்பதனால் கற்றோர் தமக்கு இயற்கையான அறிவான ஞானமுண்டாகாது அறிவின்மையே வேறு காரணஞ் சொல்லுதற்கு ஒண்ணாது என்பதாம்.]

**விளக்க உரை:**—எ-து. பல்லான்ற கேள்விப் பய னுணராவார்—பல நூல்களையுங் கற்றறிந்த கேள்வியால் வரும்

---

[1]நாவில் வீற்றிருக்கும் மகள்; சரசுவதி.

[2]பூவில் வீற்றிருக்கும் மகள், இலக்குமி

[3]கழறி—இடித்துக்கூறி

பயனை உணருமவா; பாடழிந்து அல்லல் உழப்பது அறிநிரேல்—பெருமை யழிந்து துன்புறுகறதுக் காரணம் அறிக்கிரில்லேயோ?; தொல்சிறப்பின் நாவின் கிழத்தி உறைதலால்—பழைய சிறப்பினை யுடைய நாமகள் உறைதலாலே; சேராளே பூவின கிழத்தி புலந்து— பூமகள் ஊடிச சேராள என்றவாறு.

இஃதறிவின்மையானது எப்படியென்னில், முற்செனனத்திலே இவா கல்விக்குத தவம பண்ணிச் செல்வததுக்குத தவம் பண்ணிணரில்லை யாதலின் இபபொழுது இவா அறிவின்மையைக் கழறி இவையிரண்டுக்கும் புணணியஞ செய்பததகக அறிவுடைமை வேண்டுமெனபது தோனற அறிவினமையிலே சேர்க்கப்பட்டது.

**கருத்து** :—அறிஞா, வறிஞராவதறகுக் காரணம் ஊழ்வினையே, அதுபற்றி அவரைக குறை கூறுதல அறிவின்மையாகும்.

## ஒப்புமைப் பகுதி :—

"பலலானற கேளவிப பயனுணாவா வீயவும்
கலலாதாா வாழவது அறிதிரேல்"

—நாலடி. 106.

## குறிப்பு :—

இச்செய்புள் 'நுண்ணுணாவின்மை வறுமை அஃதுடைமை பண்ணப் பணைதத பெருஞசெலவம' என்ற கருததின்மேல் எழுந்ததான 'அறிஞர் செல்வம் பெறுது வருந்துவது என்?' என்ற தடைக்கு விடைகூறுவது போனறு அமைநதுள்ளது.

அறிஞா செல்வா ஆகாமைக்கு உண்மையான காரணம ஊழ் வினையே; அவவாருகவும வேறு காரணம கறபித்துக கூறப்பட்டுளளது. ஒருவனிடம ஒரு பெண் கூடியிருக்கும போது வேறொரு பெண் வநது கூடாது ஊடுதல் உலகியல்பு. அங்ஙனமே இங்கு நாமகள் கூடின இடததைப பூமகள் கூடாது ஊடுவள என்றது கற்பனை. அன்றி மருகியான நாமகள் இருக்குமிடத்தில் மாமியான பூமகள் ஒன்றுபட்டு இராள

என்று கறபித்தலும் ஒன்று.

(உ).

253. கல்என்று தந்தை கழற அதனையோர்
சொல்என்று கொள்ளாது இகழ்ந்தவன்—மெல்ல
எழுத்தோலை பல்லார்முன நீட்ட விளியா
வழுக்கோலைக் கொண்டு விடும.

**தருமர் :**—எனபது. தநதை—பிதாவானவன்; கல் என்று கழற—கறகவேண்டும் என்று அதட்டிச் சொல்ல; ஓா சொல என்று அதனை கொளளாது இகழ்நதவன்—நமக்கு உறுதியான சொல என்று அதனை உட்கொள்ளாது இகழ்நதவன; (பினபு) பலலாா முன—பலா முன் அவன் இருக்குமபோது; மெலல எழுதது ஓலை நீட்ட—(ஒருவன) மெல்லச் சென்று இவவெழுதின ஓலையை வாசிததுக காண் என்று கையில் கொடுக்க; விளியா—அதறகு [1]விளிநது; வழு கோலை—[பலா முன்பே என கல்வியிலலாமையை அறிவிததது என்னை இகழநதாய என்று அவனை அடிததலாகிய] குறறஞ் செயயககூடிய ஒரு கோலை, கொண்டு விடும்—எடுததுக கொளளுவன எனறவாறு.

குறறத்தைச் செய்யுங் கோல் ஆதலால அதனை [2]வழுக கோல் எனறாா. எனவே அறிவில்லாதவன இபபடிப பலா முனனும இகழச்சி எயதுவன எனபதாயிறறு.

**பதுமனார் :**—என்றது. தன் தநதை நூல்களைக் கற்பாயாக

---

[1] விளிந்து—சினங்கொண்டு.

[2] வழுக்கோலை கொண்டுவிடும் என்பதற்கு ஓர் ஏட்டுப் பிரதியில், ஒலிக்கும வழுக்கினைக் கொண்டுவிடும என்றும, எழுதாத ஓலையாகக் கொண்டுவிடும என்றும உரை கொள்ளப்பட்டுள்ளது. இனி, ஓல்—ஒலியாதலின வழுக்கு ஓலை கொண்டுவிடும் என்று பிரிதது அவவிடம் விட்டுததபபுதறகுக்காரணமான ஒலியை மேற்கொள்வான் என்றும் கொள்ளலாம்.

எனறு இடித்துச்சொலல, அதனை உறுதியாவதொரு சொல் எனறு கொளளாது இளமைக காலதது இகழநதவன, பலா முனனே ஒருவன எழுததோலையை மெலல நீட்ட, அவன வெகுணடு தவறறினைசசெயயும கோலைக கொணடு மறறவன் தனனை இகழநதான் எனறு கருதித துயா செயதுவிடும எனறவாறு.

**விளக்க உரை:**—எ-து. கல எனறு தநதைக் கழற—கறகவேணடும எனறு பிதாவானவன அதடடிச்சொலல; அதனை ஓா சொல எனறு கொளளாது இகழநதவன—இது நமககு உறுதியான சொல்அலலவோ எனறு அதனை உடகொளளாமல இகழநதவன; மெல்ல எழுததோலை பலலாா முன நீட்ட—(மெலல) எழுதின வோலையை வாசிததுககாணும எனறு பலர் முன்பே கொடுகக, விளியா வழுக கோலைக கொணடுவிடும—அதறகு விளிநது [பலா முனபே என் கலவி இலலாமையை அறிவிதது எனனை இகழநதாய எனறு] அவனை அடிகக ஒருகோலை எடுததுக கொளளுவன எனறவாறு.

வழுககோல எனபது குறறததைச் செயகிற கோல.

**கருத்து:**—கலலாதவன பலா முனனே தான இகழபபடுவதறகுப பிறரை நோவது அறிவினமையாகும.

## குறிப்பு:—

“சானறோ ாைககுதல் தநதைக்குக் கடனே”; “தநதை மகறகாறறு நன்றி அவையதது, முநதி யிருபபச்செயல்” எனப ஆகலின், ‘கல் என்று தந்தை கழற’ என்றும, ‘தநதை சொல் மிகக மநதிரம இல்லை’ ஆதலின் அதனை ‘ஓா சொல’ என்றும் கூறினா.

(௩).

251. கல்லாது நீண்ட ஒருவன உலகத்து
நல்லறி வாளர் இடைப்புக்கு—மெல்ல
இருப்பினும் நாயிருந் தற்றே; இராஅது
உரைப்பினும் நாய்குரைத் தற்று.

**தருமர் :**—என்பது. உலகத்து—உலகத்தின் கண்ணே; கல்லாது—கல்வியில்லாது, நீண்ட ஒருவன்—வளர்ந்தான் ஒருவன்; நல அறிவாளர் இடை—நல்லறிவினையுடையவர் நடுவே, மெல்ல புக்கு இருப்பினும்—மெல்லப் புகுந்து இருந்தானாயினும்; நாய் இருந்து அற்றே—(அவர்கள் கண்ணுக்கு இவனிருப்பது) நாய் இருந்ததனோடு ஒக்கும்; இராது—(தன் அறிவின்மை கருதி) [1]வெறு(விதாக) இராது; உரைப்பினும—என்ன சொன்னானாயினும்; நாய் குரைத்து அற்று—நாய் குரைத்ததனோடு ஒக்கும் என்றவாறு.

இருப்பினும் என்னும் உம்மைபால அறிவுடையார் அவையில் அறிவில்லாதான் செல்வது இயல்பன்று, செல்லுவனாகில் இத்தன்மையான இழிவை எய்துவன் என்பதாம்.

**பதுமனார் :**—என்றது. கல்லாது உடம்பு நீண்ட ஒருவன், உலகத்து நல்லறிவாளர் நடுவே புக்கு மெல்ல இருந்தானாகிலும், நாய் புக்கு இருந்தாற்போலும், இருந்தே (ஒழியாது) உரைத்தானாயினும் நாய் குரைத்தாற்போலும் என்றவாறு.

கல்லாது நீண்ட ஒருவன்—ஐசுவரியத்தால் நீண்டு கல்லாத ஒருவன் என்றுமாம்.

**விளக்க உரை :**—எ-து. கல்லாது நீண்ட ஒருவன்—கல்வியில்லாமல் வளர்ந்த ஒருவன், உலகத்து நல்லறிவாளர் இடைப் புக்கு—உலகத்தில் நல்ல அறிவுடையார் நடுவே புகுந்து;

---

[1]வெறுவிதாக இராது—சும்மா இராது.

மெலல இருப்பினும் நாய இருநதற்றே—மெல்ல இருந்தா ஞகிலும அவாகள கணணுககு இவன நாய இருநததனே டொககும்; இராது உரைபபினும நாய குரைததற்று—இருநது ஒனறினைச் சொனனுலுயினும நாய குரைததனேடொககும எனறவாறு.

**கருத்து** :—கலவியறிவிலலாதவா நாயபோல இழிவாகக கருதப படுவா.

## ஒப்புமைப் பகுதி :—

"அரஙகினறி வட்டாடி யறறே நிரமபிய
நூலினறிக கோட்டி கொளல்".

—குறள. 401.

கழாஅககால் பளளியுள வைததறறல் சானறோா
குழாஅததுப பேதை புகல்".

—குறள் 840.

"மானமும நாணும அறியாா மதிமயஙகி
ஞானம அறிவாா இடைபபுகககுத தாமிருநது
ஞானம விளுஅய உரைததல நகையாகும
பானைபபல காணபான் பகல".

—பழ. 298.

(௪).

255. புல்லாப்புன் கோட்டிப் புல்வர் இடைப்புக்குக்
கல்லாத சொல்லும் கடையெலாம்—கற்ற
கடாஅயினும் சானறவா சொல்லாா பொருள்மேல்
படாஅ விடுபாக கறிநது.

**தருமர் :**—என்பது. புல்லர்—[1](இலக்கணத்தோடு) பொருந்தாத, புல் கோட்டிக்கடை—[2]புல்லிய கோட்டியிலே பயின்ற கடையாய தன்மையுடையா னொருவன், புலவர் இடைப் புககு—அறிவுடைய சான்றோர் நடுவே புகுந்து; கல்லாத எலாம் சொல்லும்—தான் கல்லாதவற்றை (எல்லாம்) சொல்லிக் காட்டுவன; சான்றவர்—அமைந்தோர்கள்; கற்ற—தாம் கற்ற வற்றை; கடாயினும்—ஒருவர் [3]கடாவிக் கேட்பினும், சொல்லார் —; (அஃதேன் எனில்) பொருள் மேல் படார் [4]விடுபாக்கு அறிந்து —பொருள்மேல் சாராமல்விடும் என்பதனை அறிந்து என்றவாறு.

(அறிவுடையோர்) தாம் கற்றதனை ஒருவற்குச் சொல்லும் போது பொருளுக்கு இயலுமோ இயலாதோ என்று பின் பண்ணி அமைந்திருப்பர்; அறிவில்லாதவனுக்கு அதன் தன்மை தெரியாது ஆகலின் தனக்குத் தோன்றியது ஒன்றினைப் பின் பண்ணாது சொல்லி இழிவெய்துவன். அறிவுடையோர் தலைமை யாதலின் அறிவில்லாதானைக் கடையென(ரூர்).

**பதுமனூர் :**—என்றது. பொருந்தாத புல்லிய புன் கோட்டியைக் கொண்டிருக்கும் (புன்) புலவரிடைப் புகுக் கல்லாதவற்றைச் சொல்லும் கடையெல்லாம்; தாம் கற்றவற் றைக் கடாவினுராயினும் அமைந்தார் சொல்லார் பொருள்மேற் படாது விடுவதனை அறிந்து என்றவாறு.

---

[1]இலக்கணத்தோடு பொருந்தாமையாவது:— "புகழ்ந் தரும நெறி நின்றோர் பொய், காமம்—இகழ்ந் சினஞ்செற்றம் இலரோ—நிகழ்கலைகள் எல்லாம் உணர்ந்தோர் இருந்த இடமன்றே—நல்லார் அவைக்கு நலம்" என்றபடி நல்லவையின் இலக்கணம் இல்லாமை.

[2]புல்லிய கோட்டி—இழிவான சபை.

[3]கடாவி—வினவி.

[4]விடுபாக்கு—தொழிற்பெயர், விட்டுப்போதல் என்னும் பொருளது; அஃதாவது நுண்பொருள்மீது அவர் அறிவு நுழைந்து செல்லாது விட்டுப் போதல்.

புல்லாப் புன்கோட்டிப புலவரிடைப் புக்குக் கல்லாத சொலலும் கடையெலாம்—புன்கோட்டியைக் கொண்டிருக்கும புலவாகளு நடுவு [1]புலலிக கலலாதனவறறைச் சொலலுவா கடையாயினோ எனபாரும் உளர். படா விடுபாக கறிநது—பொருளமேற[2]சாாவழி அறிநது என்றுமாம்.

**விளக்க உரை :**—எ-து. புல்லாப புனகோட்டி புலவரிடைப் புக்குக கல்லாத சொலலும கடையெலாம— இலககணத தோடு பொருநதாத புல்லிய கோட்டியிலே பயினற கடையான வன அறிஞரான சானரோா நடுவே புகுநது தான கல்லாதன வறறைச் சொலலிக்காட்டுவன, கறற கடாயினும சானறவா சொலலாா—கறறவறறைப பிறா கடாவிக கேட்பினும தலைபான வா சொலலாா; பொருளபேல படாஅ விடுபாக்கறிநது—பொருளமேற சாராமை விடும எனபதனை அறிநது எனறவாறு.

**கருத்து:**—அறிவிலலாதவா அறிஞாபோல அடஙகியிருகக மாட்டாா

256 கற்றறிநத நாவினர் சொல்லார்தம் சேர்வஞ்சி
மறறைய ராவாா பகாவா—பனையினமேல்
வறறிய ஓலை [1]கலகலககும எஞஞான்றும்
பசசோலைகரு இல்லை ஒலி.

**தருமர் :**—எனபது. கற்று அறிநத நாவினா—கற்றறிந்த நாவையுடையவா, தம சோாவு அஞசி—தமது [3]சொல் சோாவு

---

[1] புலலி—கலந்து.

[2] இஙகே எழுததுப பிழை நோநதிருககக்கூடும எனததெரிகிறது.

[1] கா காக்கும எனறும பாடம.

[3] சொறசோாவு—சொலலில் தோனறும குற்றம, அவையாவன :- பொய, கோள, கடுஞ்சொல, பயனில சொல எனபன.

காயநத ஓலை ஒலிபபது போல அறிவறறவா கல கலவெனறு பேசுவா; பச்சை ஓலை ஒலியாதவாறுபோல அறிவுளளவா அடஙகியிருபபா.

படப்போகிறதே என்று அஞ்சி; சொல்லார்—விரைந்து ஒன்றினை யுஞ் சொல்லார்; மறையார் ஆவார்—மறைச் சொற் சோர் வுக்கு அஞ்சாதவர்; பகர்வர்—விரைந்து தாமறிந்த தொன்றினைச் சொல்வர்; பனையின் மேல் வற்றிய ஓலை—பனையின் மேல் உலர்ந்த ஓலையானது; கல கலக்கும்—கல கல என்னும் ஓசை யுடனே ஆரவாரிக்கும், எஞ்ஞான்றும்—எப்போதும்; பசு ஓலைக்கு ஒலி இல்லை—பச்சை ஓலைக்கு ஒலியில்லை அதுபோல என்றவாறு.

ஆதலால் அறிவில்லாதார் யாதொன்றினையும் பின்எண்ணாமல் சொல்லி இழிவுபடுவர் என்பதாம்.

**பதுமனார் :**—என்றது (நல்ல) நூலைக் கற்றுணர்ந்த நாவினார் ஆராய்ந்து அல்லது சோர்வுபடுதலை அஞ்சிச் சொல்லார் ஒன்றினையும்; கற்றறியாத மறையவர் ஆராயாது சொல்லுவர். பனையின் மேல் உலர்ந்த ஓலை கர கர என்று ஒலிக்கும், பசு சோலைக்கு எஞ்ஞான்றும் ஒலி இல்லை ஆதலால் என்றவாறு.

வற்றிய ஓலை—உடம்பு விட்ட ஓலை.

**விளக்க உரை :**—எ-து. கற்றறிந்த நாவினார் சொல் லார் தம் சோர்வு அஞ்சி—கற்றறிந்த நாவையுடையவர் விரைந்து சொல்லார் ஒன்றினையும், சொற்சோர்வு பிறக்குமோ என்று அதற்கஞ்சி; மறையராவார் பகர்வர்—மறைச்சோர்வுகளுக்கு அஞ்சாதவர் சொல்லுவர்; பனையின்மேல் வற்றிய ஓலை கர கரக்கும்—பனையின்மேல் உலர்ந்து நின்றசைகின்ற ஓலை கர கர வென்னும் ஓசையுடனே ஆரவாரிக்கும்; எஞ்ஞான்றும் பசுசோலைக்கில்லை ஒலி—எப்போதும் பச்சை ஓலைக்கு ஒலியில்லை என்றவாறு.

**கருத்து :**—அறிவற்றவர் எப்பொழுதும் அடக்கமின்றி ஆரவார மாக இருப்பர்.

## மேற்கோள் பகுதி :-

மயிலை —"இரட்டித்து நிறகுஞ் சொறகள் அவவிரட்டிப்பிற் பிரிக்கபபெரு என்றவாறு. ......."வறறிய வோலை கலகலக்கு மெஞஞானறும, பச்சோலைக்கில்லை யொலி" .......எ-ம் வரும. இரட்டைக்கிளவி என்றமையான, இவை இரண்டின் இறவா வெனக கொள்க; இறநது நின்று ஒரு சொறபொருள்படின இவையாகாவெனக.

—நன. சூ. 395.

சஙக '—இவரும் இரட்டைச் சொறகள் அவ்விரட்டிறபிரிநது தனிதது ஒலியா என்பதறகு 'வறறிய வோலை கலகலககும' என்பதனை யெடுததுக்காட்டுவா

—நன. சூ. 396.

## ஒப்புமைப் பகுதி :—

"சிறறுணர்வோா எனறுஞ் சிலுசிலுப்பர் நன்றமைந்த்
முறறுணாவோா ஒன்றும மொழியாரே—வெறறிபெறு
வெணகலததின ஓசை மிகுமே; விரிபசுமபொன
ஒணகலததின் உண்டோ ஒலி ?"

—நீதிவெணபா.

(சு).

257. பன்றிக்கூழ்ப் பத்தரில் தேமா வடித்தற்றால்
நனறறியா மாந்தர்க்(கு) அறததா(று) உரைக்குங்
[கால்
குனறினமேல் கொட்டுந் தறிபோல் தலைதகர்ந்து
சென்றிசையா வாகும் செவிக்கு.

**தருமர்:**—என்பது. [1]நன்று அறியா—நன்மையை அறியாத, மாந்தர்க்கு—மனிதர்க்கு; அறத்து ஆறு—அறத்தினது வழியை; உரைக்குங்கால்—சொல்லுங் காலத்து; (அது) பன்றி கூழ் [2]பத்தரில்—பன்றிக்குக் கூழ் வார்க்கிற தோணியிலே; தேமாவடித்தற்று—தேமாங்கனியைப் பிழிந்ததனோடு ஒக்கும்; (அன்றியும்) குன்றின் மேல் கொட்டும்—குன்றின்மேலே [3]புடைக்கின்ற, [4]தறிபோல—தறிபோல, தலைதகர்ந்து—தலைசிதறி; செவிக்கு—செவியில்; சென்று இசையா ஆகும்—சென்று ஏறாதாகும் என்றவாறு.

எனவே, அறிவில்லாதார்க்கு எவ்வகைத்தாய்ச் சொல்லினும் அது கொள்வதன்றி, இளமைக்கேற்ற பழியையே உட்கொள்வார். அதனால் அவரது நினைவைப் பன்றிக்குக் கூழ்வார்க்கும் கோணி என்று இழிவாகக் கூறினார்.

**பதுமனார்:**—என்றது. பன்றிக்குக் கூழ் வார்க்கும் பத்தரின் கண்ணே, தேமாங்கனியை வடித்தாற் போல நன்றறியா மாந்தர்க்கு அறநெறியை உரைக்கும் பொழுது, மலைமேற் கொட்டுந் தறி, தலைதகர்ந்தாற்போல அறத்தாறு தலைதகர்ந்து செவிக்குட் சென்று பொருந்தாவாகும் என்றவாறு.

பன்றிக்குக் கூழ் வார்க்கிற பத்தலிலே தேமாவை வடித்தல்—அறநெறி நூலறியா மாந்தர்க்கு அறநெறி நூல் உரைத்தலுக்கு உவமை.

---

[1]நன்று—அறம் என்னுமாம்.

[2]பத்தர்—பத்தல் என்பதன் போலி, குழிந்த இடத்தையுடையது; அஃதாவது நீர்த்தொட்டி.

[3]புடைக்கிற—அடிக்கிற.

[4]தறி—முளைக்குச்சி. தறிபோல் தலைதகர்தலாவது :- முளைக்குச்சி நுனி சிதைந்து கல்லில் இறங்காமைபோல, அறவழிகள் சிதறிச் செவிக்குள் நுழையா என்க.

**விளக்க உரை :**—எ-து. பன்றிக் கூழ பத்தரில்—பன்றிக்குக் கூழ்வார்க்கின்ற தோணியிலே; தேமா வடித்தற்ால—தேமாங்கனியைப் பிழிந்ததனோடொக்கும்; நன்றறியா மாந்தர்க்கு அறத்தாறு உரைக்குங்கால்—நன்மை யறியாத மனிதர்க்கு அறத்தினது நெறியைச் சொல்லுங்காலத்து; குன்றின் மேல் கொட்டுந் தறிபோல் தலை தகரந்து—குன்றின்மேல் புடைக்கிற தறிபோல் தலைசிதறி; சென்றிசையா வாகும் செவிக்கு—செவியிற் சென்று ஏறுவாகும் என்றவாறு.

**கருத்து :**—அறிவற்றவர்க்குச் செய்யும் அறவுபதேசம் பயனற்றது.

## ஒப்புமைப் பகுதி :—

"அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல்".

—குறள். 720.

"நடலை யிலராகி நன்றுணரா ராய
முடலை முழுமக்கள் மெய்கொள் அவையுள்
உடலா வொருவற் குறுதி யுரைத்தல்
கடலுளால் மாவடித் தற்று".

—பழ. 72.

"கல்வியா னாய கழிநுட்பம் கல்லார்முன்
சொல்லிய நல்லவும் தீயவாம்—எல்லாம்
இவாவரை நாட! தமரையில் லார்க்கு
நகரமும் காடுபோன் றாங்கு"

—பழ. 3.

"வைகலும் நீருட் கிடப்பினும் கல்லிறகு
மெலலென்றல் சால அரிதாகும்—அஃதேபோல்
வைகலும் நல்லறம் கேட்பினும் கீழ்கட்குக்
கல்லினும் வலலென்னும் நெஞ்சு".

அறநெறிச்சாரம், 31.

"நுணையன் அறிவானு ரததினததின் பெருமையை".

—பழமொழி.

**குறிப்பு :—**

பனறிகருக் கூழின் சுவையே யன்றித் தேமாவின் சுவை தெரியாமைபோல அறிவறறவாககு மறநெறியின தனமையே யனறி அறநெறியின தனமை தெரியாது எனக.

(எ).

258. பாலாற் கழீஇப் பலநாள் உணக்கினும்
வாலிதாம் பககம் இருந்தைக்(கு) இருந்தனறு;
கோலாற கடாஅய்க் குறினும புகல்ஒல்லா
நோலா வுடம்பிற்(கு) அறிவு.

**தருமர் :—**என்பது. பலநாள—பலநாளும; பாலால கழீஇ — பாலினுலே (கரியைக்) கழுவி, உணககினும—உலாததினும; இருநதைககு—கரிககு; வாலிது ஆம பககம—வெணமை யாகுந திறம;" இருநதனறு—உணடாகாது [அதுபோல]; கோலால கடாஅய—கோலகொண்டு அதட்டி; குறினும—அடிபபினும; நோலா உடமபிறகு—புணணியம இலலாதவனுககு, அறிவு புகல [1] ஒல்லா—அறிவு புகமாட்டாது எனறவாறு.

அறிவு வருமபடிக்கு முறபிறபபிற புணணியஞ செய்திலன் என வறபுறுததியது.

**பதுமனுர் :—**எனறது. பலநாளும பாலாலே கழுவி, உணாததினும வெணணிறமாகுந திறம கரிககு இருநததிலலை. அதுபோலக கோலாற கடாவிக் [2]குறறினு லொபப அறிவைக கொளுததினும நோலா வுடமபுககு அறிவுகள் புகமாட்டா

[1] ஒல்லா—ஒலலாது எனபதன விகாரம.
[2] குறறினல—குததினல.

என்றவாறு.

வாலிதாம் பககம்—வெள்ளிதாம் தன்மை. இருநதைக்கு—கரிக்கு. நோலா வுடமபு—முனனைச் செனனததில் தவத்தைப பொருநதா உடம்பு.

**விளக்க உரை :**—எ-து. பாலாற கழுவிப் பலநாள் உணக்கினும—பாலை வாாததுக கழுவிப பலநாள உணாததுகினும, வாலிதாம பககம இருநதைககு இருநதன்று—வெள்ளிதாகிய நிறம கரிககுணடாகாது; [அதுபோல], கோலால் கடாஅயக குறினும—கோல கொணடு அதடடி அடிபபினும்; புகலஒலலா நோலா உடமபிறகு அறிவு—புண்ணியம இலலாதவனுககு அறிவு புக மாடடாது எ-று.

**கருத்து** —முன்னைத தவமில்லாதவரை அறிவு கூறித திருததமுடியாது.

## ஒப்புமைப் பகுதி :-

"இருந்தை யிலஙக வெளிறு படாது"

—திருவரஙகததநதாதி 36.

## குறிப்பு :-

இசசெயயுளால் அறிவிலலாதாரை அனபுடன திருததுதலும அடித்துத திருததுதலும பெறபபட்டன.

(அ).

259. பொழிந்தினிது நாறினும் பூமிசைதல் செல்லாது
இழிநதவை காமுறூஉம் ஈப்போல்—இழிந்தவை
தாங்கலந்த நெஞ்சினார்க(கு) என்னாகும்? தக்கார்
தேனகலநத தேற்றசசொல் தேர்வு. [வாய்த

**தருமர் :**—என்பது. பொழிந்து—தேன [1]பொழிந்து; இனிது—இனிதாக; நாறினும—மணப்பினும்; [2]பூ மிசைதல் செல்லாது—பூவில் தேனை நுகரச்செல்லாமல்; இழிந்தவை—இழிவான துாக்கநதஙகளை, காமுறாஉம்—விரும்பிச் செல்லும; ஈ போல்-ஈயைப்போல; இழிந்தவை தாம் கலந்த நெஞ்சினர்க்கு—இழிவான குணஙகளையுடைய நெஞ்சினர்க்கு; தக்கார் வாய் தகுதியுடையார வாயிற(பிறககிற); [3]தேன் கலந்த தேறறம் சொல தோவு—தேனபோலும இனிய தெளிவுடைய சொல தெரிவுகள்; என் ஆகும? ஏதாம என்றவாறு.

ஈயானது துாக்கநதஙகளை விருமபுவது போல, அறிவில்லாரும தம அறிவினமைக்கு ஏறறபடி ஒழுகுவதனறிந தெரிந்து ஒருவா கூறியது கொணடு, நனனெறியின ஒழுகும படிக்கு அறிவுறா எனபதாம.

**பதுமனார் :**—எனறது. தேனைப பொழிந்து இனிதாக நாறினும பூவினை நுகாதல செல்லாது இழிந்தனவறறைக காதலிக்கும் ஈயேபோல, இழிந்த செயகைககண தாம கலந்த உள்ளத்தாரககு எப்பயனைச் செய்யும்? தககார வாயிற சொல்லிய தேன கலந்தாற போலும் துணிவை யுடைய சொலலாராய்ச்சி எனறவாறு.

மிசைதல—நுகாதல். எனனாகும்—என்னபயனைச் செய்யும. தேறறச சொல தோவு—தெளிவுடைய சொலலின் ஆராய்ச்சி.

**விளக்க உரை :**—எ-து. பொழிந்தினிது நாறினும பூ மிசைதல் செல்லாது—தேனகலந்து இனிது மணபபினும பூவில

---

[1]பொழிந்து—சொரிந்து.

[2]பூ—பூவில தேனுக்கு ஆவதால ஆகுபெயர்.

[3]தேம கலந்த எனபது பாடமாயின இனிமை கலந்த எனப பொருள கொளக.

தேன நுகரச செல்லாது; இழிநதவை காமுறாஉம ஈப்போல்—இழிவானதறகே ஆசைப்பட்டுச் செல்லும் ஈயே போல; இழிந தவை தாம கலந்த நெஞசினுர்க்கு என் ஆகும்—இழிவான குணஙகளைக் கலநத நெஞசினையுடையாாக்கு உளவாகா; தககாா வாயத தேனகலநத தேறறச் சொல் தோவு—தகுதியுடையாா வாயில் தேன் கலநதாறபோலுந தெளிவையுடைய சொற செறிவு கள என்றவாறு.

**கருத்து** :—அறிவிலலாதவா தாமும அறியாது, பிறா கூறவுங கொளளாது இழிநத பொருளகளையே விரும்புவா.

(௯).

260. கற்ருர் உரைக்கும் கசடறு நுண்கேள்வி
பற்ருது தனனெஞ்(சு) உதைததலான
—மற்றுமோர்
தனபோல் ஒருவன முகநோககித் தானுமோர்
புன்கோட்டி கொள்ளுமாம் கீழ்

**தருமர்** :—என்பது. கறருா உரைக்கும்—கறறறிநதோ ரால சொலலபபட்ட, கசடு அறு—[1]குறறமறற, நுண கேளவி—நுணணிய கேளவியானது, தன நெஞசு பறருது [2]உதைததலால—தனது நெஞசிற பறருது உதைததுப போதலால, கீழ—கீழாயினுன; மறறும தன்போல் ஒருவன—மறறும தனனைப போலவான ஒருவனை; முகம நோக்கி—முகம பாாதது, தானும ஓா புனகோட்டி கொளளும—தானும ஒரு புலலிய கோட்டியினைக கொண்டு அதனுலே பரவசனுயிருபபன எனறவாறு.

---

[1] குற்றம—ஐயம திரிபுகள்.

[2] உதைததலாவது—இகழ்ந்து ஒதுக்கிவிடுதல.

அறிவிலான புன் கோட்டி கொள்ளுதல அறிஞரிடததுளள பொருமை பறறி. அறிவிலான சொலலைக்கேட்கப் பலா கூடாமையின 'ஒருவன முகம நோக்கி' என்ருா. 'ஓா', 'ஆம்' இரண்டும அசைகள.

அறிவில்லாதார இவவகைததாய பழிபபுரைப் படுவர் என்பதாம்.

**பதுமனூர் :**—என்றது. நூல்களைக் கறறவாகள் சொல் லும குறறமறற நுணணிய சொறகளைக் கொளளாமல் தன் நெஞசு உதைததுப போதலால், மறறுந தனனைப போலவா னொருவன் முகததைப பாாததுத தானும ஒரு புல்லிய கோட்டி யினைக கொளளுமாம கீழ எனறவாறு.

கசடு—குறறம.

**விளக்க உரை :**—எ-து. கறறா உரைகளும் கசடறு நுண் கேளவி—கறறுணாநதோராற கூறப்பட்ட குறறமறற நுண்ணிய கேளவியினை; பறறாது தன்நெஞசு உதைததலால— தன நெஞசிற கொளளாமல உதைததுப போதலால்; மறறு மோா தன் போல் ஒருவன் முகம் நோககி—மறறுந தனனைப போலவானொருவன் முகததைப பாாதது; தானுமோா புன கோடடி கொளளுமாம கீழ—தானும் ஒருவழி புல்லிய கோட்டி யினைக் கொண்டு அதிலே பரவசனாயிருப்பன் கீழாயினன் எனறவாறு.

புன்கோட்டி கோடல், அழுக்காறறு மிகுதியால்.

**கருத்து :**—அறிவறறவா அறிவறறவருடன கலநது இகழசசி எயதுவா.

(ய).

---

## 27. *நன்றியில் செல்வம்.

**தருமர் :**—அஃதாவது. செல்வததான் உளள அனுபவங்

*நனறியில செலவம—தமக்கும் பிறாக்கும் நனமை பயவாத செலவம்.

களை அறியாதாரிடத்தும், தன் உறவின் முறையார் துன்பமுறுவ தனைக் கண்டுங் [1]கண்ணேடா திருப்பாரிடத்தும், ஒன்றினை வேண்டி இரந்தாாக்குக் கொடாது [2]துன்முகரா யிருப்பா ரிடத்தும், செல்வத்தைக் கொண்டு பிறாக்குக் கேடு செய்வா ரிடத்தும், நிறகுஞ் செல்வம்.

**பதுமனர் :—** அஃதாவது தன்னுளுள்ள அனுபவங்களை அறியாது இட்டு வைத்துத் துன்புறுவாரிடத்தும், தானும் உளதா யிருக்க ஒருபடியாலும் செலவிடாது துன்முகராயிருப்பா ரிடத்தும், தன்னைக் கொண்டு பிறாக்குக் கேடு செய்வாரிடத்தும் நிறகுஞ் செல்வம்.

## குறிப்பு :—

'நன்றியில் செல்வம்' :—

பரிமே :—அஃதாவது ஈட்டியாறகும் பிறாக்கும் பயன் படுதல் இல்லாத செல்வத்தினது இயல்பு. உடையானது குற்றம் செல்வத்தின்மேல் ஏற்றப்பட்டது. அதிகார முறைமை மேல் தோற்றுவாய் செய்தவதனால் பெறரும்.

மணக் —நன்றியில் செல்வமாவது அறத்தையும், இன்பத் தையும் பயவாத செல்வத்தின் இயல்பு கூறுதல். இது பண்பிலா தாாக்கு உளதாவது ஒன்ருதலின், அதன் பின் கூறப்பட்டது.

பரிதி —நன்றியில் செல்வமாவது தானும் புசியான் பிறருக்கும் ஈயான் செல்வம் நிலையில்லை எ-று.

—குறள். அதி. 101.

261. அருகல(து) ஆகிப் பலபழுத்தக் கண்ணும்
பொரிதாள் விளவினை வாவல் குறுகா

---

[1] கணணேடா திருப்பார—இரக்கங் கொள்ளா திருப்பார்.

[2] துனமுகர—கடுகடுத்த முகம.

பெரிதணியர் ஆயினும் பீடிலார் செல்வம்
கருதுங் கடப்பாட்ட(து) அன்று.

**தருமர்:**—என்பது. [1]அருகலது ஆகி—(தான் உறைகின்ற மரத்துக்கு) அருகாகவே நின்று, பல பழுத்தக் கண்ணும்—பலவாகப் பழங்களைப் பழுத்து விட்டதும், [2]பொரிதாள—பொரிந்த காலையுடைய; விளவினை—விளாமரத்தை; வாவல்—வெளவால், குறுகா—சேரா, (அதுபோல) பெரிது அணியர் ஆயினும்—மிகவும் அருகாக இருந்தாராயினும், பீடு இலார் செல்வம்—பெருமை யில்லாதார் செல்வம், கருதும் கடப்பாட்டது அன்று—(அவர் தருவர் என்று) நினைக்கத்தக்க (தன்மையது) ஒன்றுமில்லை என்றவாறு.

ஆதலால் அறிவில்லாதாருடைய செல்வம் ஒன்றுக்கும் பயன்படாமல் அவனுக்கும், மறுமைக்கும் இம்மைக்கும் ஆகாது கெடும் என்பதாயிற்று.

**பதுமனார்:**—என்றது. (வாவலுறையும் இடத்திற்கு) அயலது ஆகி, பல பழங்களைப் பழுத்தவிட்டதும் பொரிந்த காலையுடைய விளவினைப் பயன் கோடற் பொருட்டு [3]வாவல் சென்று அணுகா, அதுபோலத் தாம் இருந்த இடத்துக்கு மிகவும் அணியராயினும் பெருமை யில்லாதார் செல்வம், பிறரால் நச்சப்படுந் தன்மை யுடைத்தன்று என்றவாறு.

[1] அருகலது—அருகல் என்னும் தொழிற்பெயரின் அடியாகப் பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயர். இனி எதிர்மறை வினையாலணையும் பெயராக்கிக் குறையாதாய் என்றும் பொருள் கூறலாம்.

[2] பொரிதாள—பொருக்குள்ள அரை. பொரியரை, பொருட்டரை, கோழரை, முள்ளரை என்ற நால்வகையரையுள் 'விளாமரம்' பொரியரை யினையுடையது.

[3] வாவல் விளாமரத்தைக் குறுகாமைக்குக் காரணம் ஓடும் முள்ளும் இருப்பதால் பயன்படாமை நோக்கி.

பீடு இலார்—பிறர்க்குப் பயன்படும் பெருமை இல்லாதவர்.

**விளக்க உரை :**—எ-து. அருகலதாகிப் பல பழுத்தக் கண்ணும்—தானிருந்த மரத்துக்கு அருகே நின்று விளவு பல பழங்களைப் பழுத்த விடத்தும்; பொரிதாள் விளவினை வாவல் குறுகா—பொரிந்த தாளையுடைய விளவை வாவல் சென்று சேராது; (அதுபோல) பெரிது அணியராயினும்—மிகவும் அண்ணியராயினும்; பீடிலார் செல்வம்—பெருமையில்லாதார் செல்வம்; கருதும் கடப்பாட்டதன்று—அவர்தருவரென்று நினைக்கத் தக்கது யாதானும் இல்லை என்றவாறு.

**கருத்து :**-பெருந்தன்மையில்லாதவரது செல்வம் எளியவர்க்குப் பயன்படாது.

## ஒப்புமைப் பகுதி :—

"நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று".

—குறள் 1008

## குறிப்பு :-

எளியவர் பீடிலார் செல்வத்தை விட்டுப் பலவிடத்துஞ் சென்று பலன் கொள்வர் ஆதலின் அன்னார்க்கு வௌவாலை உவமை ஆக்கினார்.

(க).

262. அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ ஆயினும்
கள்ளிமேல் கைந்நீட்டார் சூடும்பூ அன்மையால்
செல்வம் பெரிதுடையார் ஆயினும் கீழ்களை
நள்ளார் அறிவுடை யார்.

**தருமர்** :—என்பது. [1] அள்ளிக் கொள்வ அன்ன — அள்ளி எடுக்கலாய் இருக்கின்ற; குறு [2] முகிழ ஆயினும்—குறிய முகைகளையுடையவாயினும்; சூடிப்பூ அன்மையால்—(அவை) சூடிக்கின்ற பூ அல்லாமையாலே, கள்ளிமேல் கை நீட்டார்—(யாரும்) கள்ளிமேலே கையைச் செலவிடார்; (அதுபோல) செல்வம் பெரிது உடையர் ஆயினும்—மிகுந்த செல்வத்தை உடையராயினும்; [3] கீழ்களை—கீழ் மக்களை; அறிவுடையார் நள்ளார்—அறிவுடையார் நட்புக் கொண்டிரார் என்றவாறு

கீழ் மக்களுக்கு மிகுதியான செல்வம் உண்டாயினும் தமக்குப் பின்னுக்கு உதவும்படி, அச் செல்வத்தை விடும் இடம் அறிந்து விட்டு இருமையும் பெறுமாற கெடுவர்; அதனால் அவர் செல்வத்தைக் கள்ளிப்பூவாக இகழ்ந்து கூறினர்.

**பதுமனர்** :—என்றது. அள்ளிக் கொள்ளலாம்படி செறிந்த மொட்டுக்களை யுடையவாயினும், கள்ளிப்பூ மேற் கை நீட்டார் சூடத்தகும் பூவன்மையான்; அதுபோலச் செல்வம் பெரிதுடையராயினும், பிறர்க்குதவாக கீழ்களைச் சென்று சேரார் அறிவுடையார் என்றவாறு.

**விளக்க உரை** :—எ-து. அள்ளிக் கொள்வன்ன—அள்ளிக்கொள்ளும்பாப் போல, குறு முகிழ ஆயினும்—குறிய முகைகளை யுடையவாயினும்; கள்ளிமேல கைநீட்டார் சூடும்பூ அன்மையால்—முடிக்கத் தக்கது அல்லாமையாற கள்ளிப்பூவைக் கைநீட்டிப் பறியார், (அதுபோல) செல்வம் பெரிது உடையராயினும்—செல்வம் மிகவுடையராயினும்; கீழ்களை நள்ளார் அறிவுடையார்—கீழ் மக்களைச் சென்று சேரார் அறிவுடையார்

[1] அழகாகவும் அதிகமாகவும் அரும்பியிருத்தலின் 'அள்ளிக் கொள்வன்ன' என்றார்.

[2] முகிழ—அரும்பு

[3] கீழ்கள—பெற்ற செல்வம் பிறர்க்கு உதவாத கீழ் மக்கள.

என்றவாறு.

**கருத்து:**—கீழோர் பெற்ற செல்வம் பயன்படாச் செல்வமாகும்.

(உ).

263. மல்கு திரைய கடற்கோட்டு இருப்பினும்
வல்லூற்(று) உவரில் கிணற்றின்கீழ்ச்
சென்றுண்பர்;
செல்வம் பெரிதுடையர் ஆயினும், சேட்சென்றும்
நல்குவார் கட்டே நசை.

**பதுமனார்:**—என்பது மல்கு [1]திரைய—மிகுந்த திரைகளையுடைய; கடல் கோடு இருப்பினும்—கடற் கரையின் மேலே இருந்தாராயினும், [2]வல் ஊற்று—வலிதாகத் தோண்டின (நீரூற்றை யுடைய); உவர் இல—(உப்பில்லாத); கிணற்றின் கீழ் சென்று—கிணற்றினகணை சென்று; உண்பர்—நீரை உண்பர்; (அதுபோல) செல்வம் பெரிது உடையர் ஆயினும்—மிகுந்த செல்வத்தையுடையாராயினும், (அவரை நீங்கி) சேண் சென்றும்—தூரத்திலே சென்றாயினும், நல்குவார் கட்டே நசை—தனக்கு உடன் உதவுபவர் கண்ணே [3]நசை உண்டாகப் பெறுவர் என்றவாறு.

அறிவின்றி யாவராலும் நச்சப்படாதார், தமக்கு அருகாமையாய் மிக்க செல்வத்துடனே இருப்பினும், அவரது லோபமாகிய அறிவின்மை நோக்கி அவரிடத்து இரவாது, தனக்கு உடன் கொடுப்பார் தூர தேசத்திலே இருப்பினும் அவரை நச்சிச் செல்வர் எனவே நன்றியில்லார் செல்வத்துக்கு உவர்க்கடலை

[1] திரை—அலை

[2] தோண்டத் தோண்ட நீர் ஊறுதலின் 'வல்லூறு' எனப்பட்டது; விரைவில் நீர் ஊறும் ஊற்று என்னுமாம்

[3] நசை—விருப்பம்.

உவமையாக்கி இழிவு கூறியது.

**பதுமனார்:**—என்றது. மிக்க திரைகளையுடைய கடலின் மருங்கே இருந்தாராயினும், வல்லூறறை யுடைத்தாய உவரினறி யிருந்த கிணற்றினகட் சென்றுண்பர். அதுபோலத் தமக்கு அயலிருந்தார் செல்வம் பெரிதுடையாராயினும நச்சாது, சேய்த தாகச் சென்று நல்குவாரகண்ணே நசை யுண்டாகப் பெறுவர் என்றவாறு.

கிணற்றின கரையிற் சென்று எட்டிப் பார்த்தால், நீர கண்ணுக்குத் தெரியாததே ஆயினும அதனை ஓர் உபாயத் தால முகந்துண்பர். அதுபோலத் தமக்கு அணித்தாயிருந்தா ராயினும செல்வத்தைச் சேய்த்தாக விட்டுவைத்து இருந்தார், செல்வத்தை அணித்தாகக்கொண்டு சென்றார்க்கு வறுமையைக் களைவராயின அவரிடத்து நன்றி யாதாம என்று **உரைப்பாரும் உளர்.**

**விளக்க உரை:**—எ-து. மல்கு திரைய கடற் கோட்டு இருப்பினும—மிக்க திரைகளையுடைய கடற்கரையிலே இருந்தா ராயினும், வலலூற்று உவரில கிணற்றின கீழச் சென்றுண்பர்— வலிதாகத் தோண்டின கிணற்றில் ஊறும உவரிலா நீரைச் சென்றுண்பர், (அதுபோல) செல்வம பெரிதுடையர் ஆயினும —செல்வம மிக வுடையாராயினும்; சேட் சென்றும நல்குவார் கட்டே நசை—தூரத்திலே சென்றாயினும கொடுக்கிறவ னிடத்திலே நச்சி வேண்டக் கடவர் என்றவாறு.

**ஒப்புமைப் பகுதி :-**

"உவர்க்கட லன்ன செல்வரு முளரே
கிணற்றூற் றன்ன நீயுமா ருளையே".

—புறம

"கடல்பெரிது
மண்ணீரும ஆகாது அதனருகே சிறறூறல்
உண்ணீரும ஆகி விடும்".

—மூதுரை 12

## குறிப்பு :—

நசை நலகுவார கட்டே எனக கொண்டு கூட்டிக தககோர் விருபபம நனகு உதவுவார கணணதே ஆகும எனறு உரை கூறலும் ஒன்று. உபபாயிருககலால கடலநீர பயன்படாமை போல உலோபஞ செயதலால கீழோர செலவம பயனபடா தொழிகின்றது என்க.

அறிவிலார செலவம அவரது உலோபததால தககோரககுப பயன்படுவதாகாது.

(ந.)

264. புணாகடல்சூழ் வையததுப் புண்ணியமோ வேறே
உணர்வ(து) உடையார் இருப்ப—உணர்விலா
வட்டும் வழுதுணையும் போல்வாரும் †வாழபவே
பட்டுந் துகிலும உடுதது.

**தருமர் :**—எனபது. புணா கடல்சூழ வையதது—பொருநதிய கடலாற சூழபபட்ட வையகததிலே, [1] புணணியமோ வேறு—புணணியமானது வேறுபடடிருககும; (அஃது எபபடியெனில்) உணாவது உடையாா—(நலலன உணருந) அறிவுடையாா; இருப்ப—மிடிததிருகக, உணாவு இலா—அறிவிலலாத; [2] வட்டும வழுதுணையும போலவாரும்—உருக்கு வட்டுபபோலும வழுதுணஙகாய போலும இருபபாரும, பட்டும [3] துகிலும

†வாழவரே எனறும பாடம. வாழ்பவே—வாழ்வுடையாாவா என்றமாம.

[1] புணணியம—முனவினை நல்வினைப பயன

[2] வட்டு—கறிமுளளிச செடி எனபாரு முளா். வழுதுணை—கததரிசசெடி.

[3] துகில—நூலாடை.

உடுத்து—பட்டு முதலானவை உடுத்துப் (பணிகளைப் பூண்டு); வாழபவே—வாழக கடவரோ ? என்றவாறு.

உருக்கு வட்டு அடிகது நீட்டிஞாக்கனறிப பயன்படாது. வழுதுணஙகாய மிகுநதிருபபினும அது கொளவாரை முளளால் ஊறு(செயயும). அநதத தனமையாா தமமைப [1]பிடித்தாாக கனறித தமககு மறுமைககு உதவுவதாகத தமது செல்வத்தை அறநெறிகளிற செலுததாா, அஃது அறியாமை ஆதலால் அவா செலவம் பயனபடுவதலல. யாவாககும உதவவல்ல அறிவுடையாா மிடிததிருக்க அறிவிலலாதாா வாழக்கடவரோ ? ஆகையால புணணியமானது வேறுபாடாயிருககும எனறாா.

புணணியம வேறுபாடாவது :—நனறியில செலவமுடையாா முறபிறபபிலே செல்வததுக்குத தவம பணணி அதனை ஈணடும செலுததி மறுமைககு உறுதிதேடும அறிவிறகுத தவஞசெயதா அறநெறியிறறிலலை. அதனலை அவாககு அசசெலவததால் எயதும பயன ஒனறுமிலலை என்று இழிவாகக கூறியது.

**பதுமனார் :**—எனறது. பொருநதிய கடல்சூழநதுளள வையகத்ததுளளாரது புணணியம, அறிவு முதலாயவறறோடு பொருநதாதிருக்கும், அஃது எனனையெனின உணாசசியுடையாா [2]ஒழிய, உணாவில்லாராய வடடும வழுதுணையும போலச சிறியாரும படடுந துகிலும உடுதது வாழவாா (ஆதலின) எனறவாறு.

வட்டும வழுதுணையும—இருமபிற கழிநத [3]கிட்டமும, வழியிறபொருநதிய பருககைக கலலும.

**விளக்க உரை :**—எ-து. புணா கடல் சூழ வையததுப் புணணியமோ வேறே—பொருநதின கடல சூழநத வையகததுப்

---

[1] பிடிததாா—தனவசப்படுததியவா

[2] ஒழிய—வளம இலலாதவாாய ஒழிய.

[3] கிட்டம—தரு

புண்ணியம் வேறுபட்டிருக்கும்; (அஃதெப்படி யென்னில்) உணர்வது உடையார் இருப்ப—அறிவுடையார் மிடித்திருக்க, உணர்விலா வட்டும் வழுதுணையும் போல்வாரும்— அறிவில்லாத வட்டுப் போலும் வழுதுணங்காய் போலும் காலுங் கையும் உடையராய் இருப்பாரெல்லாம், வாழ்பவே பட்டுந் துகிலும் உடுத்து—தாம் பட்டும் துகிலும் உடுத்துவாழ்வர் (ஆதலின்) என்றவாறு.

வட்டென்றார் அடியும் தலையும் இல்லாததுகொண்டு வழுதுணங்காய் என்றார் இலைமறை காயுங் *கொத்துமாய் இருப்பது கொண்டு.

**கருத்து:**—அறிவிலார் நல்வினையாற் செல்வம் பெற்று வாழினும் அவர்க்கு அச் செல்வத்தாலாகிய பயன்(ாகை)யாதுமில்லை.

## ஒப்புமைப் பகுதி :—

"இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு".

—குறள். 374.

"உரைசான்ற சான்றோ ரொடுங்கி யுறைய
நிரையுள ரல்லார் நிமிர்ந்து பெருகல்
வரைதாழ் இலங்கருவி வெற்ப! அதுவே
சுரையாழ அம்மி மிதப்பு"

—பழ. 125.

[1]'துகில்' :—

"பூந்துகில்"

—நெடுநல். 145

"புடைவீழ் நறுந்துகில்"

—நெடுநல் 181.

[1] ஆடை வகையுள் உயர்ந்ததனைத் 'துகில்' என்பர்.
*'கொத்தையும்' உரைப்பாடம்.

குறிப்பு :—

அறிவுடையார் வறியராகவும் அறிவிலார செல்வராகவும இருததறகு அவரவர் ஊழ்வினையே காரணமாகும.

"செல்வததினைப் படைததலும காத்தலும பயன் கோடலும அறிவுடையாராககலலது இயலாவனறே, அவவாறனறி அறிவுடையார வறியராகவும ஏனையார செலவராகவும காண்டலான், அறிவுடையராதறகு ஆகும ஊழ் செல்வமுடையராதறகு ஆகாது. செலவமுடையராதறகு ஆகும் ஊழ அறிவுடையராதறகு ஆகாது எனறதாயிறறு" எனற பரிமேலழகர் உரை ஈணடு நினைததறகுரியது.

(௪).

265. நல்லார் நயவர் இருப்ப நயமிலாக்
கல்லாக்கொன ருகிய காரணம்—தொல்லை
வினைப்பயன அல்லது வேல்நெடுங் கண்ணாய்!
நினைப்ப வருவதொன(று) இல்.

**தருமர் :**—என்பது. [1]வேல் நெடு கண்ணாய் !—வேல போலும் நீண்ட கண்ணினையுடையாய் !; நல்லார் நயவர்—(அறிவால) நல்லராய் நயகுணஙகளையுடையவா; இருப்ப—(வறுமையராய) இருபப; நயம இலா கலலாககு—நயகுணமுங கலவியும இலலாதாாககு; ஒனறு ஆகிய காரணம—ஒரு செல்வம் ஆகைக்குக் காரணம (யாதோ என்னில்); தொல்லை வினை பயன் அலலது—பழவினைப் பயனல்லாமல; [2]நினைப்ப வருவது ஒன்று இல்—நினைககத தக்க காரியம வேறொன்றுமில்லை எனறவாறு.

நல்லாருமாய நயததினையும உணரததககவா வறுமையராய இருபபது, முறபிறப்பிற கலவிக்குத தவம் பண்ணிச்

---

[1] இச்செயயுள பெண்ணை முனனிலைப் படுததிக் கூறியதால் மகடூஉ முன்னிலை.

[2] நினைப்ப வருவது ஒனறு இல்—ஆராய்ந்து காணவலல பெரிய காரணம ஒனறுமில்லை.

செல்வத்துக்குத் தவம் பண்ணிஞரில்லை; அதஞல் 'வினைப்பயன் என்ருர். கல்வியும் நயகுணமும இல்லார முறபிறப்பில் செல்வத்துக்கு மாததிரம் தவம் பண்ணி, இப்பிறபபிற செல்வம் பெறறதன்றி அதனல அவாக்கு வரும் பயன் ஒன்றுமிலலை என்பதாம்.

**பதுமனர்** :—என்றது. அறிவால் நல்லாரும் நயமுடையாருமாய இருப்பாா ஒழிய, [1]ஈரம் இல்லாராய அறிவும் இல்லாா ஆயினார்கருச் செலவம் ஆகிய காரணம் என்னெனில், முன் செயத நல்வினைப பயனலலது ஆராயுங்கால் வேல் நெடுங கணணுய! மறறு நினைபப வருவதொரு காரணம் இல்லை என்றவாறு.

**விளக்க உரை** :—எ-து. நல்லாா நயவா இருப்ப—நல்லவருமாய நயத்தினையும உணரததக்காா வறியராய இருககு; நயம் இலாக கல்லாாககு ஒனறு ஆகிய காரணம—நயமிலராயக் கல்வியும் இலாாயிருபபார்க்கு ஒருசெல்வம ஆகைக்குக்காரணம; தொலலை வினைபபயன அலலது—பழைய வினைபபயன் அலலது; வேல நெடுங்கணணுய!-வேல போலும நெடிய கணகளையுடையவளே!; நினைபபவருவது ஒனறில—நினைககததகக காரியம வேருென்றுமில்லை எ-று.

**கருத்து** :—அறிவொழுககம் இல்லாதவா செலவம பெறக காரணம நல்வினை எனறு கருதி அறிஞா அதனை மதியாா.

## ஒப்புமைப் பகுதி :—

"வழுங்காா வளியிலாா வாயசசொல்லும பொலலாா
உழுந்தொருவாக குறறல உதவலு மிலலாா
இழுந்தநில செலவம பெறுதலும இனனா
பழுந்செயபோா பினறு விடல"

—பழ. 292.

(ரு).

[1] ஈரம—அனபு.

266. நாருத தகடேபோல் நனமலர்மேற் பொற்
நீருய நிலத்து விளியரோ—வேருய [பாவாய்!
புன்மககள் பககம் புகுவாய நீ பொனபோலும்
நனமககள் பக்கந துறந்து.

**தருமர்** :—என்பது. [1]நாரு தகடே போல்—பொன் தகடு போலும இதழினையுடையாய; நல் மலா மேல—நலல தாமரை மலாமேல இருக்கும; [2]பொன பாவாய!—பொலிவினையுடைய பாவாய! நீ—; பொன் போலும—பொனனைபபோல; நல மக்கள் பககம துறநது—குறறமறற அறிவினையுடையாா இடததைவிட்டு; வேறு ஆய— குணம வேறுபடட; புலமககள பககம புகுவாய—புல்லிய மனிதாிடததிலே சென்று புகுவை; [ஆதலால்] நிலதது நீறு ஆய் [3]விளியரோ—நிலத்தின்கண்ணே விழுநது பொடியாகக கெட வேண்டாமோ? எனறவாறு.

அரோ—அசை. நாருத் தக(டேபோல நனமலா)—பொற றாமரைப் பூ; அல்லதூஉம நாருத [4]புலவிதழுபோல ஒருவாககும பயன்படாதாாிடதது விடாமல் நினறுயே நல்லமலாமேற்பாவாய! எனறுமாம. எனவே பூமகளை இகழுமாபபோல நனறியில்லாதாா செல்வததை இகழ்ந்தவாறு

**பதுமனார்** :—எனறது. நாருத இதழே போல் நனமலா மேற பொறபாவாய! பிறாககுப பயனபடாது நீருய நிலததினை

---

[1] நாருததகடு—மணம் வீசாத பொன் தகடு

[2] பொனபாவாய் எனறது திருமகளை, செலவமாகிய பாவை போல்வாள் எனறுமாம. இப்பொருளுககு னமலாமேல நாருததகடேபோல் எனக் கூட்டிய பொருள் கொள்க. பொன பாவை எனபது யாவரும விழைபும பொலிவினைப பெற்றும அதற்கு ஏற்ற குணஞ்செயல் திருமகட்கு இல்லை எனபதைச சுட்டி நின்றது.

[3] விளியரோ—விளியியா எனபது இடை குறைந்து நின்றது எனினுமாம்.

[4] புலவிதழ்—புறவிதழ்

கண் விளிவாயாக !; நீ பொன்போலும் நன்மக்கள் பக்கத்தை விட்டு வேறாய் புன்மக்கள பக்கம புகுவாய் ஆதலால் என்றவாறு.

நாறுததகடு—பொறறகடு. நனமலாமேல் பொறபாவாய்—பொறறாமரையினமேல இலககுமி என்றுமாம. வேறாய புன மககள—தனமததின் வேறுபட்ட அறிவுடைய கீழமககள. அரோ—அசை.

**விளக்க உரை :**—எ-து. நாறுத தகடேபோல் நன மலாமேல பொறபாவாய!—நாறுத இதழ்போலும நலல மலரின மேல இருக்கும பொலிவினையுடைய பாவாய !, நீறாய நிலதது விளியரோ—நிலத்தினகணணே நீ பொடியாய விழுநது கெட்டுப போக வேணுமே, வேறாய புனமககள பககம புகுவாய—குணம வேறுபட்டு ஒருவாககும பயனபடாத புல்லிய மனிதரிடததிலே புகுதுகின்றாய; நீ பொனபோலும் நனமககள பககம் துறநது—நீ பொனனைபபோலும நலல மனிதரிடததை விட்டு எ-று

நாறுததகடு—பொறறகடு.

**கருதது** —நனறியிலலாா செலவம பயனபடாமையால மதித தறகுரியதன்று.

## குறிப்பு :—

நாறுததகடேபோல என்ற உவமை 'நனமலரோடு இயைவ தன்றி 'விளி' எனபதனோடும, 'புகுவாய' எனபதனோடும இயையுமாறு நயமபெற அமைநதுளளது காணக.

(சு).

267. நயவார்கண் நல்குரவு நாணின்று கொல்லோ?
பயவார்கட் செல்வம பரமபப்—பயினகொல்?
வியவாயகாண் வேற்கணணாய் ! இவ்விரண்டும்
நயவாது நிறகும நிலை. [ஆஙகே

**தருமர்:**—என்பது. வேல் கண்ணாய்!—வேல்போலும் கண்ணினை உடையவளே!; [1] நயவார்கண் நல்குரவு—நயமுடையவரிடத்து நிற்கும் வறுமைக்கு; நாண் இன்று கொல்லோ?—[2] நாணம் இல்லையோ?; பயவார்கண் செல்வம்—பயன்படாதாரிடத்து நிற்குஞ்செல்வமானது; பரம்ப [3] பயின் கொல்?—(பரம்புதற்குரிய) உரைகாரர் கையிற்பிசினோ?; இரண்டும்—(நல்குரவு செல்வம் ஆகிய) இவ்விரண்டும்; ஆங்கே—[4] அவ்விருவரிடத்தும்; நயவாது நிற்கும் நிலை—ஆராயாது நிற்கும் நிலையை; [5] வியவாய் காண்—வியக்கின்றாய் இல்லைகாண் என்றவாறு.

இது நன்றியில்லாதார் செல்வத்தை இகழ்வார், நன்றியுடையார் வறுமையையும் உடன்கூறி அறிவுறுத்தியது.

**பதுமனார்:**—என்றது. ஈரத்தையுடையார் மாட்டுச் சென்ற வறுமை நாணின்று கொல்லோ? ஒருவர்க்கு ஒன்றை உதவாதார் மாட்டுச் செல்வம், உரைகாரற்றப் பிணிக்கப்பட்ட பயின்கொல்லோ? இவ்விரண்டும் ஆங்கே ஆராயாது நிற்கும் நிலையை வேற்கண்ணாய! வியக்கின்றிலைகாண் என்றவாறு

கொல்—அசை. ஓ—என்றது சான்றோர் நொந்து சொல்லுதல். பரம்பப் பயின்—உரைகாரற்றப் பிணிக்கப்படும்

---

[1] நயவார்—நயமுள்ளவர் அஃதாவது உதவுங்குணம் உள்ளவர் இனி, நயவார் என்பதற்கு பிறரிடம் தாழ்ந்து இரவாத நன்மக்கள் என்றும், செல்வத்தை ஒரு பொருளாக் விரும்பாதவர் என்றும் பொருள் கொள்ளலாம்

[2] நாணம்—தகாதன செய்தலில் மனம் ஒடுங்குதல்; இங்கே நல்குரவு, தான் சேரத்தகாத நல்லோரிடம் நிலையாகச் சேர்ந்து துன்புறுத்துதலால் அதனை 'நாணின்று கொல்' என்றார்

[3] பயின்—பிசினதலை. "சிறு காரோடன் பயினொடு சேர்த்திய, கற்போற் பிரியலம்" என்ற அகநானூற்றிலும் காண்க.

[4] பயன்படும் நன்மக்கள், பயன்படாத கீழ்மக்கள்.

[5] வியவாய—வியப்பாயாக என்றுமாம்.

பிசின். வேற்கண்ணாய—வேல்போன்ற கண்ணையுடைய தோழி; இலக்குமி என்றுமாம். நயவாது—தன்னை விரும்பாது. இவ்விரண்டும் ஆங்கே நயவாது நிற்கும் நிலை — நல்குரவும் செல்வமும் ஆகிய இவ்விரண்டும் ஆங்கே விரும்பாது நிற்கும் நிலை.

**விளக்க உரை:**—எ-து. நயவாக்கண் நல்குரவுநாணின்று கொல்லோ?—நயமுடையவரிடத்து நிற்கும் நல்குரவுக்கு நாணமில்லையோ?; பயவாக்கண் செல்வம் பரம்பப் பயின்கொல்?—பயன்படாதாரிடத்து நிற்கும் செல்வமானது, உரைகாரருடைய பசினோ?; வியவாய்காண் வேற்கண்ணாய்!—வியக்கின்றாயில்லை வேல் போலுங் கண்ணையுடையவளே!; இவ்விரண்டும் ஆங்கே நயவாது நிற்கும் நிலை—இவர்கள் இருவரையும் ஆராயாதே நிற்கும் நிலையை வியக்கின்றாய இல்லையோ? என்றவாறு.

விசாரியாமல் நிற்கையாவது ஏற்கிறவாறு துன்பங்கண்டு நிற்றல்.

**கருத்து:**—நன்றி யில்லாதாரிடத்தமைந்த செல்வம் இனிமை பெறாது.

## மேற்கோள் பகுதி :—

நச் —மேற்கத்துவாய் மோனைக்கு 'பயவாக்கட் செல்வம் பரம்பப் பயின்கொல்' என்பதனை மேற்கோளாகக் காட்டுவர்.
—தொல். செய் சூ 92.

## ஒப்புமைப் பகுதி :—

"நயனுடையான் நல்கூர்ந்தா னாதல்"
—குறள். 219.

(எ).

268. வலவைகள் அல்லாதார் காலாறு சென்று
கலவைகள் உண்டு கழிப்பர்—வலவைகள்
காலாறுஞ் செல்லார் கருணையால் துய்ப்பவே
மேலாறு பாய விருந்து.

**தருமர்** :—என்பது. ‡வலவைகள் அல்லாதார்—நாணிலி களை அல்லாதார்; கால் ஆறு சென்று—(தம் கால்களால்) தூரங் களிலே சென்று; *கலவைகள் உண்டு—(பெற்ற பெற்ற இடங் களிலே) சோறாகிலும் கூழாகிலும் உண்டு; கழிப்பர்—நாளைக் கழிப்பர்; வலவைகள்—நாணமில்லாதார்; [1]கால் ஆறும் செல் லார—(காலால்) தூரத்திலும் செல்லாராய்; இருந்து—(தம் இல்லத்துள்ளே அடைத்து) இருந்து, [2]மேல் ஆறு பாய—புழுக் கத்தினால் [உடல்மேல் ஆறுபோல] வேர்வு நீர் மிகுதியாய் வடிய, கருணையால் துய்ப்ப—பொரிக்கறியுடனே கூடிய சோற்றை உண்பர் என்றவாறு.

இது நன்றியில் செல்வத்திற்குப் பொருந்துவது எப்படி எனனில், நாணமுடையவர் வறுமையுற்றால் ஏற்கிறவன் முகத் துக்கு, அஞ்சித் தமதுயிரை வலிந்து போக்காமல், தூரதேசங் களிலேபோய் இரந்து உண்டாயினும் ஒழுக்கமுடன் வாழ்நாளைக் கழித்துவிடுவர். நாணமில்லாதார் தமமுடைய செல்வத்தைப் பிறர்க்குப் பயன்படாமல் அடைத்துவைத்து, வேர்ப்பு வடிய இருந்து உண்டு தமது வயிறு ஒன்றினையும் வளர்ப்பதனால், அவர் செல்வத்தை இழிவாக்கி நன்றியில் செல்வத்திற் சேர்க்கப் பட்டது.

---

‡வலவை—பேய்த்தன்மை என்றுமாம்.

* பலரிடத்தும் இரந்து பெற்ற பலவகைச் சோறுங் கறியும் விரவப் பெற்றது ஆதலின் அதனைக் 'கலவை' என்றார்

[1]காலால் வழி நடவார் எனவே, ஊர்திகளில் இவர்ந்து பெருமிதத் துடன் செல்வர் எனபது பெறப்படும்

[2]மேல் ஆறு பாய கருணையான விருந்து துய்ப்ப—என்ப பதம் பிரிந்து மேனமேலும் நெய்யாறு, பாலாறு, தயிராறு பெருகக் கறிகளுடன் விருந் துண்டு மகிழ்வர் என்று பொருளுரைத்தலும் ஒன்று.

**பதுமனார்** :—என்றது. நாணிலிகள் அல்லாதார் வறுமை யுறுதல் பல நாடுகளினும் சேய்த்தாகச் சென்று, இரந்து பெற்ற கலவைகளை உண்டு பொழுதுபோக்குவர். நாணிலிகள் காலாறுஞ் சென்று முயன்று உண்ணாதே செல்வராயினாரை அடைந்து கருனைக் கறியொடு கூட வுண்பர்; தம் உடம்பின்மேல் ஆறு போல வோப்புநீர் [1]வார இருந்து என்றவாறு.

வலவை—குற்றம். கலவை—பல இடங்களினும் இரந்து பெற்ற கலவை. தாம் முன்னைச் சென்னத்திலே செய்த நல வினையாலே ஐசுவரியம் பெற்றால், ஓரிடத்திருந்து முதன்மைக் குறிபுடனே உண்பர் மேலாறு வார இருந்து என்றுமாம்.

**விளக்க உரை** :—என்பது. வலவைகள் அல்லாதார் காலாறுசென்று—நாணிலிகள் அல்லாதார் தூரதேசத்திலுஞ் சென்று; கலவைகள் உண்டு கழிப்பர்—கலவன்ன அட்காயினும் அருந்தி நாளைக்கழித்து வருந்தியிருப்பர், வலவைகள்—நாண மிலலார்; காலாறும் செல்லார்—தூர தேசத்திலும் போகாராய்; மேலாறு பாய விருந்து—விருந்துவாராமைக்குத் தம வாய்தலை யும் அடைத்து வைத்து புழுக்கத்தின்ற றம முடம்பினமேல ஆறுபோல வோப்பு நீர் வாரா இருநதே, கருனையால் துய்ப பவே—கருனைக்கறியோடும் உண்பர் என்றவாறு.

(நன்றியில்) செல்வத்துடனே சேர்க்கப்பட்டது என னெனில் அடைந்திருந்துண்பவன விருந்துக்கஞ்சி என்பது கொண்டு.

**கருத்து** :—நாணமிலலாக கீழோர் செல்வம், அவர் பொருட்டே விருந்துக்கஞ்ச செல்வமாகும்.

(அ).

[1] வார—வழிய.

269. பொன்னிறச் செந்நெற் பொதியொடு பீள்வாட
மின்னொளிர் வானம் கடலுள்ளுங் கான்றுகுக்கும்
வெண்மை யுடையார் விழுச்செல்வம் எய்தியக்
வண்மையும் அன்ன தகைத்து. [கால்

**தருமர் :**—என்பது. பொன் நிறம்—பொன்போலும் நிறத்தையுடைய; [1] செந்நெல்—செந்நெற் பயிரானது; [2] பொதியொடு பீள்வாட—(மேல் பொதிந்த தாளுடனே) கருவும் பசுஞ் சடைந்துவாட; மின் ஒளிர் வானம்—மின்னை விட்டு விளங்குகின்ற மேகமானது; [3] கடலுள்ளும் கான்று உகுக்கும்—கடலுக் குளேயும் (நீரை வெளிப்படுத்திப்) பெய்து விடும், வெண்மை உடையார்—[4] வெளிறான மனிதர்; விழுச்செல்வம் எய்தியக்கால்—மிகச் செல்வத்தைப் பெற்றகாலத்து; வண்மையும்—அவருடைய ஒப்புரவும்; [5] அன்ன தகைத்து—அத்தன்மையாய் இருக்கும் என்றவாறு.

பயிர் வாடுகையிலே கடலிலே பெய்த மேகம்போல அறிவில்லாதார் பெற்ற செல்வத்தின் ஒப்புரவு நன்னெறிக்கட் சென்று பயன்படாது என்பதாம்.

**பதுமனார் :**—என்றது. பொன்போலும் நிறத்தினையுடைய செந்நெல்லின் கதிர்கள் கருவொடு வாடாநிற்ப, மின்

---

[1] செந்நெல்—ஒருவகை உயர்ந்த நெல்.

[2] பொதி—கதிர் என்றுமாம்.

[3] கடலுள்ளும் என்றது களர் நிலத்தைக் குறித்தபடி. மேகம், மழை வேண்டும் செந்நெல் நிலத்திலே பெய்யாது, அதனைவிட்டுக் கடலிலும் களரிலும் நீரை வெளிப்படுத்தி வீணே சொரிதலால் 'கான்று உகுக்கும்' என்றார்.

[4] வெளிறு—அறிவின்மை.

[5] தக்க இடத்தில் சொரியாமல் தகாத இடத்தில் மேகம் நீரைச் சொரிதல் போல, தகுதியுடையாருக்கு உதவாமல் தகுதியில்லார்க்கே அறிவிலார் தம் செல்வத்தைத் தொலைப்பர் ஆதலால் 'அன்னதகைத்து' என்றார்.

ஞெளிரவானம், பயனின்றியே கடலுள்ளே நிறைய நீரைப் பெய்து உகுக்கும்; அறிவில்லாதார் சீரிய செல்வம் பெறுதல் அவர் வரிசையும் அப்பெற்றிதே என்றவாறு.

பீள—கரு. வெண்மை—அறியாமை. வரிசை–கொடை

**விளக்க உரை** :—எ-து. பொன்னிறச் செந்நெல் பொதியொடு பீள்வாட—பொன்போலும் நிறத்தையுடைய செந் நெல் பஞ்சடைந்து கருவுடனே பட்டுவாட; மின்னொளிர் வானம் கடலுள்ளும் கான்று உகுக்கும்—மின்னை விட்டு விளங்குகிற மேகமானது கடலுள்ளும் பெய்துவிடும், வெண்மை யுடையார் விழுச் செல்வம் எய்தியக்கால்—வெள்ளறிவுடைய மனிதர் விழுமிய செல்வத்தைப் பெற்ற காலத்து; வண்மையும் அன்ன தகைத்து—அவருடைய ஒப்புரவும் அப்படி ஒத்த தகுதியுடைய தாம் என்றவாறு

கருத்து —அறிவிலார் தாம்பெற்ற செல்வத்தால் செய்யும் உதவி நல்வழியிற் பயன்படாது.

## ஒப்புமைப் பகுதி :-

"ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை".

—குறள். 837.

"விரும்பி அடைந்தார்க்கும் சுற்றத் தவர்க்கும்
வருந்தும் பசிகளையார் வம்பர்க் குதவல்
இரும்பணைவில் வென்ற புருவத்தாய்! ஆற்றுக்
கரும்பனை யன்ன துடைத்து".

—பழ. 286.

"கழிமகிழ்வுடையார் கெடுதிகொண்டாக்கம் கைவிடுவார்
செல்வமுறினும்
கொழிபயன் எய்தார் பிறர்க்கலால் தமக்கும் கொடாரிவர்
பேதையர் ஒழிக".
—விநா. அரசி. 130.

"கதிர்க்குலம் செந்நெல் வாடக் கார்க்குலம் கைக்கொண்
கொதிதிரைக் கடலிற பெய்யும் கொள்கை போல் ... [டோடிக
மதிதனம் படைத்த போகள வாடினோ முகததைப பாரார
நிதிமிகப் படைத்தோர்க் கீவார நிதியிலாரக கீய மாட்டார்".
—விவேகசிந்தாமணி.

(கூ).

270. ஓதியும் ஓதார் உணர்விலார் ஓதாதும்
ஓதி அனையார் உணர்வுடையார்—தூய்தாக
நல்கூர்ந்தும் செல்வர் இரவாதார் செல்வரும்
நல்கூர்ந்தார் ஈயார் எனின.

**தருமர் :**—எனபது. [1]உணாவு இலாா—[உலகநடை அறியும] அறிவில்லாதவா; ஓதியும்—கறறவராயினும்; உணர்வு இலார்—(அனையா) கல்லாதவரோடு ஒப்பா; உணாவு உடையாா [உலகநடை அறியும்] அறிவுண்டானவா; ஓதாதும்—கறறாரில்லை யாயினும்; [2]ஓதி அனையாா—கறறவரோடு ஒப்பா; இரவாதாா--; [3]தூயதாக நலகூாநதும—மிகவும் மிடிததாராயினும; செலவா —செல்வரோடு ஒபபா; செல்வரும—செலவமுடையாரும; ஈயாா எனின்—ஒருவா வேண்டினது கொடாராயின்; நல கூாநதாா—மிடியரோடு ஒபபா எனறவாறு.

ஒருவாககும பயனபடாத செல்வம படைததவன,வறியான அனறிச் செல்வமுடையவன் அலலன் எனறு அவன செல்வத்தை இகழ்நது கூறுவாா, அறிவுடையோா வறுமையும உடனகூறி வறபுறுததியது இது.

---

[1] உணாவு—உலகநடையை அறியும் இயற்கை அறிவு.

[2] ஓதி—பெயர். ஓதுபவர் எனபது பொருள. ஓதினுல் என எச்ச மாக்கினும அமையும்.

[3] தூய்தாக என்பதற்கு வறுமையிலும மனம் செம்மையுடையதாக எனப பொருளுரைததலுமாம.

**பதுமனார்:**—என்றது. பலநூல்களை ஓதினாராயினும் ஓதாதாரோடு ஒப்பர் அறிவில்லாதார்; ஓதிற்றிலரே ஆயினும் ஓதினாரோடு ஒப்பர் அறிவுடையார்; ஒருபொருளும் இன்றி வறியரே ஆயினும் பிறரைச் சென்று இரவாதார் செல்வரோடொப்பர்; செல்வரும் பிறர்க்கு ஒன்றை ஈயமாட்டாராயின் வறியரோடு ஒப்பர் என்றவாறு.

**விளக்க உரை:**—எ-து. ஓதியும் ஓதார் உணர்விலார்—ஓதினாராகிலும் ஓதாதாரோடொப்பர் அறிவிலாதார்; ஓதாதும் ஓதியனையார் உணர்வுடையார்—ஓதினாரில்லை யாயினும் ஓதினவர்க்கு ஒப்பர் அறிவுடையார், தூய்தாக நல்கூர்ந்தும் செல்வர் இரவாதார்—மிகவும் மிடித்தாராயினும் ஒருவர் பக்கல் சென்று இரவார் செல்வரோடொப்பர், செல்வரும் நல்கூர்ந்தார் ஈயார் ஆயின—அந்தச் செல்வரும் மிடித்தவரோடொப்பர் ஒருவர்க்குக் கொன்றைக் கொடாராயின என்றவாறு.

**கருத்து:**—உலக அறிவும், கொடைக்குணமும் இல்லையேல் செல்வம் சிறப்படையாது.

## மேற்கோள் பகுதி:—

பேரா:—மெய்ப்பாட்டிய சூத்திரத்தில், ஒரு செய்யுள் வழக்கிற் குச்சுவுரு சொல்லப் படுதற்கு "**ஓதியும் ஓதார் உணர்விலார்**" என்ற செய்யுளை மேற்கோள் காட்டுவர்.

—தொல. செய. சூ. 392.

நச:—இதற்கே இருவரும் இச்செய்யுளை மேற்கோளாகக் காட்டுவர்.

—தொல். செய. சூ 80.

(௰).

# 4. *துன்பவியல்.

## 28. ஈயாமை.

**தருமர் :**—அஃதாவது ஒரு பொருளைக்கண்டு அதன்மேல் ஆசை செலுத்தலும் பொருள்வருவாய் காரணமாகக் கோபம் பிறத்தலும் பொருள் மிக எய்தினும் அதனால் அமைதி பிறவாமையும் ஒருவர்க்கு ஒன்றைக்கொடுக்கில் அதனால் பொருள் குறையுமே என்னும் உலோபத்தால் ஒருவர்க்கு ஒன்றைக் கொடாமையுமாம்.

நன்றியில் செல்வத்தில் கொடாமையால் வரும் இழிவு தானே போதாதோ இந்த அதிகாரமும் வேண்டுமோ என்னில், மறுமைக்கும் இவனுக்கு உறுதியில்லை என்பது காட்ட(வேண்டி) இட்டுச்சொன்னார் என்பதாம்.

**பதுமனார் :**—அஃதாவது ஒரு பொருளைக்கண்டு அதன் மேலே முற்றிய ஆசை செலுத்துகையும், பொருளின் வருவாய் காரணமாகக் கோபம் பிறத்தலும், பெற்ற பொருளின் அடங்காது மேற்பெற ஆசைசென்று இச்சிக்கிற அளவெல்லாம் பெற்றாலும் அமைதி பிறவாது மோகஞ்செல்லுகையும், அதனாலே [1]மத மாற்சரியமும் பொய்யுங் கொலையும் பிறத்தலுமாய் அப் பொருள் சிறிது குறையும் என்னும் உலோபத்தாலே தானும் உண்ணாது பிறர்க்கும் கொடாது இருத்தலாம் என்றவாறு

271. நட்டார்க்கும் நள்ளா தவர்க்கும் உளவரையால்
அட்டது பாத்துண்டல் அட்டுண்டல்—அட்டது

---

* துன்பம் உண்டாதலைப்பற்றிக் கூறும் பிரிவு.

[1] மதம்—செருக்கு, மாற்சரியம்—பொறாமை. இவை காம, குரோத, லோப, மோக, மத, மாற்சரியம் என்ற உட்பகை ஆறனுள் அடங்குவனவாம்

அடைத்திருந் துண்டொழுகும் ஆவதின்
†அடைத்தவாம் ஆண்டைக் கதவு. [மாக்கட்கு

**தருமர் :**—என்பது, [1]நட்டார்க்கும்—தம்முடன் நட்புக் கொண்டவர்க்கும், [2]நள்ளாதவர்க்கும்—நட்புக் கொள்ளாதவருக்கும், உள்வரையால்—(தமக்குள்ள மரியாதையால்), [3]அட்டது பாத்து—அட்டதனைப் பகுத்து, உண்டல்—(தாம்) உண்பதே, [4]அட்டு உண்டல்—அட்டு உண்டலாவதாம்; (அவ்வாறன்றி) அட்டது—அட்டதனை, அடைத்து இருந்து உண்டு—(கதவு) அடைத்து உள்ளிருந்து உண்டு, ஒழுகும்—உயிர் வாழ்ந்து திரியும், [5]ஆவது இல் மாக்கட்கு—ஆக்கமில்லா மனிதர்க்கு, ஆண்டைக் கதவு—அவ்விடத்திற் கதவுகள், அடைத்தவாம்—அடைத்தனவாம் என்றவாறு.

அவ்விடத்திற் கதவு—சுவர்க்க லோகத்திற் கதவு. எனவே, உண்டான அளவில் எம்மாத்திரமாகிலும் பகுத்து உண்ணாதார், நரகம் புகுவர் என்பது தோன்ற அவர்க்குச் சுவர்க்கத்திலே கதவடைக்கும் என்றார்.

**பதுமனார் :**—என்றது தம்மொடு நட்டார்க்கும் நள்ளா

---

† அடைக்குமாம் என்றும் பாடம்.

1 நட்டார்—உறவினர்

2 நள்ளாதவர்—விருந்தினர் என்றுமாம்

3 அட்டது—சமைக்கப்பட்ட உணவு

4 அட்டு உண்டல் என்றது இல்லறம் செய்தலைக் குறிக்கும். இல்லிருந்து அட்டுண்டு வாழ்வதாவது பகுத்து உண்பதேயாம். 'செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான் நல்விருந்து வானத்தவர்க்கு' என்றபடி, இம்மையில் விருந்து உபசரித்தவனை மறுமையில் தேவர்கள் எதிர்கொள்வர் ஆதலின், அவ்வாறில்லாதவனுக்குச் சொர்க்கத்திலே கதவு மூடப்படும் என்றார்.

5 ஆவது—செல்வத்தால் ஆகும் பயன், ஈகை. செல்வத்தின் பயனை அறியாதவர் அறிவிலிகள் ஆதலின், அன்னாரை மக்கள் என்னாது 'மாக்கள்' என்றார்.

தவர்க்கும் தமக்குள்ள அளவினால் அட்டதனைப் பகுத்துண்டல் அட்டு உண்டு வாழ்வதாம். அட்டதனைப் பிறர்க்கு இடாது அடைத்திருந்து உண்டு ஒழுகும் ஆக்கமில்லாத மக்கட்கு மறுமை யுலகத்துக் கதவுகள் அடைத்தவாம் என்றவாறு.

இதனுள் **ஆவலின் மாக்கள்** என்று பாடமோதி ஆசை யுடைய மக்கள் என்று **பொருளுரைப்பாருமுளர்.**

***விளக்க உரை :***—எ-து. நட்டார்க்கும் நள்ளா தவர்க்கும்—தம்முடன் நட்புக்கொண்டார்க்கும் நட்புக்கொள்ளா தார்க்கும்; உளவரையால் அட்டது பாத்துண்டல் அட்டு உண்டல்—தமக்குள்ள அளவினால் அட்டதனைப் பகுத்து உண்டல் அட்டுண்டு வாழ்தலாவது; அட்டது அடைத்து இருந்து உண்டு ஒழுகும் ஆவதில் மாக்கட்கு—அட்டதனைப் பிறர்க்கிடாது அடைத்திருந்து உண்டொழுகும் ஆக்கமில்லாத மாக்கட்கு; அடைத்தவாம் ஆண்டைக் கதவு—மறுமையில் கதவுகள் அடைத்தவாம் என்றவாறு.

**கருத்து** :—இம்மையில் பகுத்துண்ணாதவனுக்கு மறுமையின்பம் இல்லை.

## ஒப்புமைப் பகுதி :—

" இசைவ கொடுப்பதூஉம் இல்லென் பதூஉம்
வசையன்று வையத் தியற்கை அஃதன்றி
பசைகொண் டவனிறகப் பாத்துண்ணா னாயின்
நசைகொன்றான் செல்லுலக மில்."

—பழ. 24.

## குறிப்பு :—

" கொடையொடுபட்ட குணனுடை மாந்தர்க்கு— அடையாவாம் ஆண்டைக் கதவு" என்ற நாலடிச் செய்யுள் (91) இங்கே நினைத்தற்குரியது.

(க).

272. எத்துணை யானும் ‡இயன்ற அளவினால்
சிற்றறஞ் செய்தார் தலைப்படுவர்—மற்றைப்
பெருஞ்செல்வம் எய்தியக்கால் பின்னறிதும்
அழிந்தார் பழிகடலத் துள். [என்பார்

**தருமர் :**— என்பது, எத்துணை [1]ஆனும் – எவ்வளவாயினும், இயன்ற அளவினால் – பொருந்திய அளவினால், சிறு அறம் செய்தார்—(சிறிதாயினும் இது சிறிது என்றிராமல் இடைவிடாமல் நாள்டைவிலே) பிச்சைமாத்திரமாயினும் அறஞ்செய்து வந்தவர், [2]தலைப்படுவர்—(சொர்க்கத்தினை) தலைப்படுவர்; மற்றை பெருஞ்செல்வம் எய்தியக்கால்—மற்றுப் பெரிய செல்வம் எய்திய காலத்து, பின் அறிதும் என்பார்—'இன்னமும் நமக்கு வயதுண்டு பின்பே அறஞ்செய்கிறோம்' என்று அதனை இகழ்ந்து இருந்தவர், [3]அழிந்தார் பழிகடலத்துள்—கடல்சூழ்ந்த பூமியினுள்ளே கடிதின் இறந்து பழி படைத்தாருமாவர் என்றவாறு.

ஆதலால் தன் வாழ்நாள் [4]உலவாமுன் விரைந்து தனக்குள்ள மரியாதை பிறர்க்குங்கொடுத்துத் தனக்கு இம்மை மறுமையைத் தேடிக்கொள்ளவேண்டும் என்று அறிவுறுத்தியது.

**பதுமனார் :**—என்றது, எவ்வளவாயினும் தமக்குக்கூடிய அளவினால் சிறிய அறத்தையாயினும் நாடோறும் செய்தார் தலையான கதியிலே பிறந்துள்ளாராவர். அப்பெற்றித்தன்றித் தமக்குப் பெருஞ்செல்வம் வந்தெய்தியக்கால் பின்னைச் செய்வோம் என்று கருதியிருப்பார் அழிந்தாரும் ஆவர், நிலத்தின்கண் பழி படைத்தாரும் ஆவர் என்றவாறு.

‡ இயைந்த என்றும் பாடம்.

1 ஆனும்—ஆயினும் என்பதன் மரூஉ மொழி

2 தலைப்படுவர்—முதன்மைப்படுவர் என்றுமாம்

3 அழிந்தார் பழிகடலத்துள் என்பதற்கு உலகோரது பழியாகிய கடலுள் வீழ்ந்து அழிந்தவராவர் என்றுரைத்தலுமாம்.

4 உலவாமுன்—முடியாததன் முன்பு.

பழிகடலம—நரகம எனபாரும உளா.

**விளக்க உரை :**—எ-து. எததுணையானும் இயைநத அளவினல்——எவவளவாயினும் தமககுக கூடிய அளவினல்; சிறறம செயதார தலைபபடுவா—சில அறநதை யாயினும நாடோறும செயதார தலைமையான கதிகளிலே பிறநதுளராவா, மறறைப பெருஞ்செலவம் எயதியககால—அபபெறறி யன்றித் தமககுப பெருஞ்செலவம எயதினல; பின அறிதும என்பார—பின்னைச் செயவாம எனறு கருதியிருபபவா, அழிநதார பழி கடலததுள—அழிநதாருமாவா; நிலததினகண பழி படைததாரும ஆவர்.

சிறறம—நாடோறும இடபபடடவை, பழிககடலததை நிரயம என்பாருமுளா.

**கருத்து :**—உளளபோதே அறஞசெயயாதவா உலகோரால அழிததறகுரியா.

## ஒப்புமைப் பகுதி :—

“ஒலலும வகையான அறவினை ஓவாதே
செலலுமவாய எலலாம செயல்”.

—குறள். 33.

“ நறறிவாம நல்வினை யாமிளையம எனனது
கைததுணடாம போழதே கரவா தறஞ செய்மின.

—நாலடி. 19.

“அனறறிவாம எனனு தறஞ செயக”

—குறள். 36.

“ஆறறும துணையால அறஞசெயகை முனனினிதே

—இனியவை. நா. 7.

## குறிப்பு :—

எததுணையானும், இயனற அளவினல், சிறறம் என்

றெல்லாம கூறியது அறத்தின் சிறறளவை நன்கு புலப்படுத்தற்கு என்க.

(உ).

273. துய்த்துக் கழியான துறவோர்க்கொன(று)
வைத்துக் கழியும மடவோனை-வைத்த [ாகலான்
பொருளும் அவனை நகுமே உலகதது
அருளும் அவனை நகும.

**தருமர் :**—என்பது துய்தது [1]கழியான—(தான் தேடிய பொருளை) உண்டு இறநதிலன; [2]துறவோாககு ஒனறு ஈகலான—துறநதோாக்கு (ஒருபொருளைக) கொடுப்பதுஞ் செயதிலன, வைதது கழியும மடவோனை—பொருளைவைததுப் பயன் கொளளாதே இறநதுபோம அறிவில்லாதானை; வைதத பொருளும—(அவன்) தேடிவைத்த பொருளும்; அவனை [3]நகும—(அவனைச் சிரிககும); உலகதது—உலகதில, [4]அருளும—அருளுடையோரும்; அவனை நகும்—அவனைச சிரிபபர் என்ற வாறு.

அருளுடைய பெரியோருக்கு நட்புப பகை இல்லை. அதனால அவரும் நகுவா என்று இப பொருளுடையாரது அறிவின்மையை மிகவும் இழிவாகக கூறியது.

**பதுமனார் :**—என்றது. நுகாநது கழியாதும அபபொருளை விட வல்லாககும ஈயமாட்டாதும் வைதது இறநதுபோம அறிவில்லாதானை அவன வைதத பொருளும அவனை இகழநது மனனுள்ள பயன கொணடிலன் என்று நகும, இவவுலகில

-----

[1] கழியான்—காலங கழியான என்றுமாம

[2] துறவோா—(ஆதரிபபோரால்) துறக்கப்பட்டவர் எனறுமாம.

[3] நகும—இகழ்ந்து சிரிக்கும்

[4] அருளும—கருணைக்குணமும எனலுமாம.

தான்தேடிய பொருளான் அறஞ்செய்து கொண்டிலன் என்று அருளுடையோரும் நகுவா என்றவாறு.

கழியான—அழிப்பதுஞ் செய்யான.

**விளக்க உரை:**—எ-து. துய்த்துக கழியான—தான் தேடின பொருளை இனிதாக உண்டிறந்திலனா, துறவோர்க்கு ஒன்று ஈகலான—துறந்தோர்க்குக் கொடுப்பதுஞ் செயதிலன, வைததுக் கழியும மடவோனை—பொருள வைததுப பயன் கொள்ளாமல் இறந்துபோம அறியாதவனை; வைதத பொருளும அவனை நகுமே—தேடி வைதத பொருளும் அவனைச் சிரிக்கும், உலகதது அருளும அவனை நகும்—உலகதது அருளுடையோரும அவனைச் சிரிபபா எ-று.

நகுதல—பயன கொள்ளாமை நோக்கி.

**கருத்து:**—ஈகை இல்லாதார பொருட்பயனையும அருட்பயனையும ஒருங்கிழப்பா.

## குறிப்பு :—

துறவோர்க் கீதல இல்வாழ்வான் கடமை எனபதனை, "இல் வாழ்வான என்பான இயல்புடைய மூவாக்கும—நல்லாற்றின் நின்ற துணை" என்ற திருக்குறளானும. "துறவோர்க் கெதிா தலும தொலலோா சிறப்பின்—விருந்தெதிா கோடலும்" என்ற சிலப்பதிகாரததானும அறிக.

பொருளும அருளும நகுதற்குக் காரணம முறையே செலவததுப் பயன ஈகை என்று உணராது தானும நுகராது காலங் கழிததமையும், அறஞ்செயது நற்கதி பெறுதற்குக் காரணமான அருளின்றிப் பொருளை வீணாக்கினமையும பற்றி என்க.

(௯).

274. கொடுத்தலுந் துய்த்தலுந் தேற்றா இடுக்குடை
உள்ளத்தான பெற்ற பெருஞ்செல்வம் இல்லத்து
உருவுடைக் கன்னியரைப் போலப் †பருவத்துள
ஏதிலான துய்க்கப் படும்.

**தருமர் :**—என்பது கொடுத்தலும—ஒருவர்க்கு ஒன்றைக் கொடுததலும், துயததலும—[தான் நுகாதலும]; தேறறு—தோந்து செயயாத; [1] இடுக்கு உடை உளளததான—(அறததினது திறம தெளிய இடமிலலாத) இருட்டிய நெஞசினை உடையவன்; பெறற பெருஞ செலவம—பெறற பெருஞ செல்வமானது; இல்லதது உரு உடை கனனியரை போல; குடியிற பிறநத வடிவழகினுல மிகுநதுளள கனனியரைப் போல; பருவததுள—அனுபவிககத தக்க காலதது; ஏதிலான் துய்க்கப படும—அயலான ஒருவனுல் நுகரபபடும எனறவாறு.

ஒருவா கனனிகையை வளாதது அயலாாககுக கொடுததபடியனறி (தேடிய) அவனுல அபபொருள பயன(படுததப)படாதது அவன அறிவினமை யனறி ஒனறனறு; ஆதலால தான் தேடிய பொருளை மறறொருவா கொணடுபோமுனனே தான உயிரோடிருககும பொழுதே இருககும பொருளைக கொணடு இமமை மறுமையைத தேடிககொளள வேண்டும எனபதாம.

**பதுமனுர் :**—எனறது. பிறாக்குக கொடுததலும தான நுகாதலும் மாட்டாத சிறிய உளளததான பெறற பெருஞ செல்வம மனையினகண் உருவுடைய கன்னியரைப போல நுகருங காலம வந்தால அயலான் நுகரபபடும் எனறவாறு.

இடுக்கு—உலோபம்.

---

† பருவததால் என்றும் பாடம்

[1] இடுக்கு உடை உளளம—பொருளைத தக்க இடதது விடாது பறறுடை-யாகும உள்ளம, அஃதாவது உலோபம, இதனை பற்றுள்ளம எனனும இவறனமை' எனறா திருவளளுவரும

**விளக்க உரை :**—எ-து. கொடுத்தலும் துய்த்தலும்—ஒருவாககு ஒன்றைக் கொடுததலும் தான் உண்டலும்; தேறறு இடுககுடை உள்ளததான் பெறற பெருஞ்செலவம—தெளியாத இருட்டிய நெஞ்சினையுடையவன் பெறற பெரிய செல்வமானது; இலலதது உருவுடைக கனனியரைப போல; பருவத்தால எதிலான துயககபபடும—தனனை அனுபவிககத தககான ஒருவன வநதெய்திய காலதது அவனால நுகரபபடும எ-று.

**கருத்து**—உலோபியின செல்வம் அயலார் அனுபவத்திறகே பயனபடும.

## மேற்கோள் பகுதி :—

யா. வி'—பலவிகறபததான் வநத வினனிசை வெணபா விறகு இசசெயயுள மேறகோளாக வரும.

—செய். சூ. 8.

## ஒப்புமைப் பகுதி :—

"வழஙகலும துய்ததலும தேறறுதான் பெற்ற
மூழஙகு முரசுடைச் செல்வம—தழஙகருவி
வேயமுறறி முததுதிரும வெறப! அதுவனறே
நாயபெறற தெஙகம பழம".

—பழ. 151.

"படரும பிறபபிறகொன நீயார பொருளைத
தொடருநதம பறறினல் வைத்திறப பாரே
அடரும் பொழுதினகண இடடுக குடரொழிய
மீவேலி போககு பவர்".

—பழ. 379.

"வைததானவாய சான்ற பெருமபொருள அஃதுணணான்
செததான செயக்கிடநத தில்".

—குறள். 1001.

"அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்".

—குறள். 1009.

"ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்".

—கொன்றை. 4.

"பிறர்க்குதவி செய்யாப் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்கும்பவர் பேறும்—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடல்நீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு".

—நன்னெறி. 4.

"வைத்தப் பொருளைத் தான்நுகரான் வழங்கான்
இருந்தும் செத்தானே
செத்த பின்னர் என்செய்வான் தீயார் கொள்வர்
ஈட்டுதலான்
மெத்தம் வருத்தமேயன்றி வேறொன் றில்லை யாதலினால்
பொத்தும் வெறுக்கை நன்றியுறல் புசித்து வழங்க லேயாகும்"
—விநா. அரசி. 148.

## குறிப்பு :—

தனது மனையிற் பிறந்த மணமாகாத மகளிர்—உலோபியின் செல்வத்திற்கு உவமையாம்; பெற்றவனுக்குத் துய்க்குந் தொடர்பு இல்லாமையின் அத்தொடர்பினையுடைய அயலாரால் துய்க்கப்படும் என்க. இதனை, "வலம்புரி யீன்ற முத்தம் மண்மிசை யவர்கட்கல்லால்—வலம்புரி பயத்தை எய்தாது" என்ற சிந்தாமணியானும், "சீர்கெழு வெண் முத்தம் அணிபவர்க் கல்லதை—நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என்செய்யும் தேருங்கால் நும் மகள் நுமக்குமாங் கனையளே" என்ற கலித்தொகையானும் அறிக.

(ச).

275. எறிநீர்ப் பெருங்கடல் எய்தி யிருந்தும்
அறுநீர்ச் சிறுகிணற்(று) ஊறல்பார்த்(து) உண்பர்
மறுமை அறியாதான ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை.

**தருமர்:**—என்பது. எறிநீர் பெருங்கடல—கரையைப் [1]பொருந திரையினையும மிகுதியான நீரையும உடைத்தான கடலை; எய்தி இருநதும்—சேரநதிருநதும்; அறுநீர் [2]சிறு கிணற்று ஊறல்—நீர அறற கிணற்றில் சிறுக ஊறின நீரை; [3]பார்த்து உணபா—அஃது ஊறுமளவும பாாத்திருநது உண்பா; (அதுபோல) மறுமை அறியாதான் ஆக்கததின—மறுமைக்கு உறுதியான வறறை அறியாதான் வாழவினும்; சான்றோா—அமைநதோருடைய; கழிநலகுரவே—மிகக மிடியே; தலை—தலைமையுடைதது என்றவாறு.

தனககுப் பின்னுககு உதவும வகை விசாரியாக உலோபததை யுடையவனுககு மிகுநத செலவம ஆயினும் அதனை, அககடலநீரை விருமபாதவாறு போல விரும்பாது அறிவுடையோா மிக மிடிததிருபபினும அவரிடத்திற சென்று இசைந்த மாததிரம பெறுவா; அதனல் அவர் மிடியே தலை என்முர். எனவே மிகவும மிடிததிருந்தாராயினும இயன்ற அளவு அனபோடு கொடுபபா என்பது கருத்து.

**பதுமனர்:**—என்றது. கரையை வநது எரியும் நீரையுடைய பெருஙகடலை அடைநதிருநதும, அறற நீரையுடைய சிறுகிணறறு ஊறலைப் பாாதது இருநது உணபர்; அதுபோல மறுமை அறியாதாா செலவததினும அமைநதாரது மிக்க நல குரவே தலைமையுடைதது என்றவாறு.

---

[1]பொருும—மோதும்.

[2]சிறு கிணற்று ஊறல—எனபதில் சிறுமை கிணற்றுக்கு ஆக்கினுய் ஆம்; ஊறல்—ஊறும் நீருக்கு ஆயிறறு.

[3]பாாதது—தேடிக் கணடு எனினுமாம்.

அறுநீர்—சிறிய நீர். மறுமை அறியாதார்—மறுமைக்கு வேண்டும் அறஞ் செய்யாதார். ஆக்கம்—செல்வம். கழி நல்குரவு—மிக்கமிடி.

**விளக்க உரை :**—எ-து. எறிநீர்ப் பெருங்கடல் எய்தி யிருந்தும—எறிகிற நெறியுடைய பெருங்கடலைச் சார்ந்திருந்தும; அறுநீரச் சிறுகிணற்று ஊறல பார்த்து உணபர்—நீரற்ற கிணற்றிலே சிறிதாக வூறும ஊறலைப பார்த்து அதனையுணபர், (அதுபோல) மறுமை அறியாதாள ஆககத்தின—மறுமைககு உறுதி அறியாதான வாழவினும; சானறோர கழி நல்குரவே தலை—அமைநதோருடைய மிக்க மிடியே தலைமையுடைதது என்ற வாறு.

மிடிததும் மறுமை எயதலால் தலைமை யுடைத்து எனறார்.

**கருத்து :**—உலோபிகள செலவம் பெறினும வறிஞரான சான்றோரளவுகூட உதவமாட்டார்.

## ஒப்புமைப் பகுதி :—

"நலலாாகட பட்ட வறுமையின இனறுதே
கல்லாாகட படட திரு".

—குறள். 408

"சிறியவர எய்திய செல்வததின மாணப
பெரியவர் நல்குரவு நன்றே—தெரியின
மதுமயஙகு பூஙகோதை மாணிழாய! மோரின
முதுநெயதீ தாகலோ இல்".

—பழ 89.

"மிகப்பே ரெவவம் உறினும எனைததும்
உணாச்சி யிலலோா உடைமை உளளோம்
நலலறி வுடையோா நல்குரவு
உளளுதும் பெரும! யாம உவநதுநனி பெரிதே".

—புறம 197 : 15—18.

"நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கட் பட்ட திருக் கண்டாயே"

—தமிழ். 194.

"மெய்ந்நெறி உணர்கிலா வெறுக்கை பெற்றது
துன்னிய கிளைக்கொரு துன்ப மாதல்போல்"

—கந்த.

"கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும்".

—மூதுரை. 12.

"மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும்
வல்லூற் றுவரில் கிணற்றின்கட் சென்றுண்பர்"

—நாலடி. 263.

(ரு).

276. எனதெனது என்றிருக்கும் ஏழை பொருளை
எனதெனது என்றிருப்பன் யானும்—தனதாகில்
தானும் அதனை வழங்கான் பயன்துவ்வான்
யானும் அதனை அது.

**தருமர்:**—என்பது. [1]எனது எனது என்று இருக்கும்—என்பொருள் என்றுதேடி [2]ஏமஞ் செய்திருக்கும்; [3]ஏழை பொருளை—அறிவில்லாதான் பொருளை; யானும் எனது எனது என்று இருப்பன்—யானும் என் பொருள் என்று கருதி யிருப்பேன்; (என் எனில்) தனது ஆகில்—அப்பொருள் அவனது ஆகில்; அதனைவழங்கான்—அதனை ஒருவர்க்குக் கொடுத்தலும் செய்யான், தானும் பயன் துவ்வான்—தானாகிலும் அதன் பயனை

[1]எனது என்ற அடுக்கு, பொருள் மீதுள்ள பற்றுதலை விளக்குவது.

[2]ஏமம்—பாதுகாப்பு

[3]செல்வம் பெற்றும் ஈதலும் உவக்கும் இன்பம் பெறாமையால் அவன் அறிவிலனே ஆவன்; ஆனதுபற்றி 'ஏழை' என்றார் எனினுமாம்.

நுகாகிலான்; யானும் அதனை [1]அது—யானும் அப்பொருளை அப்படிச் செய்திலேன் அதனால என்றவாறு.

தன் பொருளாயின் தான் வழங்கான்; என் பொருளாயின் யானும் வழஙகேன ஆகலால அவன் தன் பொருளை என்று எண்ணியிருபபதும யான என பொருள் எனறு எண்ணியிருபபதும ஒககும் அனறி வேறிலலை. யாவர்ககும பயன படாத பொருளை யாவா தமது எனறு இருநதால எனன எனறு ஒருவர் உலோபததை இழிவாகக கூறியது.

**பதுமனார்:**—என்றது. எனது எனது என்று கருதிப பிறாககுக கொடாதே இருக்கும அறிவிலலாதான பொருளை, யானும எனது எனறு கருதி இருபபன; அதறகு என்னை காரணம் என்னில, பொருள் தன்னதாயினும அவ்வேழை தானும அபபொருளைப பிறாககு வழஙகான; அபபொருளானுய நுகாசசியையும நுகரான, யானும அபபொருளை வழஙகேன; பயன நுகரேன ஆதலால எனறவாறு.

**விளக்க உரை:**—எ-து. எனது எனது என்றிருக்கும ஏழை பொருளை—எனது எனது என்றிருக்கும் அறியாதவன தேடி வைதத பொருளை; எனது எனது எனறிருபபன யானும—யானும் எனனுடையது எனனுடையது எனறு இருபபேன, அஃது ஏனெனில், தனது ஆயின் தானும் அதனை வழங்கான பயன துவவான—தனதாகில தான் ஒருவாககுக கொடுததல; அதன பயன் நுகாதல் இவையிரண்டினையுஞ செயகின்றிலன; யானும் அதனை அது—யானும்அபபொருளை அப்படியே செய்கின்றிலேன் (ஆதலால்) என்றவாறு.

**கருத்து:**—எளியவாககு ஈயாத செலவம அதனைப பெற்ற

[1] அது என்றது வழக்கல் நுகால் இவவிரணடுஞ் செய்யாமையை இச செயயுள பிறிதொருவன கூறறுக கவைச் சுவை தோனறக் கூறப் பட்டுளளது

வனுக்கும் உதவுவதில்லை.

(௬).

277. வழங்காத செல்வரின் நல்கூர்ந்தார் உய்ந்தார்
இழந்தார் எனப்படுதல் உய்ந்தார்—உழந்ததனைக்
காப்புய்ந்தார் கல்லுதலும் உய்ந்தார்தம் கைநோவ
யாப்புய்ந்தார் உய்ந்த பல.

**தருமர் :**—என்பது. வழங்காத செல்வரின்—ஒருவர்க்கு ஒன்றைக் கொடாத செல்வரினும்; நல்கூர்ந்தார்—வறுமை யானவர்; உய்ந்தார்—பிழைத்தார்; (அஃது எப்படி யெனில்) இழந்தார் எனப்படுதல் உய்ந்தார்—(பொருளைப் புதைத்துவைத்த இடத்து எடுப்புண்டு போய்ப் பொருள்) இழந்தார் என்று பலருஞ் சொல்லுங் கொடிய சொல்லையுந் தப்பினார்; உழந்து அதனைக் காப்பு உய்ந்தார்—வருந்தி அப்பொருளைக் காத்திருக்க வேண்டும் என்னும் எண்ணத்தையும் தப்பினர், [1]கல்லுதலும் உய்ந்தார்—பலகாலும் கல்லிப் பார்ப்பதும் வைப்பதுமாய் இருக்கின்ற மனத்துக்கத்தையுந் தப்பினார், [2]தம கை நோவ யாப்பு உய்ந்தார்—பொருளுடையார் இவர் என்று வலியோரால் (தம் கை நோகப்) பிணிக்கப்படும் பிணிப்பினையும் தப்பினர்; [3]உய்ந்த பல—(தேடிய பொருளை நன்னெறியின் உய்த்து வறுமை யானவர்) இப்படிப்பல முறையானும் பிழைத்தனர் என்றவாறு.

தேடிய பொருளை வழங்கின தன்மையால் அவரை நல்கூர்ந்தார் என்றும், அவர் இவ்வகைத்தாய துன்பங்களை எல்லாம் தப்பி இருமையும் பெற்றார் என்றும், வழங்காதார

---

[1] கல்லுதல்—தோண்டுதல்.

[2] தம் கை நோவ யாப்பு உய்ந்தார்—என்பதற்கு தமது கை வலிக்கும்படி அப்பொருளை இறுகப் பற்றுதலினின்று தப்பினார் என்றுமாம்.

[3] உயர்ந்த பல—பின்னும் அனேர் தப்பின பல எனினும் அமையும்; என்றது அருளிலன் அன்பிலன், கண்ணறையன், கஞ்சன் எனப் பலவாறு இகழப்படுதலினின்று தப்புதல் நோக்கி என்க.

இதுதுன்பங்களும் பெற்று மறுமையையும் கொடுத்துக் கொண் டார என்றும் அவா அறிவின்மையை இழிவாககிக கூறினா.

**பதுமனுர் :**—என்றது. பிறாக்குக் கொடாத செல்வரின் நல்கூாநதாா துன்பததைத தப்பினா; அஃது என்னையெனின, செலவததைப பிறாககுக கொடாதே இழநதாா என்று பிறரால் சொல்லப்படும் பழியைத தபபினர்; அதனைவருந்திக் காககுங காவலான் வருந துனபததைத தடபினா; கலவி அதனைப புதைக்குந துன்பததையுந தப்பினா; பொருளுடையாா என்று வலியரால் தம் கைநோகப [1]பிணிககப்படும் பிணிபபையுந தப்பினா; பினனுந தபபின பல ஆகலான என்றவாறு.

உய்நதாா—தப்பினா கலலுதல—புதைககக கல்லுதல்.

**விளக்க உரை :**—எ-து. வழங்காத செல்வரின் நல் கூாநதாா உயநதாா—ஒருவாககு ஒன்றைக கொடாத செல்வ ரினும் நலகூாநதாா பிழைததாா; அஃதெபபடி என்னில், இழநதாா எனப்படுதல் உயநதாா—பொருளைப் புதைத்துவைதது வைததவிடததிலே எனபபுண்டு போக அதனை இழநதாா என்னுஞ சொல்லினையுந தபபினா; உழநது அதனைககாப்பு உய்நதாா— வருநதி அநதப பொருளைக காககிற காவலையுந தபபினா; கல்லுதலும உய்ந்தார்—பலகாலுங் கல்லுவது பாரபபது வைபப தாகிற நெஞசத் துககததினையுந தபபினா; தம் கை நோவ யாபபு உய்நதாா—தமது கை நோவ இவா பொருளுடையவரென்று வலியோரால் பிணிககப்படுகிற பிணிப்பினையுந் தப்பினர்; உயநதார் பல—இபபடிப பல முறையாலும் பிழைததாாகள் அநதச் செல்வம இல்லாதவாகள் என்றவாறு.

**கருத்து** —ஈயாத செலவாககு வருநதுன்பஙகள பலவாகும்.

[1] பிணிக்கபபடும்—கட்டப்படும.

**ஒப்புமைப் பகுதி :—**

"வள்ளன்மை யிலலாதான் செல்வததின் மற்றையோன்
நல்குரவே போலும் நனிநல்ல—கொன்னே
அருளிலன் அன்பிலன் கணணறையன என்று
பலரால் இகழப படான".

—நீதிநெறிவிளக்கம்.

(எ).

278. தனதாகத் தான்கொண்டான்; தாயத் தவரும்
தமதாய போழ்தே கொடாஅர்;—தனதாக
முனனே கொடுப்பின அவாகடியார், தான்கடி
பினனை அவர்கொடுக்கும் போழ்து. [யான்

**தருமா :**—என்பது. தனது ஆக தான் கொடான்—தான் தேடிய பொருள தனதாகிய பொழுதே வழஙகிலன, [1] தாயததவரும—[தனககுபபின்] தன்னுடைய தாயததாரும்; தமது ஆய போழுதே—பொருள் தமக்கு உரிததான போதே; கொடாஅா—கொடுபபவரல்லா; முனனே—தான இறககுமுன்னே [2] தனது ஆக—பொருள [தனதாக இருககையில] கொடுபபின்—வழஙகுவானுகில, அவா [3] கடியாா—அததாயததாா கொடுக்க வேணடாம எனனா; பினனை—தான இறநதபின, அவா கொடுககும போழது—அவர் பொருளைச செலவழிக்கும் பொழுது; தான கடியான—தான் வநது அவரைக கொடுகக வேணடாம எனவும வலலவன அலலன எனறவாறு.

அப்பொருளது தன்மை இவவாறு என்பது அறிந்துங் கொடாமைககுக் காரணம யாதோ எனறு அறிவோா இரக்க

---

[1] தாயததவர்—தந்தை வழியாக வந்த பொருள் பெறுதற்குரிய சுற்றததாா

[2] தனதாகக் கொடுப்பின் என்பதற்கு—தனக்குப் புகழும் புண்ணியமும் உண்டாகும் வண்ணம அறஞ்செயதால எனினுமாம்.

[3] கடியார்—விலக்கமாட்டார்.

முற்றுக் கூறியது.

**பதுமனார்:**—என்றது. தான் தேடிய பொருள் தன தாகிய பொழுதே ஈயான்; தான இறந்த பினபு தன் பொருட்கு உரியராகிய தன் தாயததவரும் தமககுரிததாகிய பொழுதே ஈயார்; தமக்கு உரிததாகிய பொருளைத தாம் இறபபதறகு முன்னே கொடுபபின் அததாயததாரும் விலக்கமாட்டார்; தான் இறந்த பினபு தன பொருட்கு உரிய தாயததார தாம கொடுப்பின இறந்தான வந்து விலககமாட்டான; (ஆதலால் யாதோ இவர கொடாமைககுக காரணம) என்றவாறு.

**விளக்க உரை:**—எ-து. தனதாகத தான கொடான—தான் தேடிய பொருள தனக்குரிததாகிய பொழுதே கொடுத திலன்; தாயததவரும தமதாய போழுதே கொடார—தன னுடைய தாயததவரும் அபபொருள தமககுரிததாய பொழுது கொடுககின்றிலர், தனதாக முன்னே கொடுபபின அவர கடியார —தான இறபபதன முனனே கொடுககும பொழுது அந்தத தாயததார வேண்டாம என்னார்; தான கடியான் பின்னை அவர கொடுககும போது—தான இறந்த பினபு அவாகள செலவழிககும போது தானவந்து அவரை வேண்டாம என்னான (ஆதலால யாதோ) கொடாமைககுக காரணம் என்றவாறு.

**கருத்து:**—செல்வம் தனககுரித்தாய இருககும போதே பிறாககு ஈந்து பயன்பெற வேண்டும.

(அ).

279. இரவலர் கன்றாக ஈவார்[1]ஆ வாக
விரகிற் சுரப்பதாம் வண்மை—விரகின்றி
வல்லவர் ஊனற வடி[1]ஆபோல் வாய்வைததுக்
கொல்லச் சுரப்பதாங் கீழ்.

[1] ஆக—ஒப்ப; உவமையுருபு.

**தருமர் :**—என்பது. இரவலர் கன்று [1]ஆக—இரவலர் கன்றாகவும்; ஈவார் ஆ ஆக—கொடுக்குமவர் பசுவின் தன்மை யாகவும்; [இருப்ப] [1]விரகின் சுரப்பது ஆம் வண்மை—இப்படி உபாயத்தால் கொடுப்பதாய் இருக்கும் ஒருவர்க்கு வண்மை யாவது; விரகு இன்றி—அந்த உபாயத்தை ஒழிந்து; வல்லவர் ஊன்ற கறக்க வல்லவர் [2]அடாத்து வலியினால் [3]உந்தி வருத்தஞ் செய்து கறக்கும் பொழுது; [4]வடி ஆ போல–(பாலைச்) சுரக்கும் பசுபோல; [5]வாய—தன் உறுப்பிடங்களிலே; வைத்துகொல்ல—கருவிகளைக்கொண்டு நோவுபண்ண; சுரப்பது ஆம் கீழ—கொடுப்பது கீழ—கொடுப்பது கீழ் மக்கள் இயல்பு ஆம் என்ற என்றவாறு.

அறிவில்லார் பொருளைத் தேடி வைத்துத் தம்மை அடாக்கும் வலியோர்க்குக் கொடுத்து இம்மையில் இழிவும் பெற்று மறுமைக்கு உறுதியும் பெறார் என்பது தோன்ற அமைந்தோர் கொடுக்குந் தன்மையும் உடன்கூறி அறிவுறுத்தியது.

**பதுமனார் :**—என்றது. இரவலரே கன்றாக, ஈவாரே ஆவாக, விரகினால் பொழிவதாம் ஈகையாவது அவ்விரகின்றி, அடாக்க வல்லவர் அடாக்க வடிக்கும் ஆபோல உறுப்பிடங் களிற் கருவிகளை வைத்து நோவு பண்ணச் சுரப்பது கீழாவது என்றவாறு.

இரவலர்—இரப்பவரும் புலவரும். விரகினால்—அறிவால். அடாக்க வல்லவர்—வெகுண்டு வாங்குபவர் [சுரப்பதாம் கீழ—சுரப்பர் கீழாயினர் என்றுமாம்].

[1] விரகு—உற்சாகம் என்றுமாம்.

[2] அடாத்து—அழுத்தி.

[3] உந்தி—தெறித்து

[4] வடி—ஊற்றும்; அஃதாவது பால் சுரக்கும்.

[5] வாய் வைத்துக் கொல்ல என்பதற்கு—பல சூழச்சி செய்து வருத்த என்றும், வாய்த்த இடத்து இகழச்சி செய்து வருத்த என்றும் உரைப்பினும் அமையும்

**விளக்க உரை :**—எ-து. இரவலர் நன்றாக—இரக்குமவர் நன்றாகவும்; ஈவார் ஆவாக—கொடுக்குமவர் பசுவின் தன்மையரா ஆகவும; (இப்படியே) விரகிற சுரப்பதாம் வண்மை —உபாயததாற கொடுப்பதாயிருக்கும் ஒருவர்க்கு வண்மை யாவது; விரகு இன்றி—அந்த வுபாயததை யொழிந்து; வல்லவர் ஊன்ற வடி ஆ போல் வாய் வைததுக் கொல்லச் சுரப்பதாம கீழ்—பசுவைக் கறக்க வல்லவர்கள் கோலினைக் கொண்டு அடித் தடித்துக் கறக்கும் பொழுது சுரக்கும் பசுபோல உறுபபிடங் களிலே கருவிகளைக் கொண்டு நோவு பணணக் கொடுபபது கீழமககள் இயலபு என்றவாறு.

**கருத்து :**—ஒருவன் மகிழ்ச்சியின்றி வெறுப்புடன் கொடுப்பது கொடையன்று.

## மேற்கோள் பகுதி :—

பரிமேல் :—'தனனையே கொல்லுஞ சினம்' என்பதன் விளக்கத்தில், "**கொல்லச் சுரப்பதாங் கீழ்**" என்புழிப் போலக் கொலைச்சொல் ஈண்டுத துனபமிகுதி யுணாததி நின்றது" என்பர்.

—குறள். 305.

## ஒப்புமைப் பகுதி :—

"சொல்லப் பயன்படுவா சான்றோா; கருமபுபோற
கொல்லப் பயன்படுங் கீழ்".

—குறள். 1078.

"இட்டக் கடைத்தரா ஈண்டும் பலிமரீஇப
பட்ட வழங்காத பான்மையரா—நடட
சுரிகையாற் காணும சுலாக்கோலாற காணும
சொரிவதாம் ஆபோற சுரநது".

—அறநெறி. 185.

குறிப்பு :-

கன்றைக் கண்டதும் மகிழ்வுடன் பாலைப் பொழியும் பசுப் போல இரவலரைக் கண்டதும் மகிழ்வுடன் கொடுப்பதே கொடை; கன்று வாயால் முட்டவும் கறப்போர் அழுத்தவும் பாலைச் சுரப்பதுபோல இரவலர் இகழ்ந்து கூறி வருத்தவும் வல்லவர் வலுக்கட்டாயப் படுத்தவும் கொடுப்பது கொடையன்று எனக. (சு).

280. ஈட்டலுந் துன்பம்;மற்று ஈட்டிய ஒண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்;—காத்தல்
குறைபடில் துன்பம்; கெடில்துன்பம் துன்புக்கு
உறைபதி †மற்றைப் பொருள்.

**தருமர் :**—என்பது. ஈட்டலும் துன்பம்—பொருளைத் தேடுவதும் துன்பம், ஈட்டிய [1]ஒள் பொருளை—தேடிய [சிறந்த] பொருளை; காத்தலும்—கெடாதபடி காப்பதும்; [ஆங்கே—அவ்வாறே] கடு துன்பம்—மிகவும் துன்பம்; [2]காத்தல் குறை படில் துன்பம்—காத்த அப்பொருளில் சிறிது குறையினும் துன்பம்; கெடில் துன்பம்—அப்பொருள் நேராகக் கெடுமாயின் அதிலும் மிகுந்த துன்பம்; பொருள்—ஆதலால் அந்தப்பொருள்; துன்புக்கு உறைபதி—துன்பத்துக் கெல்லாம் இருப்பிடமா யிருக்கும் என்றவாறு.

தேடிய பொருள் பயன்படாது இருமையும் இழக்கும் உலோபம் உடையாரக்குப் பொருளால் வரும் துன்பங்களைக் கூறி வற்புறுத்தியது.

---

†மற்றை—அசை.

[1]ஒண் பொருள்—சிறந்த பொருள், சிறப்பாவது இம்மையிற் புகழையும் மறுமையிற் புண்ணியத்தையும் ஆக்கி அறத்திற்கும் இன்பத்திற்கும் காரணமாயிருப்பது.

[2]காத்தல் குறைபடின—பாதுகாக்கும் முறையில் குறைவு நேரின் என்னினுமாம்.

**பதுமனார் :**—என்றது. பொருளினை முன் தேடலும் துன்பம்; அவ்வீட்டிய ஒள்ளிய பொருளைக் காத்தலும் அது போல மிக்க துன்பமாம்; காத்த பொருளிற் சில குறைபடினுந் துன்பமாம்; [1] அடையக் கெடினும் மிக்க துன்பம்; ஆதலால் அப்பொருளே துன்பத்துக்கு உறை பதியாம் என்றவாறு.

**விளக்க உரை :**—எ-து. ஈட்டலுந் துன்பம்—பொருள் தேடுதலுந் துன்பம்; மற்று ஈட்டிய ஒண்பொருளை—மற்றுந் தான் தேடிய பொருளை; காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்—களவு போகாமற் காக்கிறதும் அதுபோல மிகவுந் துன்பம்; காத்தல் குறைபடின் துன்பம்—அப்படிக் காத்த பொருள் சிறிது குறைபாடாயினுந் துன்பம்; கெடின் துன்பம்—அது நேராகக் கெடினுந் துன்பமாம், ஆதலால், துன்புக்கு உறைபதி மற்றைப் பொருள்—துன்பத்துக் கெல்லாம் இருப்பிடமா யிருக்கும் இந்தப் பொருள் என்றவாறு.

இப்படித் துன்பத்துக்குக் காரணமாகிய பொருளைப் புதைத்து வையாமற் கொடுக்க வேணும் என்பதாம்.

**கருத்து :**—பொருள் துன்பத்திற் கிடமாவதை அறிந்து அதனை இன்பத்திற்கு உரியதாகச் செய்தல் வேண்டும்.

## மேற்கோள் பகுதி :-

பரிமேல.—"ஈட்டிய ஒண் பொருளைக் காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்" ஆகலின் 'பரிந்தோம்பி' என்றார்" என்பர்.

—குறள். 88.

## ஒப்புமைப் பகுதி :-

"ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் தக்கார்க்கொன்(று)
ஈதல் இயல்பிலா தான்".

—குறள். 1006.

[1] அடைய—ஒரு சேர.

"ஒண்பொருள்
செய்வம் என்பார்க்குந் துயிலில்லை; அப்பொருள்
காப்பார்க்கும் இல்லை துயில்".

—நான்மணி 9.

"இன்னல் தரும்பொருளை ஈட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—அன்னது
அழித்தலுந் துன்பமே அந்தோ பிறர்பால
இழததலுந துன்பமே யாம்".

—நீதிவெண்பா. 46.

குறிப்பு :-

பொருளை இரவலர்க்கு ஈந்தால் இததுனபம தோனறாது ஒழிநது இனபமுணடாகும் ஆதலின ஈதலே செயறபாலது எனக.

(ம)

---

## 29. இன்மை.

**தருமர் :**—அஃதாவது உலகத்து மக்களுள்ளாரால் சஙகேதிததுக கொண்டு நடக்கபபட்ட பொருள் உளதாவதறகு அறஞ்செய்து பிறவாமையால் வரும் பசிப்பிணியும இன்பங்களை அனுபவிக்கப பெறாத துனபஙகளும் பிறரால் இகழபபடும இளிவரவும் உடைத்தாகிய வறுமை என்றவாறு.

**பதுமனார் :**—அஃதாவது உலகத்து மக்களா யுள்ளா(ரால)
[1]சஙகேதிததுக்கொண்டு வழங்கப்பட்ட பொருள் உளதாவதறகு அறஞ்செயது பிறவாமையால வரும் பசியும், பிணியும், இன்பங்களை அனுபவிக்கப பெறாத துன்பஙகளும், பிறரால்

[1]சங்கேதித்து—குறியீடு செய்து.

இகழப்படும் [1]இளிவரவும் உடைத்தான இல்லாமையின் இயல்பு என்றவாறு.

## குறிப்பு.—

'நல்குரவு'—

பரிமே:—அஃதாவது நுகரப்படுவன இல்லாமை.

மணக்:—நல்குரவாவது பொருளில்லாதார்க்கு உளதாகும் குற்றம் கூறுதல்.

—குறள். அதி 105.

281. அத்திட்ட கூறை அரைச்சுற்றி வாழினும்
பத்தெட்டு உடைமை பலருள்ளும் பாடெய்தும்;
ஒத்த குடிப்பிறந்தக் கண்ணுமொன்று இல்லாதார்
செத்த பிணத்திற் கடை.

**தருமர்:**—என்பது. [2]அத்து இட்ட கூறை—துவர் ஊட்டிய புடவையினை, அரை சுற்றி வாழினும்—(அரையிலே) உடுத்துக்கொண்டு திரிந்தாராயினும்; பத்து எட்டு உடைமை—அவர் பத்தாதல் எட்டாதல் (பொருளை) உடைத்தாயிருப்பாராகில், [3]பலருள்ளும்—யாவருள்ளும், பாடு எய்தும்—அவர்க்கு அதுவும் ஒரு சிறப்பாக வைத்து எண்ணப்படுந் தன்மையாம், ஒத்த குடி பிறந்தக்கண்ணும்—(ஏற்ற) உயர்ந்த குடியிலே பிறந்தாராயினும், ஒன்று இல்லாதார்—வறுமையானவர், [4]செத்த பிணத்தின் கடை—

[1] இளிவரவு—இகழ்ச்சி

[2] அத்து இட்ட கூறை—துவர் ஊட்டின புடவை, அஃதாவது சிவப்பு நிறம் ஏற்றிய காவி ஆடை, தையல் பொருந்திய ஆடை எனினுமாம்

[3] பலர் உள்ளும் பாடு எய்தும் என்பதைப் பிரித்து பலர் தனக்கு மதிக்கும் மதிப்பினை அடையும் என்றுங் கூறலாம்

[4] பிணத்தைக் கூட அலங்காரம் முதலியன செய்து மதிப்பர், அவ்வளவு கூடப் பொருளில்லாதாரை உலகோர் மதியார் ஆதலின் 'செத்த பிணத்திற் கடை' என்றார்.

—உடம்பு (கட்டு)விட்டு நாறின பிணததினும் கடையாக எண்ணபபடுவா என்றவாறு.

ஆதலால் இவவறுமை முன் கொடாததால் எய்தியது என்று அறிதற பொருட்டுச் செதத பிணததிற கடை என்றார்.

**பதுமனுர் :**— என்றது. (கீழாயினருக்குந) துவர் ஊட்டிய ஆடையை அரையின்கண் சுறறி ஒழுகினராயினும் பததாக எட்டாகப பொருளை உடையாராயின் அவவுடைமை யால பலருளளும வைதது அவாககுப பெருமை எய்தும்; ஒத்த ஒருகுடியுளளே பிறநதாராயினும் பொருளில்லார் ஆயின் (தமமோடு ஒக்கப பிறநதும பொருளுடையாரோடு எண்ணப படாது) செதத பிணததிற கடையாவா என்றவாறு.

அத்து இட்ட கூறை—நெயகிற அன்றே இட்ட சிவப் பொழிய நெயதுவிட்ட பின்பு ஊட்டிய சிவப்பு என்றுமாம் [செத்த பிணம்—உயிா போயின பிணம்; என்றது நடைப் பிணமும் உண்டாம் ஆதலின்] எடுபபாரினறிக் கிடநது கழிந்து போன பிணம என்றுமாம்.

**விளக்க உரை :**—எ-து. அததிட்ட கூறை அரைச் சுறறி வாழினும்—துவரூட்டிய புடவைகளை உடுததிக்கொண்டு திரிநதாராயினும்; பததெட்டுடைமை பலருள்ளும் பாடெய்தும்—அவா பத்தாதல் எட்டாதல் உடைமை யுடையரா யிருப்பாராகில் எல்லாருளளும வைத்து அவாக்கு அதுவுமொரு பெருமையா யிருக்கும; ஒததகுடிப் பிறநதக் கண்ணும் ஒனறில்லாதார்—ஒத்த குடியிலே பிறப்பினும வறுவியாா ஒன்றுமறறு இருபபா ராகில; செதத பிணததிற கடை—செத்த பிணத்தினுங் கடை யாவா என்றவாறு.

செத்த பிணம் என்பது உடம்பு கட்டு விட்டு நாறின பிணம்.

**கருத்து :**—துறவுக் கோலமும் உயர்குடிப் பிறப்பும் உடைய

ராயினும் இல்லாமை சிறுமையைத் தரும்.

## ஒப்புமைப் பகுதி :-

"பொருளில்லார்க்கு, இவ்வுலகம் இல்லாகி யாங்கு"

—குறள். 247.

"இல்லாரை யெல்லாரும் எள்ளுவர், செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு".

—குறள். 752

"அருளுடை யாருமற் றல்லா தவரும்
பொருளுடை யாரைப் புகழாதா ரில்லை
பொருபடைக் கண்ணாய்! அதுவே திருவுடையார்
பண்டம் இருவர் கொளல்".

—பழ. 2C9.

"மட்டாரும் பிண்டி வளங்கெழு முக்குடைக்கீழ்
மாலேகண்டாய்
முட்டாத இன்பப் புதாத்திறக்குந தாளுடைய மூர்த்திபாதம்
எட்டானும் பத்தானும் இல்லாதார்க்கு இவ்வுலகில்
இன்பமேபோல
ஒட்டாவே கண்டாய் வினையவனைத் தேறாதார்க்கு உணர்ந்தீர்
அன்றே!".

—சீவக. 1549.

(க).

282. நீரினும் நுண்ணிது நெய்யென்பர்; நெய்யினும்
ஆரும் அறிவர் புகைநுட்பம்—தேரின்
இரப்பிடும்பை யாளன் புகுமே புகையும்
புகற்கரிய பூழை நுழைந்து.

**தருமர் :**—என்பது. நீரினும—நீரினுங் காட்டில; நெய
நுண்ணிது என்பா—நெய மிகவும நொயது என்று சொல்லுவா;

நெய்யினும்—அந்த நெய்யினும் புகை நுட்பம்—புகை [1]நொய்து என்பதனை; ஆரும் அறிவர்—யாவரும் அறிவார்கள்; தேரின்—ஆராய்ந்து பார்க்கும் போது; [2]இரப்பு இடும்பையாளன்—இரப்பு என்னும் துன்பமுடையான்; புகையும் புகற்கு அரிய [3]பூழை—புகையுஞ் செல்லற்கு அரிதாகிய பூழை வாசலில், நுழைந்து புகும்—நுழைந்து சென்று புகுவன் என்றவாறு.

இல்லாமையால் தன் மானம் எண்ணாது யாவரும் செல்லுதற்கரிய வாயில்களினுஞ் செல்வன் என்பது தோன்ற புகையும் புகுதப்படாத வாயில் என்று அவ்வாயிற்காவல் மிகுதியைக் கூறினார்.

வறுமை கண்டுழி யாவரும் அவனைக் குன்ற மதிப்பர்; அதனால் அவனை நீரினும் நெய்யினும் புகையினும் நொய்தானவன் என்று அவ்விரப்பினது இழிவு கூறியதாம்.

**பதுமனார்** :—என்றது. நீரினும் நெய் நுண்ணிது என்று சொல்லுவர்; அந்த நெய்யினும் புகை நுண்ணிது ஆதலை எல்லாரும் அறிவர்; ஆராய்ந்து பார்க்கில் புகையும் புகற்கரிய பூழையினை நுழைந்து, [4]கெடுதலால் வரும் இடும்பையுடையான் புகும் என்றவாறு.

நீரினும் நுண்ணிது நெய்—நெய்யையும் நீரையும் தனித்தனியே இலையிற் கட்டி வைத்தால் அந்நீர் இருக்க நெய் உருவிப் புறமாகப் படுதலால் நீரினும் நெய் நுண்ணியமை காணலாயிற்று

---

[1]நொய்து—நுண்மையானது.

[2]இரப்பு இடும்பையாளன்—எனப்பிரித்து வறுமைத் துன்பம் உடையான் எனப் பொருள் கொண்டார் பொழிப்புரைகாரர். இப்பொருளே சிறப்புடையது.

[3]பூழை—புழை என்பதன் விகாரம்; துளை என்று பொருள்.

[4]கெடுதல்—வறுமை நெய்யினும் புகை நுட்பமாதல் பலர் அறியாதது ஆனால் நீரினும் நெய் நுட்பமாதல் பலர் அறியாதது ஆதலின் 'என்பர்' என்று கூறினர்,

அந்நெய்யினும் ஆரும் அறிவா புகை நுட்பம் என்பது எங்ஙனே என்னில் ஒரு குடம் நெய்யை வீட்டின்மேலே சொரிந்தாலும் உள் விழாமல் புறமாகப் படும். வீட்டின் உள்ளே எரிந்த நெருப்பின் புகைமேல் ஏகுதலால் அந்நெய்யினும் புகை நுட்பமாயிற்று. ஆதலால் அந்நீரினும், நெய்யினும் புகையினும் இடும்பை கூர்ந்திருப்பார் நுண்ணியர் என்க.

**விளக்க உரை** :—எ-து. நீரினும் நுண்ணிது நெய் என்பர்—நீரினுங் காட்டின் நெய் நுண்ணிது என்பர்; நெய்யினும் ஆரும் அறிவா புகை நுட்பம்—நெய்யினுங் காட்டிற் புகை நுண்ணிது என்னுமதை யாவரும் அறிவார், தேரின்—ஆராயுங் காலத்து; இரப்பிடும்பையாளன் புகுமே—இரப் பென்னுந் துன்பமுடையவன் சென்று புகுவன்; புகையும் புகற்கரிய பூழை நுழைந்து—புகையும் புகுதற்கரிய வாசலில் நுழைந்து சென்று எ-று.

இரக்கின்றவன் மிகவும் நொய்யன் என்பதாம்.

**கருத்து** :—வறுமையால் யாசிப்பவன் மிகவும் மெலிவிய தன்மை யுடையவனாவான்.

## ஒப்புமைப் பகுதி :—

'நீரினும் நுண்ணிது நெய்' :—
"தண்ணென நுண்[1] இழுது"
—மலைபடு 442.
(உ).

283. கல்லோங்கு உயர்வரைமேற் காந்தள் மலராக்கால்
செல்லாவாம் செம்பொறி வண்டினம்—கொல்லைக

[1] நெய்

கலாஅல் கிளிகடியும் கானக நாட!
இலாஅஅர்க் கில்லை தமர்.

**தருமர்:**—என்பது. [1]கலால் கிளி கடியும்—கல்லாலே கிளிகளைக கடியபபட்ட; [2]கொலலை—கொல்லைகள் சூழ்ந்த; கானகம நாட—கானக நாடனே! கல்[3]ஓஙகு உயா வரைமேல்—மிகுநத கலலுகளால உயர்வு பெறற மலையின் மேலே; காநதள மலராககால—[4]காநதட்பூ மலராத காலதது; செம்[5]பொறி வண்டு இனம்—சிவநத பொறியினையுடைய வண்டினங்களானவை; செலலா ஆம—செலலாவாகும்; (அதுபோல) இலாரககு தமா இல்லை—வறுமையரானவாககு உறவு இல்லை என்றவாறு.

(மலா உண்டா)கிய காலத்தில் உயாநத மலையிலேயாகிலுஞ் செலலும் வண்டு. அது இலலாதபோது அவவிடம் நோக்காது அதுபோல வறுமையான காலதது அவரை உறவின முறையாருங் கண்ணு(றறு) நோக்கா என்பதாம.

**பதுமனார்:**—என்றது. கல் ஓங்கி உயர்நத மலைமேற காநதள மலராதபொழுது செம்பொறி வண்டினங்கள் அம்மலை மேற் செலலவாகும் அதுபோலத (தினைக)கொல்லையிற கிளிகளைக் கலலினலே கடியுங கானக நாடனே! பொருளில்லாதாாக்குத தமா இல்லை எனறவாறு.

**விளக்க உரை:**—என்பது. கல்ஓங்குயா வரைமேல் காநதள மலராககால்—ஓஙகிய கல்லைபுடைய மலையினமேற காநதட்பூ மலராத காலத்து; செல்லாவாம் செம்பொறி

[1]கலால்—கலலால் என்பதன விகாரம்;—கல் எனறது கவண் கல்லினை.
[2]கொல்லை—தினைப்புனம்.
[3]ஓஙகு உயர்—ஒரு பொருட் பன்மொழி.
[4]கார்தட்பூ—கைபோனறு மலரும் செந்நிறமுள்ள ஒருவகைப்பூ
[5]பொறி—புள்ளி.

வண்டினம்—சிவந்த பொறிகளையுடைய வண்டினங்கள் செல்லா வாகும் (அதுபோல) கொல்லை கலா அல் கிளி கடியும் கானக நாட—கொல்லைப் புனத்திற கிளியைக் கல்லினைக் கொண்டு ஓட்டும் காட்டையுடைய நாடனே! இலாஅாக்கு இல்லை தமா—வறுமையவர்க்கு உறவின முறையாரில்லை என்றவாறு.

கருத்து :—செல்வமில்லாதவரிடம் யாரும நெருஙகமாட்டார்.

## மேற்கோள் பகுதி :—

பேரா :—"முசசீரடியின் முதறசீரகருக் தளை கூறுரோ வெனின, ஆண்டுத தளை வகையின்றியும் வருதலின், வரைந்து கூறுா எனபது" என றுகூறி அதறகு "கலாஅற கிளிகடியும கானக நாட இலா அாக் கிலலை தமா" எனபதனை மேறகோளக காட்டுவா.

—தொல் செய் சூ. 74.

## ஒப்புமைப பகுதி :—

"ஆாதத பொறிய அணிகிளர் வண்டினம
பூததொழி கொமபினமேற செலலாவாம—நீாததருவி
தாழா வுபாசிறப்பின தண்குனற நனறுட!
வாழாதாாக கிலலை தமா"

—நாலடி. 290.

"அறஞசாரா நலகுரவு ஈன்றதா யானும
பிறன்போல நோககப படும்".

—குறள் 1047.

"இலலானை
இலலாளும வேணடாள மற றீனறெடுதத தாயவேணடாள்
செல்லா தவன வாயிற சொல".

—நல்வழி. 34.

"பெண்டிரும் மதியார் பெருங்கிளை தானது
கொண்ட விரகர் குறிப்பினின் அஃகுப

வெண்டறை நின்று வெறுக்கை இலராயின்
மண்டினர் போலாதம மக்களும் ஒட்டார்"

—வளை.

"கெட்டார்க்கு உற்றார் கிளையிலும் இல்லை"

—பழமொழி.

284. உண்டாய போழ்தின உடைநதுழிக் காகம்
[போல்
தொண்டா யிரவர் தொகுபவே—வண்டாயத
திரிதருங காலதது தீதிலிரோ எனபார
ஒருவரும் இவ்வுலகத தில்.

**தருமர்:**—எனபது. உண்டு ஆய போழதின்—செல்வம உள்ள காலதது, உடைநத உழி—யாக்கை [1]உடைநத இடதது; காகம போல—காகம வநது திரண்டாறபோல, [2]தொண்டாய—அடிமைததனமையாக; இரவா தொகுப—இரககுமவா வநது சோவா, வண்டு ஆய திரிதரும காலதது—வணடு போல; (அவா அநதச செல்வஙகெடடுப பல திககுஞசென்று பெறற பெறற உணவுகளை உணடு) திரியுங காலதது, [3]தீது இலிரோ என்பார—இபபடி மிடியால துன்பமுறறீரோ என்று வினவுவார. ஒருவரும இ உலகதது இல—யாரும இவவுலகததுள இல்லை என்றவாறு.

உள்ள காலததில காகந திரண்டாற்போல (இரவலா சோதறகு) பயனபட்டவா மிடியானபோது தாம கொடுததிலராயின இபபடித துனபபபடுகிறீரோ என்று வினவவுஞ

[1] உடைதல—உடல உயிர நீங்கிப் பிணமாய்ச் சிதைதல.

[2] தொணடு—எனபது ஆகவே தொணடு ஆயிரவர் எனப் பிரிதது எனபதிஞயிரவா எனறும, அடிமையாய் ஆயிரவா என்றும் பொருள கூறினும ஆம.

[3] தீது இலிரோ—துனபமில்லாதிருக்கின்றீரோ என்பதே பொருள. இப்பொருள ஆய்தற்குரியது.

செய்யார் ஆதலால் அவ்வறுமை மிகப்பொல்லாது. முற் பிறப்பிற் கொடாதார் இவ்வகைத்தாய துன்பமுறுவர் என்று அறிவுறுத்தியது.

**பதுமனார் :**—என்பது. பொருள் உண்டாய பொழுதின் கண், யாக்கை உடைந்த இடத்துக் காக்கை போலத் தொழும்பர் ஆயிரவர் வந்து திரள்வர். வண்டு போலப் பெற்றது நுகர்ந்து ஒருநிலையின்றியே திரியுங் காலத்து நீர் தீது இலிரோ என்று வினவுவார் உலகத்தில் ஒருவருமில்லை என்றவாறு.

வண்டு ஒரு பூவின்றிப் பலபூவுஞ்சென்று மதுவை நுகரும் அதுபோல இவரும் ஓரிடம் போலே பல இடமும் சென்று ஏற்குங்காலத்து ஐயகோ என்று நோவார் ஒருவருமில்லை.

**விளக்க உரை :**—என்பது. உண்டாய போழ்தின்— செல்வமுண்டான காலத்து; உடைந்துழிக் காகம் போல்— யாக்கை உடைந்தவிடத்துக் காகம் வந்து திரண்டாற்போல; தொண்டாயிரவர் தொகுபவே—அடிமைத்தன்மையாக இரக்குபவர் வந்து சேர்வர்; வண்டாயத் திரிதருங் காலத்து— பின்பு அந்தச் செல்வங்கெட்டு மிடித்து வண்டுபோலப் பல திக்குகளிலும் சென்று பெற்ற பெற்ற உணவுகளை உண்டு திரியுங்காலத்து, தீதிலிரோ என்பார் ஒருவரும் இவ்வுலகத்து இல—இப்படி மிடியாலே துன்பமுற்றீரோ என்று வினவுவார் இவ்வுலகத்து யாவரும் இல்லை என்றவாறு

**கருத்து:** —செல்வமில்லாத காலத்து இரங்குவார் இன்மையால் வறுமை பொல்லாது.

## ஒப்புமைப் பகுதி :—

“பாலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனிற் பலராவர்—ஏலா
இடரொருவர் உற்றக்கால் ஈங்குன்ற நாட!
தொடர்புடையேம் என்பார் சிலர்”.

—நாலடி. 113.

"முட்டின் றொருவர் முயன்ற பொழுதின்கண்
அட்டிற்றுத தின்பவர் ஆயிரவர் ஆபவே
கட்டலர்தார் மார்ப! கலியூழிக் காலத்துக்
கெட்டார்க்கு நட்டாரோ இல்".

—பழமொழி. 134.

"கல்லானே யானாலுங் கைப்பொருள்ஒன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்"

—நல்வழி. 34.

குறிப்பு :—

செல்வரைச் சூழுங் கீழ்மக்கட்குப் பிணத்தைச் சூழும் காக்கை உவமையாம்.

285. பிறந்த குலமாயும்; பேராண்மை மாயும்
சிறந்ததங் கல்வியும் மாயும்;—கறங்கருவி
கனமேற் ‡கழூஉங் கணமலை நன்னாட!
இன்மை தழுவப்பட் டார்க்கு.

**தருமர் :**—என்பது. கறங்கு அருவி—ஓசையுடைத்தாய் விழுகின்ற அருவிகள்; கல்மேல்—கல்லின்மேல் (விழுந்து); கழூஉம—(அதன் மாசுபோலக) கழுவப்பட்ட சிறப்பினையுடைய; கணம் மலை நாட—திரண்ட மலை சூழ்ந்த நல்ல நாட்டையுடையவனே! இன்மை தழுவப்பட்டார்க்கு—வறுமை சூழப்பட்டவர்க்கு; பிறந்த [1]குலம மாயும்—தாம பிறந்த குலம் (கெடும்); சிறந்த தம் [2]கல்வியும் மாயும்—சிறப்புடைத்தாகிய தமது கல்வியும் கெடும் என்றவாறு.

---

‡கழுவும் என்பது விகாரப்பட்டு நின்றது. 'தழூஉம் என்றும் பாடம.
[1]குலம என்றது—குலப் பெருமையை.
[2]கல்வி என்றது கல்வித் திறமையினை.

இரப்பு என்னும் இளிவரவினாலே தமது குடி உயர்வும் ஆண்மையும் கல்வியும் கெட்டு யாவராலும் குன்றமதிக்கப்படுவர் ஆதலால் வறுமை பொல்லாது என்பதுகூறி முறகொடாமையால இததன்மையா ஆவா என அறிவுறுததியது.

**பதுமனார்** :—என்றது. தாம் பிறந்த குலததில் நன்மையுங கெடும; பெரிய ஆண தகைமையும கெடும், மிகுநத தம கல்வியறிவுஙகெடும். கறங்கருவி கன்மேற கழுவுஙகணமலை நன னாடனே! வறுமை [1]கூாபபடடாாக்கு எனறவாறு.

கறஙகருவி கனமேல் தழூஉம கணமலை நனனாடனே—திரண்ட மலையின்மேல நினறு கிடநத கலலினமேல ஆரவாரத துடனே குதிககும அருவியையுடைய குறிஞசி நிலததை யுடையவனே எனபாருமுளா.

**விளக்க உரை** :—என்றது. பிறநத குலம் மாயும்—பிறநத குலம கெடும; பேராணமை மாயும—பெரிய ஆண தகைமையும் கெடும; சிறநத தம கலவியும மாயும—சிறபபுடைததான (தமது); கல்வியுங கெடும; கறஙகருவி கல் மேற கழூஉம் கனமலை நன்னாட!—ஓசையுடைததாய விழுகிற அருவி கலலினமேல விழுநது அதனமாசுபோகக கழுவுநதிரண்ட மலை நாடனே!; இனமை தழுவப்படடாாககு—வறுமை சூழப படடவாக்கு என்றவாறு.

**கருத்து** :—செலவமிலலாதவா குலம ஆண்மை கல்வி இவறறால் மேன்மை பெறினும சிறபபடையாா

## ஒப்புமைப் பகுதி .—

"தொலவரவுந தோலுங கெடுககுந தொகையாக
நல்குர வென்னும நசை"

—குறள். 1043.

[1] கூர—மிக

"நலனும் இளமையும் நல்குரவின் கீழ்ச்சாம்"
—நான்மணிக்கடிகை, 82.

"மானங் குலங்கல்வி வண்மை அறிவுடைமை
தானந் தவமுயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந்திடப் பறந்து போம்".
—நல்வழி 26.

"குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி"
—மணிமேகலை, 11 : 76-80.

286. *இட்டாற்றுப் பட்டொன்(று) இரந்தவர்க்கு [ஆற்றுது
முட்டாற்றுப் பட்டு முயன்றுள்ளூர் வாழ்தலின்
நெட்டாற்றுச் சென்று ‡நிரைமனையிற்
கெட்டாற்று வாழ்க்கையே நன்று. [கைந்நீட்டும்

**தருமர்:**—என்பது. [1]இடு ஆறு பட்டு—வறுமையால் இடுக்கான வழியிலகப்பட்டு, ஒன்று இரந்தவர்க்கு—ஒன்றினை இரந்தவருக்கு; ஆற்றுது—கொடுக்கமாட்டாமல்; முயன்று முட்டு ஆறு பட்டு—முயற்சியினும் ஒன்று ஆகாமல் [2]முட்டு நெறிப்பட்டு, உள் ஊர் வாழ்தலின்—உள்ளூரில் வாழ்வதினும்; நெடு ஆறு சென்று—தூர தேசங்களிற் சென்று; நிரை மனையில்—

‡நிறைமனை என்றும் பாடம்.
[1] இட்டு ஆறு—சிறுமையான வழி.
[2] முட்டு—துன்பம்.
*இது முதல் 2 செய்யுட்களின் முறைவைப்பு சில பிரதிகளில் மாறு பட்டுள்ளது.

நிரை நிரையான வாயில்களதோறும் (புக்கு); கை நீட்டும்—பிச்சை ஏற்கின்ற; [1]கெடு ஆறு வாழ்க்கையே — கெடுவழியான வாழ்க்கையே; நன்று—நன்றும் என்றவாறு.

ஏறபார்க்குக் கொடுக்கமாட்டாமல் வறுமையுற்ற காலதது அவரை அறியாத தேசங்களிற சென்று இரப்பதன்றி உள்ளூரி லிருந்து இழிவுபடுதல் நன்றனறு என்று அவா முற்கொடாமை இழிவு கூறியது.

**பதுமனூர்** :—எனறது [2]இட்டிதாகிய நெறியின்கட்பட்டு இரநதவாககு ஒனறை ஆறறமாட்டாது [3]முட்டு நெறிபபட்டு முயன்று உளளூரிலிருநது வாழதலின நெடியவழிபோய [4]நிறைவு பட்ட மனையினகட சென்று கைநீட்டும கெட்டாற்று வாழ்க்கையே நனறு எனறவாறு.

இட்டாறறுபபட்டு—ஐசுவரிய வருவாய இட்டிதாய; கெட்டாறறு வாழக்கை—வேடம் பூண்டு பல இடநதோறும் ஏற்கை.

**விளக்க உரை** :—எ-து. இட்டாறறுபபட்டு ஒன்று இரநதவர்க்கு ஆறறாது—இட்டிய வழிபபட்டு ஒன்றினை இரநதவாக்கும் கொடுக்கையில்லாமல்; முட்டாறறுபபட்டு முயனறு உளளூா வாழதலின்—முட்டு நெறிபபட்டு முயறசியினும ஒன்றும ஆகாமல் உளளூரில் வாழ்வதினும்; நெட்டாறறுச சென்று—தூரதேசஙகளிலே போய; நிரைமனையிற கை நீட்டும—நிரை நிரையான வீடுகள் தோறும் புகுநது பிசசைககுக் கை ஏறகின்ற; கெட்டாறறு வாழக்கையே நன்று—அக்கெடு வழியான வாழக்கையே நன்று என்றவாறு.

[1] கெட்ட ஆறு என்பது கெட்டாறு என்றாயிறறு
[2] இட்டிதாகிய நெறி—இரப்பவர்க்குரியது.
[3] முட்டு நெறி —இரக்கப்படுவர்க்குரியது.
[4] நிறைவு—பொருள் நிறைவு

**கருத்து:**—இரந்தோர்க்கு உதவ இயலாத வறுமை நிலையினும் இரந்துண்டு வாழும் நிலை நல்லது.

## ஒப்புமைப் பகுதி:—

"உள்கூர் பசியால் உழைநசைஇச் சென்றார்கட்கு
உள்ளூர் இருந்தொன் றாற்றாதான்—உள்ளூர்
இருந்துயிர் கொன்னே கழியாது தான்போய்
விருந்தினன் ஆதலே நன்று".

—நாலடி. 288.

(சு).

287. கடகஞ் செறிந்ததங் கைகளால் வாங்கி
அடகு பறித்துக்கொண்(டு) அட்டு—குடைகலனா
உப்பிலி வெந்தைதின்(று) உள்ளற்று வாழ்பவே
துப்புரவு சென்றுலந்தக் கால்.

**தருமர்:**—என்பது. [1]துப்புரவு—தாம் முன்பு செல்வத்துக்குப் பண்ணின தவம், சென்று உலந்தக்கால்—மாண்ட காலத்து, [2]கடகம் செறிந்த தம் கைகளால்—பொற்கடகஞ் சேர்த்திருந்த தமது கைகளினால்; வாங்கி—தூற்றினை வளைத்து; அடகு பறித்துக்கொண்டு—இலைக் கறியைப் பறித்துக்கொண்டு, அட்டு—வேக வைத்து; [3]குடை கலன் ஆ—குழிந்த ஓடு கலமாக (அதில் இட்டு) உப்பு இலி வெந்தை—உப்பில்லாது வெந்த அந்த இலைக்கறியை, தின்று—, உள் அற்று வாழ்ப—மனஞ் சுருங்கி வாழ்வர் என்றவாறு.

[1] துப்புரவு—நுகர்ச்சிக்கு ஏற்ற சிறந்த பொருள்.

[2] கடகம்—கைவளை; கடகம் செறிந்த தம் கைகளால் வாங்கி என்றதனால் அன்னார் முன் செல்வராயினமை விளங்கும்.

[3] குடைகலன் ஆ—குடையப்பட்ட பனங்காய், தேங்காய் ஓடு இவற்றை உண்ணும் கலமாக.

முறபிறப்பிற சிறிதுநாள் கொடுததன்றித் தாம் உள்ளளவும் ஒருமையுறறு அறஞ செயயாதார இக்காலதது இப்படி வறுவிய ராவா எனபதாம்.

**பதுமனார் :—** என்றது. பொறகடகஞ செறிந்த தம் கைகளாலே அடகு வாங்கிப பறிததுக கொண்டு அட்டுப (பனை நுஙகாற) செயயபபடட குடையே கலஞக உபபின்றியே வெநததனைத தினறு மனங குறைநது வாழவா; செலவஞ சென்று கழிநத இடதது எனறவாறு

(மனஙகுறைநது) வாழவது—ஐமபுலன்களும கெட்டு ஞான மறறு வாழவது துபபுரவு சென்று உலநதககால—ஐசுவரியததைக கொடுககும நலவினை (முடிநத விடதது) எனறும, சமததுக கெடடவிடதது எனறும (ஆம) சமதது—உறசாகமும வீரியமும உலததல—முடிதல.

**விளக்க உரை :—** எ-து. கடகஞ செறிநத தம் கைகளால வாஙகி அடகு பறிததுககொணடு அட்டு—கடகஞ செறிககபபடட கையினால இலைககறி பறிககுந் துறறினை வளைதது அநத இலைககறியைப பறிததுக கொண்டு வநது வேகவைதது, குடை கலஞ—பனை நுஙகும பெயகல மாககொண்டு, உபபிலி வெநதை தின்று—உபபிலலாமல வெநத இலைககறியைத தினறு; உளளறறு வாழபவே—மனங்குறைநது வாழவா; துபபுரவு சென்று உலநதககால—முனபு தாம செலவததுககு மாண்டகாலதது எ-று.

**கருத்து :—** செலவநிலை மாறிய வறுமை வாழவுமிக்க துனபந தரும.

## ஒப்புமைப் பகுதி :—

"பாலுடை யமிதம பைபபொற கலததிடைப பாவை யன்ன
நூலடு நுசுப்பி னல்லா ரேநதவும் நோநது நோககாச்

சேலடு கண்ணி காந்தள் திருமணித் துடிப்பு முன்கை
வாலட் கருளிச் செய்ய வளத்துறை தெய்வ மானுள்".
—சீவக சிந்தாமணி.

(எ).

288. உள்கூர் பசியால் உழைநசைஇச் சென்றார்கட்கு
உள்ளூர் இருந்தொன்று ஆற்றாதான்—உள்ளூர்
இருந்துயிர் கொன்னே கழியாது தான்போய்
விருந்தினன் ஆதலே நன்று.

**தருமர்:**—என்பது. [1]உள்கூர் பசியால்—[வயிற்றின்] உள்ளே மிகுந்த பசியினாலே (துன்பமெய்தி) உழை—தாமாட்டு, நசைஇ சென்றார்கட்கு—[2]நச்சி வந்தார்க்கு, உள்ளூர் இருந்தும—உள்ளூரிலே இருந்தும், ஒன்று ஆற்றாதான்—ஒன்றினைக் கொடுக்க இடமில்லாதவன், உள்ளூர் இருந்து—உள்ளூரிலே இருந்து, [3]கொன்னே [4]உயிர் கழியாது—ஒருபயனுமின்றியே தன் வாழ்நாளைக் கழியாமல், தான் போய—தான் தூரதேசங் கடந்து சென்று, [5]விருந்தினன் ஆதல்—புதியவனாகத் திரிந்து உயிர் வாழ்தல், நன்று—நன்றாம் என்றவாறு.

தன் வயிறு வளர்க்கும் மாத்திரம் அன்றி, தன்னை நச்சி வந்தவர்க்குப் பகிர்ந்திடம் இல்லாமல் உள்ளூரிலே உயிர் வாழ்வதினும் தன்னையறியாத தேசத்திற் சென்று இரப்பது நன்று என அவர் கொடாமையின் இழிவு கூறியதாம்.

[1]உள்—என்றது வயிற்றின் உள்ளிடத்தை; மனத்தின்கண் என்ற பொருள் சிறவாது.

[2]நச்சி—விரும்பி

[3]விருந்தினன் ஆவதால் விருந்து புரந்தவனுக்குப் புண்ணியம் விளைதலின் உயிர்வாழ்வு பயன்படும் என்றற்கு 'கொன்னே கழியாது' என்றார்

[4]உயிர் என்றது உயிர்வாழ்வினை

[5]விருந்தினன் ஆதல் நன்று—இரத்தல் நன்று என்பதை இங்ஙனம் கூறியது இகழ்ச்சி.

**பதுமனார் :—**என்றது. மனத்தினகண் மிக்க பசி நோயால் தன் மாட்டு ஒன்றினை நச்சிச் சென்றாரகட்குத் தன் ஊரிலிருந்து ஒன்றினை ஈயமாட்டாதான தன்னூரிலிருந்து வாழ்நாளைப பயனின்றியே போககாது தான் போயப பலவூரினும விருந்தாயச் சேறல் நன்று எனறவாறு.

**விளக்க உரை :**—எ-து. உள கூா பசியால—உளளுமிக்க பசியாலே, உழை நசைஇச சென்றாரகடகு—தமமிடததினை நச்சி வநதவாக்கு; உள்ளூா இருநதும் ஒனறு ஆற்றாதான்—உள்ளூரிலே இருநதும ஒன்றினை உதவ மாட்டாதவன்; உள்ளூா இருந்து உயிா கொன்னே கழியாது—உளளூரிலே இருநது ஒரு பயனுமினறித தன வாணாளைக கழியாமல; தான போய விருநதின ளுதலே நனறு—தான தூர தேசஙகளிலே போய ஊாதோறும புதுமையாகத திரிந்து உயிாவாழுதலே நனறு எனறவாறு.

**கருத்து** —பசிததவாககு உதவமாட்டாத வறியவன வாழவு பயனறறது.

## ஒப்புமைப் பகுதி :-

"இரததலின இனனாது மனற நிரபபிய
தாமே தமிய ருணல".

—குறள். 229.

(அ).

289 நீர்மையே யன்றி நிரம்ப எழுந்ததங
கூர்மையும் எல்லாம் ஒருங்கிழப்பர்—கூர்மையின்
முல்லை அரும்பகரும் எயிற்றாய்! †இரப்பெனனும்
அல்லல் அடையபபட் டார்.

**தருமர் :—**எனபது. கூாமையின முலலை அலைகரும்

†நிரபபெனனும எனறும பாடம.

எயிற்றாய்—கூரிய முல்லை [1]முகையை வருத்தும் [2]எயிற்றினை யுடையவளே!; இரபபு என்னும் அல்லல்—இரப்பென்னுந் துனபம்; அடையபபட்டார்—சேரபபடடவா; நீர்மையே அன்றி —(தமது) நய குணமுடைமையே அலலதும்; நிரம்ப எழுநத தம் கூரமையுமம்— [3]அமைதியுடைய மிகக அறிவும; [எல்லாம—மறறுளளன யாவும]; ஒருஙகு இழபபா—ஒரு சேர இழநது விடுவா எனறவாறு

வறுமையுறற காலததது நாம இததன்மையவாய குணமுடையோம் அல்லோ எனபது நோககாமல், விடாது இரத்தலாலே அறிவும் இழநதாா எனறு அவா முறகாலததுக கொடாமையை இகழ்ந் துரைததவாறு.

**பதுமனார்:**—எனறது. தம்மாட்டுள்ள நற்குணஙகளை யனறி, நிறைய உளவாய கூரிய அறிவும (மறறு)முளளன வெலலாம கூட இழபபா, கூாமையினலே முல்லை அலைக்கும எயிறறாய! கெடுதல எனனும இடுமபையால அடையபபடடாா எனறவாறு.

முலலை அலைககும எயிறறாய—எயிறறின கூாமைககு முலலை ஒவவாமல ஓடுதல.

**விளக்க உரை:**—எ-து. நீரமையே அன்றி—தம் முடைய நயமுடைமையே யலலது, நிரமப எழுநத தம கூரமையும் எல்லாம ஒருங்கிழபபா—அமைதியுடைய மிகக அறிவும சேர இழநது விடுவா, கூாமையின முல்லை அலைககும எயிறறாய! —கூரிய முலலை முகையை வருததும எயிறறினையுடையாய!;

[1] முகை—அரும்பு

[2] எயிறறினை—பறகளை

[3] அறிவு நிரமபி மலாநதபோது அமைதி பிறததலின இஙஙனம கூறினர்.

நிரப் பென்னும் அல்லல் அடையப் பட்டார்—நிரப்பென்னும் துன்பஞ் சேரப்பட்டவர் என்றவாறு.

நிரப்பென்றது நாள் தோறும் தன்னுடைய நடைக்கு வேண்டுவன இரந்து கொண்டு வந்து நிரப்புதல்.

**கருத்து :**—செல்வ மில்லாதவரது குணமும் அறிவும் விளக்கம் பெற மாட்டா.

(க).

290. ஆர்த்த பொறிய அணிகிளர் வண்டினம்
பூத்தொழி கொம்பினமேற் செல்லாவாம்—
நீர்த்தருவி
தாழா வுயர்சிறப்பின தண்குன்ற நன்னாட!
வாழாதார்க்கு இல்லை தமர்.

**தருமர் :**—என்பது. [1]நீர்த்த அருவி–நீர்மையினையுடைய அருவிகள்; தாழா—ஒரு காலத்திலும் மாறாமல்; உயர்சிறப்பின—விழுந் சிறப்பினையுடைய தண் குன்றம் நல் நாட!—குளிர்ச்சி (பொருந்திய நல்ல) மலை நாடனே!, [2]ஆர்த்த பொறிய—[3]பொறிகளை ஆர்ந்த, அணிகிளர் வண்டு இனம்—அழகு மிக்க வண்டினங்கள், [4]பூத்து ஒழி கொம்பின மேல்—பூத்து உதிர்ந்த கொம்பினமேல்; செல்லா ஆம்—பின்பு செல்லாவாகும் (அது போல) வாழாதார்க்கு தமர் இல்லை–(செல்வராய்) வாழாதாருக்கு உறவின் முறையார் இல்லை என்றவாறு.

[1] நீர்த்த—நீரையுடைய என்றுமாம்.

[2] ஆர்த்த—ஒலியுடைய எனினும் ஆம.

[3] பொறி—புள்ளி

பூத்தொழி கொம்பு என்றது முன்பூத்துப் பின் பூத்தல் நீங்கின மரக் கொம்பு இது முன் செல்வராயிருந்து உதவிப் பின் செல்வம் அற்றுள்ள வறியவருக்கு உவமை.

பூவுள்ள காலத்து வண்டு சேருவதுபோல ஒருவனுக்கு வாழ்வுள்ள காலத்து யாவரும் உறவு ஆவா. வறுமியரான காலத்து உறவின் முறையாரும தமக்கு உறவு என நோக்கார். இவவகைத்தாய இழிவு முற்காலத்துக் கொடாமையால் வருவது என அறிவுறுத்தியது

**பதுமனார்** —என்றது யாப்புற்ற பொறிகளையுடைய அழகு மிக்க வண்டினம பூத்தொழி கொம்பின்மேற் செல்லா வாகும் (அதுபோல) நீாததருவி தாழா உயாசிறப்பின தண் குன்ற நன்னுடனே! வாழாதாாக்குத் தமா இல்லை என்றவாறு.

ஆர்த்த பொறிய அணிகிளா வண்டினம—நிறைந்த பொறியை அணியாக வுடைய கிளாந்த வண்டினம. நீாதது அருவி தாழா உயா சிறப்பின் தண்குன்ற நன்னுட—மிகவும அருவி விடாமல ஒழுகுங் குளிாச்சி பொருந்திய குறிஞ்சி நிலத் தோழனே என்பாரும உளா

**விளக்க உரை:**—எ-து. ஆர்த்த பொறிய அணிகிளா வண்டினம—பொறிகளை ஆாத்துக் கொண்டிருக்கிற அழகுமிக்க வண்டினங்கள்; பூத்தொழி கொம்பின மேற செல்லாவாம— பூத்து உதிாந்துபோன கொம்பினமேற பின்பு செல்லா வாகும அதுபோல, நீாதது அருவி தாழா உயாசிறப்பின தண குன்ற நன்னுட!-நீாமையிணயுடைய அருவிகள ஒருகாலத்தும மாறுமல விழுகின்ற சிறப்பிணயுடைய நல்ல மலைநாடனே!; வாழாதாாக்கு இல்லை தமா—வாழாதாாககு உறவின முறையாாில்லை எ-று

**கருத்து**:—செல்வமிலலாதவரை உறவினர் தேடிச செல்ல மாட்டார்.

## ஒப்புமைப் பகுதி.—

"கல்லோங் குயாவரைமேல் காந்தள் மலராக்கால
செலலாவாம செமபொறி வணடினம —கொலலைக

கலாஅற் கிளிகடியும் கானக நாட!
இலாஅஅற கில்லைத் தமர்".

—நாலடி. 283.
(ம).

---

## 30. மானம்.

**தருமர்:**—அஃதாவது எவ்விடத்தும் மானங் குன்றாது ஒழுகுதலும், அந்த மானத்துக்கு அழிவு வருங்காலத்துத் தன்னுயிரைத் துறந்தாயினும் மானத்தைப் பரிகரிக்கக் கடவன் என்பதுமாம்.

**பதுமனர்:**—அஃதாவது எவ்விடத்தும் மானம் சிதையாமற் காத்தொழுகுதலும், யாதொரு வகையினாலும் காக்க முடியாது சிதையும்படி வரில் தம் பிராணனை விட்டு மானத்தைக் காப்பதூஉம் ஆகிய இயல்பு என்றவாறு.

### குறிப்பு:—

'மானம்' —

பரிமே:—இனிக் குடிப்பிறந்தார்க்கு உரியவாய குணங்கள் கூறுவான் தொடங்கி, முதற்கண் மானம் கூறுகின்றார். அஃதாவது எஞ்ஞான்றும் தந்நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம். இஃது அக்குடிப் பிறப்பினை நிறுத்துதலுடைமையின், அச்சிறப்புப்பற்றி முன் வைக்கப்பட்டது.

மணக்—மானமாவது எக்காலத்தினும் தாந்து நிலைமையில் திரியாமை இது குடிப்பிறந்தார்க்கு இன்றியமையாமையின் அதன்பின் கூறப்பட்டது இது மூன்று வகைப்படும்; தமது தன்மை குன்றுவன செய்யாமையும், இகழ்வாரமாட்டுச் செய்யாமையும், இளிவரவு பொறுமையும் என.

—குறள். அதி. 97.

291. திருமதுகை யாகத் [1]திறனல்லார் செய்யும்
பெருமிதங் கண்டக் கடைத்தும்—எரிமண்டிக்
கானந் [2]தலைக்கொண்ட தீப்போற் கனலுமே
மானம் உடையார் மனம்.

**தருமர்:**—என்பது. திறன அல்லார—திறப பாடாகிய அறிவில்லாதார; திரு மதுகை ஆக—தமது செலவ வலியினாலே; செய்யும்—செய்கின்ற; பெருமிதம கணடக் கடைததும்—[3]பெருமிதத்தைக் கணடவிடததும்; மானம உடையார மனம—மானததை யுடையவரது மனம்; எரி மண்டி—(எரிதல மிகுநது) கானம் தலைகொண்ட தீ போல்—காட்டிலே பற்றிப படர்நது எரியும் தீப் போல; கனலும—வேகா நிறகும என்றவாறு.

பெருமிதம—மிகுதி அயலார செய்யும் மிகுதிக்கு மனம் பொறுதவர மானபங்கம் வரில உயிர தரியார என்பதாம்.

**பதுமனார்:**—என்றது. செலவமே வலியாகத [4]திறப பாடில்லாதார செய்யும மிகுதியைககணட பொழுதே; எரிதலிலே மண்டிக் கானததை எல்லாம கைககொண்டு சுடுகின்ற தீப போல் கொதியா நிற்கும மானம உடையாரது மனம என்றவாறு.

திரு மதுகை ஆகத திறன் இல்லார—இடையிட்டு இலககுமி பொருநதுகையில், அடிபபட்ட ஐசுவரியம என்று இத் திறபபாடில்லாதார. கானம தலைக கொண்ட தீ—வெட்டி அடைநத காட்டைச் சூழநத தீ

**விளக்க உரை:**—எ-து. திருமதுகையாகத திறனிலார

[1] திறனிலார் என்றும பாடம
[2] தலைப்பட்ட என்றும் பாடம.
[3] பெருமிதம்—வரம்பு கடந்த செய்கை.
[4] திறப்பாடில்லாதார்—நற்குணமில்லாதவர்.

செய்யும்—தமது செல்வ வலியினைக் கொண்டு திறப்பாடில்லார் தவர் செய்கின்ற; பெருமிதங் கண்டக் கடைத்தும—மிகுதியைக் கண்டவிடத்தும, எரிமண்டிக் கானந் தலைக் கொண்ட தீப்போற கனலுமே—எரிந்து மண்டிக் காடு தீப்பட்டாற போல வேகா நிற்கும்; மானம் உடையார் மனம்—மான முடையாரது மனம என்றவாறு.

தமக்கொரு மானபங்கம் வரின, தம்முடைய பிராணனை விட்டு மானத்தைப் பரிகரிப்பர் எனபதாம்.

**கருத்து:**—மானமுள்ளவா, கயவரது வரம்பு மீறிய செயலைக் கண்டால் மனங்கொதிப்பா.

## மேற்கோள் பகுதி:—

மயிலை:—உடமபொடு கூடிய உயிாக்குணததுக்கு 'மான முடையாா மனம்" என்பதனை எடுத்துக்காடடுவா.

—நன். சூ 451.

(க).

292. எனபாய் உகினும் இயல்பிலார் பினசெனறு
தம்பாடு உரைபபரோ தம்உடையாா—தம்பாடு
[1]உரையாமல் முன்னுணரும் ஒண்மை உடை
உரையாரோ தாமுற்ற நோய். [யார்க்கு

**தருமர்:**—என்பது. [2]தம் உடையாா—தமது நெஞசினைத தமது வசமாகப் பெறறவா; எனபு ஆய உகினும—(பசி யாகிய நோயால) எலும்பு தோன்ற உடமபு கெடினும; இயல்பு இலாா பின்செனறு; தமபாடு உரைபபரோ—தமது வறுமையினைத

[1]உரையாமை என்றும் பாடம்.

[2]தம் உடையார்—தம் மானததைக் காக்கும் குணமுடையார் என்றுமாம்.

தோன்றச் சொல்லுவரோ (சொல்லார்); தம் பாடு—தமது வறுமையை; உரையாமல் முன் உணரும்—தாம் சொல்லுவதன் முன்னமே அறிந்து அந்த வறுமையைத் தீர்க்கவல்ல; ஒண்மை உடையார்க்கு—ஒள்ளிய அறிவினை யுடையார்க்கும்; தாம உற்ற நோய் உரையார்—(தாம் அடைந்த துன்பத்தைச்) சொல்லாதவர் என்றவாறு.

உரையாா—தமது வறுமையைத தாம சொல்லுமுன்பே அறிந்து தீாகக வல்லவாக்குஞ் சொல்லார்; ஓ என்பது மான முடையவா தன்மை இதுவாக இருநதது என்று அறிஞா அதிசயிதது இரஙகியது.

**பதுமனார் :**—என்றது. பசிநோயால் தம் உடமபு [1]புலர்ந்து எலும்பாய் அழியினும குணமில்லாதாா பின் சென்று தாம் பட்ட இடாப்பாட்டினை அறியச் சொல்லுவரோ ? தம் மானத்தைத தமக்கென வுடையாா; தம இடாபபாட்டைத தாம் உரைபபதறகு முனனே உணர்ந்து தம் வறுமையைக் கெடுக்கும் அறிவினை யுடையார்கடும் தாம் உறற நோயைச் சொல்லாா என்றவாறு.

தம் பாடு—தம்முடைய [2]சளபபாடு; ஆதலால் மானம உடையாா ஓரிடத்துஞ் சொல்லார் என்பதாம். ஓ என்றது மானத்தால் வநத நோவு.

**விளக்க உரை :**—எ-து. என்பாய் உகினும்—பசி நோயால் எலும்பு தோன்றி ஊன் கெடினும்; இயலபிலாா பின் சென்று—தகுதி யில்லாதாா பின் சென்று; தப் பாடு உரைப்பரோ தம உடையாா—தமது வறுமை தோன்றச சொல்லுவரோ தமது நெஞசே தமக்குரிததாகப பெறறவா, தமபாடு உரையாமை முன் உணரும் ஒண்மை உடையார்க்கு—தம்முடைய வறுமை

[1] புலர்ந்து—வாடி.
[2] சளப்பாடு—துன்பம.

யினைச் சொல்லுவதன் முன்னமே அறிந்து அந்த வறுமையைத் தீர்க்கவல்ல ஒள்ளிய இயல்பை யுடையார்க்கு; உரையாரோ தாம் உற்ற நோய்—தாமுற்ற நோயைச் சொல்லாத மான முடையவர் என்றவாறு.

ஆதலால் இருவர்க்குஞ் சொல்லார் என்பதாம். ஓ—அசை.

**கருத்து:**—மானிகள் மிகத் தாழ்ந்த நிலையினும் தமது துன்பங் களைப் பண்பிலாரிடம் கூறார்.

## ஒப்புமைப் பகுதி :—

"வற்றிமற் றற்றப் பசிப்பினும் பண்பிலார்க்கு
அற்றம் அறிய வுரையற்க—அற்றம்
மறைக்குந் துணையார்க் குரைப்பவே தம்மைத்
துறக்குந் துணிவிலா தார்".

—நாலடி. 78.

"தெற்றப் பரிந்தொருவர் தீர்ப்ப ரெனப்பட்டார்க்கு
உற்ற குறையை உரைப்பதாம்—தெற்ற
அறையார் அணிவளையாய்! தீர்த லுறுவார்
மறையார் மருத்துவர்க்கு நோய்"

—பழ. 88.

"புகழின்றால் புத்தேளநாட் டுய்யாதால் என்மற்(று)
இகழ்வார்பின் சென்று நிலை".

—குறள். 966.

## குறிப்பு :—

இரண்டு எதிர்மறை ஓர் உடன்பாட்டை உணர்த்துமாகலின், உரையாரோ என்பதற்கு உரைப்பர் என்று பொருள் கூறலும் ஒன்று. அஃதாவது மானிகள் பண்பிலார்க்குத் தம் குறை கூறார்; கூறுவராயின், தம் குறையைக் குறிப்பா லுணர்ந்து அகற்றும் பண்புடையார்க்குக் கூறுவர் என்பதாம்.

(உ).

293. யாமாயின் எம்மில்லம் காட்டுதும் தாமாயின்
காணவே கற்பழியும் என்பார்போல்—நாணிப்
புறங்கடை வைத்தீவர் சோறும் அதனால்
மறந்திடுக செல்வர் தொடர்பு.

**தருமர்:**—என்பது. யாம் ஆயின் எம இல்லம் காட்டுதும்—யாமாயின [விருந்தினரை] எமமனையிலே கொண்டு புகுந்து எமமுடைய உபசாரங் காட்டுவோம்; தாம் ஆயின—செலவம உடையவர் தாமாகில்; காணவே—(தமமுடைய மனையுளளே யாம் புகின் தமது மனையாள் எம்மைக்) காணும அளவில்; கறபு அழியும் என்பார் போல—அவள் கறபு அழியும் என்பவர போல; நாணி—(மனங்கூசி); புறங்கடை வைதது—மனையகததுப புறவாயிலிலே வைத்து; சோறும ஈவர்—சோறறினையும் இடுவா; அதனால்—ஆதலால், செல்வா தொடர்பு—செல்வமுடையாருடன கொள்ளும் தொடர்ச்சியினை; மறந்திடுக—மறந்துவிட வேண்டும என்றவாறு.

செல்வமுடையவர் தம்மைப புறங்கடை வைததுச் சோறிடுதலால், தமக்கு அது மானபங்கம் என்பது தோன்ற அவருடன நட்பு மறந்துவிடவேண்டும் என்றது தமக்குச் சொல்வது போல யாவர்க்கும் அறிவுறுத்தியது.

**பதுமனார்:**—என்றது. யாமாயின எம் இல்லத்தைக காட்டுதும; தாமாயின் தம இலலத்தைப பிறா காணவே கறபழியும் எனறு கருதினரைப் போல நாணி, எமமைப புறங்கடையிலே வைததுச் சோற்றையும இடுவா செலவராயினர், ஆதலால் அவா நட்பை மறக்க என்றவாறு.

காணவே கற்பழியும் என்பாா போல் நாணி—நாலு சாதியிலேயும் *உட்பட்ட . .றபப் போலத் தானும் பாவித்து நாணினற போல என்றவாறு. மறநதிடுக செல்வா தொடாபு—அடிப

*இங்கே சில எழுத்துக்கள் சிதைந்துள்ளன

பட்ட செல்வமின்றி நடுவே பெருத்திருப்பார் உறவு கொடிது என்று அவர் உறவைக் கடுக விடுக என்றுரைப்பாரும் உளர்.

**விளக்க உரை :**—எ-து. யாமாயின் எம்மில்லம காட்டுதும—யாமாயின எம் மனையுள்ளே கொண்டு புகுந்து எம்முடைய வுபசாரம் காட்டுவேம்; தாமாயின் காணவே கற்பழியும் என்பாரபோல் நாணி—அந்தச் செல்வமுடையோர் தாமாகிற தம்முடைய மனையுள்ளேயும் புகில் தம்முடைய மனையாளை காணில் அவள் கற்பழியும் என்பார் போல நாணி; புறங்கடை வைத்து ஈவர சோறும் அதனால்—புறங்கடையிலே வைத்துச் சோறறினையும் இடுவர ஆதலால்; மறந்திடுக செல்வர தொடர்பு—செல்வருடன் தொடர்ச்சியினை மறநதுவிடுக என்ற வாறு.

**கருத்து :**—மானிகள தமமை மதியாத செல்வரது நட்பை மறநதுவிட வேண்டும.

(ரு).

294. இம்மையும் †நன்றாம் இசைநெறியும் கைவிடாது
உம்மையும் நல்ல பயத்தலால்—செம்மையின்
நாணங் கமழும் கதுப்பினாய்! நன்றேகாண்
மானம் உடையார் மதிப்பு.

**தருமர் :**—என்பது. செமமையின் நாணம் கமழும்—வேறொரு மணங் கமழாமல் எப்போதும் புகுமணமே கமழா நிற்கும்; கதுப்பினைய—குழலினை யுடையாய்!; இம்மையும் நன்றாம—இப்பிறப்பிலும நன்மை யுண்டாகும; [1]இசை நெறியும் கை (இறந்த பினபு பூமியிற) புகழ நீஙகாது நிறகும்; உம்மையும்—

†நன்றாம இயல் நெறியும் எனறும் பாடம்

[1] இயல் நெறியும் என்ற பாடததுக்கு இயல்பாகிய ஒழுக்கநெறி எனப் பொருள கொள்க.

மறுமைக்கும்; நல்ல பயத்தலால்—நன்மையை விளக்கும் ஆதலால்; [1]மானம் உடையார் மதிப்பு—மானம் உடையாரால் மதிக்கும் மதிப்பு; நன்றேகாண்—ஒருவற்கு நன்றுகாண் என்ற வாறு.

எனவே, தான் மானம் உடைத்தாய் ஒழுகுதல் மிகவும் நன்று என்பதாயிற்று. ஆல—அசை.

**பரிமேலழகர் :**—என்றது. இப்பிறப்பிற்கும் நன்மை யுண்டாம்; இயல்பாகிய ஒழுக்கநெறியும் கைவிடாது நிற்கும்; மறுபிறப்பிற்கும் நல்ல இன்பங்களை உண்டாக்கும்; ஆதலால் எல்லார்க்கும் கட்புலனாகி வாச நெய் முதலாகிய நானம் நாறும் கதுப்பினையுடையாய்! நன்றே காண் மானமுடைய மக்கள் கருதும் கருத்து என்றவாறு.

நானம—பனிநீர். கதுப்பு—மயிர். செம்மை—புலனாகை.

**விளக்க உரை :**—எ-து. இம்மையும் நன்றாம்—இப் பிறப்பினும் நன்மையினை யுண்டாக்கும்; இசை நெறியும் கை விடாது—இறந்த பின்பும் பூமியில் புகழும் நீங்காது; உம்மையும் நல்ல பயத்தலால்—மறுமைக்கும் நன்மையினை விளைப்பிக்கும் ஆதலால், செம்மையின் நானங் கமழும் கதுப்பினாய்—வேறொரு மணங் கமழாமற் புழுகு மணமே கமழாநின்ற மயிரினையுடை யாய்!, நன்றே காண் மானமுடையார் மதிப்பு—மான முடையோரால் மதிக்கும் மதிப்பு ஒருவற்கு மிகவும் நன்று காண் என்றவாறு.

**கருத்து :**-மானமுடையோரால் மதிக்கப் பெறுதல் இருமைக்கும் இன்பந் தருவதாம்.

---

[1] மானமுடையார் மதிப்பு என்பதற்கு மானம் உடையவரது பெருமை அல்லது நடத்தை என்று பொருளுரைப்பாருமுளர்.

**ஒப்புமைப் பகுதி :—**

"புகழின்ருல் புத்தேள்நாட் டுய்யாதால் என்மற்று
இகழ்வாரபின் சென்று நிலே".

—குறள். 966.

"ஆங்கினிதே
மானமுடையார் மதிப்பு".

—இனியவை. 5.

(ச).

295. பாவமும் ஏனைப் பழியும் படவருவ
சாயினும் சான்றவர் செய்கலார்; சாதல்
ஒருநாள் ஒருபொழுதைத் துனபம் அவைபோல்
அருநவை ஆற்றுதல் இன்று.

**தருமர் :—**என்பது. பாவமும ஏனை பழியும்—பாவஙக ளும மறறுமுளந்த பழிபபுரையும; பட வருவ—உண்டாகத் தக்க (காரியஙகளை) [1]சாயினும்—தாம் சாய வரினும்; சான்றவா—அமைவுடையாா, செய்கலார்—செயயாா; சாதல்—சாவு; ஒருநாள் ஒருபொழுதை துன்பம—ஒருவறகு ஒருநாளையிலே ஒரு மாததிரைப பொழுதையில துன்பமே யுள்ளது; அவை போல்—அப்பாவமும் பழிப்புரையும போல, அருநவை—(நுகர்தறகு) அரிதாகிய குறறஙகளை, ஆறறுதல் இன்று—செயயமாட்டாது எனறவாறு.

சாவு ஒரு மாததிரைத துன்பமாதலால், எபபொழுதும் நிறகும மானபங்கமாகிய குறறங்கள் நேருவதாகிய காரியம் வருமிடத்து, ஒரு மாததிரைத துனபமாகி உயிரைத் துறந தாகிலும் மானததைப பரிகரிக்க வேண்டும் என்பதாம்.

**பதுமனர் :—**என்றது. மறுமைக்குப் பாவமும் இமமைக்குப பழியும பட வருவனவறறைத் தாம் சாவ வரினும, அமைநதார் செய்யார்; சாதல் ஒருநாள் ஒருபொழுதின்கண்

வரும் துன்பமே தருவது, அப்பாவமும் பழியும் போல நுகர்தற்கு அரிய துன்பத்தை நெடுநாள தருதல் இலது என்ற வாறு.

**விளக்க உரை :**—எ-து. பாவமும எனப பழியும் பட வருவ—பாவஙகளும மறறொ நிகத பழிபபுரையும உணடாகத தக்க காரியம; சாயினும் சான்றவர செய்கலார—தாம சாவ ரினும் (அபபடி யொத்த காரியஙகளைச்) செயயார அமைவுடை யோர; சாதல் ஒருநாள ஒருபொழுதைத துன்பம—சாவுதான ஒருவர்க்கு ஒருமாத்திரைப் பொழுதில துனபமே யுளளது; அவை போல் அருநவை ஆறறுதல் இனறு—அநதப பாவமும பழியும போல எபபொழுதும் உளதாய குறறஙகளைச் செயய மாடடாது எ-று

ஆதலால பிராணனை விடடும மானததைப பரிகரிகக வேணும் எனபதாம.

**கருத்து :**—மானிகள் பழிபாவஙகட்குப பயநது, உயிரை விடடாவது மானததைப பாதுகாகக வேண்டும.

## ஒப்புமைப் பகுதி :—

"கெடுவலயான எனப தறிகதன் நெஞசம்
நடுவொரீஇ அல்ல செயின"

—குறள் 116.

"கெடுவல் எனபபடட கண்ணும் தனக்கோர
வடுவலல செயதலே வேண்டும—நெடுவரை
முறறுநீ ராழி வரையகத் தீண்டிய
கறறேயும்; தேயாது சொல".

—பழ. 394.

"காலம்போம வார்ததை நிறகும்".

—பழமொழி.

“கப்பல்போம் துறை நிற்கும்”.

—பழமொழி.

“வார்த்தை இருந்துபோம், வழிதூர்ந்துபோம்”.

—பழமொழி.

(ரு).

296. மல்லல்மா ஞாலத்து வாழ்பவருள் எல்லாம்
செல்வர் எனினும் கொடாதவர்—நல்கூர்ந்தார்
நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே
செல்வரைச் சென்றிரவா தார்.

**தருமர்:**—என்பது. மல்லல் மா ஞாலத்து—வளப்பத்தையுடைய பெரிய பூமியிலே, வாழ்பவருள் எல்லாம்—உயிர் வாழ்வார் எல்லாரினும்; செல்வர் எனினும்—மிகுந்த செல்வத்தை உடையராயினும், கொடாதவர்—ஒருவற்கு ஒன்றினைக் கொடாதவர், நல்கூர்ந்தார்—வறியரோடு ஒப்பர்; நல்கூர்ந்தக் கண்ணும்—வறுமைப்புற்ற விடத்தும்; செல்வரை சென்று இரவாதார்—செல்வரிடத்துச் சென்று இரவாதவர், †பெருமுத்தரையரே—**பெருமுத்தரையரோடு** ஒப்பாவர் என்றவாறு

**பெருமுத்தரையர்**—மிகுந்த செல்வத்தை யுடையவர்; மானமுடையவர் வறியராயினும் மானத்துக்கு இயன்று அவர் ஒழுகுவதன்றித் தம்மைக் குன்ற மதிக்கும் செல்வரிடத்துச் சென்று இரவார் என்பது தோன்ற அவர், செல்வரைச் சென்று இரவாராகில் **பெருமுத்தரையரோடு** ஒப்பர் என வியந்து கூறியது.

**பதுமனார்:**—என்றது. வளமையுடைய (பெரிய) ஞாலத்தின் கண் வாழ்பவருள் மிக்க செல்வரே யாயினும், நல்கூர்ந்தா

**†பெருமுத்தரையர் என்பார் இச்செய்யுள் இயற்றிய ஆசிரியர் காலத்தில் விளங்கிய பெருஞ் செல்வராய் இருத்தல் வேண்டும். இப்பெயர் இந் நூலின் 200-ஆம் செய்யுளிலும் வந்துள்ளமை காண்க.**

ரோடு ஒப்பா கொடாதவா; அவவறுமையுறற காலத்துப் பெரு முத்தரையரோடு ஒபபா செலவ முடையாரைச் சென்று இரவா தாா என்றவாறு.

வாழுபவா—செல்வததிற் குறைவு படாமல் வாழுபவா. பெருமுத்தரையர்—நாளும் நிறைநது நாலுமரபாகிய வஙகி சததும முறபட்டிருககுந தலைமை யுடையாா எனபாரும் உளர்.

**விளக்க உரை :**—எ-து. மலலல மா ஞாலதது வாழு பவருள எல்லாம—வளபபததையுடைய பெரிய பூமியில உயிர் வாழுபவா எல்லாருளளும வைகது; செலவா எனினும கொடா தவா நலகூாநதாா—செல்வராயினும் ஒனறைக கொடாராகில வறுமியரோடொபபா; நல கூாநதக் கணணும பெருமுத்தரை யரே—வறுமையுறற விடததும் பெருமுததரையரோ டொபபா, செலவரைச சென்று இரவாதாா—செல்வரிடஞ் சென்று இரவாதவா எனறவாறு

**கருத்து** —வறுமையிலும பிறரிடஞ செனறு இரவாத மானிகள செல்வராக மதிககப படுவா.

(சு).

297. கடையெலாம் காய்பசி அஞ்சுமற் றேனை
இடையெலாம் இன்னுமை அஞ்சும்-*புடையுலாம்
விற்புருவ வேல்நெடுங் கண்ணாய் ! தலையெலாம்
சொற்பழி அஞ்சி விடும்.

**தருமர் :**—எனபது. வில புருவம புடை உலாம்—வில்லைபபோல வளைநத புருவததின கீழே உலாவி வாராநினற; வேல நெடு கண்ணய—வேல போலும நீணட கண்ணினை யுடையாய !, கடை எலாம—கடையாய குணமுடையவா

*புடை பாநத எனறும பாடம் இப்பாடததுக்குப் பக்கங்களில் தசை பரவிய என்று பொருள கொளக.

எல்லாம்; காய் பசி அஞ்சும்—தம்மை வருத்துவதாய பசிக்கு அஞ்சுவர்; மற்று ஏனை இடை எலாம்—அவரன்றி மற்று ஒழிந்த இடையாய குணமுடையவ ரெல்லாம்; [1] இன்னுமை அஞ்சும்—சாவுக்கு அஞ்சுவா; தலை எலாம்—தலையாய குணமுடையவ ரெல்லாம்; சொல் பழி அஞ்சி விடும்—பழிப்புரைக்கு அஞ்சுவா; எனறவாறு.

அஞ்சி விடுவா எனவே தமககு மானபங்கமாகப் பழிப்புரை வருமிடத்துச் சொறகளைத தமமேல் ஏறறுக் கொள்ளாது உயிரை நீக்கி விடுவரன்றி அதற்கு அஞ்சுவாரல்லர் என்பதாம்.

**பதுமனர்:**—என்றது. கடையாயினர் எல்லாம் காய் பசியை அஞ்சுவா; இடையாயினா எல்லாரும் [2] தண்டத்தால் வருமஇன்னுமையை அஞ்சுவா, வில் புருவ வேல நெடுங கண்ணாய்! தலையாயினா எல்லாம சொறபழியை அஞ்சுவா எனறவாறு.

மறறு—அசை. புடை சோந்த—ஒரு மருங்கு சேர்நத; வில புருவ வேல நெடுஙகண்—வில்போனற புருவம்; வேல போலும நீண்டகண.

**விளக்க உரை:**—எ-து. கடை எலாம காய் பசி அஞ்சும்—கடையானவா எலலாம் மிகக பசிககு அஞ்சுவா; மறறு ஏனை இடை எலாம இன்னாத அஞ்சும—மறறொழிநத இடையாயினு ரெலலாம சாதலுக் கஞ்சுவா; புடை உலாம விறபுருவ வேல நெடுங் கணணாய்—வில்லுப போலும வளைநத புருவததின கீழ வேலபோலும உலாவி வருகின்ற நெடிய கணணை யுடையாய்!; தலை எலாம் சொற பழி அஞ்சி விடும்—தலையாயினோ ரெல்லாம பழிபபுரைக கஞ்சி விடுவா என்றவாறு.

[1] 'சாதலின் இன்னாத திலலை' ஆதலின் இனனுமை சாவைக் குறித்தது.
[2] தண்டம்—அரச தண்டனை.

**கருத்து** :—பழிக்கஞ்சி மானங் காதது வாழ்பவரே தலைமை யானவர் ஆவர்.

(எ).

298. நல்லர் பெரிதளியர் நல்கூர்ந்தார் என்றெள்ளிச்
செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால்—கொல்லன்
உலையூதுந் *தீயேபோல் உள்கனலும் கொல்லோ,
தலையாய சான்றோர் மனம்.

**தருமர்** :—என்பது. நல்லர்—முன்பு இவா நல்லவா; பெரிது அளியா—மிகவும் அருளுடையா; நல்கூாநதாா—இவா இபபோது மிடித்தார்; என்று எள்ளி—எனறு இகழ்நது; செல்வா—செல்வமுடையாா; சிறுநோகசு நோக்குங்கால—[1]அருக்கின பாாவையாகப் பார்க்கும பொழுது; தலையாய சன்றோா மனம்—சான்றாண்மைக்குத தலைமையாயவா மனம்; கொல்லன் உலை ஊதும் [2]தீயே போல்—கொல்லன உலைக களத்தில் ஊதி எழுப்புந் தீயைப் போல; உள் கனலும்—உளளே கனலா நிறகும என்றவாறு.

கொல்லோ என்பது மானமுடையவா இததன்மை யுடைய வரோ என்றதிசயித்துச் சொல்லியது.

**பதுமனார்** :—[எனறது. இவா நன்மையுடையா, நம்மால் [3]அளிககத்தகுவா; வறுமையுறறா எனறு இழித்துச் சொலலிச் சிறிய ராயினா சிறுநோக்கு நோக்குங்கால, கொல்லன் உலையூதுந தீபபோல தலையாய சான்றோா மனம உள்ளே கொதிக்குங கொல்லோ என்றவாறு.

---

*இவ்வுவமை இவ்வதிகாரதது முதற் செய்யுளிலும் வந்துள்ளது.

[1] அருக்கின பார்வை—சிறுமையான பார்வை.

[2] சினம் அடங்குதல் சான்றோர் இயல்பாதலின் 'உள்கனலும்' என்றார்.

[3] அளிக்கததகுவர்—கருணைசெய்யத்தக்கவர்.

சிறுநோக்கு—சிறியராக நினைத்துப் பார்க்குங் கீழ் நோக்கு.

**விளக்க உரை :**—எ-து. நல்லர் பெரிதளியர் நல்கூர்ந்தார் என்று எள்ளி—முன்பிவர் நல்லவர் மிகவும் கொண்டாடத் தக்கவர் இப்பொழுது மிடித்தார் என்று இகழ்ந்து, செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால்—செல்வராயினோர் அருகக்குகின்ற பார்வை கொண்டு பார்க்குங் காலத்து, கொல்லன் உலை ஊதும் தீயே போல்—கொல்லன் உலையை ஊதும் தீயைப் போல; உள் கனலும் கொல்லோ—உள்ளே கனலா நிற்கும்; தலைபாய சான்றோர் மனம்—தலைமையுடைய சான்றோர் மனம் என்றவாறு.

கொல்லன் உலையூதுந் தீ என்றார் மேற் சொரிந்த பதரை மேற் புறப்படாமல் உள்ளே எரிந்து மண்டுதல்.

**கருத்து :**—தம்மை மதியாது இகழும் செல்வர் செயலுக்கு மானிகள் மனம் கொதிக்கும்.

(அ)

299. நச்சியார்க்(கு) ஈயாமை நாணன்று! நாணாளும்
அச்சத்தால் நாணுதல் *நாணன்று—மெய்ச
மெல்லிய ராகித்தம் மேலாயார் செய்தது [சத்தின
சொல்லா திருப்பது நாண்.

**தருமர் :**—என்பது. நச்சியார்க்கு—தம்மை விரும்பி வந்தவர்க்கு; ஈயாமை—ஒன்றினைக் கொடாதது; நாண் அன்று

---

*'நாணன்றாம் எச்சத்தின்' என்றும் பாடம். இப்பாடமே ஏற்பதாகும். எச்சத்தின் மெல்லியராகி என்பதற்கு, செல்வத்தில் எளியராயிருக்கையில் என்பொருள் கூறுவர். இனி, தமது மரபில் தாம் எளியராயிருந்து தம் முன்னோர் செயலைத் தமது பெருமையாகக் கருதியிருப்பது நாணமாகும் எனப் பொருள் கூறலும் ஒன்று.

—நாணமன்று; நாள் நாளும்—எல்லா நாளும்; [1]அச்சத்தால்—போருக்கு அஞ்சிவந்த அச்சத்தினாலே; நாணுதல் நாண் அன்று—நாணுவதும் நாணமன்று; மெய சத்தின்—மெய்யாகவே; மெல்லியா ஆகி—தம்மை எளியராக வைத்து; தம் மேலாயார் செயதது – (குடிபபிறப்பாலும ஒழுககததாலும தமமினும்) மேலானவா செயத மிகுதிகளை; சொல்லாது இருப்பது [2]நாண்—சொல்லாதிருப்பதே நாணமுடைமை என்றவாறு.

மானத்துக்கு இயல்புடைததாக அமமிகுதிகளைப பலரறியச சொல்லாதிருபபது நாணமுடைமை எனறுா மேலாயவா மிகுதிகளைச் செய்வது இயல்பனறு, அவா, தம்மை மெலியராக வைதது இயல்பல்லாத மிகுதிகளைச் செய்வதனைப பிறரறியப புலப்படுததுவது மானபங்கம எனபதாம.

**பதுமனார்:**—என்றது. தம்மை இரநது வநதாாக்கு ஒன்றை உதவப் பெருமையான் வரும் நாணும நாண் அன்று; [3]செருவில் புக்கு அஞ்சும் அச்சம் காரணமாக வரும் நாணும நாணனறு; மெய்யாகவே பிறபபினாலும ஒழுக்கததினாலும எளியராக வைத்துத தமமேல் வநது ‡மாறாயினா செய்யுந தகுதி அல்லாததனைப பிறர்க்குச் சொலலாதிருப்பதே நாணுவது என்றவாறு.

**விளக்க உரை:**—எ-து. நச்சியார்க்கு ஈயாமை நாணன்று—தமமை விருமபி வநதவாக்கு ஒனறனைக கொடாதிருப்பது நாணான்று; நாளும் அச்சததால் நாணுதல் நாணன்றாம்—எலலா நாளும போருககு அஞ்சிவந்த அசசததினாலை

---

[1]அச்சததால்—அஞசவேண்டுவனவற்றிற்கு அஞசுதலால் எனறும் உறலாம.

[2]நாண எனறதனை இஙகே நறகுணமாகக் கொள்க.

[3]செரு—போர்

‡சுவடியில் மாறாயினர் எனறே யுள்ளது. மேலாயினா என்றிருததல கூடும்.

நாணுதலும் நாணமன்று; எச்சத்தின் மெல்லியராகித் தம் மேலா யார செய்தது—மெய்யாகவே தம்மை எளியராக வைத்துக் குடிப் பிறப்பாலும் ஒழுக்கத்தாலும் தம்மில் மேலாயினோ செய்த மிகுதிகளை; சொல்லாதிருப்பது நாண்—பிறர்க்குச் சொல்லாதிருப்பதுவே நாண முடைமை என்றவாறு.

**கருத்து** :—மேலார தமக்குச் செய்த அவமதிப்பைப் பிறரறியச சொல்லாமையே மானிகட்கு அழகாம்.

(௬).

300. *கடமான் தொலைச்சியர் கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த(து) உண்ணு(து) இறக்கும்—
இடமுடைய
வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மானம் அழுங்க வரின்.

**தருமர்** :—என்பது. [1]கடம் மான தொலைச்சியா—கடமானைக் கொன்ற; கான் உறை வேஙகை—காட்டிலே உறையும வேங்கைப் புலியானது; [2]இடம் வீழ்நதது—அக் கடமான் இடபபக்கம் கீழாக வீழ்நததாகில்; உண்ணாது—அதன இறைச்சியைத தினனுமல்; [3]இறக்கும்—போய் விடும; (அது போல) விழுமியோா—சீரியோா; [4]இடம் உடைய வான் அகம—வானல் கவிக்கபபடட பெரிய உலகமெல்லாப்; கை உறினும—பெறுவராயினும; மானம அழுஙக வரின—தமககு மானம அழுஙக வரின-தமககு மானம் கெடுவதாக அவவுலகம பெறரு ராயின; வேண்டாா—அவவுலகததை விருமபாா.

---

*கடமா தொலைச்சிய எனறும பாடம்.

[1]கடம் மான—மததையுடைய யானை, காட்டு விலங்கு எனினுமாம.

[3]இறக்கும்—உயிர் விடும் என்றுமாம்

[4]இடமுடைய வானகம்—செல்வததினையுடைய சுவர்க்க லோகததை என்பாரும் உளா

தாம் வறுமையராயினும் மானத்தையே பரிகரிப்பதன்றி மிக்க செல்வம் பெறுவோமென்று, மானத்துக்கு இயலாத காரியத்துக்கு உடன்படார் சீரியோர் என்பதாம்.

**பதுமனார் :**—என்றது. கடமானினைக் கொன்ற கானுறை யும் புலியும் அக்கொன்ற கடமா இடம்பக்கம் வீழ்ந்ததாயின், அதனை உண்ணாதுபோம்; அதுபோல இடத்தைப் புடைத்தானை வானுலக மெல்லாம் தமக்கு வந்தெய்தினும் அதனைக் காதலியார் சீரியார், மானங்கெடவரின் என்றவாறு.

**விளக்க உரை :**—எ-து. கடமா தொலைச்சிய கானுறை வேங்கை—கடமானைக் கொன்ற காட்டிலே உறை கின்ற வேங்கையானது, இடம் வீழ்ந்தது உண்ணாது இறக்கும்— அந்தக் கடமான் இடப்பக்கம் கீழாக விழுந்ததாகில் அதனைத் தின்னாமற்போம்; [அதுபோல] இடமுடைய வானகம் கையுறினும் வேண்டார் விழுமியோர்—சீரியோர் வானுற கவிக்கப்பட்ட உலகம் பெறினும் அதனை விரும்பார்; மானம் அழுங்க வரின்— மானங் கெடத்தக்க காரியமாகில் (அதனை விரும்பார்) என்ற வாறு.

**கருத்து** —மானக்கேடு நேருவதாயின் மிகச் சிறந்த பொருளை யும் சீரியோர் விரும்பார்.

## ஒப்புமைப் பகுதி :—

"இன்றி யமையாச் சிறப்பின வாயினும்
குன்ற வருப விடல்".

—குறள். 961.

"மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து".

—குறள். 968

"ஏனமாய இல்லிருந் தின்றி விளியினும்
மானந் தலைவருவ செய்பவோ—யானை

வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்றாள்
அரிமா மதுகை யவர்".

—நாலடி. 198.

"கிடந்துயிர் மறுகுவ தாயினும் இடம்படின்
வீழ்களிறு மிசையாப் புலி".

—அகம். 29.

"கடுங்கட் கேழல் இடம்பட வீழ்ந்தென
அன்றவ ணுணா தாகி வழிநாட்
பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்
திருங்களிற் றொருத்தல் நல்வலம் படுக்கும்
புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து
உரனுடை யாளர் கேண்மையொடு
இயைந்த வைகல் உளவாகியரோ".

—புறம். 190.

"பறைபடா வாழா அசுணமா உள்ளம்
குறைபட வாழார் உரவோர்—நிறைவனத்து
நெற்பட்ட கண்ணே வெதிர்சாந் தமக்கொல்லாச்
சொற்பட்டால் சாவுமாம் சால்பு".

—நான்மணிக். 2.

"இறந்திட வரினும் அல்லால் இடுக்கணொன் றுறினும் தம்பால்
பிறந்திடு மானந் தன்னை விடுவரோ பெரிய ரானோர்
சிறந்திடும் இரண்டு நாளைச் செல்வத்தை விரும்பி யானும்
துறந்திடேன் பிடித்த கொள்கை சூரனென் றொருபேர்
பெற்றேன்".

—கந்த பானு வதை 27.

"வாயவ தாகிய பொருளினை வலவிரைந் தனனே
வாய்வ தாயகில் ராகவனான புகுந்தழிப பாரபோற
நாயவதாகிய திறத்தினைற கதழ்ந்ததா பிடத்து
வீழ்வ தாகக்கிபுணா ஞதுபோதுவ விளவேங்கை".

—தணிகை புராணம். நாடு. 43.

(ய).

## 31. இரவச்சம்.

**தருமர் :—** அஃதாவது ஒருவா வறுமையுற்ற காலதது அவ்வறுமைதானே அவரைத தள்ளிக் கொண்டுபோய் இரப பிக்கும பொழுது, தமது ஒளி அடங்கிய பொலிவழிந்து, [1]கடுக வுரை கூடாது நின்று, தம வறுமையை ஒருவறகுப் பலகாலும மதுரமாகச் சொல்லில அது அவா செவியில ஏறுது சொலலிய வரை எளியராக நினைந்து, கடைக் கணிததுப் பாாக்கும பாாவையையும், கொடுபபார் போலிருந்து பினபு அவா இல்லை எனறுவிட மனநதடுமாறிச செயலறறுப போம போககையும கணடு, அவவிரபபினை அஞ்சுதலாம.

**பதுமனுர் :—** அஃதாவது வறுமையுறறுரை அவ்வறுமை தானே தளளிக கொண்டுபோய இரப்பிக்கும் பொழுது, தமக குளள ஒளி அடஙகலும மழுஙகிக கண்கள் குழிநது, தன் பொலிவழிநது கடுக வுரை கூடாது நினறு, நனருன தன்மஙக ளுடனே மதுரமாகக தன் வறுமையைப பலகாலுஞ் சொல்லில இரககபபட்டவா செவியிற ருககாது, பின்பவரை எளியராக நினைத்துக் கடைக கணித்துப் பாாககும் கண்களையும், அவா கொடுப்பாரைப போலிருநது பின்பு ஒனறுமில்லை என்றுவிட மூசசெறிநது செயலறறுப் போம் போக்கையும் கண்டு, அவ விரபபினை அஞ்சுதல எனறவாறு.

### குறிப்பு :—

'இரவச்சம' :—

பரிமே —அஃதாவது மானநதீர வரும் இரவினை அஞ்சுதல்.

மணக் '— இரவச்சமாவது இரததலைத தவிரவேண்டும என்று கூறுதல். மேல நல்கூர்நதாா ஈவாாமாட்டே இரத்தல் அமையும் என்று பொதுபபடக கூறினுராயினும, மேலாயினுர்க்கு அது தகுதி யனறு எனபது குறிதது இவ்வதிகாரம் கூறப்பட்டது.

—குறள். அதி. 107.

---

[1] கடுக உரை கூடாது நினறு—விரைந்த பேச்சில்லாமல் நின்று.

301. நம்மாலே ஆவரிந் நல்கூர்ந்தார் என்றொன்றும்
தம்மாலாம் ஆக்கம் இலரென்று—தம்மை
மருண்ட மனத்தார்பின் செல்பவோ? தாமும்
தெருண்ட அறிவி னவர்.

**தருமர் :**—என்பது. இ நல் கூர்ந்தார்—இந்த வறியவர்; நம்மாலே ஆவர்—நம்மாலேயே ஆக்கமுடையராவதன்றி; என்றொன்றும்—எல்லா நாளும்; தம்மால் ஆம் ஆக்கம் இலர் என்று—தமக்கென ஓர் ஆக்கம் இல்லாதவர் என்று; தம்மை மருண்ட மனத்தார் பின்—தம்மைத் தாமே (மேலானவராக) மயங்கிய அறிவுடைய நெஞ்சினை யுடையார் பின்னே; தெருண்ட அறிவினார் தாமும்—தெளிந்த அறிவினையுடையார் தாம்; செல்பவோ?—(இரத்தற்குச்) செல்லக் கடவதோ? என்றவாறு.

தன்னால் ஆற்றாத வறுமை வந்த விடத்து, இரக்க வேண்டினும் அறிவுடையாரிடத்த தல்லது, அறிவில்லார் பக்கம் சென்றிரப்பதை அஞ்சவேண்டும் என்பதாம்.

**பதுமனார் :**—என்றது, இந்த வறியவர் நம்மாலே ஆகிறவர் அல்லது எல்லா நாளும் தமக்கென ஓர் ஆக்கம் இல்லை என்று, இப்படித் தம்மை மயக்கும்படி நினைத்த மனத்தை யுடையார் பின் இரந்து செல்லக் கடவதோ? தெளிந்த அறிவினையுடையார் தாம் என்றவாறு.

**விளக்க உரை :**—எ-து. நம்மாலே ஆவர் இந்நல்கூர்ந்தார்—இந்த வறுமியர் நம்மாலாகின்றவர் அல்லது, என்றொன்றும் தம்மால் ஆம் ஆக்கம் இலரென்று—எல்லா நாளும் தமக்கென ஓராக்கம் இல்லை என்று; தம்மை மருண்ட மனத்தார் பின்—இப்படித் தம்மை மயங்கும்படி நினைத்த மனத்தினையுடையார் பின்னே, செல்பவோ தாமும் தெருண்ட அறிவினவர்—தெளிந்த அறிவினையுடையார் தாமும் செல்லக் கடவதோ? என்றவாறு.

**கருத்து :**—இரப்பாரை இகழ்ந்து தம்மையே மதிக்கும் அறப

ரிடம் அறிஞர் யாசித்தற்கு அஞ்சவேண்டும்.

## மேற்கோள் பகுதி :—

பரிமே :—ஆறுஎன வருகின்றமையின் அழிவினைத் தருமவை என்றெழிந்தார். அழிவினவை என்னுமிடத்து "நெருநல் அறிவினவர்" என்புழிப் போல இனசாரியை நிற்க இரண்டனுருபு தொக்கது.

—குறள். 787.

## ஒப்புமைப் பகுதி :-

"இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின மகிழ்ந்துள்ளம்
உள்ளுள உவபப துடைதது".

—குறள. பய. 1057.

"எளியா இவரென்று இகழ்ந்துரையா ராகி
ஒளிபட வாழுதல் இனிது".

—இனியவை. 30.

(க)

302. இழித்தக்க செய்தொருவன் ஆர வுணலின
பழித்தக்க செய்யான் பசித்தல் தவறோ?
விழித்திமைக்கும் மாத்திரை அன்றோ ஒருவன்
அழிததுப் பிறக்கும் பிறப்பு.

**தருமர் :**—என்பது. இழிததகக செய்து—இழிவான காரியத்தினைச் செய்து; ஒருவன் ஆர உணலின—ஒருவன் தன (மனம்) அமைதி பிறக்க இனிதாக வுணபதினும; பழித தக்க—பிறா பழிககததகக காரியஙகளை; செயயான—செயயானுடைய; பசித்தல் தவறோ?—பசித்திருப்பது குறறமோ? (இல்லை) [ஏன எனில்] ஒருவன் [1] அழிதது பிறககும பிறபபு—ஒருவன இறநது

[1] அழிந்து என்பது எதுகை நோக்கி அழித்து என விகாரம் பெற்றது.

(பின்) பிறப்பது; [1]விழித்து இமைக்கும் மாத்திரை அன்றே— விழித்து இமைக்கும் பொழுதளவல்லவோ என்றவாறு.

பிறா பழிக்கும்படி இழிவான காரியஞ் செய்து இனிதாக வுண்ணினும் அவவியாக்கை நெடுஙகாலம் நிற்பதன்றே! மாததிரைப் பொழுதிற போவதும் வருவதுமாய் இருக்கும யாக்கையைப் பரிகரிக்க வேண்டி, ஈனத தொழிலாம இரவிற்குத துணிவது தகைமையன்று என உயாநதோர் இரக்க முற்றுரைப்பது போனறு அறிவுறுததியது.

**பதுமனுர்** :—என்றது. இழிதக்க இரப்பினைச் செய்து வயிருர வுண்பதிலும பழிக்கததக்க காரியஙகளைச செய்யாமல் பசிததிருததல் ஒருவறகுக் குறறமோ? விழிததிமைக்கும் மாததிரை அளவனறே ஒருவன் மரித்துப் பிறக்கும் பிறபபு எனறவாறு.

**விளக்க உரை**:—எ-து. இழிததக்க செய்து ஒருவன ஆர உணலின—இழிவான காரியங்களைச் செயது தன மனம அமைதி பிறக்க இனிதாக வுண்பதிலும்; பழித்தக்க செயயான பசித்தல தவறே? - பழிக்கததக்க காரியஙகளைச செயயாமற பசித்தல ஒருவறகுக குறறமோ?; விழிததிமைககும மாததிரை அன்றே—இமைதது விழிககிற பொழுதாயிருககும அவவள வல்லோ; ஒருவன அழிததுப் பிறக்கும பிறபபு—ஒருவன இறநத பினபு பிறககினற பிறபபு என்றவாறு.

**கருத்து**—நிலையாத உடலைக காககவேண்டி மானங் கெடும வண்ணம இரததல கூடாது.

---

[1] விழிதது இமைக்கும மாததிரை அனறே என்பதனை இமைதது விழிக்கும அளவன்றே என விகுதி பிரிததுக் கூட்டினும் ஆம.

## ஒப்புமைப் பகுதி :—

"மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து"

—குறள். 339.

"பறைபட வாழா அசுணமா உள்ளம்
குறைபட வாழார் உரவோர்—நிறைவனத்து
நெறிபட்ட கண்ணே வெதிர்சாந்த மகதொல்லாச்
சூறைபட்டால் சாவுமாம சால்பு".

—நான்மணி. 2.

"மான அருங்கலம் நீக்கி இரவெனனும
ஈன விளிவினால வாழ்வேன்மன".

—நாலடி. 40.

"கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த துண்ணா திறக்கும்—இடமுடைய
வானகம கையுறினும வேண்டார் விழுமியோர்
மானம அழுங்க வரின்".

—நாலடி. 300.

"தனக்குத தகவல்ல செய்தாங்கோ ராற்றல்
உணற்கு விரும்புங் குடரை—வனப்பற
ஆமபற்றுள வாடலே போல அகத்தடக்கித
தேமபத்தாம் கொள்வ தறிவு"

—அறநெறி 88.

'விழித்திமைக்கும .....பிறப்பு'—
"உறங்குவது போலும் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு".

—குறள். 339.

"கட்டுயில அனந்தர் போலக் கதிகளுள தோன்றுமாறும்
விட்டுயிர் போகு மாறும வீடுபெற றுயரு மாறும
உட்பட உணர்ந்தயானே உள்குழைந் துருகல் செல்லேன
எட்பக வனைத்து மார்வம் ஏதமே இரங்கல வேண்டா'.

—சீவக. 1097.

"பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்றது உண்மையின்"
—மணி. 16. 86—87.

"உறங்கி விழித்தா லொக்கும் இப்பிறவி".
—சுந்தரர். கேவாயில், 46
(உ).

303. இல்லாமை கந்தா இரவு துணிந்தொருவர்
செல்லாரும் அல்லர் சிறுநெறி;—புல்லா
அகம்புகுமின் உண்ணுமின் என்பவர்மாட்
முகம்புகுதல் ஆற்றுமோ மேல்? [டல்லான்

**தருமர்** :—என்பது. இல்லாமை [1]கந்து ஆ—வறுமையே பற்றுக் கோடாக; இரவு துணிந்து—இரவினுக்குத் துணிந்து, ஒருவர்—; சிறுநெறி—தமக்கு இழிவாம் சிறிய வழியில், [2]செல்லாரும் அல்லர்—செல்லாதிருப்பாரு மில்லை; (அப்படித் தாம் செல்லினும்) புல்லா—(தாம் வறுமையுற்றுச் செல்லும் போது எதிர் வந்து) தழுவிக்கொண்டு; [3]அகம் புகுமின்—அகமே வாரும்; உண்ணுமின்—உண்ணும், என்பவர் மாட்டு அல்லால்—என்றுகூட்டிக் கொண்டுபோய் உபசரிப்பாரிடத் தல்லாது; [(பிறரிடம்) மேல்—மேலாயார்; முகம் புகுதல் ஆற்றுமோ?—முன் சென்று சொல்ல வல்லராவரோ? என்றவாறு].

இரக்கத் துணியின் இவ்வகைத்தாய அறிவுடையாரிடத் தல்லது அறிவில்லாரிடத் திரப்பதை அஞ்சவேண்டும் என்பதாம்.

**பதுமனார்** :—என்றது. வறுமையே பற்றுக் கோடாக

[1] கந்து—காரணமாக எனப் பொருளுரைப்பினும் அமையும்.

[2]செல்லாரும் அல்லர்—செல்லவுஞ் செய்வர், இரண்டு எதிர் மறை ஓர் உடன்பாட்டை உணர்த்தியது

[3] அகம் புகுமின—வீட்டிற்கு வாருங்கள்.

இரப்பினைத் துணிந்து ஒருவர் சிறுநெறிக் கண் செல்லாரும் அல்லர்; அப்படியே செலினும், புல்லிக் கொண்டு எம் இல்லம் புகுமின், உண்ணுமின் என்று ஏற்றுக் கொள்பவர் மாட்டல்லது மற்றையார் முன்பு செல்லவல்லர் ஆவரோ மேலாயார் என்ற வாறு.

**விளக்க உரை :**— எ-து. இல்லாமை கந்தா இரவு துணிந்து—வறுமையே பற்றுக்கோடாக இரப்பதாகத் துணிந்து; ஒருவர் செல்லாரும் அல்லர் சிறு நெறி—ஒருவர் அதசிய வழியிற் செல்லாதிருப்பாரு மில்லை, (அப்படிச் செலினும்) புல்லா அகம் புகுதும் உண்ணுமின் என்பவர் மாட்டு அல்லால்—எதிரே வந்து தழுவிக்கொண்டு தம்மை வாரும் என்று கூட்டிக் கொண்டுபோய உபசரித்தாரிடத்தல்லது, முகம் புகுகல் ஆற்றுமோ மேல—மற்றுளார்க்குச் சம்மதிப்பாரோ மேலாயினோர் என்றவாறு.

இந்த உலகத்தில இப்படிச் செய்வாரில்லாமையால இரப் பினை அஞ்சக் கடவதாம.

**கருத்து :**— தம்மை அன்புடன் ஏற்று உபசரியாதவரிடம் வறுமையால் இரத்தற்கு அஞ்சுவர்.

(௩).

304. *கரவாத திண்ணன்பின் கண்ணன்னார் கண்ணும்
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை—இரவினை
உள்ளுங்கால் †உள்ளஞ் சுடுமால், எவன்கொலோ
கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு.

**தருமர் :**—என்பது. [1]கரவாத—இரப்பவர் வேண்டியது

---

*இச்செய்யுள் முதல் 309-ஆம் செய்யுள் வரை முறைவைப்பு மாறியுள்ளது

†உள்ளம் உருகுமால் எனகொலோ என்றும் பாடம்.

ஒன்றினை இல்லை என்னாது கொடுக்கிற; திண் அன்பின்—திடம் உடைத்தாகிய அன்பினையுடைய; கண் அன்னா கண்ணும்—தமது கண்போல்வாரிடத்தும; இரவாது வாழ்வது—இரவாமல உயிர் வாழுதலே; வாழுக்கை ஆம்—ஒருவாக்கு வாழ்க்கையாவதாம்; இரவினை உள்ளும் கால்—இரக்கக் கடவோம் என்று நினைப்பினும்; உளளம சுடுமால—நெஞசு வெநது உருகாநிறகும் ஆதலால்; [அவவாறிருக்க] [1]கொளளுமகால்—ஒருவரிடதது ஒனறைப பெறுமபடியான அககாலததது; கொள்வார குறிபபு—அதறகியைநத வேடததினைக் கொளபவா மனம்' எனகொலோ—என்ன வகையாய் இருக்குமோ? எனறவாறு.

தம் கண்(ணன்னா கண்ணும்) என்றது இனியாரிடதது இரபபதறகு நினைக்குமபோது நெஞசு வேகா நிறகும என்றல, அறியாதாரிடததுப போய் இரப்பதறகு எவவகையாகக் குறிப்புக கொளவாரோ எனறு இரவினை அருசினன் ஒருவன கூறியதாக யாவாககும அறிவுறுததியதாா. எனவே, தம்மால் தரிக்கப படாத வறுமை வநது இரக்க வேண்டும எனின, இவவகைததாய அனபுடையாரிடததலலது பிறாபாற செலவது ஆகாது என்பது கருதது.

**பதுமனார்** :—என்றது. தமமுடைய பொருளை ஒளியாத திணணிய அனபினையுடைய தம கண்ணனையாரிடததும் சென்று இரவாமல் உயிாவாழுவதே ஒருவறகு வாழ்க்கையாவது; இரக்கக கடவோம எனறு நினைககும பொழுதே நெஞசு வெந்து உருகா நிறகும, ஆதலால் எபபடி இருககுமதோ இரநது ஒனறினைக கொளளும பொழுது எறறுககொளபவா மனம் எனறவாறு.

**விளக்க உரை** :—எ-து. கரவாத திண்ணனபிற கண்ணனாக கண்ணுப—(தமககுளள பொருளை) ஒளியாத திண்ணிய

---

[1]கொளளுங கால் கொளவாா குறிப்பு எனகொலோ—எனபதற்குப் பிறா தேடிய பொருளை இரந்து பெறுங்கால ஏற்பவரது எண்ணம் எததகையதோ என்றுரைப்பினும் அமையும.

அன்பினையுடைய கண்போல்வாரிடத்தும், இரவாது வாழ்வதாம வாழக்கை— இரவாமல் உயிர வாழ்வதே ஒருவற்கு வாழ்க்கை யாவது; இரவினை உள்ளுங்கால் உள்ளம உருகுமால—இரக்கக கடவோம என்று நினைபபினும நெஞ்சு வெந்து உருகா நிற்கும ஆதலால்; எவன் கொலோ கொள்ளுங்காற கொள்வார் குறிபபு —இரக்கபபட்டவரிடதது ஏற்றுக கொள்வார மனம எபபடி இருககுமோ என்றவாறு.

**கருத்து :—** கணபோன்ற நணபரிடததும இரபபதற்கு அஞசி வாழ்வதே நலவாழக்கையாம.

## மேற்கோள் பகுதி :—

பரிமேல —இரவுளள வுளளம உருகும் என்பதற்கு "இரவினை உள்ளுங்கால உளளம உருகுமால என்கொலோ,—கொள்ளுங்காற கொள்வார குறிபபு" என்றார பிறரும என்பர.

—குறள். 1069.

## ஒப்புமைப் பகுதி :—

"கரவாது உவந்தீயும கணணன்னார கணணும
இரவாமை கோடி உறும்".

—குறள். 1061.

"இரவுளள உளளம உருகும கரவுளள
உளளதூஉம இன்றிக் கெடும".

—குறள். 1069.

"கண்ணிற சிறந்தார தமமிடததும காழ்கததமானங கெடநாவால
பணணறகுரிய அறங்குறிததும படாநதொன் றிரவார
பெருமையினால்".

—விநாயக பு. அரசி. 154.

(ச).

305. இன்னா இயைக இனிய ஒழிகென்று
தன்னையே தான்இரப்பத் தீர்வதற்(கு)—
என்னைகொல்
காதல் கவற்றும் மனத்தினாற் கண்பாழ்பட்(டு)
ஏதி லவரை இரவு.

**தருமர் :**—என்பது. [1]இன்னா இயைக—நமக்கு இன்னாமையே பொருந்தக் கடவது; இனிய இயைக—இனியவாயின நம்மைத் தவிரக் கடவன; என்று—என்று சொல்லி; தன்னையே [2]தான் இரப்ப—தன் நெஞ்சினைத் தான் இப்படியிரந்து கொள்ளவே, தீர்வதற்கு—நீங்கி விடுவது ஒன்றினுக்கு; [வறுமைக்கு] காதல் [3]கவற்றும் மனத்தினால்—பொருள்(மேற்) காதல் செய்யும் மனத்தினால்; [4]கண் பாழ்பட்டு—துன்பம் மிகுக் கண்ணுங் குழி விழுந்து பொலிவு கெட்டு; ஏதிலவரை இரவு—அன்னியர் பக்கற் சென்று இரக்கும் இரவு; என்னை கொல—யாது காரணம் என்றவாறு.

வறுமையுற்ற காலத்தில் தம் பகைமை அறியாதாரிடத்துச் சென்று இரப்பதிற் றுன்பப் படுவதே நலலது என்று தம் மனம் அன்னியரிடஞ் செல்ல எழாதபடி அதனை வேண்டித் தாம் அடங்கி இருக்கும் காரியம் ஒன்றிருக்க, அதனைத் தவிர்ந்து பொருள்மேற் காதலித்துப் பிறர்பாற் சென்றவிடத்து அவர் இல்லை என்றுவிட மிக்க வருத்தம் எய்திக் கண்ணும் பொலிவழிய வேண்டியது என்னையோ என இரவினை அருகினன் கூறியதாம்.

**பதுமனார் :**—என்றது. நமக்கு இன்னாத வறுமைகள

[1] இன்னா—வறுமைத் துன்பம், உலகத் துன்பம் எனினுமாம்

[2] தான் இரப்ப—என் பிரிந்து தானே மன நிறைவு செய்தலால் எனப் பொருள் கூறலும் ஒன்று

[3] கவற்றும்—கவல் என்பதன் பிறவினை; வருத்துகின்ற என்பது பொருள்.

[4] கண் பாழ் பட்டு—அறிவு பாழாகி என்றுரைப்பினும் அமையும்.

வந்து பொருந்துக, இனிய செல்வங்கள வாராதொழிக என்று கருதித் தன் நெஞ்சினைத தான் இரந்து கொள்ளவே நீங்கும் வறுமையால் வருந துனபத்திறகு என்னை கொல்லோ ஆசை யாற கவலை செயத மனததாறகண் பொலிவழிநது பிறரைச் சென்று இரக்கின்றது என்றவாறு.

தன்னையே தான் இரப்பத் தீரவதறகு—செல்வ மில்லாதவரும் யாதேனும ஒரு படியால ஒனறை நுகாநது பசி தீர்வமென்று இரந்படி ஆராயநது ஆசையிற போகா தொழிக என்று தம் மனத்தை மீட்கத் தீர்வதறகு.

**விளக்க உரை :**—எ-து. இன்று இயைக இனிய ஒழிக எனறு—நமககு இன்றுமையே பொருநதக கடவது இனிய வாயின நமமைத தவிரக கடவது எனறு சொல்லி; தனனையே தான் இரபபத தீரவதறகு—தனனெஞசினைத தான் இரநது கொள்ள நீங்கிவிடுவ தொன்றினுக்கு, எனனைகொல்—யாது தான; காதல் கவறறும மனததினற கண் பாழபட்டு—பொருள் மேற காதல் செய்யும் மனததினாலே துன்பமிக்குக் கண்ணும் பொலிவழிந்து; ஏதிலவரை இரவு—அனனியா பககற சென்று இரககும் இரபபு எனறவாறு.

**கருத்து :**—தமது வறுமையைத் தம் அறிவால போக்காமல் பொருளாசையால் பிறரிடம இரததல் கூடாது.

(ரு).

306. என்றும் புதியார் பிறப்பினும் இவ்வுலகத்து
என்றும அவனே பிறககலான—குனறின்
பரபபெல்லாம் பொனனொழுகும் பாயருவிநாட!
இரப்பாரை எள்ளா மகன்.

**தருமர் :**—எனபது. குனறின் பரப்பு எல்லாம்—மலையின்

தலைப்பரப்பு முழுதும்; பொன் [1]ஒழுகும்—பொன்னைக் கொழித்து விழுகிற; [2]பாயருவி நாட !—(பரந்த) அருவியினையுடைய (மலை) நாடனே !; இ உலகத்து—இந்த உலகத்திலே, என்றும் — எல்லா நாளும் புதியார் பிறப்பினும்—முன்பு பிறந்தவர் வடி[3]வன்றியிலே பலரும் வேறு வடிவாகப் பிறந்தாலும்; இரப்பாரை எள்ளா மகன் அவனே—இரக்குமவரை இகழாத மனிதனே; என்றும்— எல்லா நாளினும்; [4]பிறக்கலான—பிறக்கக் கண்டோமில்லை என்றவாறு.

இஃது இரவச்சமானது எப்படி என்னில், இரக்குமவரை இகழாதார் ஒருவருமில்லை; யாவரும் இகழ்தலிலுஞ்ல நிலையாத வுடம்பினை விரும்பி இகழ்ச்சிக்கு இடங் கொடாமல அவவிரப் பினை அஞ்சி (அதனைத் தவிர்க) என அறிவுறுத்தும் பொருட்டு இப்பாட்டு இரவச்சத்திற் சேர்க்கப்பட்டது.

**பதுமனார் :**—என்றது. ஒருவரோ டொருவர் ஒவ்வாத வாற்றால் வேறுபட்டுப் புதியரே என்றும் பிறப்பினும், இவ் வுலகத்து என்றும் பிறவா தொழிகின்றன. இரப்பாரை இகழாத மகனே குன்றின் பரப்பெல்லாம் பொன்னொழுகும் பாயருவி நாடனே ! என்றவாறு.

இரந்ததற் கிரங்கித் தான் இரவாதொழிதல் அச்சம் இரப் பாரை எள்ளா மகன—கொடுத்து இகழா மகன் இரப்பினை இகழாது நன்று என்னும் மகன் என்றவாறு.

[1]ஒழுகும் என்ற தன்வினையை ஒழுக்கும் எனப் பிறவினை யாக்கிப் பொருள் உரைக்கப்பட்டது ஒழுகுதற்குக் காரணமான என்றுரைப் பினுமாம்

[2]பாயருவி·—பாய்ந்து வீழும் அருவி என்பாரும் உளர்.

[3]அன்றியில்—'விவேகிக்கு ஓர் உபாதை அன்றியில்'.

(சிவ-சித். 4, 8, சிவாக்கிர )

[4]பிறக்கலான என்பதில் அல் தொழிற் பெயர் என்றுக்கி உண்மையிற் பிறத்தலுடையவனுவான என்பாரும் உளர்.

**விளக்க உரை:**—எ-து. என்றும் புதியார பிறப்பினும—எல்லா நாளும் முனபு பிறநதவர்கள் வடிவன்றியிலே பலரும் புதியோராகப் பிறந்து வரவும (இவாகளில்) இவ்வுலகதது என்றும அவனே பிறக்கலான—இநத உலகின் அப்படி ஒத்தவன் பிறக்கிற றிலன்; குன்றின் பரப பெல்லாம பொன ஒழுகும பாயருவி நாட!—மலையில தலை முழுதும் பொனனைக் கொழிதது விழுகின்ற பரந்த அருவியினையுடைய மலைநாடனே!; இரபபாரை எளளா மகன—இரககுமவரை இகழாத மனிதனைப் (பிறக்கக் காண்கிலோம்) என்றவாறு.

இஃது இரவச்சமானது எப்படி யென்னில் இநத வுலகத்தில இரக்குமவனை இகழாதவா யாவருமில்லை; ஆதலால் நிலையாத வுடமபினை விருமபி இகழச்சிககு இடம கொடாமல் அவ விரப் பினை அஞசி அதனைத் தவிர வேணும என்பதாம்.

**கருத்து:**—தான் இரததறகு அஞசித தன்னிடம் இரப்பவரை இகழாதவனே பிறவா நெறியைப் பெறுவான.

(சு).

307. புறத்துதத‌ன இன்மை நலிய அகதததுத்தன
பினஞானம் நீககி நிறீஇ ஒருவனை
ஈயாய எனககென றிரப்பானேல் அந்நிலையே
*மாயாநோய் மாற்றி விடின.

**தருமர்:**—எனபது. தன இன்மை—தனனுடைய வறுமை யானது; புறதது நலிய—புறமாகிய தன் மேனியைப் பொலி வழிக்க; [அதறகாக] அகத்து தன் நல் ஞானம நீக்கி—தன நெஞசினுளளே யுளள நல்லறிவினைக கெடுதது; நிறீஇ—அறி யாமையை நிறுததிக் கொண்டு; ஒருவனை—(செலவன) ஒருவன் பககற சென்று (அவனை); எனக்கு ஈயாய என்று—(எனககு) யாதானும ஒனறினைத தரவேணடும் என்று, இரபபானேல்—

*மாயானோ மாற்றி விடின் என்றும் பாடம.

இரப்பனுகில்; அந்நிலையே—அவவிரப்பினுல் (வறுமையை) மாறறுவது போலவே; ¹மாயாநோய் மாறறிவிடின்—சாவாகிய நோயை மாறறி விடுவனுகில் [இரககக் கடவன்] என்றவாறு.

இரப்பினுல் வரும் இழிவு எப்போதைக்கும் நிலையாய நிறகும்; அதுபோலத தன் யாக்கையும நிலையாய் நிற்குமானுல் இரக்கக் கடவேன என்ருர. எனவே, நிலையாத யாககையைக கருதித தனககு எபபோதும் நிலையாகிய இழிவினை மேற கொள்ளாது அவவிரபபினுககு அஞச வேண்டும எனபதாம்.

**பதுமனுர்** :—எனறது. புறமபுள்ள வறுமை நலிவதால தன் நெஞசிலுள்ள நலலறிவினைக கெடுத்து அறியாமையை நிறுததிப் பிறன் ஒருவனை எனககு ஈயாய் என்று இரபபானுகில தான் இரநததனை அவன மாறறினுல் அபபொழுதே மாய வேண்டாவோ தான எனறவாறு.

மாறறிவிடின— இரநததனை இலலை யெனறு விடின.

**விளக்க உரை** :—எ-து. புறததுத் தன இன்மை நலிய—தன்னுடைய வறுமை என்பது புறம்பாகிய தன் மேனியைப பொலிவழிகக; அகததுத தன் நனஞானம நீக்கி நிறீஇ—தன நெஞசினுளள நலலறிவினைக் கெடுதது அறியாமையை நிறுததிக கொணடு; ஒருவனை ஈயாய எனககு என்று இரபபானேல்—ஒருவன பககற சென்று எனககு யாதானும ஒன்றினைத தர வேணும எனறு இரபபானுகில்; அநநிலையே மாயானே மாறறி விடின—தான இரககப்படடவன இல்லையெனறு மறுபபானுகில இறவாமல இருபபனே எனறவாறு.

¹மாயானே மாறறிவிடின எனற பாடததுக்கு மாறறிவிடின அந் நிலையே மாயானே எனப பதப்பிரிவு செயது செலவமுடையவன இலலை யென மறததுவிடின அப்போதே இரபபவன உயிரவிடமாட்டானே எனப பொருளுரைக்க பதுமனுர் கொணட பாடமும பொருளும இதுவே. இனி, இரக்கக கருதுவானுல அபபோதே உயிர்விடின அவவறுமை நீஙகப் பெருனே எனறுரைததலும ஒனறு.

**கருத்து :**—வறுமையால் யாசித்து வருந்துவதைவிட இறப்பதே மேலாகும்.

## மேற்கோள் பகுதி :—

பரிமேல் —"உயிர் போகலாவது இனி யாம் என்செய்தும் என்று ஏங்கிச் செயலற்று நிற்றல்"; அந்நிலையே யாயானே மாற்றிவிடின்" என்றார் பிறரும்" என்பர்.

—குறள். 1070.

## ஒப்புமைப் பகுதி :—

"இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர்".

—குறள். 1070.

(எ).

308. ஒருவர் ஒருவரைச் சார்ந்தொழுகல் ஆற்றி
வழிபடுதல் வல்லுதல் அல்லால்—பரிசழிந்து
செய்யீரோ என்னுனும் என்னுஞ்சொற்
பையத்தாஞ் செல்லும் நெறி. [கினதே

**தருமர் :**—என்பது ஒருவர் ஒருவரைச் சார்ந்து—ஒருவர் மற்றொருவரிடத்துச் சென்று, சேர்ந்து, ஒழுகல் ஆற்றி—அவர் நினைவின்படி ஒழுக வல்லராய்; [1]வழிபடுதல் வல்லுதல் அல்லால் —அவர் மனங் கொள்ளும்படி நடத்தல் (கூடுவத)ல்லாமல், [2]பரிசு அழிந்து—தம்முறைமை ஒழிந்து, என்னுனும் செய்யீரோ என்னும்—எமக்கு யாதானும் சில தந்து உதவி செய்ய மாட்டீரோ என்று [இரந்து] சொல்லுகிற, சொற்கு—சொல்லினுங் காட்டில்;

---

[1] வழிபடுதல் வல்லுதல் அல்லால்—வணக்கத்துடனிருத்தலை வல்லரா யிருத்தல் அல்லாமல் என்றுரைப்பாரு முளர்.

[2] பரிசழிந்து—பெருமை கெட்டு எனினுமாம்.

*தாம[1]பைய செல்லும் நெறி—தாம் மெள்ளத் துறந்து போய்த் தவம் பண்ணும் நல்ல வழியானது; (இன்னாதே-பொல்லாததோ?) [நன்று என்றபடி] என்றவாறு.*

*இவ்வகைத்தாய் ஒருவரைப் பின் சென்றிரக்கும் இரவினால் வரும் இழிவைத் தாம் மேற்கொள்ளாது மிக்க வறுமை எய்திய காலத்துத் துறத்தல் நன்று என்பதாம் முற்கூறிய பாட்டும் இவ்வகைத்தாய்க் கண்டு கொள்க.*

**பதுமனார்** :—*என்றது, ஒருவர் மற்றொருவரைச் சார்ந்து ஒழுகுதலைச் செய்து, வழிபடுதலை வல்லராம் அத்துணையல்லது, தம் மானம் அழிந்து எமக்கு யாதாலும் ஒன்றினைச் செய்யீரோ என்று இரந்து சொல்லும் சொல்லைப் பார்க்க இன்னாதே? மெள்ளத் தாம் துறந்து போம் நெறி என்றவாறு*

*இன்னாதே என்பது மாறுகொள் ஏகாரம். ஆற்றிச் செலுத்தி வழிபடுதல்—அவர் நினைவின் வழிப்படுதல்.*

**விளக்க உரை** .—*எ-து. ஒருவர் ஒருவரைச் சார்ந்து ஒழுகல் ஆற்றி—ஒருவர் ஒருவரைச் சேர்ந்து அவர் நினைவின்படி ஒழுக வல்லராய, வழிபடுதல் வல்லுதல் அல்லால—அவர் மனங் கொள்ள நடந்து போவதல்லது, பரிசழிந்து—அந்த முறைமையை ஒழிந்து, செய்யீரோ என்னும் என்னும் சொற்கு—எமக்கு யாதாயினும் சில தந்து உதவி செய்ய மாட்டீரோ என்று சொல்லுஞ் சொல்லினும் காட்டில், இன்னாதே பையத் தான் செல்லும் நெறி—மெள்ளத்தான் துறந்து போய்த் தவம் பண்ணும் நல்வழி மிக நன்று என்றவாறு*

---

[1]**பையத் தாம் செல்லும் நெறி என்பதற்கு இவ்வுரை தவத்தை இழிவுபடுத்துவதாயிருத்தலின் சிறவாமை காண்க, இனி, மெல்லத் தாம் அடங்கி ஒழுகும் அம்முறை தீதாகுமோ? என்றோ தாம் தனபமுறச் செல்லும் வழி தீதாகுமோ என்றோ கூறுவது ஏற்கும்.**

**கருத்து :**—பிறரைப் பணிந்து அவரைப் பின்பற்றி வாழ்தலினும் இரந்து வாழ்தற்கு அஞ்சுக.

## மேற்கோள் பகுதி :—

நச —"ஒருவர் ஒருவரைச் சார்ந்தொழுகல் ஆற்றின்—என்றவழிச் சொல்லுவானோடு கேட்டான் ஆறும் ஒருமை குறித்தான் என்பது விளங்கும்".

—தொல். சொல் பெயர் சூ 39

மயிலை —சொல்லெச்சமாயினவற்றுக்கு "செயிரோர் செல்லும் நெறி" என்பதனை மேற்கோளாகக் காட்டுவர்

—நன். சூ 359

(அ).

309\. திருத்தன்னை நீப்பினும் தெய்வம் செறினும்
உருத்த மனத்தோ(டு) உயர்வுள்ளின் அல்லால்
அருத்தம் செறிக்கும் அறிவிலார் பின்சென்(று)
எருத்திறைஞ்சி நில்லாதாம் மேல்.

**தருமர் .**—என்பது தன்னைத் திரு நீப்பினும்—தன்னைத் திருமகள் விட்டு நீங்கினும், [1]தெய்வம் செறினும்—தெய்வமானது [2]செறுத்ததாயினும், [3]உருத்த மனத்தோடு—உயர்ந்த தோற்றமுடைய மனத்தினால், உயர்வு உள்ளின் அல்லால்—உயர்வாமையாகிய உயர்ந்த தம் தகுதியை நினைப்பதல்லது, மேல்—மேலாயினார், [4]அருத்தம் செறிக்கும் அறிவிலார்—பொருளுக்

---

[1]தெய்வம் என்றது ஊழ்வினையை

[2]செறுத்ததாயினும்—சினந்து வருத்தினும்

[3]உருத்த மனத்தோடு—ஊக்கங்கொண்ட மனத்துடன் என்றுரைப்பாரும் உளர்.

[4]அருத்தம் செறிக்கும் அறிவிலார்—பொருளைப் புதைத்து வைக்கும் அறிவிலிகள் என்பது பதுமனார் கொண்ட பொருளாகும்.

கியைந்த அறிவில்லாதவரை; பின் சென்று—பின்பற்றிச் சென்று; [1]எருத்து இறைஞ்சி நில்லாது—(எமக்கு இல்லை என்று அவர் முகம் பார்க்க நாணிக) கழுத்தினைத் தாழ்ப்போட்டு இப்படி நில்லார் என்றவாறு.

அறிவுடையார் தம்மால் தரிக்கப்படாத வறுமை யுற்ற காலத்துத் துறப்பதே யன்றி அறிவில்லாதாரைப் பின் பற்றிச் சென்று இரவார் என வற்புறுத்தியதாம்,

**பதுமனார் :**—என்றது தன்னைத் திருமடந்தை நீப்பினும், தெய்வம் செறினும், எழுந்த மனத்தினால் உயர்வே நினைப்பி னல்லது, தாம்தேடிய பொருளினைப் புதைத்து வைக்கும் அறி விலலாதார் பின்பே சென்று எருத்து இறைஞ்சி நில்லார் மேலாயினார்.

அருத்தம் செறிக்கும்—தேடிய பொருளைப் புதைக்கும் எருத்திறைஞ்சி—தலையிறக்கிட்டு.

**விளக்க உரை :**—எ-து. திருத்தன்னை நீப்பினும்— திருமகள் தன்னைவிட்டு நீங்கினும்; தெய்வம் செறினும்—தெய்வம் செற்றதாயினும், உருத்த மனத்தோடு உயர்வு உள்ளின் அல்லால் —உயர்ந்த தோற்றமுடைய மனத்தினால் இரவாமையாகிய வுயர்ந்த தகுதியை நினைப்பதல்லது, அருத்தம் செறிக்கும் அறிவிலார் பின் சென்று—பொருளினைப் புதைத்து வைக்கும் அறிவிலார் பின்னே சென்று, எருத்து இறைஞ்சி நில்லார் மேல் எமக்கில்லை என்று அவர் முகம் பார்க்க நாணிக் கழுத் தினை வளைத்துக் கொண்டு நில்லார் மேலாயினார் என்றவாறு.

**கருத்து :**—மேலோர் வறுமையால் வாடினும் உலோபிகளிடம் சென்று இரத்தற்கு அஞ்சுவர்.

[1]எருத்து இறைஞ்சி—தலைவணங்கி என்றுமாம்.

**ஒப்புமைப் பகுதி :—**

"பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைக்கும்
கேடுகெட்ட மானிடரே"

—நல்வழி. 22

(சு).

310. பழமைகந் தாகப் பசைந்த வழியே
கிழமைதான் யாதானுஞ் செய்க—கிழமை
பொறாஅர் அவரென்னின் பொத்தித்தம்
அறாஅச் சுடுவதோர் தீ. [நெஞ்சத்(து)

**தருமர் :—**என்பது. [1]பழமை கந்து ஆக—பழமையே பற்றுக்கோடாக; பசைந்த வழியே—தாமும் அவரும் முன்) கலந்திருந்த முறைமையை நினைத்து; [2]கிழமை தான—அவர்க்குத் தாம் செய்யும் [3]உரிமையினை; யாதானும் செய்க—எவ்வள வாயினுஞ் செய்யக் கடவர்; கிழமை—அப்படிச் செய்யும் உரிமையினை, அவர் பொறார் என்னின் - பழமை பற்றுகச் சென்றவர் [4]மேற்கொள்ளப் படடிலராயின; (அது) தம் நெஞ்சத்து [5]பொத்தி—சென்றவர் நெஞ்சிற் பொதிந்துகொண்டு; அறா—விடாமல், சுடுவது—கனலுகின்ற; ஓர் தீ—ஒரு தீ அல்லவோ ? என்றவாறு.

இரவஞ்சின்றன் ஒருவன், தன்னை யறியாதாரிடத்துச் சென்று இரப்பதற்கு அஞ்சித் தனக்கு முன்னறிக்கையாய இருந்தவ னிடத்துச் செல்லக் கருதி, அவனிடத்துச் செல்வதற்கு மன

[1] பழமை கந்தாக—பழைய நட்பே காரணமாக

[2] கிழமையான யாதானும் செய்க என்று பாடங் கொண்டு உரிமையால் நண்பரை வினவாது ஏதேனும் ஒன்றைச் செய்க என்பது பொழிப்புரை காரர் பொருளாகும்.

[3] உரிமை என்றது உள்ளுரிமையாற் செய்யும் உதவியை

[4] மேற்கொள்ளப் பட்டிலராயின—அடையப் பெற்றா இல்லை எனின

[5] பொத்தி—மூளப்பட்டு எனினுமாம்.

மழுஙகி மற்றுந தன் பசிக கொடுமையால் அவனுந தானும முன காலததிருநத பழைமையைத தனக்கு ஓா ஊறறு கோலாகக் கொண்டு அவனிடததிற செல்ல, அவன இவன வறுமையாய் வநதது விசாரிததுத தான முன இவனுடன் கலந திருநத முறைமையை நினைதது, ஏதாகிலுங கொடுததனுபபினுன இலலையாயின அது இரககச சென்றவன நெஞசில அரும லிருநது சுடுந தீயலலவோ ஆகலால அவரிடததும இரபபதை அஞசித துறக்கக் கடவன் என்பதாம்.

**பதுமனுர் :**—எனறது. பழமையே பறறுககோடாகக் கொணடு தொடாநத தொடாசசி காரணமாக யாதானு மொனறை உரிமை செய்து வேண்டுக. அவ்வுரிமையினை அவர் பொருராகில மூண்டு தன நெஞசததின்கண் அடுவதோா ஆறாத தீயலலவோ எனறவாறு

கநதாக—பறறுககோடாக. பசைநத வழியே—மேவின வழியே. கிழமையால—உரிமையால யாதானும செயக—யாதானும் செயது வேண்டுக.

**பொழிப்புரை :**—எ-து. பழமையே பறறுககோடாகத தாமும் அவருங் கலநத முறைமையினைக கொண்டு உளளுரிமையாலே அவரை வினவாமல ஒனறினைச செயயில அபபடிச செயத அருமையினை அவா பொருராகில தன நெஞசிலே பொதிநது கொணடு ஆறுமல தனனைச சுடுவதொரு தீயலலோ எனறவாறு.

இது கூடாநடபிறகுப பொருநதின பாடடு; இரவசச மானபடி எது எனனில, கலநது நடபுச் செயதாரிடததும ௨டைமையை விருபபிப பெறுதறகரிய நடபினை வேறுபடுததுவா ராதலால பிறரொருவருக்கு அபபடிக கொதத உடைமையினைக கொடாா ஏனறு கொண்டு அவவிரபபினைத தவிரக கடவா எனபதாம.

**விளக்க உரை :**—பொழிபபுரையிற கணடபடியே.

கருத்து :—பழகியவரும் இல்லையென மறுப்பாராயின், அது தீப்போற் சுடுவதாதலின் மானிகள் அவரிடம் இரத்தற்கும் அஞ்சுவர்.

(௰).

துன்பவியல் முற்றிற்று.

---

# 5. *பொது வியல்.

## 32. அவையறிதல்.

**தருமர் :**—அஃதாவது, கற்றறிவினை யுடையார் [1]திரட்சியை அறிதல்; அறிகையாவது உலகத்துப் பொதுப்பட வழங்கும் நூல்களைக் கற்றவர்களும்; தத்தம் சமய நூல்களைக் கற்றவர்களும், இவ்விருதிறத்தையும் நுண்ணிதாக அறிந்திருப்பாரும், அதனைப் பார்க்கக் கற்று மிகவும் அறிந்திருப்பாரும், நுண்ணியதாக எல்லா நூல்களினுள்ளும் புகுந்து உண்மையான பொருள்களை உணர்ந்து ஒன்றினையுஞ் சொல்லாமல் அமைதி பிறந்திருப்பாரும் ஆகிய(வரது) இந்தத் திரட்சியினை அறிந்து அதற்குத் தக்கதாய் நிற்பதாம்.

**பதுமனார் :**—அஃதாவது அவை என்றது ஈண்டுக் கற்றறிவினை யுடையார் திரட்சியினை; அறிகையாவது உலகத்துப் பொதுப்பட வழங்கும் நூல்களைக் கற்றவரும், அதனால் தத்தம் சமய நூல்களைக் கற்றவரும் இவ்விருதிறத்துக் கற்ற நூல்களையும் நுண்ணிதாக அறிந்திருப்பாரும், பாக்களைக் கற்றுந் தூலமாக அறிந்திருப்பாரும், மண்ணில் ஊன்ற இலச்சினையை இலச்சினை

. . . .

*அரசியல் முதலியவற்றுள் சேராமல் பொதுவான செய்திகளைப் பற்றிக் கூறும் பிரிவு.

1 திரட்சி—கூட்டம்

தான் எனவும் அன்றெனவும் ஒண்ணுமை போல் இருநதுள்ள சமயங்களேயும் மறறுமுள்ள சாத்திரஙகளாறபெறும் பயன்களே யும் அறிநது [2]பரமாாததததினே உணாாநது இது கறகில் அகபபடுவ தொனறன்று எனறும் ஈது ஒருவாக்கு அறிவிததலாவது [3]அநதக னுக்குச் சிறப்பு வெளுப்பாம் நிறததைக் காட்டுந் தன்மை எனறும் ஒனறுஞ சொலலாதிருப்பாரும் ஆகிய இத திரட்சி யதனே அறிநது தாம் கறறவளவையும இது சொன்ஞல் வெல்லும இது சொன்ஞல தோறகும் எனறு அறிதலும், அறியாதாா முன ஒனறும சொல்லாதிருததலுமாம்.

## குறிப்பு :—

பரிமே :—அஃதாவது அரசனேடு இருநத அவையினது இயலபை அறிதல. காரியஞ சொலலுஙகால் அவன் குறிப பறிதலே அன்றி இதுவும் வேணடுதலின, இஃது அதனபின் வைககபபடடது

மணக :—அவையறிதலாவது இருநத அவையறிநது அதறகுத்தகச் சொலலுதல. அரசன குறிபபறிநதாலும அவை யறிநது சொல்ல வேணடுமாதலின, அதனபின இது கூறப பட்டது.

பரிதி :—அவையறிதலாவது ஆஸதானம் அறிதல (எ-று)

—குறள அதி. 72.

311 மெய்ஞ்ஞானக கோட்டி உறழ்வழி விட்டாஙகோர்
அஞ்ஞானந தந்திட்(டு) அதுவாங கறததுழாய்க்
கைஞ்ஞானங கொண்டொழுகுங காரறி வாளா
சொனஞானம் சோர விடல். [முன

[2]பரமாாததம—மெயப பொருள.

[3]அநதகன—குருடன.

**தருமர் :**—என்பது. [1]மெய்ஞ்ஞானக் கோட்டி—மெய்யான ஞான நூல்களையுடைய சபையிலே; உறழ் வழி விட்டு—கலந்திருப்பதனைத் தவிர்ந்து, ஆங்கு—அவ்விடத்து, ஓர் அஞ்ஞானம் தந்திட்டு—ஒரு ஞானமில்லாததனைச் சொல்லிக் காட்டி; அது ஆங்கு அறத் துழாய்—அதனை அவ்விடத்தே மிகவும் பரப்பி; [2]கைஞானம் கொண்டு ஒழுகும்—கைகளாலே குத்தித் தாம் சொன்ன புல்லிய பொருளைப் [3]பொறுப்பிக்கும்; [4]கார் அறிவாளர் முன்—மயங்கிய அறிவை யுடையார் முன்னே, சொல் ஞானம் [5]சோர விடல்—(புகழ்ச்சிக்குரிய) தம்முடைய நல்லறிவினைப் [6]பாராட்டாது மறந்துவிடுக என்றவாறு.

எனவே, புல்லிய அறிவுடையார் முன் தாம் மிகுந்த அறிவினைப் பாராட்டும் போது அவர் அறிவில்லாமையினாலே அதனை மாறுபாடாகக் கருதுவதன்றி உட்கொள்ளார் ஆதலான் அப்படி ஒத்தார் அவையிற் சேரில் தமது மிகுந்த அறிவுங் குன்றிவிடும் அதனால் 'சொல்ஞானஞ் சோரவிடல்' என்றார்.

**பதுமனார் :**—என்றது. மெய்ஞ்ஞானக் கோட்டியுள் கருந்திருக்கும் வழியை விட்டு அவ்விடத்து, மெய்ஞ்ஞானம் இல்லாததொன்றைச் சொல்லி அம்மெய்ஞ்ஞானம் என்னும்படி அஞ்ஞானத்தைப் பரப்பக் [7]கையினால் இடர்செய்து உடம்படுவிக்கும் பொல்லா அறிவினையுடையார் முன்பு சொல்லும் ஞானத்தைச் சோரவிடுக என்றவாறு.

உறழ்வழி—பொருந்தும் வழி. அது ஆங்கு அறத் துழாய்

---

[1] அவையிலுள்ளாரது மெய்ப்பொருளறிவு அவையின்மேல் ஏற்றப்பட்டது.

[2] கைஞானம் கொண்டு ஒழுகும்—தமது சிற்றறிவையே கொண்டு நடக்கின்ற என்றுமாம்.

[3] பொறுப்பிக்கும்—உடன்படுவிக்கும்.

[4] கார் அறிவாளர்—பழிக்கப்படும் அறிவினர் என்பதுமாம்.

[5] சோரவிடல்—தளரவிடுக என்றுரைப்பாரு முளர்.

[6] பாராட்டாது—விரித்துரையாது.

[7] கையினால் இடர்செய்து—கையாற்குத்தி.

—அம மெயஞஞான மாமபடி மெய்ஞ்ஞானம் அல்லாததனைப் பரபபி. கைஞானம—கையினுல் இடா செயது.

**விளக்க உரை** :—எ-து. மெய்ஞ்ஞானக் கோட்டி உறழுவழி விடடு—மெயஞஞான நூலகளையுடைய சபையிலே கலநதிருபபதனைத தவிாநது, ஆஙகு ஓா அஞஞானந தநதிடடு—அவவிடத தொரு ஞானமிலலாததவையிறறைச சொல்லிக காட்டி; அது ஆஙகு அறத துழாய—அதனை அவவிடததே மிகவும பரபபி, கைஞஞானம கொண டொழுகும காரறிவாளா முன—கைகளாலே குககித தாஞ சொனன புல்லிய பொருளைப பொறுப்பிககும மயஙகிய அறிவுடையாா முன, சொல ஞானம சோாவிடல—தமமுடைய நலல அறிவினை அறிவியாமல மறநது விடுக எனறவாறு.

**கருத்து** :—அறிவிலிகள கூடிய அவையில அறிஞா தமது அறிவுடைபததை வெளிபபடுததலாகாது.

## ஒப்புமைப் பகுதி :—

"புலலவையுட பொசசாநதுஞ் சொலலறக நலலவையுள
நனகு செலசசொலலு வாா".

—குறள் 719

"கலவியா ஞய கழிநுட பம கலலாாமுன
சொலலிய நலலவுந தீயவாம—எலலாம
இவாவரை நாட! தமரையில லாாககு
நகரமும காடுபோன ருஙகு".

—பழ கா 41.

(க).

312. நாப்பாடஞ் சொல்லி நயமுணர்வார் போற்
செறிக்கும்
தீப்புலவற் சேரார் செறிவுடையார்;—தீப்புலவன

கோட்டியுள் *குன்றக் குடிபழிக்கும் அல்லாக்கால்
தோட்புடைக் கொள்ளா எழும்.

**தருமர்:**—என்பது. நா பாடம் சொல்லி—தன்னுடைய நாவிற்கு இசைந்த பாடங்களைச் சொல்லி, [1]நயம் உணர்வார் போல்—நல்ல நூற் பொருளை அறிந்திருப்பார் போலே, [2]செறிக்கும்—பொருள் படுத்தும்; தீப் புலவன்—தீயவான அறிவுடையானை, செறிவுடையார் சேரார்—அடக்க முடையோர் சேரார்; அஃது ஏனெனில்; தீப்புலவன்-அத்தீய அறிவுடையவன் கோட்டியுள்—சபை நடுவே யிருந்து, குடி குன்ற பழிக்கும்—குடிப் பழுதுகளைத் தொடுத்து அறிவுடையார் மனங் குன்றும் படி சொல்லுவன், அல்லாக் கால்—அல்லது; தோள் புடைக் கொள்ளா எழும்—தோளைத் தட்டிக் கொண்டு; மற்போருக்கு உடன்பட்டு எழுந்திருப்பன் என்றவாறு.

ஆதலால் அவ்வகைத் தீயவர் இருக்கும் சபையிற் செல்லா திருத்தல் அறிவு என்பதாம்.

நாப்பாடம் என்பது செவிக்கு ஏற்று கற்றவை.

**பதுமனார்:**—என்றது. [3]நாப்பாட்டத்தையே நடுவே பொருளறிவார் போலே அந் நாப் பாட்டத்தையே நடுவே மடுக்கும் தீப் புலவனைச் சென்று கூடார் அடக்க முடையார், [4]தீப்புலவன் அவையுள் தோற்று, வென்றவன் குடியைப் பழிக்கும்; பழித் திலனாயின் பிறிதொன்றினை மேற்கொண்டு தோளைக் கையால்

*குன்றிக் குடிப்பழிக்கும் என்றும் பாடம்

[1]நயம்—பொருள் நயம் எனினுமாம்.

[2]செறிக்கும்—கூட்டஞ் சேர்க்கும் என்றே, போலிக் கருத்தைப் புகுத்தும் என்றே கூறினும் அமையும்.

[3]நாப்பாடம்—நெட்டுருச் செய்த பாடங்கள்.

[4]இப்பொருள் பதுமனார் கொண்ட மூல பாடத்திற்கு ஏற்ப உரைக்கப் பெற்றுள்ளது.

புடைத்தெழும் என்றவாறு.

நயம்—பொருள். செறிவுடையார்—அடக்கமுடையார். குன்றி—தோற்று. பழிக்கும்—வென்றவன் குடியைப் பழிக்கும் தோள் புடைக்கொள்ளா எழும்—தோளைக் கையால் புடைத்து எழும்.

**விளக்க உரை:**—எ-து நாப்பாடஞ் சொல்லி—தன்னுடைய நாவுக்கிசைந்த பாட்டுகளைச் சொல்லி; நயம் உணர்வார் போற் செறிக்கும்—நூல்களை அறிந்திருப்பாரைப் போலே பொருளைப் படுத்தும், தீப்புலவர் சேரார் செறிவுடையார்—தீங்கான அறிவினையுடையாரைச் சேரார் அடக்கமுடையார், அஃது என்னெனில், தீப்புலவன் கோட்டியுள் குன்றக்குடி பழிக்கும்—அந்தத் தீய வார்த்தையையுடையவன் சபைக்கு நடுவே குடிப் பழுதுகளைத் தொடுத்துக் கேட்கச் சொல்லுவன், அல்லாக்கால் தோட்புடைக் கொள்ளா எழும்—அதுவல்லது தோளைக் கொட்டி மற்பொருகைக்கு உடன்பட்டு எழுந்திருப்பன்.

ஆதலால் அப்படியொத்த சபையினை அமைதியுடையார் சேரார் என்றவாறு.

நாப்பாடம் என்பது செவியேற்கக் கற்றவை.

**கருத்து**—நற்புலவர் போலிப் புலவருடன் கூடினால் தமது பெருமை குன்றப் பெறுவர்.

## ஒப்புமைப் பகுதி :—

"கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்கதோர்
பொல்லாத தில்லை".

—பழ. நா. 15.

(உ).

313. சொற்றாற்றுக் கொண்டு *துனைந்தெழுதல் காமுறு
கற்றாற்றல் வன்மையுந் தாந்தேறார்,—கற்ற [வர்,
செலவுரைக்கும் ஆறறியார், தோற்ப(து) அறியார்
பலவுரைக்கும் மாந்தர் பலர்.

**தருமர் :**—என்பது. [1]சொல் தாறு கொண்டு—சொற் கொழிபபினைக் கொண்டு; துனைநது எழுதல் காமுறுவர்—விரைந்து சொல்லுதலை ஆசைபபடுவா; கறற ஆறறல வண்மையும—கல்வி மிகுதியுடையோா வன்மையினையும; தேறா—தெளியாா; கறற—(தாம) கறறவறறை, செல உரைககும ஆறு அறியாா—ஏறகச் சொலலும வழியையும் அறியாா; தோறபது அறியாா—தாம் பின்பு அசசபையில் தோறபதனையும அறியார்; பல உரைக்கும் மாநதா பலா—தமமுடைய நாவுக்கு இயைநத சொற கள் பலவறறையுஞ் சொலலி முறிநது போமவா பலா என்ற வாறு.

எனவே இவவகைத்தாயவர் எயதிய சபையில் சோதல் அறிவுடைமைக்குப் பொருநதிய தனறு என்பதாம்.

**பதுமனார் :**—என்பது. [2]சொற கொழிபபைக கொண்டு நாத தினவினால் பிறருடன் வாது செய்யத தொடங்குதலைக் காதலிபபா; அதறகு எதிாவாதி யானவன நூலைக் கோதறக் கறறு அறிதல வனமையுந தாமறியாா; தாம கறறனவறறைப பிறாக்கு உணரச சொலலுமாறும் அறியாா; தாம தோறபதனையும அறியாா, பினனையும் பலவறறையும் உரைக்கும மாநதா பல ருளா எனறவாறு.

[3]சுனைத் தெழுதல்—நாதினவினால் பிறருடன் வாது

---

*சுனைத தெழுதல் என்றும பாடம்.

[1]சொல் தாறுகொணடு எனப பிரிதது சொலலாகிய தாற்றுக்கோல் கொணடு எனறுரைததலும ஒன்று.

[2]சொறகொழிப்பு—சொற்பெருக்கு.

[3]சுனைத தெழுதல் என்பது பதுமனா கொண்ட பாடமாகும்.

செயய எழுதல்.

**விளக்க உரை :**—எ-து. சொற்முறறுக் கொண்டு—தான் சொல்லுதலே மேலாகக் கொண்டு; துனை தெழுதல காமுறுவர்—விரைந்து செல்லுதலை ஆசைபபடுவா; கற்முறறல வன்மையும் தாம தேமுா—கலவிமிகுதி யுடையோா வன்மையை யும தெளியாா; கறற செலவுரைககுமாறு அறியாா—கறறவை இறறை எறச் சொல்லும வழியையும அறியாா; தோறபது அறியார்—தாம பின்பு தோறபதனையும அறியாா, பல உரைககும மாநதா பலா—தமமுடைய நாவுககுப பொருநதின சொறகள பலவுஞ சொல்லி முறிநதுபோமவா பலா என்றவாறு.

**கருத்து :**—பயனில்லாத சொறகளைக கூறுஞ் சிறறறிவினா அவைக குரியராகாா.

**ஒப்புமைப் பகுதி :-**

"கறமுறறு வாரைக் கறுபபிததுக கலலாதாா
**சொறருறறுக் கொண்டு சுனைத்தெழுதல்**—எறறெனின்
தானும நடவான முடவன பிடிபபூணி
யானையோ டாடல் உறவு.

—பழ. 16.

"பலசொல்லக காமுறுவா மன்ற மாசறற
சில சொலலல தேறறு தவா".

—குறள. 649.

(௩).

314. கற்றதூஉம் இனறிக கணககாயர் பாடததாற்
பெற்றதாம் பேதை,ஓர் சூத்திரம்—மற்றதனை
நல்லார் இடைப்புக்கு நாணாது சொல்லிததம்
புல்லறிவு காட்டி விடும்.

**தருமர்** :— என்பது. கறறதும் இன்றி—(தான்) ஆசிரிய னிடத்திற பொருள் விளங்க அறிநத பாடமல்லது; [1]கணக்காயா பாடததால—பளளிப பாடததால்; ஓா சூததிரம்—ஒரு பாட்டினே; பேதை—பேதையானவன்; [2]பெறறது ஆம—கற(றவனுவான்); மறறு அதனை—மறறு அநதப பாடடினே; நலலாா இடைபுக்கு —நலலறிவுடையாா முன் புகுநது; நாணுது சொலலி—கூசாதே சொலலி, தன புல் அறிவு—தன்னுடைய புலலிய அறிவினே; காடடிவிடும—விளக்கி விடுவன எனறவாறு.

நலலறிவுடையோா சபையில அறிவிலலாதான் செல்லில இவவகைததாய இழிவு எய்துவன; அதுவன்றி அவவகை அறி வுடையாா இருககும சபையில நலல அறிவுடையாா சேருவதும இயலபனறு எனபதாம.

**பதுமனுர்**:—என்றது. திருநதக் கற்றதும் ஒனறு இனறி, கணககாயரது பாடததாற பேதை பெறறதாம் ஒரு [3]சூததிரம மறறு அதனை அறிவினுல நலலாரிடைப புக்கு நாணுது சொல்லித தன புலலறிவினைக் காட்டி விடும எனறவாறு.

கணக்காயா பாடம்—பளளிப பாடம.

**விளக்க உரை** :—எ-து. கறறதூஉம் இன்றிக் கணக் காயா பாடததால் பெறறதாம பேதை ஓா சூத்திரம—ஆசாரிய னுடன பொருள விளஙக அறிநத பாடமலலது பளளிப பாடததாற சிலபாட்டினைப் பேதையாயினுன் கறறு; மறறதனை நாலலாரிடைப புக்கு நாணுது சொல்லி—மறறநதப் பாட்டினை நற செறிவினை யுடையோா நடுவே புகுநது கூசாதே சில கறற தனைச் சொலலித; தம் புலலறிவு காட்டி விடும—தம்முடைய

[1] ஆசிரியர் கற்பிக்கின்ற பாடததால என்றுரைப்பினுமாம.

[2] பெற்றதாம என்பதனைப் பெறறதாகிய எனப் பெயரெசசமாக்கிச் சூததிரம என்பதனேடு கூட்டி உரைபபினும் அமையும்.

[3] சூததிரம்—நூற்பா.

புல்லிய அறிவினை விளக்குவித்து விடுவா எ-று.

சில சொல்லுதல்—தாம் கற்ற பாட்டுக்குப் பொருள் சொல்லுதல்.

**கருத்து:**—நறபுலவர் அவையில் போலிப புலவா சென்றால நாவடக்கம் உடையவரா யிருக்க வேண்டும

## மேற்கோள் பகுதி :-

முயிலே } :—கண் முதலாக எண்ணபபட்ட இருபக
சஙகர } கெட்டும இடப்பொருளைக் காட்டும உருபுகள
என்பதறகு 'நலலாரிடைப புக்கு' எனபதனை மேறகோளாக காட்டுவா.

—நன. சூ. 301.
—நன. சூ. 302.

## ஒப்புமைப் பகுதி :—

"கறபன ஆழறறா கல்விக கழகததாங(கு)
ஒறகமின் றாததைவாய அஙகாததல—மறறுததம்
வலலரு வஞசனமின எனபவே மாபறவை
புலனுரு வஞசுவ போல".

—நீதிநெறி. வி 23.
(ச).

315. வெளறிப் பொருட்டால் விலஙகொதது மெய்
கொள்ளார்
கனறிக கறுத்தெழுந்து †காய்பவரோ(டு)—ஒளறி
உரைவித தகம்எழுவார் *காண்பரே கையில்
சுரைவிததுப் போலததம் பல்.

---

†காயவாரோடு என்றும் பாடம்.

*காணபவே கையுள எனறும பாடம.

**தருமர் :**—என்பது. வென்றிப் பொருட்டால்—தாம் வெல்லுவது காரணமாக; [1]விலங்கு ஒத்து—நாய் முதலாகிய மிருகங்களைப் போல, மெய் கொள்ளார்—உண்மைப் பொருளை அறியாராய்; கன்றி—மனம் புழுங்கி; கறுத்து எழுந்து—சினம் மிகுந்து; காய்பவரோடு—கோபிக்குமவரோடே; ஒன்றி—தாமும் (பொருந்தி) எதிரெழுந்து, உரை [2]வித்தகம் எழுவார்—சொல் என்னும் [3]வித்தாரங்களைக் காட்டத் தொடங்குமவர்; தம்பல்—(அவனால் குத்தி முறிக்கப்பட்ட) தம் பல்லினை; சுரை வித்தே போல—சுரை விதை போல, கையில் காண்பார்—தம்முடைய கையிலே காண்பார் என்றவாறு.

தம்மோடு ஒத்த அறிவுடையார் அல்லாதவரிடத்தில் சேர்ந்து ஒன்றிச் சொல்லும் போது அவ் வறிவில்லாதவன் தான் சொல்லியதே மேலாகக் கருதுவன் அல்லாது அவர் சொல்வதை உட்கொண்டு அதற்கு இணங்கும்படி சொல்ல அறியாமையினால் நம் அறிவு கீழ்ப்படத் தாம் மேலாகக் கூறுவது என்னை என்று தன் வலி காட்டுவன், அவனுடன் எதிர்ந்து கை கலக்கச் செல்வது அறிவுடையோர்க்கு இயல்பு அல்லவே, ஆதலால் அவையறிந்து சேர வேண்டும் என்பதாம்.

**பதுமனார் :**—என்றது வென்றிப் பொருட்டாக விலங்கினை ஒத்து மெய்ப் பொருளைக் கொள்ளாது மனம் புழுங்கிச் சினந்து எழுந்து வெகுள்வாரொடு கூடித் தம் சொல்வன்மை காட்டத் தொடங்குவார் [4]சுரைவித்துப் போலும் தம் பல்லினைத் தம் [5]கையுள்ளே காண்பர் என்றவாறு.

---

[1] பகுத்தறிவின்மையால் விலங்கொத்து என்றார்.

[2] வித்தகம்—சொல்வன்மை எனினுமாம்

[3] வித்தாரம்—விரிவு

[4] பல் சுரைவித்துப் போல்வதை "நிரைமுத்த னைய நகையுங் காணாய் சுரைவித் தேய்ப்பப் பிறழ்ந்து வேறாயின" என்ற மணிமேகலை யுள்ளும் காண்க

[5] கையிற் காண்பதாவது—மூடர்கள், அறிஞரைக் கன்னத்தில் அறைந்து பற்களை உதிர்த்துக் கையிற் கொடுத்தலாற் காணப்பெறுதல்.

விலங்கு ஒத்து—மிருகம் ஒத்து. கன்றிக் கறுத்து எழுந்து காய்வார்—நெஞ்சு கன்றிச் சினந் தெழுந்து வெகுள்வார். உரை வித்தகம் எழுவார்—சொல் லறிவு காட்ட எழுவார். விலங் கோர்த்து என்று பாடம் போந்து விலங்க ஓர்ந்து ஒன்று பொரு ளுரைப்பாரு முளர்.

**விளக்க உரை:**—எ-து. வென்றிப் பொருட்டால்—தாம் வெல்லுவது காரணமாக; விலங்கொத்து மெய்கொள்ளார்—உண்மைப் பொருளை அறியாராய நாய் முதலாகிய மிருகங் களைப் போலே, கன்றிக் கருத்தெழுந்து காய்வாரோடு—மனம் புழுங்கிச் சினமிக்குக் கோபிக்குமவருடனே; ஒன்றி உரை வித்தகம் எழுவார்—பொருந்தியிருந்து அவருடனே தாமும் எதிரெழுந்து சொல்லின்னும் வித்தாரங் காட்டுவார்; காண்பரே கையில் சுரைவித்துப் போலுந் தம் பல்—அவர் தம்மால் குத்தி முறிக்கப்பட்ட பல்லினைத் தம்முடைய கையிலே சுரை விரை போலக் காண்பர் என்றவாறு.

**கருத்து.**—அறிவிலிகள் முன் அறிஞர் தமது சொல்வன்மை காட்டி அவமானம் அடைதல் ஆகாது.

## ஒப்புமைப் பகுதி :—

"விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்".

—குறள். 410.

"புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச் சொல்லுவார்".

—குறள் 719.

"கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்கதோர்
பொல்லாத தில்லை ஒருவற்கு—நல்லாய்!
இழுக்கத்தின் மிக்க இழிவில்லை; இல்லை
ஒழுக்கத்தின் மிக்க உயர்வு".

—பழ. 64.

'சுரைப்பழத்தின் விதை பல்லுக்கு உவமையாதலுக்கு'—

"நிரைமுத்த னைய நகையும் காணாய
சுரைவித் தேய்ப்பப் பிறழ்ந்துவே றாயின".

—மணி. 20 49—50.

(ரு).

316. பாடமே ஓதிப் பயன்தெரிதல் தேற்றாத
மூடர் முனிதக்க சொல்லுங்கால்—கேடருஞ்சீர்ச்
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே மற்றவரை
ஈன்றாட்(கு) இறப்பப் பரிந்து.

**தருமர்** :—என்பது பாடமே ஓதி—(மூல)பாடத்தினையே கற்று, பயன் தெரிதல் தேற்றாத—அதன் பொருளை ஆராய்ந்தறிய மாட்டாத; மூடர்—அறிவிலலாதார், முனிதக்க—வெறுக்கத்தக்க சொற்களை; சொல்லுங்கால—சபையிலே சொல்லுங் காலத்து; கேடு அரும் சீர—கெடுதற்கரிய சீர்மையினையுடைய; சான்றோர்—அமைதியுடையோர், மற்று அவரை—மற்றந்த அறிவிலலாதாரை,* [1]ஈன்றாட்கு—பெற்றவளுக்கு; இறப்ப பரிந்து—(இப்படி ஓதத்தவனைப் பெற்றவளிவள் முன் சென்மத்தில் என்ன பாவத்தைச் செய்தாளோ என்று) மிகவும் இரக்கமுற்று, [2]சமழ்த்தனர் நிற்ப—(நாணி) ஒளி மழுங்கி நிற்பர் என்றவாறு.

†'பரிவுறூஉஞ் சான்றோர் கடன்'- என்றாற் போலத் தாம் ஒளி மழுங்கி நிற்ப வருமிடத்தும் அவர்க்கே பரிவர் என்று

---

[1]'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச்—சான்றோன் எனக் கேட்ட தாய்' என்ப ஆதலின், தன்மகனை மூடன் எனக் கேட்ட தாய் ஈன்ற பொழுதிற் பெரிதும் வருந்துவள் என்று கருதிச் சான்றோர் மிக இரங்குதலின் 'ஈன்றாட்கு இறப்பப் பரிந்து' என்றார்.

[2]சமழ்த்தனர் நிற்ப—நாணி நிற்பர்; சான்றோர் நாணிப் பெருமையுடன் இருத்தற்குக் காரணம் அவன் தாய் வருந்துவதற்கு இரங்கினமை பற்றி என்க.

†நாலடியார் 58-வது செய்யுள்.

அவரறிவு மிகுதி கூறி, அவையறிந்து சேரார்க்கு வரும் இழிவு புலப்படுத்தியது.

**பதுமனார்:**—என்றது மூல பாடத்தினையே ஓதி அதன் பயனாகிய பொருளை ஆராய மாட்டாத அறிவில்லாதார் நல்லோர் வெறுக்கத்தக்கனவற்றைச் சொல்லும் பொழுது, கெடுதற்கரிய சீர்மையையுடைய சான்றோர் நாணி ஒளி மழுங்கி நிற்பர்; மற்று இவ்வறிவில்லாதானைத் தாய் இவனை ஈன்றதனால் பயன் பெற்றிலள் என்று மிகவும் அவட்கு இரங்கி என்றவாறு.

முனித்தக்க—நல்லார் முனியத் தக்கன. பொருள் அல்லாதன பொருளாகச் சொல்லுங்கால் இவனை மதியாராய்த் தம் ஒளி மழுங்கி நிற்பர் இவனை ஈன்றதாய் இவனைப் பெற்றது என் என்று மிகவும் இரங்கி என்பதாம்.

**விளக்க உரை:**—எ-து. பாடமே ஓதி—பாடத்தினைக் கற்று, பயன் தெரிதல் தேற்றா—அதன் பொருளை ஆராய மாட்டாத; மூடர் முனித்தக்க சொல்லுங்கால்—அறியாதவர் வெறுக்கத்தக்க சொற்களைச் சபையிலே சொல்லுங்காலத்து; கேடருஞ்சீர்—கெடுதற்கரிய சீர்மையினையுடைய; சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே—சான்றோர் ஒளி மழுங்கி நிற்பர்; மற்றவனை ஈன்றாட்கு—மற்று அவனைப் பெற்றவளுக்கு; இறப்பப் பரிந்து—இப்படி ஒத்தவனைப் பெற்றவள் என்ன பாவஞ் செய்தாளோ என்று அவளுக்கு மிகவும் இரங்கி என்றவாறு.

**கருத்து:**—தமது அவையில் அறிவிலிகள் தவறாகக் கூறியன கேட்ட சான்றோர் அமைதியுடனிருப்பர்.

## மேற்கோள் பகுதி:—

நச்:—"சட்டி, சள்ளை, சமை எனவும் "சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே". ..எனவுஞ் சகரம் மொழிக்கு முதலாய் வந்தவாறு காண்க. இவை "சகரக்கிளவியு மவற்றோ ரற்றே,

அ ஐ ஔ வெனு மூன்றலங்கடையே" என ஆசிரியர் விலக்கலின், அக்காலம் மொழிக்கு முதலாகாது விலக்கிய சகரம பிறகாலதது வழஙகியதாயிறறு.

—தொல். சொல் எசச. சூ, 56.

## ஒப்புமைப் பகுதி :—

"புல்லா எழுததிற பொருளில் வறுஙகோட்டி
புலலா ஒருவன உரைபபவுங கணடேனடி
நலலார வருநதியுங கேட்பரே மறறவன
பல்லாருள நாணல் பரிநது".

—நாலடி 155.

(சு).

317. பெறுவது கொள்பவர் தோள்போல் நெறிபட்டுக்
கற்பவர்க் கெல்லாம் எளியநூல் மற்றம
முறிபுரை மேனியர் உள்ளம்போல் யார்க்கும்
அறிதற் கரிய பொருள்.

**தருமர் :**—என்பது. பெறுவது கொளபவா—தாம பெறுகினற பயனைக கருதி அதறகு இயைய ஒழுகும பரததையாரது; தோள போல்—தோளகள போல, நூல—நூலகள; *நெறிபட்டு— வழிபட்டு; கறபவாக்கு எல்லாம்—கறபவாகட்கு எல்லாம், எளிய - எளிதாய்க் கறகலாயிருக்கும; மறறு அ [1]முறிபுரை மேனியா—மறறு அநதத தளிர போலும் மேனியினையுடையாரது; உள்ளம போல்—நெஞசு போல, பொருள—அந்நூலகளின [2]பொருளகளோ; யாாக்கும் அறிதறகு அரிய—யாவர்க்கும

*நெறிபட்டு—கறகும் வழியில இறங்கி. 'நெறிப்பட்டு' எனின—ஒரு தொடர்பு பெறறு எனக.

[1] மாந்தளிர—இது மேனியின செம்மை, மென்மை, அழகு இவறறிறகு உவமை.

[2]பொருள் என்றது நூலின் ஆழ்ந்த உட்கருத்துக்களை.

அறிவதற்கரியன என்றவாறு.

பொதுமகளிர் ஆகையால் அவர்தோள் சேர்வது; எளிதிற் சேருமாப் போல நூல்கை கற்பதும் எளிதாயிருக்கும். அவர் மனம் யாவராலும் அளவிடலாகாதது போல நூலின் பொருளும் அளவிட்டறிய(லாகாதது) என்பதாயிற்று.

நூல்களைக் கற்றாராயினும் அவர் அறிவுடையரல்லர். அத்தன்மையார் இருக்கும் சபையிற் சேருதல் (நன்றன்று) என அறிவுறுத்தியதாம்.

**பதுமனார்**:—என்றது தாம் பெறுகிற பயன்களைக் கருதி அதற்குத் தக்கதாக ஒழுகும் பரத்தையர் தோள் போல வழிப்பட்டுக் கற்பவர்க்கெல்லாம் நூல்கள் எளியவாம்; மற்றந்தத் தளிர்போலும் மேனியையுடையார் நெஞ்சுபோல யாவர்க்கும் நூலின் கருத்து அறிதற்கரியவாம் என்றவாறு.

**விளக்க உரை**:—எ-து. பெறுவது கொள்பவர் தோள் போல—தாம் பெறுகின்ற பயன்களைக் கருதி அதற்குத் தக ஒழுகும் பரத்தையர் தோள் போல; நெறிப்பட்டுக் கற்பவர்க் கெல்லாம் எளிய நூல—வழிபட்டுக் கற்பவர்க்கெல்லாம் நூலும் எளியவாகும், மற்று அம் முறிபுரை மேனியர் உள்ளம்போன்று—மற்றந்தத் தளிர்போலும் மேனியையுடையார் நெஞ்சுபோல; யார்க்கும் அறிதற்கரிது என்றவாறு.

**கருத்து**:—நூல்களின் நுண் பொருளையும் அறியவல்லவரே அவைக்குரியராவர்.

## ஒப்புமைப் பகுதி:—

"உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர்".

—குறள் 813.

(எ).

318. புத்தகமே சாலத் தொகுத்தும் பொருள்தெரியார்
உய்த்தகம் எல்லாம் நிறைப்பினும்-மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே, பொருள்தெரிந்து
தேற்றும் புலவரும் வேறு.

**தருமர்:**—என்பது. புத்தகமே சாலத் தொகுத்தும்—புத்தகங்களையே மிகவும் தொகுத்து வைத்தும், பொருள் தெரியார்—அதன் பொருளை அறியாராய், உய்த்து—மற்றும் பல நூல்களையும் தேடிக் கொண்டு வந்து; அகம் எல்லாம் நிறைப்பினும் [1]அகமெல்லாம் நிறைத்து வைப்பினும்; மற்று அவற்றை மற்றந்தப் புத்தகங்களை; [2]போற்றும் புலவரும் வேறே-[3]பரிகரிக்கின்ற புலவரும் வேறே, பொருள் தெரிந்து—அவற்றின் பொருளை ஆராய்ந்து; தேற்றும் புலவரும் வேறு—பிறர்க்கு அறியச் செலுத்தும் புலவரும் வேறு என்றவாறு.

அகம் நிறையப் புத்தகத்தை யுடையராயினும், அதனால் அவர் அறிவுடையார் அல்லர்; அதன் பொருளை அறியுமவரே அறிவுடையார்; ஆதலால் அவையறிந்து சேரவேண்டும் என்பதற்குப் புத்தகந் தொகுத்தாரை இழிவாக்கி அறிவுறுத்தியதாம்.

**பதுமனார்:**—என்றது. புத்தகத்தினை நிறையத் தொகுத்தும், அதன் உட்கொண்ட பொருளை அறியாராயப் போற்றி அகங்கள் எல்லாம் நிறைத்து வைப்பினும் என்னை மற்று அவற்றைப் போற்றும் புலவரும் வேறு; அவற்றின் பொருளை ஆராய்ந்து பிறர்க்குத் தேற்றும் புலவரும் வேறு என்றவாறு.

உய்த்து—பொருளல்லாதவற்றைக் கொண்டுவந்து.

---

[1] அகம்—வீடு

[2] புத்தகந் தொகுத்தலாற் புலவராகார்; புத்தகம் தொகுத்தவருக்குப் பயன்படாது கற்பாற்கே பயன் படுவதாயிருத்தலின் போற்றும் புலவரும் வேறு என்றார்

[3] பரிகரிக்கிற—இது பரிகரிக்கிற என்றிருத்தல் கூடும்; அதாவது கெடாமல் வைத்துக்கொள்கிற.

**விளக்க உரை:**—எ-து. புத்தகமே சாலத் தொகுத்தும்—புத்தகத்தினையே மிகவுந் தொகுத்து வைத்தும்; பொருள் தெரியார்—அதன் பொருளை அறியாராய்; உய்த்து அகமெல்லாம் நிறைப்பினும்—நூல்களைத் தேடிக் கொண்டுவந்து அகத்தினை நிறைத்து வைப்பினும்; மற்றவற்றைப் போற்றும் புலவரும் வேறு—மற்றவற்றைப் பரிகரித்துக் கற்கிற புலவரும் வேறு, பொருள் தெரிந்து தேற்றும் புலவரும் வேறு—அதன் பொருளை ஆராய்ந்து பிறர்க்கறியச் செலுத்தும் புலவரும் வேறு என்றவாறு.

**கருத்து:**—நூல்களைத் தொகுத்தலோடு அவற்றின் பொருளையும் உணர்ந்து உரைக்கவல்லவரே புலவராவர்.

(அ).

319. பொழிப்பகலம் நுட்பநூல் †எச்சமென்(று) ஆற்றக்
கொழித்தகலம் காட்டாதார் சொற்கள்—பழிப்பில்
நிரையாமா சேக்கும் நெடுங்குன்ற நாட!
உரையாமோ நூலிற்கு நன்று?

**தருமர்:**—என்பது. [1]நிரை ஆமா சேக்கும்—நிரை நிரையாகக் காட்டுப்பசுக்கள் தங்கும், நெடு குன்றம் நாட!—உயர்ந்த மலை நாடனே!; பொழிப்பு—நூலின் பொருளைத் திரட்டிச் சுருங்கச் சொல்லலும், அகலம்—அப்பொருளை விரித்துரைத்தலும், நுட்பம்—(வினாவிடையால்) அப்பொருளை உள்ளபடி அறிவித்தலும், [2]நூல் எச்சம்—நூலிற் புகாமல் நீங்கி நின்ற பொருளை வருவித்துரைத்தலும், என்று ஆற்ற—என்று இப்படி மிகவும்; கொழித்து—ஆராய்ந்து, அகலம்

† 'எச்சமிந் நான்கின்'—என்றும் பாடம்

[1] நிரை—கூட்டம்

[2] நூலெச்சம் என்பதனை இரண்டாகப் பிரித்து நூல் என்பதற்கு இலை சாலை பொருளை உரைத்தல் என்பதும், எச்சம் என்பதற்கு எச்சவுமைகளால் எஞ்சிய பொருளை உரைத்தல் என்பதும் பழையவுரை.

காட்டாதார—இப்படி அப்பொருள் விரிவெல்லாம் விளங்க அறிவியாதவர்து; சொற்கள—; நூலிற்கு—ஒரு நூலுக்கு; [1]பழிப்பு இல்—பிறரால் பழிப்பு எய்தாத; நன்கு உரையாமோ—நல்ல உரை ஆகுமோ? [ஆகாது] என்றவாறு

இவ்வகைத்தாய அறிவுடையாரே சபைக்குப் பொருந்தியவர், அத்தன்மையர் இல்லாச சபையிற் செல்வதும் அறிவன்று என்பதாம்.

**பதுமனார்:**—என்றது. திரண்ட பொருளைச் சொல்லலும், விரித்துரைத்தலும், கடாவும் விடையுமாகச் சொல்லுதலும், இலேசானே பொருளை உரைத்தலும், எச்சவும்மைகளால் எஞ்சிய பொருளை உரைத்தலும் ஆகிய இந்நான்கு வகையானும் ஆராய்ந்து விரிவான பொருளைக் காட்டமாட்டாதார் சொற்கள், காட்டுப் பசுக்கள் நிரை நிரையாகத் தங்கும் உயர்ந்த மலை நாடனே! நூலிற்குப் பழிப்பில்லாத நல்ல உரையாமோ என்றவாறு.

**விளக்க உரை:**—எ-து. பொழிப்பு—சுருங்க வைத்துச் சொல்லுதல், அகலம்—விரித்துரைத்தல்; நுட்பம்—அதிற் பொருளை உள்ளபடி அறிவித்தல், நூல் எச்சம்—நூலிற் புகுதாமல் ஒழிந்த பொருளை அமைத்துச் சொல்லுதல், என்று ஆற்ற—என்று இப்படி மிகவும், கொழித்து அகலம் காட்டாதார் சொற்கள—ஆராய்ந்து இப்படியாக (விரிவான பொருளை) அறிவியாதவர் சொற்கள்; நிரையாமா சேக்கும் நெடுங் குன்ற நாட!—காட்டுப் பசுக்கள் நிரை நிரையாகத் தங்கும் உயர்ந்த மலை நாடனே!; பழிப்பில உரையாமோ நூலிற்கு நன்கு—நூலிற்குப் பழிப்பில்லாத நல்ல உரை யாகுமோ என்றவாறு.

இப்படி அறியுமவர் யாதொரு சபைக்கும் உத்தாரங் கொடுக்க வல்லர் என்பதாம்.

**கருத்து:**—நூற் பொருளைப் பலவகையிலும் விரிவாக விளக்கிக

[1]பழிப்பில என்பதனை ஆமாவுடன் கூட்டிப் பொருளுரைப்பாரும் உளர்.

கூற வல்லவரே அவைக்குரியராவர்.

(௯).

320. இற்பிறப்(பு) இல்லார் எனைத்துநூல் கற்பினும்
சொறபிறரைக காக்குங் கருவியரோ?—இற்பிறந்த
நல்லறி வாளர் நவினறநூல் தேற்றுதார்
புல்லறிவு தாமறிவ(து) இல்.

**தருமர்:**—என்பது. இல் பிறப்பு இல்லார்—(உயர்) குடிப் பிறபபு இலலாதவா; எனைதது நூல் கற்பினும—எலலா நூலகளை யும கறறாராயினும; [1]பிறா சொலலை காககும் [2]கருவியரோ—பிறா சொலலாறறும போது எறபடுங குறறததைப் †பரிகரிதது அடககும அறிவுடையராக வலலரோ?; இல பிறநத நல் அறிவாளா—(உயா) குடிப் பிறநத நல்லறிவுடையாா; [3]நவினற நூல தேறறுதாா—(பெரியோா) சொல்லிய நூலின பயனைத தெரியாதாரது, புல அறிவு—புலலிய அறிவை; [தாம அறிவது இல—தாம அறியாதவா போலிருபபா] எனறவாறு.

குடிப பிறபபாளா சிறிது நூலைக கறறாராயினும், எலலா நூலகளையும கறறு ராயினும அவாககு இயறகையாகவே அறிவுண்டாம. குடிபபிறபபிலலாா எலலா நூலையும கறறுனும தங்குணமனறி அறிவு, அவரைப் போல உணடாகாது. அதனுல பெரியோா நூலின் பயன் அறியாா கருதது இது, அறிநதோா கருதது இது என்ன அறியவும மாடடாராய், அவையிற சென்று சொலலுவதில் தமமேல வருங குறறமுங காணமாட்டாா

[1]'சொல் பிறரைக் காக்கும்' எனபதில உருபு பிரிததுக் கூட்டப் பெறறது.

[2]கருவி—சாதனம், ஆவது அறிவினை.

†பரிகரித்து—நீக்கி.

[3]நவின்ற—கறற எனபது பதமனூா கொணட பொருளாகும்.

என்பதனுல் இது அவையறிதலில் சேர்க்கப்பட்டது.

**பதுமனுர்** :—என்றது. குடிப்பிறப்பு இல்லாதார் எல்லா நூல்களையும் கற்று நிரம்ப அறிவுடையராயினும், பிறர் சொல்லின் கண் வரும் குற்றத்தைப் பாதுகாத்து அடக்கும் கருவியினை யுடையவராவரோ? குடிப்பிறந்த நல்லறிவாளர், கற்ற நூலின் பொருளைத் தெரிய வுணர்ந்திலாராது புலவிய அறிவினைத் தாம் உணர்ந்தாராயினும் அறிந்திலாதார் போல இருப்பர் என்ற வாறு.

**விளக்க உரை** :—எ-து. இற பிறப பில்லார் எனைத்து நூல் கற்பினும—குடிபபிறப் பில்லாதார் எல்லா நூலினையுங் கற்பினும், சொல பிறரைக் காக்கும் கருவியரோ—பிறர் சொல்லினல் வருங் குற்றத்தினைக் காத்து அடங்கும் அறிவுடையராக வல்லரோ?, இறபிறந்த நல்லறிவாளர் நவின்ற நூல் தேறுதார் புலலறிவு தாம அறிவதில—குடியிலே பிறந்த நல்லறிவினை உடையார் சொன்ன நூலின் பயனைத் தெளியாராயினும்; புலவிய அறிவினை உடையாருடைய அறிவைத் தாம அறியாதது போலிருப்பர் என்றவாறு.

இது குடிபபிறபபின் தன்மை கூறல்; அவையறிதல் ஆமோ எனனில, அவையறியாதார் புலவிய சொல் தவறிச் சொல்லில அவையிலிருந்த அறிவுடையார் மனத்தினை இபபடி மிகவும் நோகுவிப்பர் எனபனுல (சேர்க்கப் பட்டது).

**கருத்து** :—பிறர் சொறசோர்வு கண்டு இகழாது அடங்கிய உயர்குடிப பிறப்பாளரே அவைக்குரிய ராவர்.

(௰).

**பொதுவியல் முற்றிற்று.**

---

# 6. *பகை யியல்.

## 33. புல்லறிவாண்மை.

**தருமர்** :—அஃதாவது புல்லிய அறிவை ஆளும் ஆட்சி; அஃது ஆமாறு யாதானும் சிறிது அறிந்தது கொண்டு, எல்லாம் அறிந்தவரைப் போலத் தன்னைத்தானே மதித்துக் கொண்டு தன்னை வியந்து கூறலும், பிறர் பெருமை அறியாமல் அவரை இகழ்ந்து கூறலுமாம்.

**பதுமனார்** :—அஃதாவது. புல்லிதான அறிவை ஆளும் ஆட்சி; ஏதேனும் சிறிது அறிந்தது கொண்டு எல்லாம் அறிந்தானாகவும், எல்லாரினுந் தான் பெரியனாகவுந் தன்னைத் தானே மதித்து வியந்து கூறலும், பிறர் பெருமைகளை அறியாது தான் இகழ்ந்து கூறலுமாம்.

**குறிப்பு** :—

'புல்லறிவாண்மை' —

பரிமே —அது புல்லிய அறிவினை ஆடல் தன்மை என விரியும். அஃதாவது தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச் சொல் கொள்ளாமை.

மணக் :—புல்லறிவாண்மையாவது சிற்றறிவின் இயல்பும் அதனால் வருங்குற்றமும் கூறுதல். இதுவும் பேதைமையோடு ஒத்த இயல்பிற்றாதலான், அதன்பின் கூறப்பட்டது.

பரிதி – புல்லறிவாண்மையாவது புல்லறிவை ஆளுதல்; பேரறிவைப் பற்ற வேணும். எ-று.

—குறள். அதி. 85.

---

*மக்கட்குப் பகையாய் நின்று கெடுக்கும் இழிகுணங்களைப் பற்றிக் கூறும் பிரிவு.

321. அருளின அறமுரைக்கும் அனபுடையார் வாய்ச்சொல்
பொருளாகக் கொள்வர் புலவர்;—பொருளில்லா
ஏழை அதனை இகழ்ந்துரைக்கும் பாற்கூழை
மூழை சுவையுணரா தாங்கு.

**தருமர் :**—எனபது. [1]அருளின—தமது அருளினாலே; அறம உரைக்கும—அறநெறியை உரைககும, [2]அன்பு உடையார [3]வாயச் சொல்—அனபினை யுடையார சொல்லிய சொறகளை, புலவா—பெரியோரானவா; [4]பொருள ஆக கொளவா—உண்மை யாகக் கொள்ளுவா, பொருள இல்லா ஏழை—ஒரு பொரு ளினுங கூட்டததகாத அறிவிலலாதவன, அதனை—அச் சொற களை; இகழுநது உரைக்கும்—இகழுநது விடுவன; (அஃது என போல எனனில்) [5]பால கூழை—கூழ போலக் காயநத பாலை; மூழை—(அத துழாவிய) அகபபையானது; சுவை உணராது ஆங்கு—சுவை அறியாதது போல எனறவாறு

பாலின சுவை உணபாாககு அன்றித் தெரியாதது போல அறிவுடையார சொல அறிவுடையாாக்கே பொருந்துவது அனறிப புல்லிய அறிவினை யுடையார்க்குப பொருநதா(மையால, இகழுநது விடுவா எனறு அவா அறிவினமையை இகழுநது கூறியதாம.

**பதுமனார் :**—எனறது. அருளுடைமையான அற

[1]அருள்—எல்லா வுயிாகளிடததும் காட்டும் கருணை

[2]அன்பு—உறவின முறையாாிடததுக் காட்டும இரக்கம். 'அருள் எனனும் அனபீன குழவி' எனறபடி அனபினறி அருள பிறவாமையால் இரணடையும கூறினா.

[3]'வாய்' என வேணடா கூறினா அவர் வாய பயனில சொறகளைப் பழகி யறியாது எனறற்கு எனினுமாம

[4]பொருள் ஆகக் கொள்வர்—பயனுடையதாக மதிதது எற்பா.

[5]பாற் கூழ்—பாற்சோறு எனபாரு முளர்.

நெறியை உரைக்கும் ஆாவமுடையாா வாய்ச்சொற்களைப் பொரு ளாகவே (பொதிந்து) கொளவர் அறிவுடையாா; ஒரு பொரு ளாக மதிககப்படாத பேதை, அவா சொல்லிய அறததை இகழ்ந்து (ஏறறுக்) கொள்ளாா; பாற கூழினை [1]மூழை சுவை உணராததுபோல என்றவாறு.

அருளின்—அருளுடைமையாலே.

**விளக்க உரை :**—என்பது. அருளின அறம உரைக்கும் அனபுடையாா வாயச்சொல—அருளினாலே அறததினை உரைககும் அனபுடையாா வாயிற சொறகளை; பொருளாகக கொளவா புலவா —பொருள் போல மனததிலே பொதிந்து கொளளுவா அறிவுடை யாா, பொருள் அல்லா ஏழை அதனை இகழுந்து உரைக்கும— ஒரு பொருளினுங கூட்டததகாத ஏழையானவன் அதனை இகழுந்து விடுவன்; பாற கூழை மூழை சுவை உணராது ஆஙகு —கூழ போலவே காயநத பாலினை அது துழாவின பாலின சுவையறியாது அது போலும் எனறவாறு.

**கருத்து :**—புல்லறிவுடையாா அறிஞா கூறும பொருளுரையை மதிதது ஒழுக மாட்டாா.

## ஒப்புமைப் பகுதி :—

"புல்லவைபுள பொச்சாந்தும் சொல்லறக நலலவையுள
நனகு செலச சொலலு வாா".

—குறள். 719.

"கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்கதோா
பொலலாத தில்லை" ஒருவாககு".

—பழ. 64.

---

[1]மூழை, பாலின சுவைப பயன் அறியாமைபோல ஏழை அனபுடையாா சொறபயன அறியான எனக.

"கல்லா ஒருவனைக் காரணங் காட்டினும
இல்லைமற றென்றும் அறனுணர்தல்—நல்லாய்
நறுநெய நிறைபுழுககல் உய்ப்பினும மூழை
பெறுமோ சுவையுணருமு ஆறு".

—அறநெறிச்சாரம், 30.

"பொருளுணாவாா இலவழிப பாடடுரைத்தல் இன்னு".

—இன்னா. நாற்பது. 11.

(க).

322. அவ்வியம் இல்லார் அறத்தா(று) உரைக்குங்கால்
செவ்வியர் அல்லார் செவிகொடுத்துங் கேட்கலார்
கவ்விததோல் தின னுங †குணுங்குநாய் பாற்
செல்வி கொளல்தேற்ரு(து) ஆங்கு. சோற்றின்

**தருமர்** :—என்பது. [1]அவவியம் இல்லாா—மனக கோட்டம் இலலாதவா, அறதது ஆறு—அறததினது வழியை; உரைக்கும் கால்—சொலலுங் காலதது; (அவறறை) செவவியா அலலாா—மனக் கோட்டம உடையவர், செவி கொடுத்தும கேட்கலாா—செவி தாழததுக கேட்கவும மாட்டாா, (அஃது எனபோல எனின்) தோல கல்வி தின்னும்—தோலைக் கவவித் தினனுகிற, [2]குணுஙகு நாய—பறைசசேரியில நாயானது; பால சோறறின் [3]செவவி கொளல்—பாற சோறறினை நுகாநது அதன் சுவையைக் (கொளளுதலை) தேறருது ஆஙகு—அறியமாட்டாதது போல எனறவாறு.

---

†குணுஙகா நாய என்றும் பாடம.
குணுஙகு—"வெணணெய் அனைந்த குணுஙகும்". (திவ். பெ. 2–41).
[1]அவவியம—பொறாமை; பிற மனக குறறங்களையுங கொளக.
[2]செலவாது காயானல் சிறந்த பாற்சோறுணணலுங் கூடும்; சேரி நாய் இழிந்த தோலையே தினனும இயலபினது எனறுணாதத 'குணுஙகு நாய்' எனருர். 'குணுஙகர் நாய்' எனற பாடததிற்குச் சக்கிலியாது நாய எனப் பொருள் உரைக்க.
[3]செவவி—பாறசோற்றின் நன்மை; என்றது சுவையை.

மனக்கோட்டம் அறிவின்மையால் உண்டாகியது. அறிவுடையாரே அறத்தினது நெறியை உட்கொள்வார் அன்றிப் புல்லறிவாளர் அச்சொற்குச் செவிதாழ்க்கவுஞ் செய்யார் என அவரிழிவு கூறப்பட்டது.

**பதுமனார்:**—என்றது. மனக்கோட்டம் இல்லார், அறநெறியைத் தமக்குச் சொல்லுங்கால், செவ்விய மனத்தர் அல்லார் தாம் மற்றொரு பொருளைக் கொடுக்க வேண்டா வாயினும் செவி கொடுத்துக் கேட்கவும் மாட்டார். பொல்லா நாற்றத்தினையுடைய தோலைக் கவ்வித் தின்னும் கீழாய குணங்கள் நாய், பாற்சோற்றின் செவ்வியைக் கொள்ளமாட்டாது விட்டாற் போல என்றவாறு.

அவ்வியம் இல்லார—மனக் கோட்டமில்லாதார், செவி கொடுத்தும்—மற்றொரு பொருளைக் கொடுக்க மாட்டாராயினும் செவியைக் கொடுத்தும் குணங்கள்—செருப்புச் [1]சமைப்பார்.

**விளக்க உரை:**—என்பது. அவ்வியம் இல்லார் அறத்தாறு உரைக்குங்கால—மனக்கோட்ட மில்லாதவர் அறத்தினது நெறியைச் சொல்லுங் காலத்து; செவ்விய ரல்லார் செவி கொடுத்தும் கேட்கலார்—மனக்கோட்ட முடையார் செவி தாழ்த்துங் கேட்க மாட்டார், (அஃதென் போல வென்னில்) கவ்வித் தோல் தின்னும் குணங்கள் நாய்—தோலைக் கவ்வித் தின்னும் பறையர் நாயானது, பாற்சோற்றின் செவ்வி கொள்ளல் தேற்றாது ஆங்கு—பாற்சோற்றின் செவ்வியினை நுகர்ந்து தெளியமாட்டாது (அது போல) என்றவாறு.

**கருத்து:**—புல்லறிவுடையார் பெரியோர் கூறும் அறநெறிகளைக் கேட்க மாட்டார்.

(௨).

[1] சமைப்பார்—செய்வார்.

323. இமைக்கும் அளவில்தம் இனனுயிர்போம் †ஆற்றை
எனைததானும் தாஙகண் டிருந்தும்—தினைத்
நனறி புரிகல்லா நாணில் மடமாககள் [துணையும்
பொனறிலென? பொனருககால் என?

**தருமர்** :—எனபது. இமைககும அளவில—(கண்) இமைக குமளவிலுள; தம இன் [1]உயிரபோம ஆறறை—தமது இனிய உயிரபோகினற முறைமையை; எனைததானும—எவவழியாலும, தாம கண்டு இருநதும—தாம அறிநதிருநதும், தினைதுணையும— தினை அளவாகிலும; நனறி புரிகலலா—நனறிசெயயச செயய மாட்டாத, [2]நாண இல [3]மடமாககள—நாணமும அறிவும இலலாத மனிதர், பொனறில என?—சாகிலென்ன?, பொன ருககால என?—சாகாதிருககில் என்ன? எனறவாறு.

உயிரபோவது அறிநதும எனவே புலலிய அறிவு எனப தாயிறறு. அது விலஙகினதறிவு போலவதனறி ஞான அறிவலலாமையால அததனமையார இருபபதினும போவதினும பயனிலலை எனறு இழிவாககி அறிவுறுத்தியது

**பதுமனர்** :—எனறது இமைககும அளவில தமது இனியவுயிர போம நெறியை, எல்லாவகையாலுந தாம கணடிருநதும, தினையளவாயினும மறுமைககு உறுதியாய அறமதனைச் செயயாத நாணிலலாத [4]அறிவு கெடட மககள

---

†மார்க்கம எனறும் பாடம.

[1]உயிர போமாறு அறிதலாவது, மறறவர உயிர பிரிந்து போம வழிகளைக் கணடு, தமமுயிரும இவவாறே பிரியும எனறு உணாதல

[2]உலகிறகுப் பயனினறித் தம உயிரைக காக்கும செயலுக்கு உளளம 'ஒடுஙகாமையால' 'நாணில் மாக்கள' எனறார

[3]நாணினமையை அகறறும நலலறிவு இல்லாமையால 'மடமாககள' எனறார.

[4]பகுததறி விலலாமையால் 'மக்கள' எனனாது 'மாக்கள' எனறார.

செததால் எனன? வாழநதால என்ன? என்றவாறு.

மாாககம—நெறி. புரிகை—விருமபுகை.

**விளக்க உரை :**—எனபது. இமைககுமஅளவில் தம் இன்னுயிரபோம ஆறறை—இமைககுமளவில தமதினிய வுயிர போகிற முறைமையினை; எனைததானும தாம கண்டிருநதும—எல்லாவழியானுந தாஙகண்டிருநதும, தினைததுணையும நன்றி புரிகலலா நாணில மடமாககள—தினையளவும நனருகிய அறநெறி புரியமாடடாத நாணமிலலா அறிவிலலாத மனிததா, பொனறில என? பொனருககால என?—சாகில என? சாவாதிருநதால என? எனறவாறு.

**கருத்து :**—புல்லறிவினா தமது வாழவைப பயனுடையதாகக கழிககமாட்டாா.

## ஒப்புமைப் பகுதி :—

"தினைததுணை நனறி"

—திருககுறள். 11.4

ந))

324\. உளநாள் சிலவால் உயிர்ககேமம் இனருல்
பலாமனனுந தூற்றும் பழியால் பலருள்ளும்
கண்டாரோ டெல்லாம் நகாஅ(து) எவனொருவன
தண்டித் தனிப்பகை கோள்.

**தருமர் :**—எனபது. உளநாள்—தான் வாழும் நாளும; சில—சிறிது நாளே யுளளன; உயிாககு ஏமம் இன்று—உயிா போகாது(நிறகக்) காவல உண்டோ எனில் அதுவுமிலலை; பலா தூறறும் பழி—உலகில் பலரும் நிலைபெறச் சொல்லும் பழிபபுரை

ரும்; மன்னும்—உண்டாகும்; (இப்படியிருக்க) பலருள்ளும்—பலருடனும் வைத்து; கண்டாரோடு எல்லாம—கண்டாருடனெல்லாம்; நகாது—மகிழ்ச்சியுடையவனுய் இராமல்; ஒருவன்—; [1]தண்டி—ஒருகாரணமுமின்றி விரோதித்து, [2]தனி—தனியனுய்; பகைகோள—மாறுபட்டுத் திரிதல், எவன்?—யாதோ? என்றவாறு. [ஆல் அசை]

தான் ஒருவனுயிருந்தும் பலருடன் விரோதிப்பது புல்லறிவினு தன்மையாம்.

**பதுமனுர் :**—என்றது. தான் வாழும் நாட்கள் சிலவாம், தன் உயிர்க்கு [3]ஏமமும் இன்று; பல ருந் தூற்றும் பழிப்புரையாம். பலருள்ளும் வைத்துத் தான் தலைப்பட்டார் எல்லாருடனும் மகிழாது ஒருவன விலகித் தனியனுயப் பிறரோடு பகைகோடல் என்னை கொலலோ? என்றவாறு.

**விளக்க உரை :**—என்பது. உள்நாள் சிலவால—தான் வாழுநாள் சிறிதால்; உயிர்க்கு ஏமம் இன்றால்—உயிருக்கு ஓர் அரண் இல்லை, பலர் மன்னும் தூற்றும் பழியால்—பலரும் நிலை பெற்ற தூற்றத்தக்க பழிப்புரையாம், பலருள்ளும்—பலருள்ளும் வைத்து, கண்டாரோடு எல்லாம் நகாது—கண்டவர்களுடனெல்லாம் மகிழ்ச்சியுடையவனுயிராமல், எவன்? ஒருவன தண்டித் தனிப்பகை கோள—தான் ஒருவனுயிருந்து பலருடனும் ஒரு காரணமும் இன்றியிலே விரோதமே செய்து கொண்டு மாறுபட்டுத் திரிதல் யாதோ? என்றவாறு.

**கருத்து**—எல்லாருடனும் கலந்து மகிழாது விலகிப் பகைமை

---

[1] தண்டுதல—விலகுதல்.

[2] தனி என்ற பகுதியே வினையெச்சமாயிற்று; 'வரிப்புனைபந்து' என்புழிப் போல.

[3] ஏமம—பாதுகாப்பு

பாராட்டுவது புல்லறிவாகும்.

(ச).

325. எய்தி யிருந்த அவைமுன்னர்ச் சென்றெள்ளி
வைதான ஒருவன ஒருவனை—வைய
வயப்பட்டான் வாளா இருப்பானேல், வைதான
வியததக்கான வாழும் எனின.

**தருமர்:** —என்பது. [1]எயதி இருநத—(பலா) திரண்டிருநத, அவை முனனா செனறு—சபைககு நடுவே செனறு, ஒருவனை ஒருவன எளளி-ஒருவனை ஒருவன இகழநது; வைதான—வைதாகுக, [2]வைய வயபபட்டான—வசவுணடவன, [3]வாளா இருபபானேல—அதறகு ஒனறினையுஞ் சொலலாமற பொறுததிருநதாகுகில, வைதான—வைதவன; வாழும் எனின—(வசவுணடவன பொறுதத பின) உயிா வாழவாகுகில; [4]வியத தககான—அதிசபிககத தககவன ஆவான எனறவாறு.

தன புலலறிவினுலே பெரியோா தனமை அறியாமல இகழசசி செயயில அவா பொறுபபது அவாககு இயலபு, தம இயலபாற பொறுததிருககவே இவன வாழநாள குனறிவிடும என்பாா, அவா பொறுதத பின உயிா வாழின அதிசயிககத தககான என வியபபது போல [5]ஏதங கூறியது.

[1](ஒருவன) கலநதிருநத என்று உரைபபினும் அமையும்.

[2]வைய வயபபட்டான—வசுதறகு உடனபட்டவன எனக. இனி வசுகையில வசப்பட்டவன என றுரைததலும ஒனறு. இபபொருளுக்கு வயபபட்டான என்பதனை வையபபட்டான என்பதன போலியாகக் கொளக

[3]வாளா இருததல அவன அறியாமையையும, தன வினை வசததையும எண்ணி எனக

[4]வியததக்கான என்றது எளியவன உயிா வாழதல் அரிது என்றபடி.

[5]ஏதம—தீஙகு.

**பதுமனார்:**—என்றது. பலர் திரண்டிருந்த சபைக்கு நடுவே சென்று ஒருவனை இகழ்ந்து வைதான் ஒருவன்; அவன் வைவதற்கு அவன் உடன்பட்டு எதிராமல் இருந்தானாகில், வைதான அவன பொறுத்தபின் உயிர வாழ்வானாகில் அதிசயிக்கத் தக்கவன் எனறவாறு.

**விளக்க உரை:**—என்பது. எய்தி யிருந்த அவை முன்னாச் சென்று—திரண்டிருந்த அவைக்கு நடுவே சென்று, எள்ளி வைதான் ஒருவன் ஒருவனை—ஒருவனை இகழ்ந்து வைதான் ஒருவன்; வைய வயப்பட்டான வாளா இருப்பானேல—அவன வசவை உண்டவன அதற்கு ஒன்றினையுஞ் சொல்லாமற பொறுத திருப்பானாகில; வைதான் வியத்தக்கான வாழும எனின்—வைதவன அவன பொறுத்தபினனும் உயிர வாழ்வானாகில அதிசயிக்கத் தக்கான் ஆவன் என்றவாறு.

**கருத்து:**—பெரியோரை இகழ்ந்து பேசி வாழ்நாள் குன்றப பெறுதல் புல்லறிவினார் தன்மையாம.

(ரு).

326. மூப்புமேல் வாராமை முனனே அறவினையை
ஊக்கி அதனகண் முயலாதான—நூக்கிப்
புறத்திரு போகெனனும் இன்னாச்சொல் இல்லில்
தொழுத்தையாற் †காணப் படும்.

**தருமர்:**—எனபது. மூப்பு—மூப்பினை; மேல் வாராமை முன்னே—தான் மேற்கொள்ளா முன்னே; அறவினையை—அறத்தினது நெறியை; ஊக்கி—மேற்கொண்டு; அதனகண் முயலாதான—அதனை முயன்று செய்யாதவன; இல்லில்—தன வீட்டில; நூக்கி—(உள்ளினின்று புறம்பாகத்)தள்ளி; புறத்து இரு—வெளிப் புறத்திலே இரு; போகு—(இவ்விடம்விட்டுப) போ;

---

†கூறப்படும் என்றும் பாடம்.

எனினும்—என்று சொல்லும், இன்னுச் சொல்—பொல்லாச் சொல்லை; [1]தொழுத்தையால—வெள்ளாட்டியாலே; காணப படும்—கேட்கப படுவான என்றவாறு.

மூபபு வநதால் யாவராலும இகழப் படுவான ஆதலால, இளமைப பருவததிலே துறநது மறுமைககு உறுதியினைக காணக கடவன எனபதாம. நலலறிவுடையாாக கலலது புலலறி வாளாககு இவை தோனமுமையால், தொழுததையாற காணப படுவன என வறபுறுததியது.

**பதுமனார்**:—எனறது. மூபபு வருவதன முனனமே அறததினது நெறியை மேறகொணடு செயயானுகில, (தன மனையில) உளளினினறு தளளிப புறமபே இரு, போ, எனறு, கையைப பிடிததுவிடடு வெளளாட்டி இகழநதுவிடத தககதாய இருககும எனறவாறு.

**விளக்க உரை**:—எனபது. மூபபுமேல் வாராமை முனனே—மூப்புமேல வருவதறகு முன்னம, அறவினையை ஊககி அதனகண முயலாதான—அதறகு முனனே அறததினது நெறியை மேறகொணடு அதனை முயனறு செயயாதவன; நூககிப புறதது இருபோகெனனும இனனுச சொல—தனனைத தளளி உணணினறும புறமபே போயிரு எனகிற பொலலாத சொலலை; இலலுள தொழுததையால கூறபபடும—தன வீட்டில வெளளாட்டியாற சொலலத தகுவன எனறவாறு.

மூபபு வநதால பினபு யாவராலும இகழபபடுவாா ஆதலின, இளமைப பருவததிலே துறநது மறுமைககு உறுதியை யுடையராக வேணடும எனபதாம.

**கருத்து**:—புலலறிவாளா இளமையிலேயே அறஞ செய்ய அறியாராயப பின ஏவலாளராலும இகழபபடுவா.

---

[1]தொழுததை—தொழுமபன எனபதன பெணபாற் சொல.

**ஒப்புமைப் பகுதி :-**

"திறைமன்ன ருய்ப்பத் திருநிறபச் செங்கோ னடப்பக்
குறைவின்றிக் கொற்ற முயரத் தெவவாதோ பணிய
உறைகின்ற காலத தறங்கேட் டுருமுறற பாமபின்
அறிவன னடிககீழ அரசனுசித துறநத வாறும்".

—சீவக பதி 27

(சு)

327\. தாமேயும் இன்புறுர் தக்கார்கரும் *நன்காற்றுர்
ஏமஞ்சார் நனனெறியுஞ் சோகலார்—தாமயஙகி
ஆககததுள் தூங்கி அவத்தமே வாழ்நாளைப்
போககுவார் புல்லறிவி னுர்.

**தருமர்** :—எனபது. புல அறிவினா—புல்லிய அறிவினை யுடையாா; தாமேயும்—தாமாகிலும, இனபு உறுா—(நலல நுகாசசிகளை நுகாநது) இனிமை யுறறிராா, [1]தககாாகரும—தகுதியுடையாாக்கும்; நன்கு ஆறறுா—நனமைகளைச செயயாா, ஏமம சாா—தமககு அரணுகிய, நலநெறியும—அறநெறியையும; [2]சோகலாா—அறிநது செய்யமாட்டாா; தாம் மயஙகி—தமக்கு மறுமைககு உறுதியானவறறை மறநது, [3]ஆககததுள தூஙகி—தமது ஆககததிலே தஙகி, அவத்தமே—பயனினறியே; வாழ நாளை போககுவாா—வாழநாளைக கழிபபா எனறவாறு.

நல்லறிவுடையாாக் கலலது புலலறி வாளாக்கு இநநெறி தெரியாமையால வாழநாளை வீணே கழிபபா என வறபுறுத தியது.

---

*நன்றுறறுா எனறும் பாடம,

[1]'தக்காாககும்' எனறுா தானம பெறுதற்கு உரியாா, அவராகலின.

[2]சோகலாா—அடையமாட்டாா எனினுமாம்.

[3]ஆக்கததுள் தூஙகுதலாவது—தமது செல்வததில திளைதது மகிழ்ந் திருததல.

**பதுமனார்:**—என்றது. தாமும் நல்ல நுகர்ச்சியினை நுகர்ந்து இனிமையுடன் இரார்; தகுதியுடையவர்க்கும் நன்மை யான தானஞ் செய்யார்; தமக்கு அரணாக அமைந்த துறவுநெறி யிலும் நில்லார்; தாம் அறிவு கெட்டுச் செல்வம்பெற வேண்டி ஒழுகிப பயனின்றியே வாணாளைக் கழிப்பர் புல்லறிவினை யுடை யார் என்றவாறு.

**விளக்க உரை:**—என்பது. தாமேயும இனபுறா — தாமோ எனனில் நல்ல நுகாச்சிகளை நுகர்நது இனிமையுறறிரார்; தககாாககு நன்றாறறா—தகுதியுடையாாககு நனமைகளைச செயயாா, ஏமம் சாா நன்னெறியும சோகலாா—தமககு அரணாகி அமைநத நலல அறததினது நெறிகளையும செயயமாடடாா; தாம மயஙகி—தாம மறுமைக்கு உறுதியை மறநது, ஆககததுள தூஙகி அவத்தமே வாழநாளைப போககுவாா புலலறிவினாா—ஆககத திலே தஙகிப பயனினறியே வாழநாளைக கழிபபாா புலலிய அறிவினை யுடையாா எனறவாறு.

ஆககததுள தூஙகுதல—இறவாமல் இருபபோம் என்று செல்வத்தில மகிழநதிருத்தல்.

**கருத்து:**—புலலறிவாளர் செலவததைத தமககும பிறாக்கும பயனபடவொட்டாமற செயது வீண காலங கழிபபா

(எ).

328. சிறுகாலை யேதமக்குச் செல்வுழி வல்சி
இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்-இறுகிறுகிப்
பினனறிவாம் எனறிருக்கும் பேதையார்
பொனனும் புளிவிளஙகாய் ஆம். [கைகாட்டும்

**தருமர்:**—என்பது. சிறுகாலையே—இளமைப பருவத திலே தொடஙகி, [1]தமககு செலவுழி வலசி—தாம் இறநது

[1] தமசெலவுழிக்கு வலசிஎன உருபு பிரித்துக் கூட்டுக

செல்லுமிடத்துக்கு அறமாகிய உணவினை; இறுக இறுக—சிக்கென; [1]தோள கோப்பு கொள்ளார—கட்டுச் சோறாகக் கட்டிக் கொளளாராய; இறுக இறுகி—பொருளைக் கைவிடாது இறுக்கி; பின அறிவாம் என்று இருக்கும்—அறத்தைப் பின்பே செய்வோம் என்று சேமஞ் செய்திருக்கும்; பேதையார—அறிவில்லாதவர்; கைகாட்டும் பொனனும—(தான இறககுங காலத்து நா வெழுநது பேச வொண்ணுமையால், தாம் வைதத பொன்னை [அறஞ்செயக எனத]தன் உரிமையார அறியக்) கைக்குறிப்பாகக் காட்டும் பொழுது அப்பொன்னும்; புளி விளஙகாய் ஆம—([2]அதன் நிலை அறிந்தாள்) புளித்த விளஙகாய் கேட்கிறா எனறு உரிமையாாககு உரைததவாருமெ என்றவாறு.

இதறகு உதாரணச் செயயுள் :—

*"கையாற பொதிததுணையே காடடக் கயறகண்ணுள அதனைக் காட்டாள
ஐயா விளாம்பழமே என்கினறீா ஆஙகதறகுப் பருவ மன்றென்
செய்கோவெனச் சிறநதாள்போல சிறவாக் கட்டுரையால் குறிததல எல்லாம
பொயயே பொருளுரையா முனனே கொடுததுண்டல புரிமின கண்டீா".

**பதுமனுர்:**—என்றது. முறகாலத்தே தொடங்கித் தமக்குச் செல்லும மறுபிறப்பிறகு வேண்டும் அறம எனனும உணவினை,

---

[1]வழிப் பயணததிற்கு வேணடும் பொதிசோறு தோளிற் கோக்கப் படுவதால 'தோட் கோப்பு' எனறார

[2]மனைவியாவாள்; பேதை, 'பொனனை அறஞ் செய்க' எனறு காட்டிய கைக் குறிப்பினை அறிநத மனைவி, தான அறஞ் செய்தற்கு ஒருப்படாமை யால 'புளிவிளஙகாய உண்பதற்கு இது பருவமன்று' என்று கூறி மறுதத வாரும

*சீவக சிநதாமணி. 6 : 142 ஆம செய்யுள்.

யாபபுறத் தோட்கோப்பாகக் கொள்ளாது மிகப்[1] பறறுள்ளம் செய்து, மறுமைக் குதவும உணவினைச் சாம்பொழுது செய வோம் என்று கருதி இருக்கும் பேதையார், தாம சாம காலததுப் பேசமாட்டாமையாற பிறாக்குக் கொடுத்தறகுத் தருக என்று காட்டும் பொற் கட்டியும், சுறறததார சொல்லும் வகையால புளி விளங்காயாம் எனறவாறு.

சிறுகாலை—முறகாலம. வல்சி—பொதிசோறு. இறுக இறுகி—மிகப பறறுளளம செயது. பினனறிவாம் எனறிருக்கும —அறததைப பின் அறிநது செயவேம் எனறிருககும. பேதை —அறிவில்லாதவன். பேசமாட்டாத காலத தறஞெசயதறகுக் கைகாய எனபா.

**விளக்க உரை :**—எனபது. சிறு காலையே தமக்குச் செலவுழி வலசி—முறகாலததிலே தொடஙகித தாம் இறநது செல்லுமிடததுககு அறமாகிய உணவினை; இறுகிறுகத தோட கோபபுக கொளளாா—சிககெனவே தோட்கோபபாகிய அற றுணவினைக கொணடு போகினறிலா; இறுக இறுகிப பின அறிவாம் என்றிருககும் பேதையாா—பொருளைக கைவிட ாமல் இறுககிப் பினபே அறததைச செயகிறேம எனறிருககும அறியாதவா; கைகாட்டும் பொன்னும புளிவிளஙகாயாம—தாம இறக்குங காலதது நாவிழுநது பேச வொண்ணாமையால அவா கைகாட்டின பொன்னும புளிதத விளஙகாயாம எனறவாறு.

**கருத்து :**—தேடிய செலவததால் இளமையிலேயே அறஞ செய்யாது பின வருநதுவது புலலறிவாளா இயலபாகும.

## ஒப்புமைப் பகுதி :—

"மாயவதன முனனே வகைப்பட்ட நல்வினையை
ஆயவினறிச் செயயாதார் பின்னை வழிநினைந்து

---

[1] பறறுள்ளஞ் செய்தலாவது—பொருள மீதுள்ள பற்றுதலால் அதனைச் செலவிடாது செட்டுச செயதல.

*நோய்காண் பொழுதின் அறஞ்செயவாக காணமை*
*நாயகாணிற கறகாணு வாறு".*

—பழ. 361.

(அ).

329. வெறுமை யிடத்தும் *விழுப்பிணிக் கண்ணும்
‡வறுமை மனத்தாரே ஆகி—மறுமையை
ஐநதை அனைததானும் ஆற்றிய காலததும்
சிநதியார் சிற்றறிவி னார்.

**தருமர் :**—எனபது. சிறு அறிவினா—புல்லிய அறிவுடையாா, [1]வெறுமை இடததும—தாம வறுமையுறற விடததும; [2]விழு பிணிககணணும—விழுமிதான பிணியுறற காலததும; வறுமை மனததாரே ஆகி—வறுமையுறற மனததராய; மறுமையை—மறுமைககு உறுதியான காரியஙகளை, ஆறறிய காலததும—தாம செல்வ முடையராய் முயலுங காலததிலும்; [3]ஐநதை அனைததானும—ஒரு சிறு வெண்கடுகு அளவாயினும; சிநதியாா—நினையாா எனறவாறு.

அறிவுடையாா செல்வ மிலலாது வறுமையுறற காலததும் அறததோடு இயைநது ஒழுகுவா, அறிவிலலாத புலலறிவாளா தாம் செல்வமுடைய காலததும, அதனைச சிறு கடுகளவாயினும நினைக்கவுஞ செயயாா என்று அவா அறிவினமையாகிய

---

*'விழுப் பிணிப் போழதும்' என்றும பாடம்

‡'மறுமை மனததரே ஆகி' எனறும் பாடம், இப்பாடததிற்கு மறுமைக்கு உரிய அறநினைவினராய எனப் பொருளகொள்க.

[1]வெறுமையாவது; நுகாசசிக்குரிய பொருள எதுவும் இலலாமை; ஆவது வறுமை

[2]விழுப்பிணியாவது மிக்க நோய; துன்பந்தரும் நோய் எனினுமாம்.

[3]ஐநதை—வெணசிறு கடுகு; இது சிறுமைக்கு எடுததுக்காட்டப்படும் உவமை.

சொல்லான் முறைசெயதான் சோழன் குலவிச்சை
கல்லாமற் பாகம் படும்".

—பழமொழி. 21.

குறிப்பு :—

வேழக்கோல் மேற்புறத்தே பருத்திருப்பினும் உட்டுளை நீஙகாதிருத்தல்போல அறிவில்லாதார் வயதில மூததிருப்பினும் நெஞ்சினுள்ளே குற்றம் நீங்கப்பெருா. எனக.

(க).

352. செழும்பெரும் பொய்கையுள் வாழினும் என்றும்
†வழும்பறுக் கல்லாதாந் தேரை;—வழும்பில்சீர்
நூல்கற்றக் கண்ணும் நுணுக்கமொன் றில்லாதார்
தேர்கிற்கும் பெற்றி அரிது.

**தருமர்** :—எனபது. செழும்பெரும் பொயகையுள்—வளமபொருநதிய பெரிய பொயகையில்; எனறும வாழினும்—விடாமல் எபபொழுதும் வாழினும்; தேரை—தேரையானது; வழும்பு அறுக்கல்லாது—தனக்குளள [1]வழும்பை அறுகக மாட்டாது; (அதுபோல) வழும்பில்சீ—குறறமில்லாத சீர்மை யுடைய; நூல கற்றக் கணணும—நூல்களைக கற்ருராயினுமை; நுணுக்கம ஒனறு இல்லாதாா—(அநநூல் சொன்ன முறைமை யிலே ஒழுகுவதறகு) நுண்ணிய அறிவொனறும் இல்லாதவரை; தோகிற்கும பெறறி அரிது—(இவா குடியிலேயும் பிறந்து நூலினையுங கறறவா என்று) விசாரிககும் முறைமை ஒன்றுமில்லை என்றவாறு.

குடி குலததுப் பிறநது கல்வியுடையராயினும் கயவர்க்கு அறிவுண்டாகாது எனபதாம்.

---

†'வழுமபறுக்க கில்லாவாம்' என்றும் பாடம்.

[1] வழும்பு—வழுவழுபபான அழுக்கு.

**பதுமனார் :**—[என்றது. வளவிய பொய்கையுள் வாழினும் என்றும் தம்மேலுள்ள வழும்பை நீக்கமாட்டாவாந் தேரைகள்; அதுபோலக் குற்றமில்லாத சீர்மையுடைய நூலைக் கற்றாலும் நுண்ணிய அறிவில்லாதார் அந்நூல்கள் சொன்ன பொருள்களை ஆராய வல்லராந் தன்மை அரிது என்றவாறு.

செழும் பெரும் பொயகை—அழகிய நீரையுடைய பொய்கை. வழும்பு—தன மேல் உள்ள வழும்பு. தேர்கிற்கும—ஆராயும.]

**விளக்க உரை :**—என்றது. செழும் பெரும் பொய்கையுள் வாழினும்—வளவிய பெரிய பொயகையிலே விடாமல் எபபொழுதும வாழினும்; வறுமபறுகக கலலாதாம் தேரை—தனக்குள்ளதாகிய வழும்பறுககமாட்டாது தேரை; வழுமபில் சீா-குறறமறற சீாமையுடைய; நூல கறறக்கண்ணும் நுணுக்கம் ஒனறு இல்லாதாா—நூலினைக் கறறாராயினும் அநத நூல் சொனன முறைமையிலே ஒழுகததகக நுணணிமை ஒரு சறறுமறியாதாா; தோகிறகும் பெறறி அரிது—குடியிலே பிறநது நூலினையுங கறறவரெனறு விசாரிக்கததக்க முறைமையானது ஒன்றுமில்லை எனறவாறு.

**கருத்து :**—நுண்ணறிவிலலாதார் மனம் எவவளவு நூல்களைக் கறறாலும பககுவமடையாது

## மேற்கோள் பகுதி :—

நச் :—"விழுநதோா மாயககும குண்டுகயத்(து) அருகா வழுமபுகண புதைதத நுண்ணீா பாசி"-விழுநதோரை மறைககும ஆழததையுடைய குளஙகளுககு அருகாக இடைமறைதறகுக் காரணமாகிய நுண்ணிய நீாமையையுடைய பாசியினது குறறம; "வழுமபறுகக கிலலாவாந தேரை"

—'வழுமபிலசீா' என்றார் பிறரும், எனபா.
—மலைபடுகடாம. 220-21.

## ஒப்புமைப் பகுதி :—

"இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்ற(து)
உணர விரித்துரையா தார்".

—குறள். 650.

"நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலும் நூற்கேலா
வெண்மொழி வேண்டினும் செல்லாமை—நன்மொழியைச்
சிற்றின மல்லார்கண் சொலலும் இம்மூன்றும்
கற்றறிந்தார் பூண்ட கடன்".

—திரி. 32.

"எத்துணைய வாயினும் கல்வி இடமறிந்து
உய்த்துணர் வில்லெனின் என்னாகும்—உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை இன்றெனின் என்னாம் அஃதுண்டேல்
பொன்மலர் நாற்ற முடைத்து".

—நீதிநெறி. 5.

"இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினும் என்றும்
அடங்காதார் என்றும் அடங்கார்—தடங்கண்ணாய்
உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்திடினும்
கைப்பறாப் பேய்ச்சுரையின் காய்".

—நாலடி. 117.

(உ).

353. கணமலை நன்னாட! கண்ணின்(று) ஒருவர்
குணமேயுங் கூறற் கரிதால்—குணனழுங்கக்
குற்றம் உழைநின்று கூறுஞ் சிறியவர்கட்கு
எற்றால் இயன்றதோ நா.

**தருமர்** :—என்பது. கணம் மலை நல் நாட!—நெருங்கிய மலைகளால் பொலிவு பெற்ற நல்ல நாடனே!; ஒருவர் கண் நின்று—ஒருவர் முன்னே நின்று; குணமேயும் கூறற்கு அரிதால்—அவர் குணங்களையுஞ் சொல்லுதற் கரியதாயிருக்கும்; (அவ்வாறிருக்க) குணன் அழுங்க—குணங் கெடும்படி; குற்றம்—

குறறமான வார்த்தையை; உழைநின்று—அவர் முன்பே நின்று; கூறும்—கண்ணோட்டமறச் சொல்லும்; சிறியவர்கட்கு—கயவர்க்கு; நா—நாவானது; எறறுல் இயன்றதோ—இரும்பி னுலோ கல்லினுலோ யாதினுற பண்ணப்பட்டதோ? என்ற வாறு. [ஆல்—அசை]

கயவரது குணததீமையை நாவிற கேற்றி அவரை இழி வாகக் கூறியது. குணமேயுங் கூறற கரிதால் எனவே ஒரு வருடைய நறகுணததையும அவா முன நினறு கூறும் பொழுது அறிவுடையோாககு அது மனம பொருது அப்படி இருகக முன் நினறு அவரைக குறறபபடச் சொல்வது எபபடியோ எனறு உயாநதோா இரககமுறறு உரைத்தது.

**பதுமனுர்** :—என்றது. கணமலே நனுடனே! எதிர் நின்று ஒருவா குணததையுங கூறுதறகு அரிதாகும; (அவவாறி ருகக) அவாது குணஙகெடக் குறறததைத் எதிாநின்று சொல்லுங் கயவாக்கு எறருற் செயயப்பட்டதோ நா என்றவாறு.

கண மலே—திரண்ட மலே. அழுங்க—கெட. எறருல்—எதனுல. இயனறது—செயயப்பட்டது.

**விளக்க உரை** :—என்றது. கணமலே நன்னுட!—திரண்ட மலேயையுடைய நலல நாடனே!; கண நின்று ஒருவா குணமேயும கூறறகு அரிதால—முனனே நினறு ஒருவரது குணத் தினையுஞ சொலலுதற கரிதாயிருககும, (அமைநதோாககு) குணன அழுஙக—குணம் ஒழிய, குறறம உழை நின்று கூறும்—குறற மான வார்த்தை அவரிடததிலே(பட) அவா முன்பே நின்று கணணோட்டமறச சொலலும; சிறியவாகட்கு—கயவாக்கு; எறருல் இயன்றதோ நா—நாவானது கலலினுலோ இருமபி னுலோ யாதினுற பண்ணப்பட்டது எனறவாறு.

**கருத்து** :—ஒருவரது குறறததையே ஆராயநது அதனே நேரில் கூறுவது கயவரது இயல்பு.

## மேற்கோள் பகுதி :—

சேனா '—அழுங்கல் அரவமேயன்றி இரக்கமும் கேடும் ஆகிய குறிப்பு உணர்த்தும் என்பதற்கு 'குணனழுங்கக் குற்றமுழை நின்று கூறும் சிறியவர்கட்கு' என்ற பகுதியை எடுத்துக் காட்டுவர்.

—தொல். சொல். சூ. 350.

தெய்வச் '—அழுங்கல் என்னும் சொல் இரக்கம் என்பதன் பொருண்மையும் கேடு என்பதன் பொருண்மையும் படும் என்பர் கேட்டிற்கு, "குணனழுங்கக் குற்றமுழை நின்று கூறும்" என்றவடியை மேற்கோளாகக் காட்டுவர்.

—தொல். சொல். சூ. 345.

## ஒப்புமைப் பகுதி :—

"கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்".

—குறள். 184.

"காவாதவள் கண்ணறச் சொல்லிய வெஞ்சொல்
ஏவோ? அமிர்தோ?".

—சீவக சிந்தா. 1069

## குறிப்பு :—

'கண்ணின்று' என்பதை, கண் நின்று என்றே பிரித்து தருமர், பதுமனார், விளக்க வுரைகாரர் மூவரும் பொருள் கூறினர். இனி கண் இன்று எனப் பிரித்துக் கண் முன் இன்றிப் புறத்தில் எனப் பொருள் கூறுவாரும் உளர்.

"கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க— முன்னின்று பின்னோக்காச் சொல்" என்ற குறளின்படி, ஒருவன் எதிரே நின்று இரக்கமறக் குற்றத்தைக் கூறினும், புறத்தே குற்றத்தைக் கூறிப் பழிக்கக் கூடாது என்ற கருத்துக்கு இது மாறுபாடாகாதோ எனின் ஆகாது; மேலோராயின் கண்டேன்

குற்றத்தைக் கூறித் திருத்த முயல்வார்; கீழோராயின் இல்லாத குற்றத்தை ஏற்றிப் பழிக்க முயல்வர் ஆதலின் குற்றம் உழை நின்று கூறல் கூடாது என்றூர் என்க.

(௩).

354. கோடேந்து அகலல்குற் பெண்டிர்தம் பெண்ணீர்மை
சேடியா போலச் செயல்தேற்றூர்;—கூடிப்
புதுப்பெருக்கம் போலத்தம் பெண்ணீர்மை காட்டி
மதித்திறப்பார் மற்றை யவர்.

**தருமர்:**—என்பது. கோடு ஏந்து அகல் அல்குல [1]பெண்டிர—இருமருங்கும் கரைபோன்று உயர்ந்து அகன்ற அல்குலையுடைய மகளிர்; தம் பெண் நீர்மை—தமது பெண்மை யின் அழகை; சேடியர் போல—(ஏவல் செய்யும்) சேடியரைப் போல, செயல் தேற்றூர்—புனைதல் செய்ய அறியார்; [2]மற்றை யவர்—மற்றந்த ஒழுக்கமில்லாதவர்; கூடி [3]புதுப் பெருக்கம் போல—பலவிடத்து நீருங் கூடிப் பெருகுமாறு போல; தம் பெண் நீர்மை காட்டி—தமது பெண்மையினது அழகைப் பூமாலை முதலியவற்றால் ஒப்பித்துப் பலர்க்கும் (அறிவித்து) மதித்து இறப்பார்—தம்மை மதித்துக் கொண்டு செல்லா நிற்பர் என்றவாறு.

கற்புடைய மகளிர் இல்லறத்தினை வழுவாமற் செய்து தம் கொழுநன் மனமுவக்க ஒழுகில், உலகத்தார் தம்மைக் கொண்டாட இருக்கும் இயல்பே தமக்கு அழகாகக் கொள்வ தன்றிப் புனைதல் செய்து அழகாயிருக்க வேண்டும் எனனும் விருப்பமுறூர். அந்த ஒழுக்க மில்லா மகளிர் தமக்குச் செல்வம்

---

[1] பெண்டிர்—குலமகளிர்.

[2] மற்றையவர்—விலைமகளிர்.

[3] புதுப்பெருக்கம்—புதிய நீர் வெள்ளம்.

இலராயினும் உள்ள அளவு கொண்டு தம்மை ஒப்பித்து அழகு செய்துகொண்டு தாம் தூய்மை யுடையரென்று பிறர்க்கு அறிவித்துக் கொழுநன் மனத்துக்குப் பொருந்தாது ஒழுகுவார்; அவரைப் போலக் கயவரும் தமக்கு ஒன்றுமில்லை யாயினும் பெறற அளவிலே தானே அழகு செயதுகொண்டு அதனையே தமக்கு மிகுதியான செல்வமாக மதிததுப் பெரியோரை அவமதிப்புப பணணியுந தமககொரு துன்ப முறறுழிப புலையரிற கடையான குறையுடையராகவும் செல்லா நிறபா.

ஆதலால், அமைநதோரது தனமையைக் கறபுடைய மகளிர் ஒழுக்கமென ஆககி, கயவா தன்மையைக கறபில்லா தொழுகும் மகளிா தன்மையாக இழிவாககிக கூறியதாம்.

**பதுமனூர்** :—என்றது. இருமருங்கும் உயர்நது அகன்ற அல்குலையுடைய மகளிா தம பெண்ணீரமையைத் தம்மைப் பாராட்டுஞ் சேடியரைப் போலத தாம் தமமைப் புனைதல் செய்யார்; புதுப்புனல் வெள்ளம் போலத தம் பெண்ணீர்மை வெளிபபடுததுத தம்மை வியந்து நீஙகுவா மறறைப் பரத்தையர் என்றவாறு.

**விளக்க உரை** :—என்றது. கோடு ஏநது அகல் அல்குல் பெண்டிா—இருமருங்குங கோடு கொண்டு உயர்ந்தகன்ற அல்குலையுடைய மகளிர்; தம் பெண்நீர்மை சேடியர்போலச் செயல் தேறறா—தம் பெண்மையினது அழகை ஏவற் சிலதியரைப் போலப புனைதல் செய்கையினைத் தெளியார்; கூடிப் புதுப் பெருககம போல—பல விடததின நீருங் கூடிய அப்பொழுது பெருகிப் பின வடியுமாறு போல; தம் பெண் நீரமை காட்டித்—தம் பெண்மையினது அழகைப் பூமாலை முதலியவற்றால் மிகவும் ஒப்பிதது அதனைப் பலர்க்கும் அறிவித்து; மதித்து இறபபர் மறறையவா—இப்படித தமமை மதிததுக் கொண்டு விடுவா மற்றந்த ஒழுக்கமில்லாதவா என்றவாறு.

இது கயமையானது எப்படி என்னில், கற்புடை மகளிர் இல்லறத்தினை வழுவாமலும், தம்முடைய கணவன் மனத்துக்கு ஒவவ ஒழுகுதலும் உலகததார் தம்மைக் கொண்டாட இருக்கும் இயல்புமே தமக்கு அழகாகவும் (கொண்டு) பூச, முடிக்கப், பூண, உடுக்க, எனகிற இவைவயிறறில் விருப்பம் வையாமல் தமக்கு ஏவல் செயகிறவாகளுடன் வேறறுமையற அழுக்கடைந திருப்பா; எததனை செல்வம் உண்டாகிலும் அநதக் குணமில்லாத மகளிா செல்வமிலராயினும் தம்மை அழகு செய்து கொண்டு தாம தூயமையுடையா என்னுமதனைப பிறாக்கு அறிவிததுத் தமமுடைய கணவன் மனததுககு வாராமல் ஒழுகும் மகளிரைப் போலக கயவரும் தமக்கு ஒனறுமிலலை யாயினும பெறற பெறற அளவுகளிலே தமமை அழகு செய்து பெரியோரை அவமதிப்புப பண்ணியும், தமக்கொரு துன்பம வந்த காலத்துப் பறையிற கடையான குறை(யுடையராகவும் செலலா நிறபர் என்றவாறு)

**கருத்து:**—கயவா வீண ஆரவாரததிற கருததுடையராயிருப்பர்.

## ஒப்புமைப் பகுதி :—

"புதுபபுனலும்
மாரி யறவே அறுமே அவரன்பும்
வாரி யறவே அறும்".

—நாலடி. 370.

(௪).

355. தளிர்மேலே நிற்பினும் தட்டாமற் செல்லா
உளிநீரா மாதோ கயவர்;—அளிநீரார்க(கு)
என்றுனுஞ் செய்யார் எனைததானுஞ் செய்பவே
இன்றுஙகு செய்வாாப் பெறின்.

**தருமர்:**—என்பது. தளிரமேலே நிற்பினும்—(இளந) தளிரின மேலே நினறுலும; தடடாமல—[1]கொடடுப பிடி

[1]கொட்டுபபிடி—கொடடாபபுளி அலைதாவஞ மரததாலான சுததியல்.

கொண்டதனைப் புடைத்தால் அல்லது; செல்லா—தானுக அநதத் தளிரைத துளையாத; உளிநீரர் கயவர்- உளி போல் கயவர்; (ஏனெனில்) [1]அளி நீரார்கரு—அளிககும நீர்மை யுடையவர்கரு; என்றுனும் செயயாா—அவா ஏவல் சிறிதாயினுஞ் செய்யார்; இன்றுஙகு செய்வாா பெறின்—தமக்கு இன்றுதவற்றைச் செயவாரைப (பெறுல்) எனைததானும செய்பவே—அவர் ஏவிய தொழில இன்னது என்றுமல யாது தொழிலாயினுஞ் செயவர் எனறவாறு. (மாதோ—அசை)

கயவா நன்றி அறியாா என்பது தோன்றப் புடைத்தால் அன்றிச் செய்யாத உளியை உவமமாககி அவரிழிவு கூறியவாறு.

**பருமனுர் :**—என்றது. தளிாமேலே நின்றதாயினும் ஒனருல தட்டாவிடின் உறச் செலலாத கல்லுளியின தன்மை போல்வா கயவா; அளிககும நீாமை யுடையாாக்கு யாதானும ஒரு பொருளைச செயயாா; தனனை இன்றுங்கு செயவாரைப் பெறின் அவாகரு எலலாம செயவா எனறவாறு.

இன்றுஙகு – [2]நெருக்கு

**விளக்க உரை :**—என்பது. தளிாமேலே நிற்பினும் தட்டாமற செலலா—தளிரின் மேலே நினற தாகினும் ஒரு கொட்டாபபினைக கொண்டு தனனைப புடைத்தாலல்லது தானுக் அததளிரைத துளையாத; உளி நீரா கயவா—உளி போல்வர் கயவரும்; அளிநீராாக்கு என்றுனும் செய்யார்—தம்மை அளிக்கததககு நீாமையுடையவாக்கு யாதோா ஏவல் தொழிலையுஞ் செயயாா; எனறுனும் செயபவே இன்றுங்கு செயவார்ப் பெறின் —தம்மை அடர்தது இன்றுதவறறைச் செயபவரைப் பெறின; அவர்க்கு இன்ன தொழில் என்றுமல் எல்லாத் தொழிலும செய்வா எனறவாறு.

---

[1] அளிநீரா—கருணைததன்மை யுடையவர்.

[2] நெருக்கு—துனபம்.

**கருத்து** :—கயவர் எளியோர்க்கு உதவாது தம்மை வருத்து வார்க்கே உதவுவர்.

## ஒப்புமைப் பகுதி :—

"சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்".

—குறள். 1078.

"ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு".

—குறள். 1077

"விட்டுக் கருமஞ் செய்வைத்த பின்னரும்
முட்டா தவரை வியங்கொளல் வேண்டுமால்
தொட்டக்கால் மாழகும் **தளிரமேலே நிற்பினும்**
**தட்டாமற் செல்லாது உளி**".

—பழ. 279.

"பெறற்றா பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்
உற்றார் உகந்தார் எனவேண்டார்—மற்றோர்
இரணங் கொடுத்தால் இடுவார் இடாரே
சரணங் கொடுத்தாலும் தாம்".

—நலவழி. 18.

"துச்சனரைப் பொன்னைத் துடியைத் துரகத்தை
அச்சமற முன்னிறுக்கும் ஆயிழையை—நச்சரவைக்
கண்டித்த எள்ளைக் கரும்பை இளநீரைத்
தண்டித்தாக் கலலோ சயம்".

"இட்டக் கடைத்தரார் ஈண்டும் பலிமரீஇப்
பட்ட வழங்காத் பான்மையார்—நட்ட
சுரிகையாற் காணும் சுலாககோலாற் காணும்
சொரிவதாம் ஆபோற் சுரந்து.

—அறநெறிச்சாரம். 183.

(ரு).

356. மலைநலம் உள்ளும் குறவன; பயந்த
விளைநிலம் உள்ளும் உழவன; சிறந்தொருவர்
செய்தநன் றுள்ளுவர் சான்றோர்; கயந்தன்னை
வைததை உள்ளி விடும்.

**தருமர்** :—என்றது. குறவன—குறவனானவன்; மலை நலம்—மலையினது நலத்தை; உள்ளும்—கருதியிருப்பன்; உழவன்—உழவனானவன்; பயந்த விளைநிலம—(தனக்குப) பயன்பட்ட விளைநிலத்தை; உள்ளும—கருதியிருப்பன; சான்றோர—அமைந்தோரானவர்; ஒருவர் செய்த நன்று—ஒருவர் செய்த நன்றியை; [1]சிறந்து உள்ளுவர—அது சிறிதாயினும மிகுதியாகக் கருதியிருப்பர்; கயம—கயவன; தன்னை வைததை உள்ளிவிடும—தன்னை ஒருவர் அறியாது வைதத்னையே கருதிச் சினங்கொண்டிருப்பன என்றவாறு.

செய்த நன்றுள்ளுவர சான்றோர எனவே, தமக்கொருவர மிகுதியான பொல்லாங்கு செய்தாராயினும அவர ஒரு நன்றி செய்திருப்பாராகில் அந்நன்றியையே மிகுதியாக எண்ணி அவர செய்த பொல்லாங்குகளை மறந்துவிடுவர அமைந்தோரானவர். கயம் தன்னை வைததனை உள்ளிவிடும எனவே, தமக்கொருவர மிகுதியான நன்றிகளைச் செய்து ஒருகாலத்து அறியாது ஒரு பொல்லாத வார்த்தை சொன்னாராயில அந்நன்றிகளையெல்லாம மறந்து அந்தப் பொல்லா வார்த்தையையே கருதிச் சினங் கொண்டிருப்பர கயவர என்று அவரது தன்மை கூறுவார அமைந்தோர தன்மையும உடன் கூறினார.

**பதுமனார்** :—[என்றது. மலையின வளத்தை நினைக்கும குறவன; பயன்பட்ட விளைநிலத்தை நினைக்கும உழவன்; ஒருவன செய்த நன்றியை நினைப்பர சான்றோர; கயவன தன்னை வைததையே நினைக்கும் என்றவாறு]

[1] சிறந்து—சிறக்க.

***விளக்க உரை :***—என்பது. மலைநலம் உள்ளும் குறவன்—மலையினது நலத்தைக் கருதியிருப்பன் குறவன்; பயந்த விளை நிலம் உள்ளும் உழவன்—பயன்படத்தக்க விளை நிலத்தைக்கருதியிருப்பன் உழவன்; சிறந்து ஒருவர் செய்த நன்று உள்ளுவர் சான்றோர்—ஒருவர் செய்த நன்றியினை மிகவும் கருதியிருப்பர் அமைந்தோர்; கயம் தன்னை வைத்தை உள்ளிவிடும்—கயவன் தன்னை வைத்தனைக் கருதியிருப்பன் அல்லது நன்றிகளை மறந்து விடுவன் என்றவாறு.

**கருத்து**:—கயவர் பிறரது பழிப்புரையையே எண்ணிப் பகைமையை பாராட்டுவர்.

(கூ).

357. ஒருநன்றி செய்தவர்க்(கு) ஒன்றி எழுந்த
பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர்;—கயவர்க்(கு)
†ஒருநூறு நன்றிசெய்து ஒன்றுதீதாகில்
ஒருநூறுந் தீதாய் விடும்.

***தருமர் :***—என்பது. ஒரு நன்றி செய்தவர்க்கு—ஒரு நாளிலே ஒரு நன்றியைச் செய்தவர்க்கு, ஒன்றி எழுந்த பிழை நூறும்—இது குற்றம் எனத்தக்கதாகப (பொருந்திய) பிழை எத்தனை செய்தாலும் அவையெல்லாம்; சான்றோர் பொறுப்பர்—அமைந்தோர் பொறுப்பர்; கயவர்க்கு—கயவரானவர்க்கு; ஒரு நூறு நன்றி செய்து—அநேக நன்றிகளைச் செய்து; ஒன்று தீது ஆகில—தம்மையறியாது ஒரு தீங்கு வருமாகில்; ஒரு நூறும் தீதாய் விடும்—அந்த நன்றிகளெல்லாம் பொல்லாதாய்விடும் என்றவாறு.

***பதுமனார் :***—[என்றது. நன்மை யொன்றை முன் செய்தவர்க்குப் பொருந்தியுள்ளவாய நூறு பழிகளைப் பொறுப்பர்

---

†'எழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயின்—எழுநூறுந் தீதாய் விடும்' என்றும் பாடம்.

அமைந்தோர்; கயவர்க்கு எழுநூறு நன்றியைச் செய்து ஒன்று தீதாகச் செயயின் முனபு செயத எழுநூறு நன்றிகளும் தீதாய் விடும எனறவாறு.]

**விளக்க உரை:**—என்பது. ஒரு நனறி செய்தவர்க்கு ஒனறி ஏழுநத பிழை நூறும—ஒரு நாளிலே ஒரு நனறியைச் செயதவா தமககு இது பிழை எனஎணததக்க பிழையாக மிகப் பொருநதிய பிழைகள எண்ணிறநதவையெல்லாம் சான்றோா பொறுபபா—(அமைநதோா) பொறுபபா; கயவாககு எழுநூறு நன்றி செயது ஒனறு தீது ஆயின—கயவாககு எழுநூறு நனறிகளைச் செயது ஒரு தீங்கினைச் செயயில், எழுநூறும் தீதாயவிடும—அநத நன்றிகள எழுநூறும தீதாயவிடும் என்ற வாறு.

**கருத்து**—ஒரு தீமையைக் கருதிப் பல நனறியையும் மறநது விடுவது கயவா இயல்பு.

## மேற்கோள் பகுதி :—

நச்—கட்டளைப் பொழிப்பு மோனைக்கு "எழுநூறு நன்றி செய தொனறுதீ தாயின" எனறவடியை மேறகோளாகக காட்டுவா.

—தொல. செய. சூ. 95.

## ஒப்புமைப் பகுதி :—

"கொனறனன இனனா செயினும் அவாசெயத
ஒன்றுநன் றுளளக கெடும்".

—குறள். 109.

"ஒனறுதவி செயயினுமவ வுதவிமற வாமற
பினறையவா செயபிழை பொறுததிடுவா பெரியோா
நனறிபல வாகவொரு நவைபுரிவ ரேனும்
கனறிடுவ தனறிமுது கயவாநினை யாரே"

—வில்லி பாரதம்.

(எ).

358. ஏட்டைப் பருவத்தும் இற்பிறந்தார் செய்வன
மோட்டிடத்துஞ் செய்யார் முழுமக்கள்;-கோட்டை
வயிரஞ் செறிப்பினும் வாட்கண்ணாய் பன்றி
செயிரவேழம் ஆகுதல் இன்று.

**தருமர்** :—என்பது. வாள் கண்ணாய்—வாள் போன்ற கண்ணினையுடையவளே; இல் பிறந்தார—(உயர) குடிப் பிறந்தார்; ஏட்டைப பருவததும்—வறுமைககாலததும; செயவன—செயயும் உதவிகளை, முழுமக்கள—அறிவு புகும் நெறியில்லாத திணணியரானவா, [1]மோட்டிடததும்—தமககு மிகுநத செல்வமுண்டாகிய காலததும; செயயார்—செயயமாட்டாா; (அஃது என் போலவெனனில) கோட்டை வயிரம செறிப்பினும்—வயிரஞ செறிநத கொம்பை உடையதாயினும்; பன்றி—பன்றியானது; செயிர வேழம ஆகுதல் இன்று—போர் செய்யும் யானையாகமாட்டாது அதுபோலும என்றவாறு

கயவர், குடி குலம உடையராயினும் அவர் ஒழுக்கததினுல் குடி குலம இல்லாதது தோன்ற அறிவுடையோரை, இற்பிறந்தார செயவன என்றுயாததிக கூறினாாதலால் வறுவியராயினும உதவிசெயவது அறிவுடைமையாயிறறு. ஏட்டைப பருவம்—இளமைபபருவம; மோட்டிடம—முதிாநத பருவம் (எனினுமாம). இளமைப் பருவமாய் வறுமையும் ஆனவிடதது உதவிசெயவது அரிதாகலின ஏட்டைப் பருவம என்றுா. இளமையும் வறுமையும ஆனுலும் உதவிசெய்வது இற்பிறந்தார்க்கு இயறகையாயிறறு.

**பதுமனுர்** :—[என்றது. வறுமைக் காலததும் குடிப்பிறநதாா செயவன மோட்டிடத்தும செயயமாட்டாா கயவர்; கொமபினைக் கிமபுரி செறிப்பினும வாட்கண்ணாய் பூசலைச் செய்யும் வேழமாகமாட்டாது பன்றி எனறவாறு.

[1]மோடு—உயாச்சி; ஈண்டுச் செல்வததைக் கருதிறறு.

ஏட்டைப்பருவம்—இளமைப் பருவம்; மோட்டிடத்தும்—முதிரவளர்ந்தவிடத்தும் எனினுமாம். முழுமக்கள்—அறமாகிய ஒளி இல்லாத மக்கள். கோட்டை வயிரம் செறிபபினும்—[1]கோட்டைத் திட்பமுடைய வச்சிரஞ் செறிபபினும் (எனினுமாம).]

, **விளக்க உரை :**—என்றது. ஏட்டைப் பருவததும்—வறுமையுறற காலததும; இறபிறநதார செய்வன—குடிப பிறநதார செயயும் உதவிகளை; மோட்டிடததும—பெரிய செல்வம உண்டானவிடததும; செயயார முழுமக்கள—செய்யமாட்டார் அறிவு புரையறற திண்ணியார; கோட்டை வயிரம் செறிபபினும் —கொமபை வயிரம் ஊறினுலும; வாள கணணய்—வாள போலுங் கணணையுடையவளே!; பனறி செயிா வேழம ஆகுதல் இனறு—பன்றியானது பூசலைச் செயயும யானையாகமாட்டாது எனறவாறு.

ஏட்டைப பருவம—இளமைப பருவம. மோட்டிடததும —முதிர வளாநத விடததும.

**கருத்து:** —செல்வக்காலத்தும் கயவர் நல்லன செய்யமாட்டார்.

## ஒப்புமைப் பகுதி :—

“செல்லா விடததுங் குடிப்பிறநதார் செய்வன
செல்லிடததும் செய்யார் சிறியவர்—புல்வாய
பருமம் பொறுப்பினும் பாயபரி மாபோற
பொருமுரண் ஆறறுத லின்று.

—நாலடி, 149,

(அ).

[1]கொமபினை,

359. *நீருட் பிறந்து நிறம்பசிய தாயினும்
ஈரம் கிடையகத் தில்லாகும்—ஓரும்
நிறைப்பெருஞ் செல்வத்து நின்றக் கடைத்தும்
அறைப்பெருங்க லன்னார் உடைத்து.

**தருமர் :**—என்பது. நீருள பிறநது—நீருள்ளே பிறநது; நிறம பசியது ஆயினும—நிறம பசுததிருநதாலும; கிடை அகதது—[1]கிடைச்சுக்குகள; ஈரம இல் ஆகும்—ஈரம இல்லையாகும்; (அதுபோல) நிறை பெரு செலவதது நின்றக்கடைததும்—நிறைநத பெரிய செலவததுள்ளே நின்றவிடததும; [2]அறை பெரு கல் அனனா உடைதது—பெரிய பாறைக் கலலைப் போல்வார உளா என்றவாறு.

கயவாக்குக் கிருபையிலலை என்பது தோன்ற அவரைப பாறைக்கல போல்வார என்று உவமையாறகூறினா. மிகுநத செலவமுடையராயும ஒருவாககு ஒன்றினைக் கொடுககும மன விரககம இலலாமையினுற கிடைச்சு உவமையாயிறறு.

ஓரும என்பது இடைசசொல்.

**பதுமனார்** ·—[என்றது. நீருளளே தோன்றி நிறமுமபசசையாய இருநததாயினும கிடையகதது ஈரமிலலையாகும அதுபோல நிறைநத செலவதது நினறவிடததும பாறைப பெருஙகல போலப் பயனபடமாட்டாதாரையுடைதது இவவுலகம என்றவாறு.

கிடை—கிடைச்சு; அறை—பாறை.]

**விளக்க உரை :**—என்பது. நீருள பிறநது நிறம பசிய

*இதுவும அடுதத செயயுளும முறைவைபபில மாறியுளளன,

[1] கிடைசசு—நெட்டி,

[2] அறை—அறுபபுடைய—கறபாறை,

தாயினும்—நீருட் பிறநது நிறம் பசுத்திருப்பினும்; ஈரம் கிடை யகத்து இல்லாகும்—கிடைச்சுக்குள ஈரமில்லையாகும்; (அது போல) நிறைப் பெருஞ் செல்வதது நின்றககடைத்தும்—நிறைநத பெரிய செல்வத்துள்ளே நின்றவிடததும்; அறை பெருஙகல் அன்னர் உடைதது—பாறையாகிய பெரிய கல்லைப் போலவரா உண்டு என்றவாறு.

ஒரும்—என்றது இடைச்சொல்.

**கருத்து:**—கயவா நிறைநத செல்வததுடன் கூடியிருப்பினும் இளகிய மனததவா ஆகார.

## ஒப்புமைப் பகுதி:—

"வைகலும் நீருட் கிடப்பினும் கல்லிறகு
மெல்லெனறல சால அரிதாகும அஃதேபோல்
வைகலும நலலறம் கேட்பினும கீழகடகுக
கல்லினும வலலெனனும நெஞசு.

—நாலடி,
(சு).

360\. இனறுதும் இந்நிலையே ஆதும் இனிச்சிறிது
நினறுதும் என்று நினைததிருந(து)—ஒனறி
உரையின் மகிழ்ந்துதம் உள்ளம்வே றாகி
மரையிலையின மாய்நதார் பலர்.

**தருமர்:**—என்பது. இனறு ஆதும—இன்றைப பொழுதிலே ஆகினறேம, இநநிலையே ஆதும்—இங்கு நின்ற நிலைவிட்டுததிரிவதன முனனே ஆகினறேம; இனி சிறிது நின்று ஆதும—அலலது இனனுஞ சிறிது நாளைக்குப பின்பாயினும ஆகினறேம்; என்று நினைத்து இருநது—என்று தமக்கு எய்தாக செல்வததிலே ஆசைப்பட்டு அதனைக் கருதி; ஒனறி உரையின் மகிழநது—பொருந்திய வார்த்தை மாத்திரததிலே மகிழநதிருநது;

தம் உள்ளம் வேறு ஆகி—பின்பு அது கூடாதபடியினாலே தமது நெஞ்சு வேறுபட்டு; [1]மரை இலையின மாய்நதார பலர்—தாமரை இலை போல மாய்ந்து போனவா பலர் என்றவாறு.

உள்ளது கொண்டு அறஞ்செய்யாமல் மறுமையும் இழந்து தமக்கு எய்தாத செல்வத்துக்கு ஆசையுறறு யாவராலும் இகழபபட்டு இம்மையும் இழப்பர் எனக் கயவரது தன்மை கூறியது.

**பதுமனார் :**—[என்றது செல்வததை இன்று பெறுதும் (இப்பொழுதே பெறுதும) இனிமேற சிறிது பொழுது கழிததுப் பெறுதும்; என்று கருதியிருநது மேவிப பிறரோடு இபபெறறி கூறுகினற உரையினால் மகிழநது பினபு தம் துணிபு வேறுபட்டுத் தாமரையிலைபோல மாயநது போயினா பலர் எனறவாறு.]

**விளக்க உரை :**—என்பது. இன்றுதும் இந்நிலையே ஆதும—இறறைப பொழுதிலே ஆகிறோம; இஙகு நினற நிலை விட்டுத திரிவதன் முன்பு ஆகிறோம; இனிச் சிறிது நினறு ஆதும—அல்லவாகில் இனிச சிறிது நாளுக்குப் பினபாகிலும ஆகிறோம; எனறு நினைததிருந்து—என்று தமக்கு எயதாத செல்வததிலே ஆசைப்பட்டு—அதனைக கருதியிருநது; ஒன்றி உரையின மகிழநது—பொருநதின வார்த்தை மாததிரததிலே இனிமையுறறிருநது, தம் உள்ளம் வேறாகி—பினபு கூடாதபடியாலே தமது நெஞ்சு வேறுபட்டு; மரை இலையின் மாய்நதார பலா—தாமரை இலை போலே மாயநது போனவா பலா எனறவாறு.

உள்ளது கொண்டு அறஞ்செய்யாமல மறுமைக்கு உறுதியையும் இகழ்ந்து தனக்குததகாத செலவததிலே ஆசை

[1] மரை—தாமரை என்பதன முதறகுறை, இனி மரை எனபதற்கு மான எனப் பொருளகொணடு மான்களால மேயபபட்ட இலைபோனறு இருந்தவிடந் தெரியாமல் மாயநதவர் பலர் எனபொருள் கூறுவாருமஉளர்,

மிக்கு யாவராலும் இகழப்பட்டு இம்மைப்பயனும் இழந்து விடுவன் கயவன் என்பதாம.

**கருத்து:**—கயவா வீணகறபனையும் ஆரவாரமும கொண்டு, பயன்பெருது மடிவா.

## ஒப்புமைப் பகுதி:—

"மரையிலைபோல அமாநதிசினோ பலரே".

—புறம், 27-6, (ம).

---

# 7. பன்னெறி.

---

## 37. பனனெறி.

**தருமர்:**—அஃதாவது இநத நூலை அதிகார அடைவு செய்த பதுமனா மேல அதிகாரஙகளிலே மிகுந்த பாட்டையெடுததுப பலநெறிகளையும சோநது பன்னெறி எனறு ஓரதிகாரமாகக் (கொண்டமையால்) பொருட்பாலிலே சோக்கபபட்டதாம.

**பதுமனர்:**—[அஃதாவது முன சொறற அதிகாரமான வறறுள அடஙகாது பலா மேல்வாகிய வெணபாககளையும் ஓரதிகாரமாகச சோததலால் பனனெறி என்று கூறப்பட்டது.]

361. மழைதிளைககும் மாடமாய் மாண்பமைந்த காப்பாய்
இழைவிளககு நின்றிமைப்பின என்னும்?—விழைதக்க
மாண்ட மனையாளை இல்லாதான் இல்லகம்
காண்டற் கரியதோர் காடு.

**தருமர் :**—என்பது. மழை திளைக்கும் மாடம் ஆய்—மேகங்கள் தவழும் உயரத்தையுடைய, மாளிகையாய, மாண்பு அமைந்த காப்பு ஆய்—மாட்சிமைப்பட்ட காவலையுடையதாய்; இழை விளக்கு நின்று இமைப்பின்—அம்மாடத்தில் செய்த அணிகளே விளக்காக நின்று [1]பாடஞ் செய்யினும்; என் ஆம்?—என்ன பயனுடைத்தாம்?; விழைதக்க—விருப்பமுள்ள; மாண்ட மனையாளை—மாட்சிமைப்பட்ட மனையாளை, இல்லாதான் இல்லாதவனது; இல்லகம்—இல்லானது; காண்டற்கு அரிய தோர் காடு—அச்சமிகுதியினால் காண்பதற்கும் அரிதாகிய காடு என்றவாறு.

சென்று பார்க்குமவர்க்குக் காண்பதற்கு அரிது என அச்சங்கூறவே, பேய்வாழுங் காடாயிற்று.

**பதுமனார் :**—[என்றது. [2]முகில் தழுவும் மாடமாய் அழகுடைய காவலையுடைத்தாய்ப் பொற்கலன்களாகிய விளக்கு நின்று விளங்கினாலும் என்னை? விரும்பத்தக்க மாட்சிமை யுடைய மனையாளை இல்லாதானுடைய இல்லகம் காணற்கரிய தோர் [3]புறங்காடு போலும் என்றவாறு.

மழை திளைக்கும்—முகில் தழுவும்; இழை விளக்கு—பொற் பணியான விளக்கு. நின்று இமைப்பின—இராப்பகல் வீயாது நின்று விளங்கின; விழைதக்க—விரும்பத்தக்க; மாண்ட—மாட்சிமையுடைய; காடு—மனிதரில்லாக் காடு என்றுமாம்.]

**விளக்க உரை :**—என்பது மழை திளைக்கும் மாடமாய—[4]மஞ்சு தவழும் மாளிகையுமாய, மாண்பமைந்த காப்பாய்—நன்மையமைந்த காவலையும் உடைத்தாய; இழை விளக்கு நின்று

[1] பாடம்—ஒளி.
[2] முகில்—மேகம்.
[3] புறங்காடு—சுடுகாடு.
[4] மஞ்சு—மேகம்.

இமைப்பின்—அணிகலன்களில் விளக்கிட்டு விளங்கச் செய்தா லும்; என்னுடம்?—என்ன பயன் உடைத்து?; விழைதக்க மாண்ட மனையாளை இல்லாதான் இல்லகம்—விரும்பத்தக்க (மாண்புள்ள) மனையாளை இல்லாதான் மனையகம்; காண்டற்கரிய தோர் காடு—அச்சமிகுதியினால் காணற்குக் கரியதொரு காடு என்றவாறு.

**கருத்து:**—நல்ல மனையாளைப் பெறாத மனை செல்வத்தால் மேம்பட்டிருப்பினும் பயனில்லை.

## ஒப்புமைப் பகுதி :—

"இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை."

—குறள். 53.

"மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்".

—குறள். 52.

"இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை
இல்லாளும் இல்லாளே ஆமாயின்—இல்லாள்
வலிகிடந்த மாற்றம் உரைக்குமேல் அவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும்".

—மூதுரை. 21.

"தாரம் மாணாதது வாழ்க்கை யன்று"

—முதுமொழிக். 42.

"மனைக்கு விளக்கம் மடவாள்".

"மனைக்குப் பாழ் வாள்நுதல் இன்மை"

"மனைக்குவிளக் காகிய வாள்நுதல்".

—புறம். 314.

(க).

362. வழுக்கெனைத்தும் இல்லாத வாள்வாய்க்கிடந்தும்
இழுக்கினைத் †தாம் பெறுவ ராயின்—
இழுக்கெனைத்தும்
செய்குறுப் பாணி சிறியே,அச் சின்மொழியார்
கையுறுப் பாணி பெரிது.

**தருமர்** :—என்பது. வழுக்கு எனைத்தும் இல்லாத—காவற [1]சோததியம சறறுமில்லாத; வாள வாயக் கிடந்தும—வாளின [2]தாரை போலும கூரிய காவலுளளே இருநதும; இழுக்கினை தாம பெறுவா ஆயின்—காவற சோததியததை மகளிா (சிறிது) பெறுவராயில; இழுக்கு எனைததும் செய்குறு—ஒரு இழுககாகிலும செயயாமல் கறபுடன் அநேக காலம் இருப்பினும் அவையெல்லாம தேயநது தாம இழுக்குச் செயயாத; பாணி—காலம, சிறிதே—சிறிதேயுளளது எனப படும; அ சில் மொழியாா—மெதநென்ற வாாததையுடைய அநத மகளிா; [3]கை உறுப் பாணி—அநத இழுக்கைத தவிாந்து கறபாக ஒழுகுவதைத தாம கைக்கொளளாத காலம. பெரிது—பெரிது எனபபடும் என்றவாறு.

பாணி எனபது காலம; தம ஆயுசு பரியந்தமும் கற்பாக ஒழுகி ஒரு பொழுதாகிலும சோரம் உடையராகில் எலலா நாளும சோரமே செயததாய முடியும எனபதாயிறறு.

ஆதலால் மகளிா தம மனமே காவலாய ஒழுகுவதன்றி எததுணைக் கூாமையாயக காவல் செயயினும அககாவலால் பயனில்லை எனபதாம்.

---

†'தாம் பெறு ராயின்' என்றும பாடம.

[1] சோததியம—குறறம.

[2] தாரை—கூாமை.

[3] கை—ஒழுக்கம், இப்பொருட்டாதலை 'கைதான நெகிழவிடேன' (திருவாசகம. திருச்சதகம்.) என்புழிக் காண்க.

**பதுமனூர் :**—[என்றது. தபபொன்றுமில்லாதவாள் வாய் போனற காவலுள் தஙகியும், சிறிது காவற் சோர்வு பெற்ருரின், எனைத்தானுங் குறறஞ செயயத் தொடங்காத காலம் சிற்தே; அச்சின் மொழியாா ஒழுக்கத்தை மேவாத காலம் பெரிது என்றவாறு.]

**விளக்க உரை :**—என்பது. வழுக்கெனைத்தும்இலலாத வாள் வாய்க் கிடந்தும்—காவற் சோறறி சறறுமில்லாத வாளிற ருரை போலும் காவலுக்குள்ளே இருப்பினும்; இழுக்கினைத் தாம் பெறுவராயின்—காவற சோறறியினைத தாம் சிறிது பெறுவ ராயின; இழுக்கு எனைததும செயகுறுப பாணி சிறிதே—எவவளவாயினும் சொறறு *செயயாத காலம சிறிது; அ சின் மொழியாா கையுறுப பாணி பெரிது—அநத மெதனெ்ற வாாதததையினையுடைய மகளிா ஒழுககமில்லாத காலமே பெரிது என்றவாறு.

**கருத்து :**—மகளிா தமது கறபால தம்மைப் பாதுகாததலே சிறந்தது.

## ஒப்புமைப் பகுதி :—

"சிறைகாககுங காபபெவன் செய்யும் மகளிா
நிறைகாககுங காப்பே தலை".

—குறள். 57.

(உ.)

363. எறியென்று எதிர்நிற்பாள் கூற்றம்; சிறுகாலை
அட்டில் புகாதாள் அரும்பிணி—அட்டதனை
உண்டி உதவாதாள் இல்வாழபேய் இம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை.

*சுவடியில் உள்ளவாறு எழுதப்பெற்றது.

**தருமர் :**—என்பது. எறி என்று எதிர நிற்பாள்—(காதலன் முனிவுக்கு அஞ்சாதே) 'அடி' என்று எதிர் நின்று தான் சொல்லுவாள்; கூறறம—கூறறத்தோடு ஒக்கும்; [1]சிறு காலே அட்டில புகாதாள்—சிறுகாலேயே அடுகின்ற இல்லில் புகுந்து அடுவது அடாதாள்; அரும் பிணி—தீராத நோயோடொககும்; அட்டதனை—ஆககியவதனை, உண்டி—காதலனுக்கு உணவாக; உதவாதாள—விருபபுடன ஊட்டுதற்கு ஒருபபடாதாள்; *இல்வாழ பேய—இல்லினகண் வாழகினற பேயோடு ஒககுமம; இ மூவா—இககுணமட மூனறும உடைய மகளிா; கொண்டானைக் கொலலும படை—தம் காதலனைக் கொல்லும் படையோடு ஒபபா எனறவாறு.

அடடில் என்பது அடுக்களை. இக்குணங்களுடைய பெண்டிரைப் படைததாாககு இல்லறஞ் சிதையும் ஆதலால் சிதைவுககு ஏறபுடைததாய அவரைக் கொல்லுமபடை என்றா

**பதுமனார் :**—[எனறது. காதலன முனிவிறகு அஞ்சாதே எறி என்று கூறி எதிர நிறபாள கூற்றதேதோடொக்கும்; சிறு காலேயே அட்டில புகாதாள பொறுததறகரிய நோயொடு ஒக்கும்; அட்டதனைக் காதலன் விருமபி உண்டறகு உதவாதாள இல்வாழ பேயோடொக்கும்; இபபெண்டிா மூவரும கொண்டானைக் கொல்லும படையொப்பா எ-து.

அட்டில்—அடுககளை. அரும்பிணி—தீாதறகரிய பிணி; படை—வாள.]

**விளக்க உரை :**—என்பது. எறி என்று எதிா நிறபாள் கூற்றம—காதலன் முனிவுக்கு அஞ்சாதே எறி என்று எதிரே நிறபாள கூறறததோ டொக்கும்; சிறுகாலே அடடில் புகாதாள அரும்பிணி—சிறுகாலேயே அடுககளையிற புகாதாள மருநதில

---

*பேஎயப பிறபபிற பெரும்பசியும எனறா பிறரும (திரிகடுகம். 60)

[1]சிறுகாலே—உதய காலம.

தீர்தற்கரிய நோயோடு ஒக்கும்; அட்டதனை உண்டி உதவா தாள— ஆக்கி வைத்ததனைக் காதலனை விரும்பி உண்டற்கு உதவாதாள் குடிவாழக்கைப பேயோடொக்கும்; இம் மூவர் கொண்டானைக கொல்லும் படை—இந்தப் பெண்டிர் மூவரும் கொண்டானைக் கொல்லும் படையோடொப்பா.

அடடில எனபது அடுககளை.

**கருத்து** '—வாழக்கைததுணைவி அடககமும சுறுசுறுபபும் அன்பும் உடையவளாய் இருததல் வேண்டும.

## ஒப்புமைப் பகுதி :—

...... . .... . . ........"கூறறமே
இல்லிறகு இசைநதொழுகாப் பெண்".

—மூதுரை. 27.

## குறிப்பு .—

கணவனுக்குச் சினமூட்டி அவனுயிரை வாங்குதற்குக் காரணமாயிருததலால் 'கூறறம' எனவும், காலமறிநது உண விடாமையால நோயுணடாகும ஆதலால 'பிணி' எனவும, பெரும் பசியுடன் தான முன் உண்பதால 'பேய்' எனவும கூறினர்.

(௩).

364. கடியெனக் கேட்டுங் கடியான் வெடிபட
ஆர்ப்பது கேட்டும் அதுதெளியான-பேர்த்துமோர்
இற்கொண் டினிதிரூஉம் ஏமுறுதல் என்பவே
கற்கொண் டெறியுந் தவறு.

**தருமர்** :— என்பது. கடி எனக் கேட்டும்—மணத்தைக் கடி என்று அறிவுடையோர சொல்லக்கேட்டும்; கடியான்—

அப்பாசம் விடுகிற்றிலன்; [1]வெடிபட—வெடிவிடும் ஓசைபோல; ஆரப்பது கேட்டும்—ஆரவாரிக்கும் சாப்பறையினது ஓசை கேட்டும்; அது தெளியான்—தன் நிலைமையைத் தெளிகிறறிலன்; போத்தும் ஓர் இல்கொண்டு—மறித்தும் ஒரு மனையாளைக் கொண்டு; இனிது [2]இருஉம் ஏமுறுதல்—அதனை நம்பி மகிழந்திருந்து (மயங்குதல்) கல்கொண்டு எறியுந் தவறு என்ப—பித்தா கல்லைக்கொண்டு எறியுந் தவறு போல்வது என்பா என்றவாறு.

கற்கொண்டெறியுந தவறு எனவே பித்தன் எறிந்த கல ஒருவர்மேற, படும் படாது என்னும் உறுதியில்லை. அதுபோலுந தனது மனைவாழ்க்கையின் நிலையும் நிலையாமையும் என்பதாம். ஆதலால் இவையிறறின் நிலைமை இது என ஓாநது இளமைப் பருவததிலே நனனெறிபபடுதற்கு அறிவுறுத்தியது.

**பதுமனார் :**—[என்றது கடி என்னும் நாமத்தைக்கேட்டும கடியப்படுவதொன்று என்று கடியான்; வெருவும்படி பல்லியங் களானவை முழுஙககேட்டும இதுவே பிணப்பறையுமாய ஒலிகரும் எனறு அதனைத தெளியான்; மீளவும் தான ஓா இல்லாளைக்கொண்டு மயங்குதலைக் கறகொணடு எறியும் பிதத ராகச் சொல்லுவா அறிவுடையாா எனறவாறு.

**விளக்க உரை :**—என்பது. கடி எனக் கேட்டும் கடியான்—மணததைக் கடி என்று சொல்லக் கேட்டும விடுகிற றிலன், வெடிபட ஆரபபது கேட்டும அது தெளியான—வெடி விடும ஓசைபோலச சாபபறையினது ஆரவாரத்தைக் கேட்டும தெளிகிறறிலன்; போததும ஓர் இறகொண்டு இனிது இருஉம ஏமுறுதல்—மறிததுமொரு மனையாளைக் கொண்டு அதனை நம்பி மகிழ்ந்திருததல்; கறகொண்டு எறியுநதவறு என்பவே—பிததர் போலத தன்னைக் கல்லைக் கொண்டெறியுந தவறு என்பா அறிஞா என்றவாறு.

---

[1] அச்சம் உண்டாக என்றும பொருள்கொளளலாம.

[2] இருவும் எனபது இருஉம என விகாரப்பட்டது.

கற்கொண்டெறியுந் தவறு என்பது பித்தன் எறியுங் கல் ஒருவன்மேற் படாதாகிலும் பட்டதில்லையாயினும் அதுபோலும் மனைவாழ்க்கையின் நிலையும் நிலையாமையும் என்பதாம். பித்தன் எறியுங் கற் குறித்தது எறியாத கல்.

**கருத்து:**—மனைவாழ்க்கையின் துன்பத்தை அறிந்தும் துறவாமல் மீண்டும் மனைவாழ்க்கையிற் புகுதல் பெருந் துன்பமாகும்.

## மேற்கோள் பகுதி :—

நச் :—நல்லவை உணர்த்தலும் அல்லவை கடிதலுமாகிய கிளவி செவிலிக்கேயன்றி அறிவர்க்குமுரிய என்பார், அல்லவை கடிதலுக்கு இச்செய்யுளை மேற்கோளாகக் காட்டுவர்.

—தொல். பொருள். கற்பியல். 13.

## ஒப்புமைப் பகுதி :—

"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்".

—குறள். 348.

"மன்றங் கறங்க மணப்பறை யாயின
அன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப்—பின்றை
ஒலித்தலும் உண்டாமென் றுய்ந்துபோ மாறே
வலிக்குமாம் மாண்டார் மனம்".

—நாலடி. 23.

"மணமகனே பிணமகனும் மணப்பறையே பிணப்பறையாய்,
அணியிழையார் வாழ்த்தொலிபோய் அழுகையொலி யாய்க்
கணமதனிற் பிறந்திறுமிக் காயத்தின் வரும் பயனை [கழியக்
உணர்வுடையார் பெறுவர் உணர் வொன்றுமிலார்க்
கொன்றுமிலை".

—திருவிளையாடல் : பழி அஞ்சின. 40.

(அ).

365. தலையே தவமுயன்று வாழ்தல், ஒருவர்க்கு
இடையே இனியார்கண் தங்கல்—கடையே
புணராதென் றெண்ணிப் பொருள் நசையால்
உணரார்பின் சென்று நிலை. [தம்மை

**தருமர்** :—என்பது ஒருவர்க்கு—; தலையே தவம் முயன்று வாழ்தல்—தவத்திலே முயன்று வாழ்தலே தலைமையான காரியம்; [1] இனியார்கண் தங்கல்—இனிய மகளிருடனே தங்கி வாழ்தல்; இடையே—இடையான காரியமாவது; புணராது என்று எண்ணி—(பொருள்) கூடுகின்றதில்லை என்று கருதி; பொருள் நசையால்—அந்தப் பொருளாசையாலே; தம்மை உணரார் பின் சென்று நிலை—தமது நிலைமை உணரமாட்டாதாரைப் பின் சென்று நிற்பது; கடையே—கடையான காரியமாவது என்றவாறு.

மனைவாழ்க்கையும் இல்லறம் என்று அறத்திற் பொருந்திய அதனால் அதனை இடையாய காரியம் என்று சிறிது வியப்பாகக் கூறினார்; தம்மை அறியார் எனவே, தமது குடி, குலம், கல்வி, முதலாகிய சரீர சுபாவம் அறியாதாரைப் பின் சென்று பயன் பெறுவோம் என்பது இழிவு ஆதலால் அதனைக் கடையான காரியம் என்று இழிவாக்கியது தமக்கு வறுமையாய காலத்துத் துறந்து தவம் பண்ணுவதன்றித் தமது மேன்மை அறியாதாரைப் பின் சென்று இரத்தல் ஆகாது என்பதாயிற்று.

**பதுமனார்** :—[என்றது. ஒருவர்க்குத் தலைமையாவது தவத்தின்கண்ணே முயன்று வாழ்தல்; ஒருவர்க்கு இடையாகிய குணமாவது தமக்கு இனியாரோடு இன்புற்று வாழ்தல்; ஒருவர்க்குக் கடையாகிய குணமாவது தமக்குப் பொருள் கூடுவதில்லையென்று அப்பொருள்மேல் ஆசையால் தம்மை அறியாதார் பின் சென்று நிற்றல் என்றவாறு.

---

[1] இனியார்கண் தங்கல் என்பதற்கு இனிய நற்குணமுடையாருடன் கூடி வாழ்தல் என்றுரைப்பாரும் உளர்.

இனியார்—மகளிர்; புணராது—பொருள் கூடாது; தம்மை உணராதார—தமது பெருமையை அறியாதார].

**விளக்க உரை:**—என்பது. தலையே தவமுயன்று வாழ்தல்—ஒருவர்க்குத் தலையான காரியம் தவத்திலே முயன்று வாழ்தல்; ஒருவர்க்கு இடையே இனியார்கண் தங்கல்—ஒருவர்க்கு இடையான காரியம் இனிய மகளிருடனே தங்கி வாழ்தல்; கடையே—ஒருவர்க்குக் கடையான காரியம்; புணராது என்று எண்ணிய பொருள் நசையால் தம்மை உணரார் பின் சென்று நிலை—பொருள் கூடுகின்றதில்லையென்று கருதி அந்த ஆசையாலே தம்மை அறியாதார் பின்பே சென்று நிற்கும் நிலை என்றவாறு.

தம்மை யறியாதார் என்பது குடியும், குணமும், கல்வியும், முதலாகிய சரீர சுபாவம் அறியாமல் (இருப்பார்).

**கருத்து:**—துறவற வாழ்வே சிறந்தது; அடுத்தது இல்லற வாழ்வு, இவற்றைவிட்டு அடிமை வாழ்வை மேற்கொள்ளல் இழிவானதாம்.

(௫).

366. கல்லாக கழிப்பர் தலையாயார்; நல்லவை
துவ்வாக கழிப்பர் இடைகள், கடைகள்
இனிதுண்ணேம் ஆரப் பெறேமியாம் என்னும்
முனிவினாற் கண்பா டிலர்.

**தருமர்:**—என்பது. தலையாயார்—தலையாய அறிவுடையவர்; [1]கல்லா கழிப்பர்—பல நூல்களையுங் கற்றுப் பொழுதைப் போக்குவர்; இடைகள் —இடையாய குணம் உடையவர்; நல்லவை துவ்வா கழிப்பர்—நல்ல நுகர்ச்சிகளை இனிதாக நுகர்ந்து பொழுதைப்போக்குவர்; கடைகள்—கடையாய குணம் உடைய

---

[1]செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

வர்; யாம்—; இனிது உண்ணேம்— இனிதாக உண்ணப் பெறறிலேம்; ஆரப்பெறேம் என்னும்—பொருளினை நிறையப் பெறறிலேம் என்னும்; முனிவினால்—வெறுப்பினாலே; கண்பாடு இலர்— கண்ணுறக்கமற்று வருந்துவா என்றவாறு.

வறுமையுறற காலதது நிலையாத யாக்கையின் பொருட்டு இரவிற்பட்டு வருநதுவது என் என உணாநது யாக்கை கழியா முன் மறுமைக்கு ஏற்புடைய துறவிற புகுதறகுத் துணியாது அறிவினமையால வருநதுவதனால் அவரைக் கடைகள என்று இழிவாகக கூறுவாா கல்வியையும் ஈகையையும உடன் கூறினா.

**பதுமனார்** :—[என்றது. நூல்களைக் கற்று மனைவாழ்க்கை யின்கட் செலலாது துறபபர் தலையாய அறிவுடையாா; மனை வாழ்ககையினினறு நலலவறறை நுகாந்தே மறுமைக்கு உறுதி இனறு எனறு துறபபா இடையாய அறிவுடையாா; இனிதாக உண்ணப பெறேம் நிறையச் செல்வம பெறேம் யாம என; நினைததுக கண துயிலல் இலா கடையாய அறிவுடையார் எனறவாறு.

கழிபபர்—பொழுதைக் கழிபபா என்றுமாம; துவ்வா— நுகாநது; முனிவு—வெறுபபு.]

**விளக்க உரை** :—என்பது. கல்லாக் கழிப்பர் தலையாயார் —பல நூல்களையுங் கறறுபபொழுது போக்குவர் தலையாய அறிவுடையோா; நல்லவை துவ்வாக் கழிபபர் இடைகள்— நலல நுகாச்சிகளை இனிதாக நுகாநது பொழுதுபோக்குவர் இடையானவர்; கடைகள்—கடையானவர்; இனிதுண்ணேம் ஆரப் பெறேம் யாம் என்னும முனிவினால்—இனிதாக உண்ணப் பெற்றிலேம் பொருளினை நிறையப் பெறறிலேம் என்னும் வெறுப்பினாலே; [1] கண்பாடு இலர்–கண்ணுறக்கமறறு வருந்துவர் என்றவாறு.

[1] கணபடு என்பது கண்பாடு எனததிரிநதது.

**கருத்து :**—உலகப் பொருள்களின் நிலையுணர்ந்து ஞான நூல்களால் தெளிவு பெறுபவரே உயர்ந்தோர் ஆவர்.

## மேற்கோள் பகுதி :—

மயிலை. } செய்யா என்ற வாய்ப்பாட்டெச்சம் வினைமுதல்
சங்கர. } கொண்டதற்குக் "கல்லாக் கழிப்பர் தலையாயார்"
என்பதனை மேற்கோள் காட்டுவர்.

—நன். மயிலை. சூ. 347.
—நன். சஙகர. சூ. 344.

நச் :—"..... 'கல்லாக கழிபபா' .. ... எனவும் ஆகாரம் வினையெச்சமாய் வருதல் ''செய்யாவென்னும் வினையெஞ்சு கிளவியு மவவியறிரியா வெனமனூா புலவா" எனபதனற பெறப் படும்" என உரை கூறிபபோவா.

—தொல. சொல. சூ. 230.

(௬).

367. செந்நெல்லா லாய செழுமுளை மற்றும் அச்
செந்நெல்லே ஆகி விளைதலால்—அந்நெல்
வயல்நிறையக் காய்க்கும் வளவயல் ஊர !
மகனறிவு தநதை அறிவு.

**தருமர் :**—என்பது. [1]செநநெல்லால் ஆய—சிறநத நெல் லினல் உண்டாகிய; செழு முளை—வளம்பட்ட முளையான து; மறறும் அ செநநெல்லே ஆகி விளைதலால்—மறறும் அந்தச் செந்நெல்லினது தனமை தப்பாமல விளைதலினலே; அ நெல்— அச் செநநெல்லே; வயல் நிறையக் காயக்கும்—(வயல்கள) எங்கும் மிகுதியாக விளையும்; வளம்—வளப்பமுள்ள; வயல் ஊர —வயல்களாற பொலிவு பெறற ஊரனே! தநதை அறிவு— பிதாவின் அறிவே; மகன அறிவு—பிள்ளைககு மறிவு என்றவாறு.

---

[1]செந்நெல்—செஞ்சாலி எனப்படும உயர்ந்த நெல்.

பிதா அறிவோடுங் கூடி நன்னெறியின் ஒழுகின், அவர் பிள்ளைக்கும் அத்தன்மை ஆம்; இது இயற்கையாகிய தன்மை. இதுவன்றிப் பிள்ளைக்கு நற்குணமுடைத்தாய்ப் பிதாவுக்குத் தூக்குணம் உண்டாவதும், பிதாவுக்கு நற்குணமுடைத்தாயப் பிள்ளைக்குத் தூக்குணம் உண்டாவதும் இயற்கை அல்ல ஆதலால் இத்தன்மை குடி குலம் உடைய ஒழுக்கமுடைமைக்கு ஏற்புடைத்தாய்க் கூறியதாம்.

**பதுமனார் :**—[என்றது. செந்நெல்லாலே ஆக்கப்பட்ட வளவிய முளை பின்னும் அச்செந்நெல்லின் தன்மையே ஆகி விளைதலால், அந்நெல் வயல் நிறையக் காய்க்கும் வள வயல் ஊரனே! தந்தையறிவே மகனறிவு என்றவாறு.

செழுமுளை—வளவிய முளை. தந்தையறிவு மகனறிவு (எனக.)]

**விளக்க உரை :**—என்பது. செந்நெல்லால் ஆய செழு முளை—செந்நெல்லால் உண்டாகிய வளவிய முளை; மற்றும் அச் செந்நெலலே ஆகி விளைதலால—மற்றந்தச் செந்நெலலினது தன்மையாகி விளைதலால்; அந்நெல வயல் நிறையக் காய்க்கும் வள வயல் ஊர—அந்தச் செந்நெல் வயல் முழுதும் நிறைந்த வளப்பத்தினையுடைய வயலூரனே! மகனறிவு தந்தையறிவு—பிதாவின் அறிவே பிள்ளைக்கும் அறிவு என்றவாறு.

இதனால் வித்தின் வழியல்லது பாத்திர விசேடமில்லை என்பதாம்.

**கருத்து :**—மகன் அறிவொழுக்கமுடையனாதற்குத் தந்தை அறிவொழுக்க முடையனாக வேண்டும்.

## ஒப்புமைப் பகுதி :—

"நோக்கி அறிகல்லாத் தமமுறுப்புக் கண்ணாடி
நோக்கி அறிப அதுவே போல்—நோக்கி

முகனறிவார் முன்னம் அறிப அதுவே
**மகனறிவு தந்தை அறிவு.**

—பழமொழி. 149.

"மகனுரைக்கும தநதை நலதநதை"

—ஞானமணி. 70.

(எ).

368. உடைப்பெருஞ் செல்வருஞ் சான்றோரும் கெட்டுப்
புடைப்பெண்டிர் மக்களும் கீழும் பெருகிக்
கடைககால் தலைக்கண்ண தாகிக குடைககால்போற்
கீழ்மேலாய் நிற்கும் உலகு.

**தருமர் :**—எனபது. உடை பெருஞ செல்வரும்—பெரிய செலவமுடையாரும; சானறோரும—அமைதியுடையோரும; கெட்டு—(நிலை) கெட்டு; புடை பெண்டிா மககளும்—கறபுடைய மகளிரல்லாத புறப்பெண்டிரது மககளும்; கீழும்—கீழமையான குணமுடையோரும்; பெருகி—மிகுதியாய; கடைக்கால் தலைக் கணணது ஆகி-கடையாய தனமையுடையாரெல்லாம தலையாய தனமையராயத தலையாய தன்மையாரெல்லாம கடையாய தனமையராய; குடைககால் போல்—குடையின் கால் போல; உலகு—உலக இயறகை; கீழமேல் ஆய நிறகும—கீழ மேலாம் எனறவாறு.

அரசனது கோல் கோடின் உலகம இத்தன்மையாம். அதனுல் அரசனது கோல் கோடாது நான்முறை நடதத வேண்டும் எனப பண்ணெறியாதலிற கொடுங்கோன்மை கூறிய தாம.

**பதுமனர் :**—[எனபது. பொருளுடைய செல்வரும் அமைநதாரும கெடடுப [1]புடைப பெண்டிா மக்களும் கீழும்

[1]பொருளுடையார் பக்கம சாரும் விலைமகளிர்.

பெருகி கடைக்கண்ணது தலைக்கண்ணதாகி உலகியற்கைக் குடைக்காம்பு கீழாய் நிறகற பாலது மேலாய் நின்றாற் போல வாம் என்றவாறு.

உடைப் பெருஞ் செலவா—பொருளுடைய செல்வா; புடை—பக்கம். குடைககால் கீழாய நிறகறபாலது மேலாய் நின்றற போல. (என்க.)

**விளக்க உரை :**—என்பது. உடைப் பெருஞ செல்வரும் சான்றோரும கெட்டு—உடைமையுடைய பெரிய செல்வரும் அமைவுடையோரும கெடடு; புடைப பெண்டிா மககளும கீழும பெருகி—புடைப பெண்டிரது மக்களும; கீழ் மககளும் பெருததுக கடைக் கண்ணது தலைககண்ணதாயக குடைக்கால் போலக கீழ்மேலாய நிறகும உலகம என்றவாறு.

**கருத்து :**—உலகியறகையின் மாறுபாடு கொணடு மககளை மதிததல் கூடாது.

## ஒப்புமைப் பகுதி :—

"புணர்கடல் சூழவையததுப் புண்ணியமோ வேறே
உணாவ துடையார் இருபப—உணர்விலா
வட்டும் வழுதுணையும் போல்வாரும வாழவாரே
பட்டுந் துகிலும் உடுதது".

—நாலடி. 264.

(அ).

369\. இனியார்தம் நெஞ்சத்து நோயுரைப்ப அநநோய்
தணியாத வுள்ள முடையார்—மணிவரன்றி
வீழும் அருவி விறல்மலை நன்னாட !
வாழ்வின வரைபாய்தல் நனறு.

**தருமர் :**—என்பது. மணி வரன்றி—மணியைக் [1]கொழித்து; வீழும் அருவி—விழுகின்ற அருவியையுடைத்தாய; [2]விறல் மலை நல் நாட—பகைவரால் சேரப்படாத வளனுடைத்தாய வெற்றி யுடைய மலையினால் பொலிவு பெற்ற நல்ல நாடனே! இனியார—தமக்கு இனியராகிய நட்டார்; தம நெஞ்சத்து நோய் உரைப்ப—தம மனத்துள இடும்பையைச் சொலல; அந்நோய் தணியாத—அந்தத் துன்பத்தை மாற்றாத; உள்ளம் உடையார்—நெஞ்சை யுடையார்; வாழ்வின—உயிர் வாழ்வதிலும்; வரை பாய்தல் நன்று—வரையின் ஏறிப பாய்தலே நன்மை என்றவாறு.

'முட்டுற்ற போழ்தின முடுகி என ஆருயிரை நட்டான ஒருவன் கை நீட்டேனேல' என்றாற்போல இதுவும் கூடா நட்பாய ஒழுகுமவன மனம வேறு உரை வேறாகக் கூறியதாம.

**பதுமனார் :**—[என்றது. தமக்கு இனியராகிய நட்டார தம மனத்துள இடும்பை கூறினால அவ்விடும்பையை மாற்றாத உள்ள முடையார மணி வரன்றி வீழும அருவி விறல்மலை நன்னாடனே; வாழ்தலின வரை பாய்ந்து சாதலே நன்று. என்றவாறு.

வரன்றி—கொழித்து

**விளக்க உரை :**—என்பது. இனியார தம் நெஞ்சத்து நோய் உரைப்ப—தமக்கு இனியராகிய நட்டார மனத்துள் இடும்பையைச் சொல்ல; அந்நோய் தணியாத உள்ளமுடையார—அந்த இடும்பையை மாற்றாத உள்ளத்தை உடையார்; மணி வரன்றி வீழும அருவி விறலமலை நல்நாட—மணியைக் கொழித்து விழும் அருவியினையுடைய வெற்றிமலை நாடனே! வாழ்வின் வரை பாய்தல நன்று—உயிர வாழ்வதிலும் வரையி னேறிப பாய்தல நன்று என்றவாறு.

[1] வாரிக் கொண்டு.

[2] விறல—வெற்றி.

**கருத்து :**—நண்பரது குறையைப் போக்காதவர் இருப்பதும் இறப்பதும் ஒன்றேயாகும்.

## ஒப்புமைப் பகுதி :—

"ஒத்த தறிவான் உயிர் வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்".

—குறள். 214.

(சு).

370. புதுப்புனலும் பூங்குழையார் நட்பும் இரண்டும்
விதுப்பற நாடினவே றல்ல—புதுப்புனலும்
மாரி அறவே அறுமே, அவரன்பும்
வாரி அறவே அறும்.

**தருமர் :**—என்பது. புதுபுனலும்—புதிய நீரும்; பூங்குழையார் நட்பும்—குழைகளாற் பொலிவு பெற்ற மகளிருடைய நட்பும்; இரண்டும்—இவையிரண்டும், [1]விதுப்பு அற நாடின—மயக்கமற ஆராயுங் காலத்து; வேறு அல்ல—வேற்றுமை இல்லை. [எங்ஙனம் எனின்] புதுப் புனல்—புதுப்புனலானது; மாரி அறவே அறும்—மழையில்லையாயின் இல்லையாம்; அவர் அன்பும்—அந்த மகளிர் அன்பானதும், வாரி அறவே அறும்—பொருள் வருவாய் இல்லையாயின் இல்லையாய்விடும் என்றவாறு.

பல அதிகாரங்களினும் மிகுந்தது பன்னெறி என்னும் அதிகாரம் ஆகையால் பொதுமகளிரது தன்மையும் உடன் கூறப்பட்டது.

**பதுமனார் :**—[ஆற்றுள் வரும் புதுப்புனலும் பூங்குழையாராகிய புன்மகளிர் நட்பும் என இரண்டினையும் துளக்கற

[1]விருப்பின்றி ஆராயுமிடத்து என்று பொருள் கூறினுமாம்.

ஆராயின் ஒப்புமையுடைய; புதுப்புனலும் மழை அறவே அறும்; அதுபோலப் பூங்குழையார் நட்பும் கொடுக்குமவனது வளமை அறவே அறும் என்றவாறு.

விதுப்புற நாடின்—விரைவுற ஆராயின். வாரி—பெருகின பகுதி.]

**விளக்க உரை:**—என்பது. புதுப்புனலும் பூங்குழையார் நட்பும் இரண்டும்—புதிய நீரும் பொலிவினையுடைய மகரக் குழையார் சிறந்த மகளிருடைய நட்பும் இவை இரண்டும்; விதுப்பற நாடின் வேறல்ல—துளக்கற விளங்க ஆராயுங்காலத்து வேற்றுமையில்லை, புதுப்புனலும் வாரி அறவே அறுமே—புதுப் புனலும் மழையில்லையாகில் இல்லையாம்; அவர் அன்பும் வாரி அறவே அறும்—அந்த மகளிருடைய அன்பும் பொருள் வரவில்லையாயின் அப்பொழுதே இல்லையாய்விடும் என்றவாறு.

**கருத்து:**—பொருளாளரைக் கருதாது பொருளையே கருதும் விலைமகளிரது நட்பை விரும்பலாகாது.

(ய).

**பொருட்பால் முற்றிற்று**

---

# *காமத்துப்பால்.

## 1. †இன்ப துன்ப வியல்.

### 38. பொது மகளிர்.

**தருமர் :—**அஃதாவது. நல்லவா தீயவா என்னுமல் வரை யின்றிப் பொருள கொடுபபார் எல்லாாககும் பொதுபபட்ட உடம்பினை உடையராகிக குணத்தினலன்றி வடிவினுற பெண்டிா என்னும் வடிவையுடையவா குணததினது இழிவு கூறப் பட்டதாம.

**பதுமனுர் :—**[அஃதாவது நல்லா தீயா என்னும் வரைவு இன்றிப பொருள கொடுபபாாககெல்லாம பொதுவாய வுடமபினை யுடையராய குணததினலனறி வடிவினுற பெண தனமையுடைய பரத்தையாகளது இயலபு]

**குறிப்பு :—**

'வரைவின் மகளிா',—

பரிமே '—அஃதாவது தநநலம விலைகொடுபபாா யாவர்க்கும் விறபதலலது அதறகு ஆவாா ஆகாதாா எனனுமு வரைவிலாத மகளிரது இயலபு, ஆதலால தமககுரிய மகளிரான் வருங குற்றததின பின் வைக்கப்பட்டது.

மணக '—வரைவின மகளிராவது கணிகையரோடு கலந தொழுகினல் வரும குறறம் கூறுதல. முயககததில் வரை வின்மையால், வரைவின் மகளிரென்று கூறபபட்டது.

---

*இன்பததைபபற்றிய பகுதி.

†ஒருவகையில இனபததையும மறறொரு வகையில் துன்பததையும் ஆககும தனமைபறறிய பிரிவு.

பரிப் :—மேல் மனைவியாமாட்டு மிக்க காதலினால் வரும் குற்றம் கூறினார்; இது கணிகையா காமததினால் வரும் குற்றம் கூறுதலின் பின் கூறப்பட்டது.

பரிதி :—வரைவின் மகளிராவது பொதுமகள் இயறகை கூறல் என்றவாறு.

—குறள். அதி. 92.

371 விளக்கொளியும் வேசியர் நட்பும் இரண்டும்
துளக்கற நாடின்வே றல்ல—விளக்கொளியும்
நெய்யற்ற கண்ணே அறுமே அவரன்பும்
§கையற்ற போதே அறும்.

**தருமர் :**—என்பது. விளக்கு ஒளியும்—விளக்கினது ஒளியும்; வேசியா நட்பும்—பரதகையா உறவும; இரண்டும்—இவையிரண்டும; [1] துளககு அற நாடின—குறறமற ஆராயுங காலத்து; வேறு அலல—வேறுபட்டன அல்ல; [எஙஙனம் எனின] விளக்கு ஒளியும—விளககினது ஒளியும்; நெய அறற கண்ணே அறுமே—நெயயில்லையாயின் இல்லையாம; அவர் அன்பும—அநத வேசியா நட்பும; கை அறற போதே அறும் —கையிற பொருள வறண்ட பொழுதே இல்லையாம் என்றவாறு.

கையிற பொருள உள்ள காலததில் அவர்கட்கு அன்பு உண்டோ எனனில் அப்பொழுது அபபொருளாசையாலே மனம் வேறு செயகை வேறாய அனபு செயவர் அன்றி உள்ளுரிமையால் அனபு செயபவா அலலா என்பதாயிறறு.

---

§கையறற கணணே எனறும பாடம.

[1] துளககு—சஞசலம் எனினுமாம.

**பதுமனுர்** :—[என்றது. விளக்காகிய ஒளியும் பரத்தையர் நட்பும் ஆகிய இரண்டும் ஐயமற ஆராயின் ஒப்புமையுடைய; நெய்யற்ற கண்ணே விளக்கொளியும் அறும்; கைப்பொருள் அற்ற பொழுதே அவர் நட்பும் அறும் ஆதலான் என்றவாறு.

கை—கையிற் கொண்டுள்ள பொருள்].

**விளக்க உரை** :—என்பது. விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும்—விளக்கினது ஒளியும் பரத்தையர் உறவும் இவையிரண்டும்; துளக்கற நாடின் [1]வேறல்ல—குற்றமற ஆராயுங் காலத்து வேறுபாடில்லை; விளக்கொளியும் நெய்யற்ற கண்ணே அறுமே—விளக்கின் ஒளியும் நெய்யில்லையாயின் இல்லை யாம்; அவர் அன்பும் கையற்ற கண்ணே அறும—அவரன்பும் கையிற் பொருள் இல்லையாயின் இல்லை என்றவாறு

**கருத்து** :—வேசையர் அன்பு விலைப் பொருளின் மேலேயே யுள்ளதாகலின் அவரது போகம் இனியதன்று.

## ஒப்புமைப் பகுதி :—

"புதுப் புனலும் பூங்குழையார் நட்பும் இரண்டும்
விதுப்பற நாடினவே றல்ல—புதுப்புனலும்
மாரி யறவே அறுமே அவரன்பும்
வாரி அறவே அறும".

—நாலடி. 370.

"பருகு வாரிற் புல்லிப் பயங்கண் மாறத் துறக்கு
முருகு விம்மு குழலார் போல"

—சீவக. 1415.

---

[1] விளக்கொளி நெய்யிருக்குமளவும் நின்று அது வற்றியபோது நீங்குதல் போல வேசையர் நட்பு. பொருளிருக்குமளவும் நின்று அது வறண்ட போது நீங்கிவிடுதலால 'வேறல்ல' என்றார்.

"நறுந்தா துண்டு நயனில் காலை
வறும்பூத துறக்கும் வண்டு போல்குவம்
வினையொழி காலைத திருவின் செல்வி
யனையே மாகி யாடவர்த துறபபேம்".

—மணி. 18 : 19-22.

"வண்டிற றுறக்குங கொண்டி மகளிரை"

—மணி. 18 . 119.

(க).

372. அங்கோட்டு அகலல்குல் ஆயிழையாள் நம்மோடு
செங்கோடு பாய்துமே என்றாள்மன—
செஙகோட்டின்
மேற்காணம் இன்மையான மேவாது ஒழிநதாளே
காற் கால்நோய் காட்டிக் கலுழ்ந்து.

**தருமர் :**—என்பது. [1]அம கோடு அகல் அலகுல் ஆய் இழையாள்—அழகிய [இருமருஙகுங் கரைபோன்று] புடை பரநத அலகுலாலும தெரிநத அணிகளாலும பொலிவுபெறறவள்; நமமோடு—முனபு நம்முடனே கூட; செஙகோடு [2]பாயதும—மலைககுவடேறிப பாயவோம்; எனருள—என்று சொன்னாள்; காணம இனமையான—[இபபொழுது நமமுடைய கையிற] பொருள் இல்லாமை அறிநதமையால்; கால [3]கால் நோய் காட்டிக் கலுழநது—(தனது) காலுககு வாதநோயைக் (காரணம்) காட்டி அழுது; செஙகோட்டின மேல மேவாது ஒழிநதாள்—மலைக்குவட்டின மேலேறி விழுகைககுப பொருநதுதலைத தவிரநதாள என்றவாறு.

[1] 'அஙகோட்டகல் அல்குல்' இயறகையழகையும, 'ஆயிழை' செயறகை யழகையும புலபபடுததின.

[2] பாயதும—முனனிலையை உளப்படுததிய தனமைப பனமை 'நீயும் நானும' எனறபடி.

[3] கால நோய—வாயு நோய, அஃதாவது வாதநோய.

அழுவது என்னெனில், பின்னும் பொருளுடையரானாலும் வரவேண்டும் என்பது கொண்டு அழுததாம். வரை பாய்த லாவது மானிகள வரைபாய்ந்து உயிரவிட்டால் இப்பொழுது கருதியது மறுமைக்கண் எய்துவா என்னும் விதியால்; மறுமைக் கண்ணும் பிரியாமல் இருக்கைக்குப பொருள் உளவாதல் கூறினா என்பது குறிப்பாற கொள்ளபபட்டது.

**பதுமனார் :**—[என்றது. அழகிய புடை பரநத அல்குலை யுடையாள் நம்மோடு மலைக்குவடேறிப பாயதும் எனறு சொன்னள்; இபபொழுது மலைகுவட்டின்மேல் ஒரு பொருளில லாமையால நமமோடு மேலாது ஒழிநதாள; தன் காலுக்கு வாத நோய உண்டெனறு காட்டிக் கலுழநது பிரியா நினறு என்ற வாறு.]

**விளக்க உரை :**—எனபது. அங்கோட்டு அகலல்குல் ஆயிழையாள—அழகிய புடைபரநத அல்குலினையுடைய ஆயிழை யாள; நமமோடு செஙகோடு பாயதுமே எனறுள்—முன்பு நம்முடனே மலைக்குவடேறிப பாய்தும் என்றுரு சொன்னள; செஙகோட்டினமேல காணம இன்மையான மேவாது ஒழிநதாள் —இபபொழுது மலைகுவட்டின் மேலேறி விழுகைககு நம முடைய கையிற பொருளிலலாமை யறிநது அதறகுப பொருந துதலைத் தவிர்த்தாள; கால் கால் நோய காட்டிக கலுழநது—காலுக்கு வாத நோயைககாட்டி அழுது எனறவாறு.

அழுதது யாதெனனில பின்பும பொருளுடையரானலும் அவா வேணும எனபதுகொணடு வரை பாய்தல எனபது மானிகள வரைபாயநது உயிரவிட்டால் அபபொழுது கருதியது மறுமைக கண்ணே பெறுவா எனனும விதியினன் மறுமைக கணணும பிரியாமலிருககைககுப பொருளுளள காலம் சொனனா எனபதாம்.

**கருத்து :**—வேசையர் உள்ளன்பு கொள்ளாது அன்புடையார் போல் நடிததுப் பொருள் பறிப்பா.

## ஒப்புமைப் பகுதி :—

"அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும்".

—குறள். 911.

"தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகவென் தாரே"

—புறம். 73.

"நாவார வேண்டும் விதனுசொல்லுவார் உனை நான்பிரிந்தால்
சாவேனென் றேயிருந் தொக்கவுண்ணு பாரகளகை தான்
வறண்டால்
போய்வாரும் என்று நடுத்தலைக்கே குட்டும் பூவையர்
....  .  . .  .. . .

(உ).

373. அங்கண் விசும்பின் அமரர் தொழப்படும்
செங்கண்மால் ஆயினும் ஆகமன்—தங்கைக்
கொடுப்பதொன் றில்லாரைக் கொய்தளி ரன்னார்
விடுப்பர்தங் கையாற் றொழுது.

**தருமர் :**—என்பது. அம் கண் விசும்பின்—அழகிய இடத்தையுடைய சுவர்க்கத்தின்; [1] அமரர்—தேவர்களால்; தொழப்படும்—தொழப்படுகிற; செம் கண் மால் ஆயினும் ஆக—சிவந்த கண்களையுடைய] இந்திரனேயானாலும் ஆகுக; தம் கை கொடுப்பது ஒன்று இல்லாரை—மற்றுந் தமமுடைய கையிற் கொடுக்க ஒரு பொருளும் இல்லாதவரை; கொய் தளிர் அன்னார்—கொய்யுந் தளிர் போன்ற நியத்தினையுடைய விலைமாதர்; தம்

---

[1] அமரர் தொழப்படும் செங்கண்மால் என்பதற்குத் திருமால் என்பது பதுமனார் கொண்ட பொருள், எனவே பெருமையும் உருவும் செல்வாக்கும் உணர்த்தியவாறும்.

கையால் தொழுது—தம்முடைய கைகளால் தொழுது; விடுப்பர்—தமமிடத்தினின்றும் போகச்சொல்லிவிடுப்பா என்றவாறு. [மன்—அசை.]

தொழுது விடுதல்—பொருளுடையராய்ப் பின்பும் வருதற பொருட்டாம அனறியும பொருளில்லாரைக கையால் தொழுது விடுவா. பொருளுடையராய வருவாரையும தொழுது தம அகததிற புக விடுவா. பொருளுடையாரையும் பொருளில்லாரையும தொழுது விடுவா என்பது குறிப்பாற கொள்ளப்பட்டது.

**பதுமனார்** :—[என்றது. அழகிய இடத்தையுடைய [1] துறக்கததுள் தேவரால் தொழுபபடும் செஙகண்மாலாயினும் ஆகுக; அவன கையில் பொருளில்லையேயாயின் (அவரை) கொயதளிா போலும மேனியையுடைய பரத்தையா தமது கையால் தொழுது போக்குவா எனறவாறு.

தொழுது விடுபபது—பொருள பெறறுல் கொண்டு வருதறகு.]

**விளக்க உரை** :—எனபது, அஙகண் விசுமபின் அமரா தொழுபபடும—அழகிய இடததையுடைய துறக்கததில் தேவா களால் தொழப்பட்ட; செங்கண்மால ஆயினும ஆக—தேவேநதிர னுகிலும ஆகுக; தம் கைகொடுபப தொன்றில்லாரை—மறறுந தம்முடைய கையிற கொடுக்க ஒரு பொருளில்லாராயின் அவரை; கொய்தளிா அனனர்—கொய் தளிாபோலும நிறததினை உடையவா; விடுப்பா தம் கையால் தொழுது—தமமிடததினின் றும் போகச் சொல்லிவிடுவா தம் கையால் தொழுது என்றவாறு.

கையால் தொழுது எனபது பொருளுடையராலும் பினபும வருதறபொருட்டு என்பதாம.

---

[1] துறக்கம—சுவர்க்கம.

**கருத்து** :—வேசையா விலைப் பொருளைத்தவிர வேறு தகுதிகளை விரும்பமாட்டார்.

(௯).

374. ஆணமில் நெஞ்சத்(து) அணிநீலக் கண்ணார்க்குக்
காணமில் லாதார் கடுவனையர்;—காணவே
†செக்கூர்ந்து கொண்டானும் செய்த
அக்காரம் அன்னார் அவர்க்கு. [பொருளுடையார்

**தருமர்**:—என்பது. ஆணம் இல் நெஞ்சத்து—[1]ஈரபாகம் இல்லாத நெஞ்சினையுடையராய; அணி நீலம் கண்ணார்க்கு—அழகிய நீலோற்பலம் போன்ற கண்களையுடையார்க்கு; காணம் இல்லாதார்—பொருளில்லாதார்; [எத்துணை உயர்ந்தோராயினும்] கடு அனையார்—நஞ்சினோடு ஒப்பார்; காணவே—எல்லோரும் அறிய; செக்கு ஊர்ந்து கொண்டானும் செய்த பொருள் உடையார்—செக்கை ஆட்டியாவது கூலி பெற்றுப் பொருள் செய்திருப்பின் அப்பொருளுடையார்; அவர்க்கு—அப்பொது மகளிர்க்கு; அக்காரம் அன்னார்—சர்க்கரை போலே இனிமையுடையராக இருப்பர் என்றவாறு.

செக்கு ஊர்வது மிகவும் இழிவு. ஆதலால் பொருட் பெண்டிர்க்கு நல்லவர் தீயவர் என்னும் வரையில்லை என்பது தோன்றச் செக்கூர்வாரைக் கூறி அவர் இழிபுரைத்தது. காணவே என்பது நல்(லோர்) இருக்கப் பொருள் நசையால் (யாவர்) பாலும் விருப்பமுறுவார் தன்மையைக் காணக்கடவதோ என அதிசயித்துரைத்ததுமாம்.

**பதுமனார்** :—[என்றது. ஈரமில்லாத நெஞ்சினையுடைய அழகிய நீலக் கண்ணார்க்குப் பொருளில்லாதார் நஞ்சோடு

---

†செக்கூர்ந்து கொண்டாரும் என்றும் பாடம்.

[1] ஈரம்—அன்பு.

ஒப்பர்; நட்புலனுகவே செக்கை ஊர்ந்து கொண்டாயினும் செய்த பொருளுடையராயின் அவர்க்கு அக்காரம் போல்வா என்றவாறு.

ஆணமில் நெஞ்சு—பசையிலா நெஞ்சு; காணம—பொன. கடு—நஞ்சு. காணவே—தான் காணவே.]

**விளக்க உரை :**—என்பது. ஆணமில நெஞ்சதது அணி நீலக் கணணுர்க்கு—நன்மையில்லாத நெஞ்சினையுடைய அழகிய நீலோறபலம போலும கண்ணினையுடையாாகளு; காணம இலலாதாா கடு அனையா—பொருளில்லாதாா நஞசோடு ஒபபா; காணவே செக்கூாநது கொணடாலும செயத பொருளுடையாா—எல்லாரும அறியச் செககை ஆடியும் பொருளுடையரா யிருபபின அவா; அககாரம அனனா அவாக்கு—அவருக்குச சாககரை போலே இனிமையும உடையராயிருப்பா என்றவாறு.

**கருத்து :**—விலைமகளிா பொருளுடையாா இழிந்தோராயினும் அவரையே விருமபுவாா.

## ஒப்புமைப் பகுதி :—

"இழிபவா உயாநதோா மூததோா இளையவா கழியா நோயாற
கழிபவா யாவரேனும கண்வலைப் பட்டு நெஞ்சம்
அழிபவா பொருளகொண் டெள்ளுக்கு எண்ணெய்போ லளநதுகாட்டிப்
பழிபடு போகம் விறபாா"

—திருவிளையாடல. நகர 46.

(௪).

375. பாம்பிற்கு ஒருதலை காட்டி ஒருதலை
தேம்படு தெண்கயதது மீனகாட்டும்—அங்கு
மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார்
விலங்கனன வெள்ளறிவி னுர்.

**தருமர்** :—என்பது. பாம்பிற்கு ஒரு தலை காட்டி—ஒரு தலையினை பாம்பிறகு காட்டி; ஒரு தலை—ஒரு தலையாகிய வால் புறத்தை; தேம்படு தெண்கயத்து—தேன் பொருந்திய பூக்களினுற் பொலிவு பெற்ற தெளிந்த நீரையுடைய பொய்கையில்; மீன் காட்டும்—மீனுககுக் காட்டுகிற; மலஙகு அன்ன செய்கை—விலாங்கு மீனது செய்கைபோலுங குணமுடைய; மகளிர் தோள் சோவார்—விலை மாதர் தோள் சேர்பவா; விலங்கு அன்ன †வெள் அறிவினா— மிருகங்களினது அறிவு போலும் வெளிறுன அறிவை உடையவா என்றவாறு. [அங்கு—அசை.]

மலங்கன்ன செய்கை எனவே அவா மனஙகொள்ளும்படி மனம் வேறு செயகை வேருக அன்பு செய்வா என்பதாம். அத் தன்மையராய்ச் சேருதல் அறிவுடையாாக்குப் பொருநதிய தல்லாமையால் அசசெயகையிறபடுவாாக்கு ஞான அறிவிலலை என்பது தோன்ற விலஙகனன வெளளறிவினா என்ருா.

**பதுமனுர்** :—[எனபது. ஒரு தலை பாம்பிறகுக் காட்டி; ஒரு தலை தேம்படு தெண் கயதது மீனிற்குக் காட்டும் மகளிர் தோள்களைச் சோவாா விலங்கோடு ஒபபா; வெளளறிவுடையார் எனறவாறு.

அவரவாககு வேறறுமை காட்டாமல இனஞ சோநது நின்று அன்பு காடடுதல்; விலங்கு—மிருகம.]

**விளக்க உரை** :—என்பது. பாம்பிற்கு ஒருதலை காட்டி—ஒரு தலையைப பாம்பிறகுக் காட்டி; ஒரு தலை தேம்படு தெண் கயதது [1]மீன் காட்டும்—ஒருதலையைத் தேன பொருநதின

---

†வெள்ளறிவினா—தாம அறிவு முதிரச்சிபெருது பெறருா போனறு தம்மைததாமே மதிக்கும் பயனறற அறிவினர். "வெணமை எனப்படுவது யாதெனின் ஒணமை—உடையம யாம் எனனும் செருக்கு"—எனற திருக்குறளும காணக. [குறள். புல்-844].

[1] மீனகாடடும்—ஙானகாம வேறறுமைத தொகை.

பூக்களையுடைய தெளிந்த பொய்கையின் மீனுக்குக் காட்டுகிற; மலங்கன்ன செய்கை மகளிர தோள் சேர்வார—மலங்கினது செய்கை போலுஞ் செய்கையையுடைய மகளிர தோளினைச் சேர்வார்; விலங்கன்ன வெள்ளறிவினர்—விலங்கோடொப்ப வெளிறான அறிவுடையார் என்றவாறு.

மலங்கு என்பது விலாங்கு என்னும் மீன். மலங்கன்ன செயகை யென்பது……… …..கொளளும்படி வேறு பாடற அனபு செயகையாம.

**கருத்து** :—வேசையா பலாக்கும் ஆசைகாட்டி மயக்குபவர் ஆதலின் அவருடன் சேரலாகாது.

## குறிப்பு :—

தலைப்புறம பாம்பு போனறும வாறபுறம் மீன் போன்றும் இருககும ஒருவகை மீன விலாஙகு மீன எனபபடும. இது பெரும பாம்பு தனனை மீன எனறு பிடிக்க வருகையில அதறகுத தலைபபுறததைக காட்டியும், பெரு மீன், தன்னைப பாம்பெனறு பிடிக்க வருகையில அதறகு வாற புறததைக காட்டியும இனம போன்று உலவி வஞசிததது வாழவல்லது. இவவாறே வேசையா பொருளுடையார பொருளிலாா யாவரிடததும விருப்புறறும வெறுபபுறுதும இனம போனறு ஒழுகி வஞசித்துப் பொருள பறிதது வாழ்பவர் என்க. இவவஞசனை அறிநதால் அவாகளது இனபம வெறுக்கபபடும். வெறுமல் இன்பம் நுகாவாா அவ வஞசனை அறியாதவா ஆதலின் வெளளறிவினா எனறாா.

(ரு).

376\. பொத்தநூற் கல்லும் புணர்பிரியா அனறிலும்
†நிச்சலும் நம்மைப்பிரியலம் எனறுரைத்த[போ(ல்)
பொற்றொடியும் போர்ததகர்ககோ டாயினள்
நிற்றியோ போதியோ நீ. [நனனெஞ்சே!

†'நிததலும்' பாடபேதம.

**தருமர் :**—என்பது. நல் நெஞ்சே—என்னுடைய நல்ல நெஞ்சமே! பொத்த—[1]பொதுதத; நூல் கல்லும்—நூலிற் கோக்கப்பட்ட மணியும்; புணா பிரியா அன்றிலும்—இணை பிரியாத [2]அன்றிலும்; போல்-போல; நிச்சலும்-எப்பொழுதும்; நம்மை பிரியலம்—'நமமைப பிரியோம்' எனறு உரைத்த—என்று [முன்பு] சொன்ன; பொன் தொடியும்—பொன்னின் தொடியை உடையவளும; போர் தகர் கோடு ஆயினள்—[இப்போது] பொருகின்ற கிடாயினது (கொம்பு) போலத [3]திருகி நினருள். நீ—; நிறறியோ—இனனும இவளை இனபுறறு நிறகின்றயோ; போதியோ—எனனுடன பொருநதி வருதறகு உரியையோ? என்றவாறு

பொதத நூற கல் என்பதைப [4]பணையாா கடையுஞசாணை என்று பொருளாககிச் சாணையிறபண்ணபபட்ட அரக்குமணைலுங் கூடத தேய்வது போல அவன் கெடடபோது கெடவும வாழநத போது வாழ்வுமாகச் சொன்ன பரத்தையா நெஞசில திண்மை சொன்னதாம். பொருளறற வேறுபாடானது கணடு அவர் மனக்கொடுமை கூறியதுமாம்.

**பதுமனூர் :**—[என்றது. பொதுதத நூலிலே கோர்க்கப் பட்ட மணியுந துணையைப் பிரியாத அன்றிலும போல நாள் தோறும் நமமைப பிரியலம என்றுரைதத பொறறொடியை உடையாளும் போாததகாக் கோடுபோல ஆயினள. நல்ல நெஞசமே! நீ இவள்மாட்டே நிற்றியோ? என்னோடே போதியோ என்றவாறு.

---

[1] பொதுதத—துளைதத.

[2] அனறில—ஒருவகைப பறவை; இதன ஆணும பெணணும் எனறும் இணைபிரியாதிருக்கும, ஒன்றைவிடடு ஒனறு பிரியினும அததனைபங் தாஙகாமல் கூவிக கூவி அழைததுக் கூடாவிடின உயிாவிடும.

[3] திருகிநிறறலாவது—குணம் மாறுபட்டு நின்றல்.

[4] சாணைக்கல செயவோா.

பொத்த நூற் கல்லுப பனையார் சாணை என்றுமாம். தகர்க் கோடு பின்பு திருகி நிற்றலின் நீ இவள் மாட்டு நிற்றியோ எனனுடனே போதியோ என்றது. சாணை அரக்கு மணலும் சேரச் செயதது; உவமம்.]

**விளக்க உரை:**—என்பது. பொத்த நூற கல்லும் புணா பிரியா அனறிலும போல—பொதது நூல் சோக்கப்பட்ட மணியும புணாநது பிரியாத அன்றிலும போல; நிச்சலும நம்மைப் [1]பிரியலம் எனறுரைத்த—எப்பொழுதும நம்மைப் பிரியோம் எனறு சொனன; பொறறொடியும போாததகாக் கோடாயினள—பொறறொடியை உடையாளும பொருகின்ற கிடாயின் கொமபுபோலத திருகிவிட்டாள்; நனனெஞ்சே—நலல நெஞசமே! நிறறியோ போதியோ நீ—இனனமும இவவளிலே நிறக ஆசையுடையையோ நமமுடனே பொருநதி வருதறகு உரியையோ எனறவாறு.

பொததநூற் கல என்பது [2]பனையாா கடையுஞ் சாணை என்று பொருள சொலலி அரககு மணலுங கூடத தேய்வது போல அவன் கெட்டபோது கெடவும வாழநதபோது வாழவு மான பரத்தையா நெஞசில் திண்மை சொன்னதாம். பனையாா சாணை அரககும மணலுங கூட்டிப பண்ணபபடும்.

**கருத்து:**—சொல்வேறு செயல வேறான வேசையா வழிச செலலாமல் மனத்தை அடககவேண்டும.

(சா).

---

[1] பிரியலம்—ஆயததாரையும் உட்படுததிய தனமைப பனமை.

[2] சாணைககல—அரககும மணலும கூட்டிச செயயப்பெறுவது இக் கலலில இரததினஙகளைத தேயககையில் மணலும கூடததேயும, அது போல அவன கெடடபோது தானும கெடவும வாழ்ந்தபோது தானும் வாழவும இவவிதம வஞ்சனையாகக் கூறிய வேசையா மனததிண்மை நோககிச சாணைககலலை உவமையாககினா.

377. ஆமாபோல் நக்கி அவர்கைப் பொருள்கொண்டு
சேமாபோற் குப்புறூஉம் சில்லைக்கண் அன்பினை
ஏமாந்து எமதென்று இருந்தார் பெறுபவே
தாமாம் பலரால் நகை.

**தருமர்:**—என்பது. ஆமாபோல் நக்கி—காட்டுப் பசுவானது நக்குமதுபோலக் குழைவு செய்து; அவர் கைப் பொருள் கொண்டு—அவர் கையிலுள்ள பொருளெல்லாம் கையுறக் கொண்டு, சேமா போலக் குப்புறும—(பின்பு) பொலியெருது போலக் குப்புறுக் கொள்ளும்; சில்லைக் கண் அன்பினை—[1] சிலவீடு போன்ற நொய்தாய குணமுடைய பரத்தையரிடத் தன்பினை; ஏமாந்து—உட்கொண்டு (மயங்கி); எமது என்று இருப்பார்—'இவர் நம் வயத்தவர்' என்று இறுமாந்திருப்பவர்; பலரால் நகை பெறுப—பிறர் நகைக்கும் நகையைப் பெறுவர் என்றவாறு. [தாம், ஆம் அசைகள்].

பலரால் நகையெனவே, கைப்பொருள் அறு முன்னம் பரத்தையர் வயத்தனாய் இருப்பானை நோக்கி, இப்பொருள் உள்ளளவும், காட்டுப் பசு நக்குவது போல மனங்கொள்ள ஒழுகி அப்பொருள் கைக்கொண்டபின், சேமா குப்புறுவது போல மாறுபாடாவர் இவர் என்பது அறியாது அவரைத் தம வயத்தராக எண்ணி இறுமாந்திருப்பது இவர் அறிவின்மை யல்லவோ என்று பழித்து நகையாடியதாம். காட்டுப் பசு நக்கும் போது உணர்வுகெடும். பரத்தையரும் தம் உபாயத்தினால் உணர்வு கெடச் செய்து பொருள் கொண்டெனவே, சொக்குப் பொடி போட்டுப் பொருள் கொள்வாரைப் போலக் கொண்டதாம்.

---

[2] சிள்வண்டு, இதன் குணமாவது தேனுள்ள பூக்களைத் தேடிச்சென்று தேனை உண்டு நீங்குதலாம், இவ்வாறே வேசையரும் செல்வமுள்ள மக்களைத் தேடிச்சென்று செல்வத்தைப் பறித்து நீங்குவர்; "நயனில் காலை—வறுமபூத் துறக்கும் வண்டு போல்குவம்" என்ற மணிமேகலையும் காணக.

**பதுமனார்** :—என்றது. ஆமாபோல் அன்புற நுகர்ந்து அவர் கைப்பொருளை அறக்கொண்டு சேவாகிய மாப்போற குதிததோடும சீரியரல்லாத கணிகையர் நண்பினை, ஏமமாகக் காதலிப்போம் என்று இருநதார பெறுவர் தாம பலரால் நகைக்கும் நகையை என்றவாறு.

நக்கி—அவா இனபுற நுகர்ந்து; குப்புறும்–குதிதேதாடும; சில்லையர்—சீாமையில்லாதவா; ஏமாாவலம்—ஏமமாகக காதலிப் போம.

**விளக்க உரை** :—என்பது. ஆமாபோல் நக்கி அவர் கைபபொருள கொண்டு—ஆமாவைபபோல நககி அவா கைப் பொருளை வாஙகிக் கொண்டு; சேமா போல் குபபுறும்—சேமா போலக குதிததுபபோம; [1]சில்லைக்கண் ● அன்பினை—சிச்சிலி போலும அனபினையுடையாா மகிழச்சியினை; ஏமாநது எமது எனறு இருபபாா—மெய்யென்று இறுமாநது தனுசமெனறு இருபபாா; பெறுபவே தாமாம பலரால் நகை—பின் தாம பலரும் சிரிக்கும சிரிபபினைப பெறுவா என்றவாறு.

ஆமா போல் நக்குதல்—அன்பொதத காலததில் நாவினுல் நுகரும் வசிகரணம. ஆமா என்பது நக்கி உயிரினை வாங்குமது போலக் கைப்பொருள உளளது வாஙகி அவனைககெடுத்துவிடுவா என்பதாம்.

**கருத்து** :—வேசையர் உறவு முதலில் மகிழச்சியூட்டினும், பினபு இகழ்ச்சிக் கிடமான பல தீமைகளையும் உண்டாக்கும்.

## ஒப்புமைப் பகுதி :—

"தீதிலாா திளைப்பினுமான் செல்வமே பெரிது மொத்தார்".
—சீவக. 1.189-4.

---

[1] சில்லை—தீயொழுக்கம உடையாள் என்றுரைபபினுமாம்.

"நாவின் புறநக்கிக் கொலலுங் கவயமாபோல்"

—நீதிநெறி. 75.

(எ).

378. ஏமாநத போழ்தின இனியார் போன்று
இன்னாராய்த்
தாமாழ்ந்த போதே தகர்க்கோடாம்—மானோக்கின்
தந்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே
செந்நெறிச் சேர்தும்என பார்.

**தருமர்** :—என்பது. [1]செம்நெறி சோதும் என்பார்—மேறசெல்வத்துககு உறுதியாய நல்ல நெறிகளைச் சேரவேண்டும் (எனறு கருதுபவர்,) ஏமாநத போழ்தின் செல்வமுண்டாகிய போழதின்; இனியாா போன்று—அவா மேல இனிமையுடையாா போனறு, இனனாராய—(மனததிற) பொல்லாஙகுடையராய; தாம ஆழநத போதே—அவா தாழநத காலததிலே; தகா கோடு ஆம—கிடாயக் கொமபு போலத் திருகி நிறகும; மான நோக்கின—மான் போனற நோககததையுடைய; தம் நெறி பெண்டிா—தமது (களவு) நெறியில திரியாத பொது மகளிரது, [2]தடமுலை சேரார—தடமுலையிற சேரார எனறவாறு.

தநநெறிப பெண்டிராவது தாம் பொருள கொளவதறகு ஏறபுடைததாய ஒழுகும நெறியே அனறித தரும நெறியை உணராதவா எனபதாம.

**பதுமனார்** :—[என்றது. காமுகராற் பொருள் பெற்று மகிழ்ச்சி எயதினபோது இனியாா போன்று அவர் பொருளை அறககொணடு தாம நிறைநத பொழுது இன்னாராய்த தகாக் கோடுபோல அம மான நோககின தம களவு நெறியினகண்

---

[1] செநநெறி—செவவிய வீட்டு நெறி.

[2] தடமுலை—பெரிய முலை.

நின்றொழுகும் பெண்டிர் தடமுலையைச் சேரார் நல்ல நெறியைச் சேரும் என்று கருதுவார் என்றவாறு.

ஏமாந்த போழ்தின்—காமுகரால் பொருள் பெற்று மகிழ்ச்சி எய்தினபொழுது, இன்னாராய தாம் ஆர்ந்தபோதே—பொருளை அறக்கொண்டு தாம நிறைந்தபொழுதே; இன்னாராய, தம் நெறி—பொதுமகளிர் தாம் செய்யும கள்வு நெறி. செந்நெறி—செவ்விய நன்னெறி.]

**விளக்க உரை :**—என்பது ஏமாந்த போழ்தின் இனியார் போன்று—காமுகரால் பொருள் பெற்று மகிழ்ந்த பொழுது அவர்க்கு இனிமையுடையராய்; இன்னாராய தாமார்ந்த பொழுதே—அவரது பொருளை அறக்கொண்டு தாம நிறைந்த பொழுது; இன்னாராய—அவர்க்கு இன்னாதவராய; தகாக்கோடு ஆம—கிடாயின கொமபுபோலத திருகலையுடையராம; மான் நோக்கின—மானபோலும பார்வையுடையராய; தம நெறிப பெண்டிர்—தமது கள்வு வழியைத் தப்பாமல நிற்கும் பொதுமகளிருடைய; தடமுலை சேராரே செந்நெறிச் சேரும் என்பார்—முலையைச சேரார நல்ல நெறியைச சேரும் என்று கருதுவார் என்றவாறு.

**கருத்து** —அருள் ஒழுக்கமுடையார் பொருட் பெண்டிரை விரும்பிக் கூடமாட்டார்.

## ஒப்புமைப் பகுதி :—

"பொருட்பொருளார் புன்னலந் தோயார் அருட்பொருள் ஆயும் அறிவி னவர்".

—குறள். 914.

"பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின் மாண்ட அறிவி னவர்".

—குறள். 915.

"அம்மி துணையாக ஆறிழிந்த வாறொக்கும்
கொம்மை முலைபகர்வார்க் கொண்டாட்டம்—இம்மை
மறுமைக்கு நன்றன்று மாநிதியம் போக்கி
வெறுமைக்கு வித்தாய் விடும்.

—நலவழி. 20.

(அ).

379. ஊறுசெய் நெஞ்சந்தம் உள்ளடக்கி ஒண்ணுதலார்
தேற மொழிந்த மொழிகேட்டுத்—தேறி
எமரென்று கொள்வாருங் கொள்பவே யார்க்குந்
தமரல்லர் தம்முடம்பி னார்.

**தருமர்:**—என்பது. ஒள [1] நுதலார—ஒள்ளிய நுதலினை யுடையார; ஊறு செய் நெஞசம்—(தமமை விரும்பினவாக்குத தாம பின்பு) வருததஞ செய்யும் மனததினை; தம் உள் அடக்கி—புலப்படாமல தமமுளளே அடக்கிக்கொண்டு; தேற மொழிந்த மொழிகேட்டு—தெளியச் சொல்லிய வார்த்தையைக் கேட்டு; தேறி—அதனை நம்பி; எமா என்று கொள்வாரும் கொளபவே—எமக்கு இவா தஞசம் என்று உட்கொண்டு திரிபவா கோட்பாடும் ஒரு கோட்பாடோ; தம் உடம்பினா—தம்முடம்பைத் தமக்கே உரிததாகவுடைய விலைமாதா; யாாக்கும் தமா அல்லா யாவர்க்கும் உறவலலா. எனறவாறு.

தமரல்லர் என்பது குடி குலத்தாலும் அழகினாலும் பொருளினாலுந தம் முபாயததினாலும் வசிபபிக்க வல்லவர்க்கும் பொருள் கொள்ளும் அளவும் உறவாய் இருப்பதன்றி உள் உரிமையால் உறவாகாா என்பதாம். வயமாக்குவாாக்கு வயமாகாது தம் மனங்கொண்டவாறே தம்முடம்பைத் தமக்கே உரிமையாக ஒழுகலால் அவரைத் தம்முடம்பினா என்றாா். இத் தன்மையாரை விரும்பி அவா வயமாவது அறிவினமையல்லவோ என்று உயர்நதோா இரக்கமுறறு உரைததாம்.

[1] நுதலாா—நெற்றியையுடைய வேசையர்.

**பதுமனார் :**—என்றது. குற்றஞ் செய்யும் நெஞ்சினைத் தம்முள்ளே கரந்தொடுக்கி ஒள்ளிய நுதலையுடையார் தமக்கு அன்புடைமையைத் தேற மொழிந்த மொழியைக் கேட்டு அதனை மெய் என்று துணிந்து மற்றவரை எமர் என்று கொள்வாரும் கொள்வர் யாவர்க்குந் தமரல்லர் [1]தமக்குரிய உடம்பினை யுடையார் என்றவாறு.

ஊறு—பொருளறுரா செய்யுங் குற்றம். தேற—அன்புடையர் என்று தேறும்படி; தம் உடம்பு—தமக்கே உரிய வுடம்பு.

**விளக்க உரை :**—என்பது. ஒண்ணுதலார்—ஒள்ளிய நுதலினையுடையார்; ஊறுசெய நெஞ்சந் தம்முளடக்கி—தாம் பின்பு அவர்க்கு வருத்தஞ் செய்யும் நெஞ்சினைப் புலப்படாமல் உள்ளே அடக்கிக் கொண்டு; தேற மொழிந்த மொழி கேட்டுத் தேறி—தேறச் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு நம்பி, எமரென்று கொள்வாரும் கொள்பவே—எமக்கிவர் தஞ்சம் என்று மனங்கொண்டு திரிபவரது கோட்பாடு ஒரு கோட்பாடோ? யார்க்கும் தமரல்லர் தம்முடம்பினார்—யாவர்க்கும் தமரல்லாத தம்முடம்பைத் தமக்குரித்ததாக வுடையவர். என்றவாறு.

யார்க்குந் தமரல்லர் என்பது குலத்தாலும் பொருளாலும் வடிவழகாலும் சம்போக கரண விதிகளாலும் வசிப்பிக்க வல்லவர்க்கும் தமரல்லர் என்பதாம்.

**கருத்து :**—வேசையர் தமது உடம்பைப் பிறர்க்கு உரிமை யாக்காது தமக்கே உரித்ததாக வுடையவராவர்.

(கஅ).

[1] அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு என்பவாகலின் அன்பில்லாத வரான இவ்வேசையர் தமக்கே உரித்தான உடம்பையுடையவர் என்பது கொண்டு 'தம்முடம்பினார்' என்றார்.

380. உள்ளம் ஒருவன் உழையதா ஒண்ணுதலார்
கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாம்—தெள்ளி
அறிந்த விடத்தும் அறியாராம் பாவம்
செறிந்த வுடம்பி னவர்.

**தருமர்:**—என்பது. உளளம் ஒருவன் உழையது ஆ—தமது உளளம் ஒருவனிடத்திலே தங்கியிருககு; ஒண்ணுதலார்—ஒளளிய நுதலினையுடையார்; கள்ளததால் செய்யும கருத்து எல்லாம்—களவான அன்பினைச் செயயும் நினைவுகளெல்லாம்; தெளளி அறிந்த இடதது௦—கொழிததறிநதவிடததும்; பாவம் செறிநத உடமபினவா—தீ வி னை க ள நிரமபிய உடம்பினை யுடையவா; அறியாா—அறியாதவராவா. என்றவாறு. [ஆம்—அசை.]

களளததாற செய்யுங கருத்தாவது பொருள் கொடுப்பவா மனங்கொள்ளுமபடி கரண உததிகளாலே சமபோகததை முடிய நடததி ஒக்க முடிததலாம். அதனைத தெள்ளி அறிதலாவது சமபோகததில் அமுதகலை, விஷகலையாகிய, குறிபபுககளால தோஷம இது குணம இது என்று நியமிததறிதலாம். கொழிததல்—ஆராயதல.

**பதுமனர்:**—என்றது. உளளம் வேறொருவன் மாட்டதாக ஒள்ளிய நுதலையுடையாா களவினலே அன்புடையாா போலச் செய்யுங் கருதநெல்லாம் கொழிததறிநதவிடததும் அறியாராவர் தீவினை செறிநத வுடம்பினையுடையாா எனறவாறு.

இதற்கு, தமமுடைய உளளம் ஒருவன்மாட்டுத தஙகுமதாகப பாவிதது விளஙகின நுதலையுடையாா களவினலே அன்புடையார் செய்கைகளைக் கறறு வைததுச் செய்யுங கருத்தையெலலாம் வேறுபட அறிந்தவிடததும இவள் மறறைக் கணிகையரைபபோல விரகுடையாளலலள் எனக்கு அன்புடையள் என்று தன் அன்பினலே மயஙகுபவள் கருததறியாராம பாவத்தினலே செறிந்து இன்பமல்லாததனை இன்பமென்று மேல் விழும்

உடம்பை யுடையார் [என்றுரைபபாரும் உளா.]

அன்புடையார் செய்கை—நினைவை அறிந்து அதற்கு ஈடாகத தாழுவொழுகுதல. களளததாற செய்யுங் கருததெல்லாம் தெள்ளி அறிந்தவிடத்தும்—காமததிறத்தாற் சொல்லப்பட்டன வெல்லாம தனித்தனியே வேறுபடுத்து அறிநதவிடததும்.

**விளக்க உரை :**—என்பது. ஒண் ணுதலார்—ஒள்ளியு நுதலைபுடையார்; உளளம ஒருவன் உழையதா—தமதுளளம் ஒருவனிடததிலே யிருப்ப; களளததாற செயயும கருததெல்லாம —களளமான அன்பினைச் செயயும நினைவுகள எல்லாம; தெளளி அறிநதவிடத்தும—கொழிததறிநதவிடததும்; அறியாராம பாவஞ செறிந்த உடம்பினவா—அறியாதாராவா தீவினை செறிநத வுடம்பினா என்றவாறு.

கள்ளததாற செயயுங் கருததாவது அவர் மனங்கொள்ளும படி கரணவித்திகளாலே சமபோகததை முடிய நடத்தி ஒகக முடிததல். அதனைத தெள்ளி அறிகையாவது அநதச சமபோக காலத்தில் [1] அமிர்தகலை, விஷகலைபாகிய குறிப்புகளையறிநது இது தோஷம் இது குணம் என்று நியமிததறிதலாம்.

**கருத்து**:—வேசையரது களளத்தை அறிநதாலும் பாவிகள மனம அவா மீதேயே செல்லும.

## ஒப்புமைப் பகுதி :—

"நிறைநெஞசம இல்லவா தோய்வா பிறநெஞ்சின
பேணிப் புணாபவா தோள்".

—குறள். 917.

(ம).

---

[1] அமிர்தகலை—சநதிரகலை. "அமிாதகலையினீரை மாநதி"
—(சிலப. 5, 208. உரை.)

## 2. *இன்ப வியல்.

### 39. †கற்புடை மகளிர்.

**தருமர் :—** அஃதாவது. கற்பியல் மகளிர்; அக் குல மகளிர்க்கு இயல்பாகிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நான்கினுலும் உள்ள நிறைவுடைமையும், கடைப் பிடியும் கன்னிகையான காலமே தொடங்கித் தமக்கு இயற்கையான அறிவுடைமையுமாம்.

**பதுமனர் —** அஃதாவது. குல மகளிராயத் தமக்கு இயல்பாகவுடனே வளரும் நாணம், மடம், அச்சங்களினும் விழுமிதாகக் காக்கப்பட்ட கற்பினைச் சிறிதும் வழுவாமல் உடைய மகளிரது தன்மை கன்னிகையான காலத்துளதாகிய சுதந்திரத்திலும் தேவதன்மங்களினும் கருத்துப் பிறவாமலும் பாதத்தாலே சகல தெய்வங்களும், சகல தன்மங்களும், அவனுக்கான தொழில் செய்வதே சகல விரதங்களுமாகப் புத்தி பண்ணுதலும், தன்னலந் தீங்குகளினும் அவன் [1]சந்நிதியில்லாதவிடத்தும் அவனையே புத்தி பண்ணியிருத்தலும் தந்தை, தாய், சுற்றத்தவர்கள் முறைப் பெயரானவையே அறிந்தாற்போல உலகத்து வேறுள்ள பேரையும் மனிதர் என்னும் மாத்திரமே அறிந்து தன் புருடனைப்போல இவர்களும் புருடர் என்று அவர்கள்மேற் புருட பகுதி பிறவாமலும், அவன் கரணங்கள், அவன் கருத்துவழி நிகழ்ந்தாற்போலத் தான் அனுகூலமாய ஒழுகுதலுமாகிய பதிவிரதா பாவ மதனை வழுவாமல் உடைய மகளிரது தன்மை கூறுகின்றது.

**குறிப்பு :—**

'வாழ்க்கைத் துணைநலம்' '—

பரிமே '—அஃதாவது அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய

---

*இன்பத்தைப்பற்றிக் கூறும் பிரிவு.

†கணவன் கற்பித்த நெறியில் நிற்கும் குலமகளிரது தன்மை.

[1] சந்நிதி —முன்பு.

இல்லாளது நன்மை. அதிகார முறைமையும் இதனுலே விளங்கும்.

மணக் '—வாழக்கைத துணைநலமாவது வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது பெணமை இலக்கணம் கூறுதல.

பரிதி ;—வாழக்கைத துணைநலமாவது இலலறம நடத்தும் போது பதிவிரதை வேணுமெனனும முறையாலே உணர்ததுதல்.
—குறள அதி. 6.

381. அரும்பெறற் கற்பின அயிராணி யனன
பெரும்பெயர்ப் பெண்டிர் எனினும்—விரும்பிப்
பெறுநசையா றபினனிற்பார் இனமையே பேணும்
நறுநுதலாள் நனமைத துணை.

**தருமர் :**—என்பது. அரும பெறல் கறபின்—பெறுதற கரிய கறபினையுடைய, அயிராணி அனன—இநதிராணிபோலும; பெரும பெயாப பெண்டிா எனினும—(செல்வச செருககாற) பெரிய பெயரினையுடைய பெண்டிராயினும; விரும்பிப பெறு நசையால—தபமை ஒருவா விருமபிப [நுகரும வேட்கையால்] பின நிறபாா இன்மையே—இரநது குறையுறுவாா இல்லாமையை, பேணும—பாதுகாககும; நறு நுதலாள—நறுவிய நுதலினை உடையாளே, நன்மை துணை—காதலன் நனமைக்குத துணை யாவள் என்றவாறு.

இரநது குறையுறுவாா இல்லாமல் பாதுகாபபது தன்னை அழகு செயது பலரறியப போதாமல் அழுக்கடைந தடங்கி யிருததலாம.

**பதுமனர் :**—என்றது. பெறுதறகரிய கறபினையுடைய அயிராணியே போனற பெரும பெயரையுடைய பெண்டிரே எனினும விருமபித தமமை நுகரும [1]நசையால் தமமைப்

[1] நசை—விருப்பம.

பின்னிரந்து குறையுறுவாரில்லாமை தமக்குண்டாக வேணும் என்று அதற்குத் தக்க ஒழுக்கத்தைப் பேணும் நறுநுதலாள் காதலர் பெறும் நன்மைக்குத் துணையாவள் என்றவாறு.

பொருள் நசையால் பிறர் இரந்து பின் நிற்பார் இன்மையைப் பாதுகாக்கும் நறுநுதலார் என்றுமாம். அயிராணி —இந்திராணி.

"**விளக்க உரை :**—என்பது. அரும் பெறற் கற்பின் அயிராணி அன்ன—பெறுதற்கரிய கற்பினையுடைய இந்திரன் தேவிபோலும்; பெரும் பெயர்ப் பெண்டிர் எனினும்—செல்வச் செருக்கையுடைய பெரிய பெயரினையுடைய பெண்டிராயினும்; விரும்பிப் பெறுநசையால் பின் நிற்பார் இன்மையே பேணும்—மனைவிரும்பி யிரந்தும் குறையுறுவார் இல்லாமையைப் பாது காக்கும், நறுநுதலாள் நன்மைதுணை—நறுவிய நுதலினை யுடையாள் அக்காதலர் நன்மைக்குத் துணையாவாள் என்றவாறு.

இரந்து குறையுறுவார் இல்லாதபடி பரிகரித்தலாவது தன்னை அழகு செய்யாமல் அழுக்கடைந்திருத்தல் என்பதாம்.

**கருத்து :**—தன்னை விரும்புவார்க்கு இடங்கொடாத கற்புடை மகளே நாயகனுக்கு உற்ற துணையாவாள்.

## மேற்கோள் பகுதி :—

நச் :—"காமஞ்சான்ற கடைக்கோட் காலை.. இறந்ததன் பயனே" என்ற சூத்திரம் காஞ்சியாகாது என்பார், அதற்கு இச்செய்யுளை உதாரணம் காட்டி, "இதனுள் அருந்ததியைப் போலுந் தமக்குப் பெரும் பொருள்களை நச்சுதலாலே இரப்பாரது வறுமையே விரும்பிப் பாதுகாத்து, அவர்க்கு வேண்டுவன கொடுக்கும் மகளிர், நாஞ்செல்கின்ற வானப்பிரத்தம் காருகத் திறத்த, துணையாவரெனத் தலைவன் கூறவே தலைவியும் பொருள் களிற் பற்றற்றாளாய் யாமுந் துறவறத்தின்மேற் செல்வாமெனக் கூறியவாறு காண்க" என்று உரைகூறிப் போவர்.

—தொல். பொருள். சூ. 192.

குறிப்பு :—

கற்பாவது—தன் கணவன் கறபித்த அறநெறியில் வழுவாது அவன்மாட்டு அன்புடையளாய் ஒழுகுதல்.

நகுஷன் இநதிரபதவி பெறறுத தன்பால் ஆசைமிக்கு வநத போதும தன கணவனுகிய முனனைய இநதிரன்மாட்டே அன்பு கொண்டு கறபுநெறி வழுவாது நினறமையால் இநதிராணியை உவமையாககினுா.

பினனிறபாா இனமையே பேணும் என்பதற்குத தன் மனைககு வநத விருநதினா குறிபபுணாநது அவரை இரவலராகச் செயயாமல ஏறறு உபசரிதது ஒழுகுதலை மேறகொள்ளும் எனறு பொருள் கொள்வாரும் உளா.

(க).

382 குடநீரட்டு உண்ணும் இடுக்கட் பொழுதும்
கடல்நீர் அறவுண்ணும் கேளிர் வரினும்
கடனீர்மை கையாறுக கொள்ளும் மடமொழி
மாதர் மனைமாட்சி யாள்.

**தருமர்** —எனபது. குடம நீா அடடு உணணுமம—ஒரு குட நீராலே ஆககி உணணுகிற; இடுககண் பொழுதும—மிடி வநதுறற காலததும; கடல நீா அற உணணும கேளிாவரினும—கடலினது நீரை அறவுணபா எனனுமபடி மிகுதியாக உறவின முறையாாவரினும, கடல் நீாமை—அநதக் கடலினது நீாமையை; கை ஆறு ஆ கொளளும—ஒழுககமாகக கொளளும; மடமொழி மாதா—மெதனெனற மொழியினையுடைய மகளிா; மனைமாட்சி யாள—மனைவாழககைககு மாட்சிமையுடையளாம. என்றவாறு.

கடல நீாமை கையாறுக கொளளுதலாவது: விருநதினர் மிகவும வநதாா எனறு அதறகு வருநதாமல என்றும ஒரு நெறியாயக் கடலினது தனமை போலப பெருமையுடைத்தாய் அடஙகியிருததலாம.

**பதுமனார் :**—என்றது. ஒரு குடத்து நீராலே அட்டுண்டு வாழும் வறுமை வந்தவிடத்தும் கடலின் நீர் அறவிட்டு ஊட்டல் வேண்டும் கேளிர் பலராயினும் கடப்பாட்டினையே ஒழுக்க நெறியாகக் கொள்ளும் மடமொழி மாதரார் மனைவாழ்க்கை மாட்சிமையுடையாள் என்றவாறு.

**விளக்க உரை :**—என்பது. குடநீர் அட்டுண்ணும் இடுக்கட்பொழுதும—ஒரு குட நீராலே ஆக்கியுண்ணும் மிடி வந்த காலத்தும்; [1]கடல் நீர் அறவுணணும கேளிரவரினும—கடல நீரை அறவுணணததகக உறவின முறையார மிகவும வரினும; கடல் நீரமை கையாறுக கொளளும்—அந்தக் கடலின் நீரமையை ஒழுகக நெறியாககொளளும, மடமொழி மாதா மனை மாட்சியாள—மெத்தென்ற மொழியினையுடைய மகளிர் மனைக்கு மாடசிமையுடையாளாம் என்றவாறு.

ஒழுகக நெறியாகக் கொள்ளுகையாவது விருந்தினர் மிகவும வந்தாரகள என்பதற்கு வருந்தாமல் அதற்கு முன்னுள நடந்த தனமை போல. இன்றும அந்த இயல்பால அல்லோ வந்தது என்று ஒருதன்மையாய் இருத்தல.

**கருத்து :**—வறுமைக் காலத்தும் தளராது தன் கடமைகளை நிறைவேற்றுபவளே மனைமாட்சியுடையவளாவாள.

## மேற்கோள் பகுதி :—

நச் :—"நன்னெறிப் படரும் தொல்நலப் பொருளினும்—இல்லறததிறகு ஓதிய நெறியினகண் தலைவி கல்லாமற பாகம்பட ஒழுகும தொன்னலஞ் சான்ற பொருளினகண்ணும்; பொருள வருவாய இலலாத காலமும இலலற நிகழததுதல் இயல்பாக விருத்தற்குத் தொன்னலமென்றார.

உ-ம :—"குட நீரட் டுண்ணும்.... ..மனைமாட்சி யாள"

[1] கடலநீர் அறவுணணும என்றது உறவினரின்மிகுதியை உணர்ததியது.

இஃது ஒருகுடம் நீரால் சோறமைத்து உண்ணுமாறு மிடிப்பட்ட காலத்தும மனைக்கு மாட்சிமையுடையாள கடல் நீரை வறற உண்ணுங் கேளிரவரினும் இல்லற நிகழததுதலைக் கைக்கு நெறியாகக் கொளளுமெனத தலைவன் வியந்து கூறினன்'' என்பா.

—தொல. பொருள். சூ. 146.

## ஒப்புமைப் பகுதி :—

''இல்லது படைக்கவும் வல்ல ளுள்ளது
தவச்சிறி தாயினும மிகபபல ரென்ளுள
நீணெடும் பநத ரூணமுறை யூட்டும
இறபொலி மகடூஉப போல''.

—புறம. 331. 6-9.

## குறிப்பு :—

வாழக்கைத துணைவியின் கடமைகளாவன :— துறவோரப பேணல், விருநதெதிர் கோடல், சுறறந தழுவல், வருவாயக்குத தக்க வாழககை நடததல முதலியன.

(உ).

383. நாலாறும் ஆறாய் நனிசிறிதாய் எப்புறனும்
மேலாறு மேலுறை சோரினும்—மேலாய
வல்லாளாய் வாழுமூர் தற்புகழும் மாண்கற்பின
இல்லாள் அமைநததே யில்.

**கருமர் :**—என்பது. நால் ஆறும் ஆறு ஆய—தானிருக்கும இல்லானது நாலு திக்கும வழியாய; நனி சிறிதாய்—மிகவுஞ சிறியதாய்; எபபுறனும்—எல்லாப புறமும; மேல் ஆறு—மேலே நினறு; மேல உறை சோரினும—மழை பெயகிற நீர மேலே தஙகாமல ஒழுக இப்படி வருததமுறறிருபபினும; மேல் ஆய வளளாள ஆய—மேலான குணததைத [1] தகையவிடாது ஒழுக

[1] தகையவிடாது—தளரவிடாமல.

வல்லாளாய்; வாழும் ஊர்—தான் வாழும் ஊரார்தாமே; தன் புகழும்—தன்னைப் புகழுமபடியாக; மாண் கறபின் இல்லாள்—மிகுநத கறபினையுடைய மனையாள; அமைநதே இல்—இருநத இல்லே இல்லாவது எனறவாறு.

இவை கறபு மிகுதியும் அறிவுடைமையுங் கூறியதாயிறறு.

**பதுமனார் :**—என்றது. நான்கு திக்கும் வழியாய மிகவுஞ சிறிதாய எபபுறனும் நெறியாலே மழைநீா தம் மேலே சொரியினுமம மேலாய ஒப்புரவு செயய வல்லளாயத தான வாழகினற ஊரினுளளாரால தான புகழுபபடும் மாட்சிமைப படட கறபுடையாளாகிய மனையாளால் அமைவுடைததே மனையாவது எனறவாறு.

**விளக்க உரை :**—என்பது நாலாறும ஆறுய நனி சிறிதாய—நாலுதிககும வழியாய் மிகவுஞ சிறிதாய்; எபபுறனும் மேலாறு மேலுறை சோரினும்—எல்லாப புறமும மேலே பெயகிற நீா கீழே ஒழுகினும; மேலாய வல்லாளாய—மேலாய குணததை வல்லளாய; வாழும ஊா தறபுகழும் மாண்கறபின்—தாம் வாழும ஊாதாமே தனனைப புகழும் நல்ல கறபினையுடைய; இலலாள அமைநதே இல்—மனையாள இருநத வீடே வீடாவது என்றவாறு.

**கருத்து** :—என்றும தன் ஒழுககததில் தவறுத கறபுமிக்க மனையாளைப பெறற வீடே வீடாவதாம்.

## மேற்கோள் பகுதி :—

நச் :—"பெறற தேளததுப் பெருமையின் நிலையிக் குறறஞ் சானற பொருள எடுதது உரைப்பினும—தலைவி அங்ஙனம் உரிமைசான்ற இடதது அவனைப பெருமையின கண்ணே நிறுத்திக குற்றமமைந்த களவொழுக்கத்தை வழுவியமைந்த பொருளாகக் கேளிரக்காயினும பிறாக்காயினும் உரைப்பினும்;

அது களவொழுக்கத்தையுந் தீய ஓரையுள்ளுந் துறவாது ஒழுகிய குற்றத்தையும் உட்கொண்டும் அதனைத் தீதென்னுமாற் கூறுதலாம்.

உ-ம் :—"நாலாறு மாறாய் ......அமைந்ததே யில்" இதனுள் மனைவி அமைந்து நின்ற இல்லிலேயே இல்லறமாவதெனவே யாம் முன்னரொழுகிய ஒழுக்கமும் இதற்குணை நன்மையாயிற்று என்றா ராயிற்று இது குறிப்பெச்சம்" என்பர்.

—தொல். பொருள். சூ. 140.

நச் :—"நாலாறு மாறாய .... அமைந்ததே யில்" என்னும் வெண்பா விருந்து புறந்தருதல் கூறியதுமாம்" என்பர்.

—தொல். பொருள். சூ. 153.

## ஒப்புமைப் பகுதி :—

"உள்ளது
தவச்சிறி தாயினும் மிகப்பலர் என்னாள்
நீள்நெடும் பந்தர் ஊண்முறை யூட்டும்
இற்பொலி மகடூஉ"

—புறநானூறு. 331.

'நனிசிறிதாய்' :—
"இடம்பட வீடிடேல்"

—ஆத்திசூடி.

"சிறுகக் கட்டிப் பெருக வாழ்"

—பழமொழி.

## குறிப்பு :—

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற சொற் காத்துச் சோர்விலாள் பெண்" என்ற குறளுரையில் 'தன் மாட்டுப் புகழாவது—வாழ்வார் கற்பால் தன்னைப் புகழ்வது' என்று பரிமேலழகர் குறிப்பிட்டது இங்கே நினைவுகூரத் தக்கது.

(௩).

384. கட்கினியாள் காதலன காதல் வகை புனைவாள்
உட்குடையாள் †ஊராண் இயல்பினாள்—உட்கி
இடனறிந் தூடி இனிதாய் உணரும்
மடமொழி மாதராள் பெண்.

**தருமர்:**—எனபது. கட்கு இனியாள்—தன் காதலன் கண்ணுககு இனியவளாய்; காதலன காதல வகை—அககாதலன் காதலிககத தகக வகையாக; புனைவாள—தன்னை அழகு செயய வல்லவளுமாய; உட்கு உடையாள்–பிறா அஞசததகக மதிபபை உடையவளுமாய; ஊராண இயலபினள—ஒபபுரவுடையளுமாய; உடகி—காதலனபால் அசசமுடையளாய்; இடன அறிநது ஊடி—அவனது செவவியறிநது ஊடி; இனிதாய உணருமட—அநத ஊடலை அவன தீரககுமிடதது நீட்டியாமல இனிதாகக் கோப மாறவலல, மடமொழி மாதராள பெண—மெதமெனற வாாததை யுடையவளே இல்வாழக்கைக்குப பெணணவள எனறவாறு.

கறபுடைமகளிா அழகு செயயிற பிறா விருமபுவா என்று சொல்லி ஈணடு அழகு செயய வலலவள எனபது எபபடியோ எனின, ஆண்டுக கறபைப பொதுவகையாயக கூறி ஈணடுக் கலவி கூறியதாகலின பிறா அறிய அழகு செய்யாது தன் காதலன காதலிககுமபடி அழகு செயய வலலவள எனக கலவிக்கு ஏறபுடைததாயச சிறபபிததுக கூறியதாம.

**பதுமனார்:**—எனறது. கண்ணுக்கு இனியளாய்க் காதலன காதலிதத வேடகை புனைவாளாயப, பிறரால் கூசபபடும் இயல்பினையுடையாளாய, ஒப்புரவு செய்யும் தனமையளாய்க், காதலனை அஞசி இடனறிநது புலாநது அபபுலவியை இனிதாகத

†ஊா நாண இயல்பினள் என்று பாடங கொணடு ஊரிலுள்ள மகளிர் தனனைக கணடு நாணுமாறு நலலொழுக்கமுடையாள எனறு பொருள் கூறுவாரும உளா.

தீரும் மடமொழியை யுடைய மாதரார், பெண்ணுவாள் என்ற வாறு.

கட்கினியாளள—ஏறறச சுருக்கமான சரீரமும், விபரீதமான கண், கை, கால், விரல்களும், துனமுகமுமாய் இருததலும், பூமி அதிர நடததலும, கொடிய வாாததை கூறலும, எபபொழுதும கொட்டாவி நெடடை முறிததல முதலான சேடடைகளும் உண்டாயிருததலும, விவாதம பண்ணலும, [1] அநநிய கிரகததிலே போயிருததலும, [2] அததாவேசமும, ஆகார மிகுதியும, [3] துரா சாரமும, அழுக்கும, அசுததமும், எனறு இததோஷஙகளையுடைய ளாயிருததலும் அனறி உததமமாக எணணபபடட இலக்கணங களை யுடையளாகிச் சுததையாய சுகையாய இருததலுமாம.

காதலன காதல் வகை புனைவாள—நேரிதாய நீணட வெண சோறு, பருபபுச் சோறு, பாற சோறு, அபபம், [4] அககாரம எனனும ஐநதும, கைததல, புளிததல, காாததல, உவாததல், துவாததல், திததிததல, [‡ நாறல, காறல, எனனும எட்டு ரசங களும] ஒனறுகொனறு கூடும §ரசவாயஙகள அறிநது கூட்டு தலுமாகி உணபன, தினபன, நககுவன, சுவைபபன, பருகுவன, ஆகிய ஐவகையுங கூடின பஞ்ச பக்குவானனஙகளையும ஒனறை யொனறொவவாதபடி [5] மகாரஙகளாகச சமைககும் ஆாதத [6] கௌசலயமும, பாததாவாலே †பிரதிபததி பண்ணபபட்ட [7] யிஷஔவ பிதிா, தேவா, சுறறததாா, அதிதிகள, எனனும

---

[1] அநநிய கிரகம—பிறாமனை.

[2] காம நீட்டிச சினமுறல.

[3] துராசாரம—தீயொழுககம.

[4] அககாரம—சாககரையனனம.

‡ நாறல, காறல, இதனுள் அடஙகா.

§ 'ரசவாயஙகள' எனறிருததல பொருநதும.

[5] சிதைவு ஏறபடடிருததல கூடும.

[6] கௌசலயம்—திறமை.

† பிரதிபததி—நம்பிக்கை, பிரீதி எனறிருததல்கூடும்.

[7] (சிதைநதுளது) ரிஷி என்றிருததல் பொருநதும.

இவாகளையும அவனதனனையும, புசிககுமிடததது அனுகூலையாகியும் சிரததையாகியும் அவனடியைப பிடிததுப பின்னே துஞ்சலும் முன்னே [1]உணாதலும் உடையளாயிருததலுமாம.

உட்குடையாள—[2]ஸ்ரீ புமான்கள் எலலாரும தனனைக கண்டு கூசுமபடி பதிவிரதா பாவம உடையவளாய இருததலாம. ஊராண் இயலபினள—தனக்கிடமதாகிய கருமமாயிருப்பினும் அயலாாககு ஒததத ஒபபுரவுகளிற குறையாத இயல்பினையுடையளாயிருததலாம; உடகி—பாததாவுககு எபபோதும அஞசுதலையுடையளாயிருததலாம. இடன அறிநது ஊடி—பாததாவுககுப பலராக ஸதிரிகள உண்டாறுலும், பரததையாகளிடதது ஒழுககம் உணடாறுலும, தான அதறகு இடனறிநது [3]கலாவிததலாம. இனிதின உணரும் மடமொழி மாதராள பெண—அக கலாவததை அவன தீாகக அனனியனுமபடி உணாதலும உடைய மடமொழி மாதராள பெணமையுடையாள் எனறவாறு.

**விளக்க உரை :**—எனபது. கட்கினியாள் காதலன் காதல் வகை புனைவாள—கணணுககு இனியாளுமாயக காதலன காதலிககததககக வகை தனனை அழகு செயய வல்லளுமாய; உடகுடையாள ஊராண் இயல்பினள—பிறா அஞசததக்க மதிபபுடையளுமாய, ஒபபுரவுடையளுமாயப, பணபுடையளுமாய; உடகி இடனறிநது ஊடி—அசசமுடைமையாற காதலன செவவியறிநது காதலிதது, இனிதின உணருமா—அநத வூடலை அவன் தீாகக நீட்டியாமல இனிதாகக கோபமாறவலல, மடமொழி மாதராள பெண்—மெதசெனற மொழியினையுடைய மாதராள் இல்வாழக்கைப் பெண்ணுவாள் என்றவாறு.

**கருத்து :**—இனிய காட்சியும், நலலொழுககமும், அன்பும உடைய பெணணே வாழக்கைத துணைவியாதற குரியாள.

---

[1] உணர்தல—துயிலெழுதல.

[2] ஸ்ரீ புமான—மகளிா ஆடவா

[3] கலாவிததல்—சிறுகோபங கொளளல.

## ஒப்புமைப் பகுதி :—

"ஊடல் உணாதல் புணாதல் இவைகாமம்
கூடியார் பெறற பயன்".

—குறள்.

"ஊடிப் பெறுகுவங கொலலோ நுதலவெயாபபக
கூடலிற ரேன்றிய வுப்பு".

—குறள்.

## மேற்கோள் பகுதி :—

நச :—"கழிவினும வரவினும் நிகழ்வினும் தததங்குலத்திறகு ஏறகுமபடியாக முறகூறிய கற்பு முதலிய நல்லவறறைக் கறபித தலும, காம நுகாநத இன்பமாகிய கறபிறகுத தீயவறறைக கடிதலும செவிலிததாயககு உரியவாகுமெனறு கூறுவா புலவா" எனறு உரைகூறி அதறகு உதாரணமாக இச்செயயுளை எடுததுக் காட்டுவா. "கடகினியாள, இதுகாமம; வகைபுனைவாள், இது கறபு; உட்குடையாள, இஃது ஒழுககம; ஊராண்மை, இது சுறறமோம்பல; ஊடியுணாதல, அலலவைகடிதல்" என்பர்.

—தொல. பொருள. சூ. 153.

நச :—ஆண்மையாவது ஆளுநதனமை. அஃது "ஆயிடை யிரு பெயராணமை செயத பூசல" என இருபாலையும உணாத திறறு.... ."உடகுடையாள ஊாரண இயலபினள்" எனவும விகாரமாயும நிறகும" எனபா.

—தொல. சொல. சூ. 57.

மயிலை :—ஒருருபு அடுக்கித தமக்கேறற ஒரு பெயருமட ஒரு வினையும இறுதிவர முடிநததறகு இசசெயயுளை எடுத்துக காட்டுவா.

—நன. பொது. சூ. 4.

பரிமே :—"நின் உண்கண் சிவபபிறகு அஞசுவான அவனுககுத துணிநீங்கி அவனொடு விளையாடலைத தொடங்கு; இவவாறு துனியினகண மிகுவையாயின் அவன் காமவின்பங கெடும்; அதறகுக காரணமாகிய மகள் இவன் சொல்லிய பேதைப பருவததாள்; இவனைக் காய்ந்து இவன் நெஞசின்கண

அல்லாப்பை இறுகப பூட்டுதலால் நீ பெ........ண் இருட் பொழுதினில் நீங்கற்பாலை யல்லை; நீங்கன் '**இடனறிந்து ஊடி இனிதின உணரும்**' ஒழுககததிறகுப் பிழையாமென்று அவளை அக்குடியின் முதிரபெண்டிா கழற" என உரை கூறிப போவர்.

—பரிபாடல. 6. 96-100.

(ச).

385 *எஞ்ஞான்றும் எங்கணவர் எந்தோள்மேற் சேர்ந்தெழினும்
அஞ்ஞான்று கண்டேம்போல் நாணுதுமால்—எஞ்ஞான்றும்
என்னை கெழீஇனர் கொல்லோ பொருள்நசையாற்
பன்மார்பு சேர்நதொழுகு வார்.

**தருமர்**:—எனபது எஞஞான்றும—எல்லாநாளும்; எம் கணவா—எமமுடைய கணவா, எம தோள மேல சோநது எழினும்—எமது தோளினைப பொருநதி ஒழுகினும்; அ ஞான்று—மணஞ செயத அனறு; கணடேம போல—கண்டாறபோல; நாணுதும்—இன்றும் யாம நாணுதலையுடைடோம; [இஙஙனம இருக்க] எ ஞானறும—எல்லா நாளும; பொருள நசையால்—பொருளின மேல ஆசையுறறதனுல், பல் மாாபு சோநது ஒழுகு வாா—பலா மாாபும சோநதொழுகும பொதுமகளிா, எனனை [1]கெழீஇனா கொல்லோ—எனன கெழுதகைமையையுடையாரோ என்றவாறு. [ஆல—கொல அசைகள்].

கெழுதகைமை—பழகிய உரிமையால் எண்ணுது செய்வது. தலைவனபாற சேரிப பரததையா் குறி கண்டு மனமழுங்கிய தலைவி கூறறுயிறறு.

**பதுமனுர்** :—[எனறது. நாடோறும எம் கொழுநன்

---

*இச்செயயுள் ஒரு குலமகள பொதுமகளிரது நிலைகணடு வியநது கூறுமாறு அமைநதுளளது.

[1]கெழுவினா கெழீயினா என அளபெடுததது.

எமமுடைய தோள்மேற சோநதொழுகினும்; முதல் நாள் கண்டாற்போல நாணுதும்; நாடோறும் என்ன கெழுதகைமைய ராயினா கொல்லோ பொருள் நசையாற பலருடைய மார்புகளைச் சோநது ஒழுகுமவா என்றவாறு.

அனறு—முதல் நாள கெழீஇனா—கெழுதகைமை யுடையராயினா. நசை—ஆசை.]

**விளக்க உரை :**—எனபது. எனறுமம எஙகணவர் எநதோள மேல சோநது எழினுமம—எலலா நாளுமம எமமுடைய கணவா எமது தோளைப பொருநதி ஒழுகினுமம; அனறு கணடேமம போல நாணுதுமால—மணஞசெயத அனறு கணடாற போல யாமம நாணுதலையுடையோமம; எனறுமம எனனை கெழீயினா கொலலோ—எல்லா நாளுமம எனனை கெழுதகைமையை உடையாா கொலலோ, பொருள நசையால்பன மாாபு சோநது ஒழுகுவாா-பொருளமேலுள்ள ஆசையால பலருடைய மாாபைச சோநது ஒழுகுவாா எனறவாறு.

**கருத்து :**—பொதுமகளிா நாணமின்றி நடததல போலக் குல மகளிா நடவாா.

## ஒப்புமைப் பகுதி :—

'எனறுமம. நாணுதுமால' '—
"நலததோ டளவிய நாணணிந தோருமம"
—பரிபாடல. 'வானமெழிலி,-39ஆமம அடி.
(ரு).

386 உள்ளத் துணர்வுடையான் ஓதிய நூலற்றால்
வள்ளன்மை பூண்டான்கண் ஒண்பொருள்
—தெள்ளிய
ஆண்மகன் கையில் அயில்வாள் அனைத்தரோ
நாணுடையாள் பெற்ற நலம்.

**தருமர் :**—என்பது. வள்ளன்மை பூண்டான்கண்—கொடை பூண்டவன் கையிலுள்ள; ஒள் பொருள்—ஒள்ளிய பொருளானது; உள்ளத்து உணர்வுடையான்—மனத்தினால் ஆராய்ந்தறியும் இயற்கையான அறிவுடையவன்; ஓதிய நூல் அற்று—கற்ற நூலோடு ஒக்கும்; நாண் உடையாள் பெற்ற நலம்—நாணமுடையவளுக்குண்டாகிய நட்புப் பண்பு; தெள்ளிய ஆண்மகன் கையில்—தெள்ளிதான ஆண்மைத் தன்மையைப் பூண்டவன் கையிலுள்ள, அயில்வாள் அனைத்து—கூரிய வாளோடு ஒக்கும் என்றவாறு. [ஆல் அரோ அசைகள்]

இயற்கை யறிவுடையவன் ஓதிய நூல் பிறர்க்குப் பயன் படுமாறு போலக் கொடைபூண்டான் கைப்பொருள் பிறர்க்குப் பயன்படும் என்பதாம். ஆண் மகன் கையில் வாள்போல நாணமுடையவளுக்குள்ள நலமும் யாவராலும் மதிக்கப் படுவதாம். அல்லதூஉம் உணர்வுடையான் ஓதிய நூலும் கொடையுடையான் செல்வமும் புகழை விளைக்கும் என்பதாம். ஆண்மகன் கையில் வாள் போல நாணமுடையாள் நலமும் தன்னை மதியாரைக் கெடுக்குந் தன்மையதாம். நலமானது கற்புஞ் சத்தியமுடைமையுமாம். அதனால் அதுவே மதியா தாரைக் கெடுக்கும் என்றார். வாளற்றுநூலற்று, என்னும் இரண்டும் **இடைநிலைத் தீபமாகப்** பொருளுரைக்க.

**பதுமனார் :**—என்றது. இயல்பாக மதியுடையவன் ஓதிய நூல் பிறர்க்குப் பயன்படுமாறு போற் கொடை பூண்டான் கையில் ஒண்பொருளும் பிறர்க்குப் பயன்படும்; திண்மையினை யுடைய ஆண்மகன் கையிற் கூரியவாள் போல நன்கு மதிக்கப் படும் நாணுடையாள் பெற்ற நலம் என்றவாறு.

உள்ளத்துணர்வுடையான் ஓதிய நூல்போல மிக்க விளக்கஞ் செய்தலும், வண்மை பூண்டானிடத்துள்ள ஒண் பொருள் போலப் புகழ் விளைத்தலும், தெள்ளிய ஆண் மகன் கையிற் கூரிய வாள் போல மதியாதார்க்கு அச்சத்தைக் கொடுத்தலும்

ஆகிய நன்மைகளால் மதிக்கப்படும் நாணுடையாள் பெற்ற நட்பு நலம் என்றவாறு.

அற்று என்பதனை **மத்திம தீபமாக்கி** நூலகத்தும், பொருள கத்தும், கூட்டுக. முன்னடி யிரண்டும் ஒன்றாகப் பொருளுரைப் பது கூடாது. அற்று என்பதும் ஆல் என்பதும் இடைச்சொல். அனைத்து என்பது ஈண்டு உவமத்தின்கண் வந்தது.

**விளக்க உரை** :—என்பது. உள்ளத்து உணர்வுடையான் ஓதிய நூல் அற்றால்—மனத்தில் ஆராய்ந்தறியும் இயற்கையான அறிவுடையவன் கற்ற நூல் போலும்; வள்ளன்மை பூண்டான் கண் ஒண்பொருள்—கொடைக்கடனை பூண்டவன் கையில் ஒளிய பொருள்கள், தெள்ளிய ஆண்மகன் கையில் அயில்வாள் அனைத்து—தெளிந்த ஆண்மைத் தன்மையுடையவன் கையிற் கூரிய வாளொக்கும்; நாணுடையாள் பெற்ற நலம்—நாண முடையவளுக்குண்டாகிய நட்புப் பண்புடைமை என்றவாறு.

இயல்பான மதியுடையவன் ஓதிய நூலும் பிறாக்குப் பயன்படுமாப் போலக் கொடை பூண்டான் கையிற் பொருளும் பிறர்க்குப் பயன்படும் என்பதாம். ஆண்மையுள்ளவன் கையில் வாளும் பழுதுபடாமல் [எல்லாராலும்] மதிக்கப்படும்; அதுபோல நாணமுடையவளுக்குண்டான கற்பும் எல்லாராலும் கொண் டாடப்படும் என்பதாம். அதுவன்றியும் ஆண்மகன் கையில் வாள்போல நாணமுடையாளை மதியாதாரை அவள் கற்பெனனும் வாள் அறுக்கும் என்பதாம். [அற்று என்பதனை] நூல், வாள், இரண்டுக்கும் **இடைநிலைத் தீபமாகக்** கொண்டு பொருளுரைக்க.

**கருத்து** :—நாணம் முதலிய பெண்ணியல்புகளாலே பிற நலங் களும் பெருமை பெறும்.

## மேற்கோள் பகுதி :—

நச் ·—“அஞ்சவந்த உரிமைக் கண்ணும்—தலைவனும் பிறரும் அஞ்சும்படி தலைவிக்கட்டோன்றிய உரிமைகளிடத்தும்,

அவை இல்லறம் நிகழ்ததுமாறு தன் மனத்தாற் பல வகையாகக் காணலும், பிறாக்குத தான் கொடுததலும, கற்புச் சிறததலுமாம.

உ-ம் :—“உளளத துணாவுடையான் ....பெற்ற நலம்” இதனுள நலமெனறது இம்மூனறினையும. தலைவி இல்லறப பகுதியை நிகழ்த்துமாறு பலவகையாகக் காணும தனமை உணா வுடையோன ஓதியநூல் விரியுமாறுபோல விரியா நிறபதெனவும், இவள கொடைநலம வளளனமை பூணடான பொருளினைத தெனவும, இவளது கறபுச் சிறபபுப பிறாககு அசசஞ செயதலின வாளினைததெனவும, தலைவன அவளுரிமைகளை வியநது கூறியவாறு காண்க” எனபா.

—தொல. பொருள. சூ. 146.

(சு).

387. *கருங்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணிப் பதக்கெனறு
ஒருங்கொப்பக் கொண்டானும் ஊரன—ஒருங்கொவ்வா
நனனுதலார்த தோய்ந்த வரைமார்பன நீராடாது
எனனையுந தோய வரும்.

**தருமர் :**—எனபது. கருஙகொளளும—மடிதத கொளளை யும, செஙகொளளும—நலமுடைய கொளளையும, [1]தூணிப பதககு எனறு—தூணிப் பதககாக; ஒருஙகு ஒபப கொண்டான ஆம் ஊரன்—ஒரு விலையாகக கொணடவன தன்மையை ஒககும் நமது தலைவா தனமையும; [அஃதேன் எனில்] ஒருங்கு

*அகபபொருட கிளவிததுறை.—
உலாவபபோய வநத தலைமகனை பளளியிடததாளுகத தலைமகள் சொலலியது.

[1] தூணி—நானகு மரக்கால. பதககு—இரணடு மரக்கால்.

ஒவ்வா—ஒரு குணத்தாலும் நேரொவ்வாத; நல் நுதலார்—நல்ல நுதலினையுடைய பொதுமகளிரை; தோய்ந்த வரை மார்பன்—பொருந்திய [மலைபோலும்] மார்பினையுடைய தலைவர்; நீராடாது என்னையும் தோய வரும்—நீராடாதே என்னையும் பொருந்துவதாக வருவர் ஆதலால் என்றவாறு.

கருங்கொள் என்பதைக் கருவேலம் விரை என்பாரும் உளர். கருங்கொள்ளும் செங்கொள்ளும் எனவே பரத்தையர் குணத்தின் நன்மை தீமை அறியாமல் பெண் என்னும் மாத்திரமே உட்கொண்டார் என்பதாம். பரத்தையரொடு நோக்கித் தன்னைத் தோய வருந் தலைவனது தன்மை இதுவாயிருந்தது. நீராட்டல் அப்பரத்தையரைத் தோய்ந்த பாவம் [1]ம நதி யாடி வருவதாம். பரத்தையரிடமிருந்து வந்த தலைவனை ஊடிய பாங்கியொடு தலைவி கூறியதாம்.

**பதுமனார்** :—என்றது. கருங்கொள்ளையும் செங்கொள்ளையும் ஒன்றற்குச் சிறப்புக் கொடாதே தூணிப்பதக்காக உலக்கு ஒக்கக் கொண்டாற்போல ஊரன் எம்மோடு ஒருங்கு ஒவ்வாத நன்னுதலாரைத் தோய்ந்த வரைமார்பன் நீராடாமலே என்னையுந் தோய வரும் என்றவாறு.

**விளக்க உரை** :—என்பது கருங்கொள்ளும் செங்கொள்ளும் தூணிப் பதக்கு என்று—கருங்கொள்ளையும் செங்கொள்ளையும் தூணிப்பதக்காக, ஒருங்கு ஒப்பக் கொண்டானும் ஊரன்—ஒரு தன்மையாக விலைகொண்டான் ஊரன்; ஒருங்கு ஒவ்வா நன்னுதலாரைத் தோய்ந்த வரை மார்பன—ஒரு குணத்தினாலும் நேரொவ்வாத நல்ல நுதலினை யுடையாரைத் தோய்ந்த வரை மார்பன், நீராடாது என்னையும் தோயவரும்—நீராடாதே என்னையும் பொருந்துதற்கு வரும் என்றவாறு.

குணத்தின் நன்மை தின்மை பாராமற் பெண் என்னும்

---

[1] எழுத்துக்கள் சிதைந்துள்ளது.

மாத்திரமே உட்கொண்டான் என்பதாம். கருங்கொள் என்பது மடித்த கொள்ளு. செங்கொள் என்பது கொள்ளுச் சுபாவமான செவ்வியுடைமை. அல்லதூஉம கருங்கொள் என்பது கருவேலம் விதை என்பாரும் உளர்.

**கருத்து** :—குலமகளிர் தூய மனப்பாங்குடையவராவர்.

## குறிப்பு.—

கருங்கொள்ளையும் செங்கொள்ளையும் உவமையாக்கியது பரத்தையரது இழிவையும் குலமகளிரது உயர்வையும் புலப்படுத்தற்கு என்க. தலைவன் தன்னையும் பரத்தையையும் ஒரு நிகராகக் கருதிய பிழையையும் தலைமகள் பொறுத்து நீராடி வந்தாலாவது கூடலாம் என்று கருதினமையால் குலமகளிரது தூய மனப்பாங்கு பெறப்படும் "பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர்—நண்ணேன் பரத்த நின் மார்பு". என்ற திருக்குறளை ஈண்டு நினைத்தல் தகும்.

(எ).

388. *கொடியவை கூறாதி பாண! நீ கூறின்
அடிபைய விட்டொதுங்கிச் சென்று—துடியின்
இடக்கண் அனையம்யாம் ஊரற்க தன்னுல்
வலக்கண் அனையார்க்கு உரை.

**தருமர்** :—என்பது. [1]பாண—பாணனே, [2]கொடியவை கூறாதி-கொடிய வார்த்தைகளைச் சொல்லாதே கொள்; நீ கூறின்

---

*அகப்பொருட் கிளவித்துறை.—

தலைவனது பிரிவுணர்த்திய பாணனை நோக்கித் தலைவி மறுத்துக் கூறியது.

[1]பாணன்—இசைபபாட்டுப்பாடிப் பிழைக்கும் இழிகுலத்தான், தலைவன் தலைவியாக்குத் தூது போதல் இவன் தொழில்.

[2]கொடியவை. என்றது தலைமகன் பிரிவுபற்றிய செய்தியை, 'செல்லாமை யுண்டேல் எனக்குரை' என்பது குறிப்பு.

—நீ கூறுவையாகில்; யாம்—; ஊரறகு—நமது தலைவற்கு; [1]துடியின [2]இடக்கண் அனையம—துடியினது இடக்கண்போல பயனபடாதேம; அதனல்—ஆதலால்; அடி பைய விட்டு ஒதுஙகிச் சென்று—அடியை மெலல வைததது ஒதுஙகிச் சென்று; வலககண அனையார்ககு—துடியினது வலக்கண் போலப் பயன்படும் பரததையாக்கு, உரை—இநத வார்த்தையைச் சொல்லுவாயாக என்றவாறு.

அடிபைய விட்டொதுஙகிச் செனறு எனவே பரததைய்ர் பாற செலலுமபொழுது அவா மனம பொருநதுமபடி அடியை மெளள வைததுத தாழசசியுடனே வாயபுதைததுச சொலலுவாய் என ஊடல தீாககும பாணனைத தலைவி பழிததுரையாடியதாம.

**பதுமனார்** :—என்றது. கொ[illegible]ய உரைகளைக் கூறு தொழிவாயாக பாணனே! யாம ஊரறகுத துடியின் இடககண் போலப பயன படேம ஆதலாற கூறுவாயாயின் அடியை விரையாது இடடு நடநது செனறு துடியின வலககணபோல ஊரறகுப பயனபடும பரததையாககுக கூறுவாயாக என்றவாறு.

இடககண் போலப் பயன் படேம யாம்; பயன்படும் வலக்கண் அனையாாக்கு உரை.

**விளக்க உரை** :—என்பது. கொடியவை கூறுதி பாண—கொடிய வார்ததையினைச் சொல்லாதே கொளளு பாணனே; நீ கூறின—நீ சொல்லுவையாயின்; அடி பையவிட்டு ஒதுங்கிச் செனறு—அடியை மெளள வைததுத தாழசசியுடனே ஒதுங்கச் செனறு; இடககண் அனையம யாம ஊரறகு அதனல்—தலைவறகு யாம துடியின இடக்கண் போலப் [பயனபடாதேம்] ஆதலால்,

---

[1] துடி—உடுக்கை.

[2] உடுககைககுக கண்ணுவது—அடிதாக்கபபடும இடம்: உடுக்கை வலபபுறம மட்டுமே அடிபட்டும; இடபபுறம அடிபடாதும் இருததலின் அதனை உவமையாக்கினா.

வலக்கண் அனையார்க்கு உரை—வலக்கண் போலும் பரத்தையர்க்குச் சொல்லுவாயாக என்றவாறு.

**கருத்து:**—குலமகளிர் தமது ஊடலால் இன்பம் மிகும்படி செய்யவல்லவர்.

## ஒப்புமைப் பகுதி :—

"அரும்பவிழ் தாரினை எம்மருளும் என்று
பெரும்பொய் யுரையாதி பாண!—கரும்பின்
கடைக்கண் அனையம்நாம் ஊரற் கதனால்
இடைக்கண் அனையார்க் குரை.

—நாலடியார். 390.

(அ).

389. *†சாய்ப்பறிப்ப நீர்திகழும் தண்வய லூரனமேல்
ஈப்பறக்க நொந்தேனும் யானேமன்;—தீப்பறக்கத்
தாக்கி முலைபொருத தண்சாந் தணியகலம்
நோக்கி யிருந்தேனும் யான.

**தருமர்:**—என்பது. [1]சாய் பறிப்ப—கோரையைப் பிடுங்கவே; நீர் திகழும்—வேகத்துடனே வரும் நீரால் துலங்கிய; தண் வயல் ஊரன் மேல்—குளிர்ந்த வயலையுடைய நமது தலைவர் மேலே; ஈ பறக்க நொந்தேனும் யானே- மன்[முன்பு] ஈப்பறக்குமதோ என்று அதற்கு மனம் மிக வருந்தியவளும யான்; தீ பறக்க தாக்கி—[இப்பொழுது] தீப்பொறி பறக்கும்படியாகத்

*அகப்பொருட் கிளவித்துறை.—

'பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனோடு நீ புலவாமைக்குக் காரணம் யாது?' என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

†சாய்ப்பறிக்க என்றும் பாடம்.

[1] சாய்—ஒருவகைக் கோரைப்புல்.

தாக்கி; முலை பொருத—[பரததையா தமது] முலையால பொருத; தண் சாநது அணி அகலம—குளர்நத சாநதணிநத மாாபததை; நோக்கி—பாாத்தும்; இருநதேனும யான்—வலிய நெஞசினை யுடையளாகப் பொறுததிருநதேனும் யான் என்றவாறு.

நோககியிருநதேனும யான எனவே, தலைவா தன்னைவிட்டுப் பிரிந்து பரததையாபாற செனறா எனறவுடனே உயிரைத துறபபதே இயலபு. அது தவிாநது அவா கலவியிறபட்ட குறி யோடுஞ செனற தலைவர் மார்பிற சநதனக்குறி முதலிய அடையாளஙகளைக் கணடு பின்னும் உயிா துறவாமல தரித்திருநத போதே என்னைப்போல வலிய நெஞசுடையாா வேறிலலை எனத தனனை இகழநது வெகுணடு உரையாடியதாம. அதுவே யனறியும அவா பிரிவுழி அவா செலலுமிடதது அவாக்கு ஏதேனும துன்பஙகள உறுவதாகுமோ என அதறகு வருநதி இருநததுமாம. இததன்மையாய தலைவி தலைவனைப பரததையிற பிரியககணடும அதறகுப் பொறுததிருநதாள எனவே கறபுடை மகளிரது ஒழுக்கங கூறியதாம்.

**பதுமனார் :**—எனறது. கோரைபபுலலைப் பிடுஙகவே நீரெழுபபட்ட தண் வயலூரான் மீது ாபபறகக நொநதேனும யானே, இப்பொழுது பரததையா தீபபறகக முலையால் தாக்கிப பொருத தண்சாநது அணி அகலததைக கணடிருநதேனும யானே என்றவாறு.

சாயபபறிகக—கோரைபபுலலைப பறிக்க, தீ பறக்க—பொறி எழ.

**விளக்க உரை :**—என்பது. சாய்பபறிகக நீா திகழும தண் வயல் ஊரன்மேல—கோரையைப் பிடுஙக நீா தோன்றுங

[1] சாயபபறிக்க நீா திகழும எனறது நீாவளததைக் குறிததது.

குளிர்ந்த வயலேயுடைய வூரன்மேலே; ஈப்பறக்க நொந்தேனும் யானே மன்—ஈப்பறக்குமதோ என்று அதற்கு மிக வருந்தி யிருந்தேனும் யான்; தீப்பறக்கத் தாக்கி முலேபொருத தண் சாந்து அணி அகலம்—தீப்பறக்கத் தாக்கி முலேயாற் பொருத குளிர்ந்த சாந்தணிந்த மார்பத்தை; நோக்கியிருந்தேனும் யான்—பார்த்துப் பொறுத்திருந்தேனும் யான் என்றவாறு.

இப்படித் தலைவன் பரத்தையர் மாட்டுப் பிரியவும் ஆற்றி யிருத்தல் கொண்டு இது கற்புடைய மகளிர் ஒழுக்கம் என்று கூறப்பட்டது.

**கருத்து :**—குலமகளிர் தம் கொழுநரது தகாத ஒழுக்கம் கண்ட விடத்தும் அவர் மீது அன்பு குன்றப்பெறுர்.

## ஒப்புமைப் பகுதி :—

"சாய்க் கொழுதிப் பாவை தந்தனைத்தற்கோ"
—கலித். 76, 7.

"இருமபனே வெளிற்றின் புன்சாயன்ன"
—திருமுருகு. 312.
(கூ).

390. *அரும்பவிழ்த் தாரிஞன எம் அருளும் என்று
பெரும்பொய் †யுரையலோ பாண—கரும்பின
கடைக்கண் அனையம்யாம் ஊரற் கதனுல்
இடைக்கண் அனையார்க குரை.

**தருமர் :**—என்பது. பாண—பாணனே! அரும்பு அவிழ் தாரினன்—மலரும் பருவத்தையுடைய அரும்பால் தொடுக்கப்

---

*அகப்பொருட் கிளவித்துறை.—
தலைவி பாணனேடு வெகுளல்.
†உரையாதி என்றும் பாடம்.

பட்ட மாலை மாாபமுடைய தலைவா; எம் அருளும் என்று—எமகசூ அருள் செய்வர் என்று. பெரும் பொய் உரையல்—மிகவும் பொயகளைச் சொல்லாதேகொள்; [ஏன் எனில்] யாம்—நாம்; ஊாற்கு—தலைவறகு; கரும்பின் கடைக்கண் அனையம்—கரும்பினது கொழூததாடைக் கணுப போல இனிமை [யில்லா தேம்] அதனல்—ஆதலால்; இடைக்கண் அனையார்க்கு உரை—[கரும்பின இடைககண் போல] இனிமையுடைய பரததையாக்கு இவவாாதைகளைச சொல்லுவாயாக எனறவாறு.

இதுவும ஊடல தீாகசூம் பாணனைப பழிததுரையாடியது.

**பதுமனர்** :—[என்றது. அரும்பவிழதாரான் எமக்கு அருளும் எனறு பெரும பொய உரையாதொழிக பாணனே! யாம ஊரறகுக் கரும்பின கடைக்கண்போல இனியேமல்லேம; அதனல் கருமபின இடைக்கணபோல இனியாாக்குக் கூறுவா யாக. எனறவாறு.

உரையலோ பாண—உரையாதொழிக பாணனே.

**விளக்க உரை** :—என்பது. அருமபு அவிழ தாரினை எம அருளும் எனறு—கட்டவிழும அருமபினல் தொடுக்கப்பட்ட மாலையினையுடையான எமக்கு அருள செயவன் என்று' பெரும பொயயைச் சொலலாதே கேள பாணனே; கருமபின் கடைக கண போலும் யாம் ஊாற்கு ஆதலால, இடைக்கண் அனையாாக்கு உரை—இடைககண் போலப பயன்படும பரததையாககுச சொல்வாயாக.

கடைக்கண்—கொழூததாடை.

**கருத்து** :—குலமகளிா தம் கொழுநர் வரவு நோக்கி இனிமை யுடையராயிருபபா.

(ம).

# 40. †காமநுதலியல்.

**தருமர் :—** அஃதாவது. இன்பத்தின் முறைமையைச் சொல்லியதாம். முன்பே இன்பஞ் சொல்லிப் பின்பே உலக முறைமையான பொருட்பால் சொல்லி, அதன்பின் அறப் பகுதியினைச் சொல்லி வீடுபேற்றிலே முற்றுவிக்க வேண்டாவோ என்னில் அங்ஙனமன்று. இளமைப் பருவத்திலே அறத்துக்குக் காரணமான நூல்கள் கற்பித்து அதிலுள்ள முறைமையினை உணர்த்திப், பின்பு மனைவாழ்க்கையாகிய மணஞ் செய்வித்து அவ்வற நூலின் முறைமைக்குத் தக்க ஒழுக்கப்படி அறப்பகுதி முற்கூறிக் கல்வி, கேள்வி, முதலியவற்றால் [1] மனநூலின் இயல்பை வழுவாமல் நடத்துதலால் உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் இரட்சைப்படுதல் காரணமாகப் பொருட்பகுதியினைச் சொல்லிப் பின் இன்பத்தைச் சொல்லியதாம்.

பின்பு வீடுபேறு சொல்லவேண்டாவோ எனில் முன் சொன்ன முறைமையிலே வழுவாது நடந்து இன்ப துன்பந் துய்த்து அறுபது வயதிலே, முற்றுந் துறந்து பின்பு உண்மைப் பொருளை அறிந்து அவாவற்றுவிடவே வீடுபெறும் ஆதலின், அதற்கொரு பகுதி உரைக்கவேண்டாம் என்பதாம்.

**பதுமனார் :—** அஃதாவது. செல்வநிலையாமை முதலாகத் தீவினையச்சம் ஈறாகப் பதின்மூன்றதிகாரமும், அறப்பகுதியாகவும், கல்வி முதலாகக் கற்புடைமகளிர் ஈறாக இருபத்தாறு அதிகாரமும், பொருட்பகுதியாகவும், காமநுதலியல் ஓரதிகாரமும், இன்பப்பகுதியாகவும், இவ்வதிகாரம் நாற்பதினுள்ளும் ஒழுக்க மல்லாதன அறிந்து அவற்றை ஒழிந்து களையும், அறங்களையும், இவ்வியாக்கைநிலையின் பொல்லாங்குகளையும், அறிந்து துறத்தலும், சினமில்லாமையும், பொறையுடைமையும், பழவினை பலிக்கும்

†காம இன்பத்தின் தன்மைகளைக் கூறும் பிரிவு.

[1] மனுநூல். என்றிருத்தல் பொருந்தும்.

என்பதும், வினை அஞ்சுதலும உடையராய் மேன்மையாலும் கல்வியாலும், அறிவுடைமையாலும், நன்னெறியடைதலை வீட்டின் பகுதியாகவும, கூறினவறறுள் இது இன்பத்தின இயல்பு கூறுகினறது.

391. *முயங்காக்காற் பாயும் பசலைமற் றூடி
உயங்காக்கால் உப்பின்றாங் காமம்;—†வயங்கோதை
நில்லாத் திரையலைக்கும் நீள்கழித் தண்சேர்ப்ப!
புல்லாப் புலப்பதோர் ஆறு.

**தருமர்:**—என்பது. வயஙகு ஓதை—விளக்கததினையுடைய கடலோசை; நிலலா—அடஙகாமல; திரை அலைககும்--திரைக ளானவை; (கரையைப பொரும்); நீள கழி தண சேர்பப—நீண்ட கழிகளின குளிரநத சேரபபையுடையவனே! முயஙகாக் கால—[1]புல்லாதபொழுது; பசலை பாயும—மேனி பசலையாகும; ஊடி உயஙகாககால்—ஊடி வருநதாதவிடதது; காமம உபபு இனறும—காம நுகாச்சி இனிமையுணடாகாது. (ஆதலால்) புலலா புலபபது—முன முயஙகிப பின ஊடுவது; ஓா ஆறு—(இனிமைக்கு) நெறி எனறவாறு.

இது தலைமகறகு வாயில் நேர்நத தோழி தலைமகள் புலவி நீங்கச சொல்லியது.

**பதுமனார்:**—என்றது. தலைமகற்கு வாயில நோநத தோழி தலைமகள புலவி நீஙகச சொலலியது.

புல்லாத பொழுது பசலை பரககும; ஊடி வருந்தாத இடத்துக் காம நுகர்ச்சி சுவையுண்டாகாது; ஆதலால் வயங்கு

* அகபபொருட கிளவிததுறை:—
தலைமகற்கு வாயில்நோநத தோழி தலைமகள் புலவி நீஙகச்சொல்லியது.
†வயஙகோதம என்றும் பாடம்
[1] புலலாதபொழுது—தழுவாதபோது.

ஓதம் நில்லாத திரை அலைக்கும் நீள்கழித் தண் சேர்ப்பனே! முயங்கி ஊடுவதே நல்ல வழி என்றவாறு.

உயங்குதல்—வருந்துதல். உயபு—இனிமை. புல்லாப் புலப்பது—முயங்கி ஊடுவது. வயங்குதல்—விளங்குதல்.

**விளக்க உரை:**—எனபது. முயங்காக்கால் பாயும் பசலை—புலலாதபொழுது மேனி பசலை பரக்கும்; ஊடி உயஙகாக கால உப்பின்றும காமம்—ஊடி வருநதாதவிடததுக காமநுகாச்சி இனிமையுண்டாகாது. வயஙகு ஓதை நிலலாத திரை அலைக்கும்—விளககததினையுடைய கடலோசை அடஙகாமல் திரைகளானவை கரையைப பொருகினற; நீளகழித தண் சோபப—நீண்ட கழிச சோபபையுடையவனே! புல்லாப புலபபது ஓா ஆறு—முயஙகி ஊடுவதே வழி, எனறவாறு.

இது தலைமகன வாசலிலே புகுதறகுப் பொருநதின தோழி தலைமகள புலலாவகைககுக காரணமாகத தலைமகனைப பாாததுப பொதுப பெறச சொனனதாம.

**கருத்து**:—ஊடுதலும, கூடுதலும, இல்லையேல காமம சிறவாது.

## ஒப்புமைப் பகுதி :—

"ஊடல உணாதல் புணர்தல் இவைகாமம்
கூடியாா பெறற பயன."

—குறள். 1109.

"துனியும புலவியும் இல்லாயிற காமம
கனியும் கருக்காயும் அற்று."

—குறள். 1306.

"ஊடுதல் காமததிற கின்பம் அதறகின்பம்
கூடி முயஙகப பெறின்".

—குறள். 1330.

(க).

392. *தம்மவர் காதலர் தார்சூழ் அணியகலம்
விம்ம முயங்குந் துணையில்லார்க்கு—இம்மெனப்
பெய்ய எழிலி முழங்குந் திசையெல்லாம்
நெய்தல் அறைந்தன்ன நீர்த்து.

**தருமர் :**—என்பது. தம அமர் காதலா—தம்மால் விருமபப் பட்ட காதலரது; தாா சூழ அணி அகலம்—மாலை சூழநத அழகிய மார்பை; விம்ம முயஙகும் துணை—இறுகத் தழுவும் அளவுகள்; இல்லாாக்கு—இலலாத [பிரிநத] மகளிாககு; †இம மென பெயய—இமமெனனும் ஓசையுடைததாய் மிகுதியாயப பெய்யவேண்டி; எழிலி முழஙகும—முகில் முழஙகா நிறகும; திசை அனைததும—திககுகளை எல்லாம; நெயதல—நெயதற பறை; அறைநது அனன நீாதது—அறைநதாறபோலும நீாமையாம என்றவாறு.

நெயதற பறையாவது—சாபபறை. இவை பருவஙகண்டு ஆறறாத தலைவி தோழிக்குரைததது.

**பதுமனார் :**—என்றது. தம்மால் விருமபப்பட்ட காதலரது தாா சூழநத அணியகலததை இறுக முயஙகும அளவில்லாதாாககு இம்மென்று ஒலிபெருகப பெயவான வேண்டி அழகிய முகில் முழஙகாநின்ற திசையெலலாம் முழுககம நெயதறபறை அறைந தாற்போலும் நீாமையையுடைதது என்றவாறு.

தம அமா—தமமால் விருமபப்பட்ட; நெய்தல—இம்மென்று ஒலிக்கும நெய்தல் நிலததுப பறை; சாககாடடுப்பறை. நீாதது—நீர்மையை யுடைதது.

*அகபபொருட் கிளவிததுறை :—
பருவஙகண்டு ஆறறாளாகிய தலைவி தோழிககுச் சொலலியது.
†இம எனல ஓர் ஒலிககுறிபபு.

**விளக்க உரை :**—என்பது. தம் அமர் காதலர் தார்சூழ் அணி அகலம்—தம்மால் விரும்பப்பட்ட காதலரது தார்சூழ்ந்த அழகிய மார்பினை; விம்ம முயங்கும் துணை இல்லார்க்கு—நம் அளவில் இறுகத் தழுவும் அளவுகள் இல்லாதவர்க்கு; இம் மெனப் பெய்ய எழிலி முழங்கும் திசையெல்லாம்—இம் எனனும் ஓசையுடைத்தாய மிகவும் பெயவான்வேண்டி முகில் முழங்கா நின்ற திக்குகளெல்லாம்; நெய்தல் அறைந்தன்ன நீர்த்து—அந்த முழக்கம் நெய்தற்பறை அறைந்தாற்போலும் நீர்மைத்தா யிருக்கும்.

நெய்தற்பறை என்பது சாக்காட்டுப் பறை.

**கருத்து :**—பிரிவுத் துன்பம் உணராது அன்பு செய்யின் இன்பஞ் சிறக்கும்.

(உ).

393. *†கம்மஞ்செய் மாக்கள் கருவி ஒடுக்கிய
மம்மர்கொள் மாலை மலராய்ந்து பூத்தொடுப்பாள்
கைம்மாலை இட்டும் கலுழ்ந்தாள் துணையில்லார்க்கு
இம்மாலை என்செய்வ தென்று.

**தருமர் :**—என்பது. கம்மம் செய மாக்கள்—தொழில் செய்யும் மனிதர்; [1]கருவி ஒடுக்கிய—தமது கருவிகளை ஒடுக்குதற் குரிய; மம்மர்கொள் மாலை—மயங்கித் தெரியாத மாலைக்காலத்து; மலர் ஆய்ந்து பூ தொடுப்பாள்—மலரைத் தெரிந்து மாலை தொடுக்குமவள், துணை இல்லார்க்கு—துணைவரை இல்லாதவர்க்கு;

---

*அகப்பொருட் கிளவித்துறை :—

தலைமகள் செலவுடன்படாமையைத் தலைமகற்குத் தோழி சொல்லியது.

†கம்மம்—கம்மியர் தொழில்.

[1] கருவி ஒடுக்கிய மாலை என்றது பகலெல்லாம் வேலை செய்த தொழிலாளரும் தம் வேலையை நிறுத்தித் தத்தம் காதலியரிடம் செல்லுங் காலம் என்பதைக் குறித்தற்கு.

